# இதழ்கள் வாயிலாக அறியலாகும் சங்க இலக்கிய ஆய்வுகள்

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (பிஎச்.டி..)
பட்டத்திற்குப் பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு

ஆய்வாளர்

**அ. இராஜசேகர்**

பதிவு எண். 1618




நெறியாளர்

**முனைவர் இரா. தாமோதரன்**







**தமிழ்த்துறை**

**அழகப்பா பல்கலைக்கழகம்**

(தேசியத் தர மதிப்பீட்டுக் குழுவின் 'ஏ' தகுதி பெற்றது)

காரைக்குடி - 630 003

தமிழ்நாடு

இந்தியா

**பிப்ரவரி - 2010**

**முனைவர் இரா.தாமோதரன்,**

இணைப்பேராசிரியர்,

தமிழ்த்துறை,

அழகப்பா பல்கலைக்கழகம்,

காரைக்குடி - 630 003.

நாள் : 24-02-2010

# நெறியாளர் சான்றிதழ்

**"இதழ்கள் வாயிலாக அறியலாகும் சங்க இலக்கிய ஆய்வுகள்"** என்னும் தலைப்பில் **திரு.அ.இராஜசேகர்** அவர்கள் முனைவர் (பிஎச்.டி.,) பட்டத்திற்காகச் செய்த இந்த ஆய்வு, அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப்பெற்றது என்றும் இந்த ஆய்விற்காக வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப்பெறவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.

24.2.10

**துறைத்தலைவர்**
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி-630 003

**(இரா.தாமோதரன்)**
நெறியாளர்
முனைவர் இரா. தாமோதரன்
இணைப்பேராசிரியர் தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக் கழகம்,
காரைக்குடி.
செல்:94426 28922

**அ.இராஜசேகர்,**
முனைவர் பட்ட ஆய்வாளர்,
பதிவு எண்.1618,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி - 630 003.

நாள் : 24-02-2010

# ஆய்வாளர் உறுதிமொழி

**"இதழ்கள் வாயிலாக அறியலாகும் சங்க இலக்கிய ஆய்வுகள்"** என்னும் தலைப்பில் முனைவர் (பிஎச்.டி.,) பட்டத்திற்காக எழுதப்பெற்ற இவ்வாய்வு எனது சொந்த முயற்சியில் உருவானது என்றும் இதற்குமுன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்வாய்வேடு அளிக்கப்பெறவில்லை என்றும் உறுதியளிக்கின்றேன்.

**(அ.இராஜசேகர்)**
ஆய்வாளர்

நெறியாளர்

**முனைவர் இரா.தாமோதரன்,**
இணைப்பேராசிரியர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி - 630 003.

# நன்றியுரை

என் கல்வித் தேடலில், ஆய்வுபணி மேற்கொள்வதற்கு வாய்ப்பளித்த அழகப்பா பல்கலைக்கழகத்திற்கும் ஒப்புதல் வழங்கிய துறைத்தலைவர், பேராசிரியர் முனைவர் மு.பாண்டி அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

ஆய்விற்குத் தக்கதோர் வழிகாட்டியாக அமைந்து அறிவுரைகள் பல கூறி ஆய்வேடு செம்மையுற அமையப் பல்லாற்றானும் நல்லுதவி புரிந்து ஆற்றுப்படுத்திய என் ஆசான் முனைவர் இரா.தாமோதரன் அவர்களுக்கு என்றும் என் இதயம் நெகிழ்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

அறிவுரைகள் நல்கி வேகப்படுத்திய தமிழ்த்துறைப் போராசிரியர்கள் முனைவர் சே.செந்தமிழ்ப்பாவை, முனைவர் சு.இராசாராம், திருமிகு மு.நடேசன், முனைவர் மு.சுதா ஆகியோருக்கும் ஆய்வுக்குரிய இதழ்கள் எனக்குக் கிடைக்கப் பெரிதும் உதவிய கரந்தைத் தமிழ்ச்சங்க கல்லூரிப் பேராசிரியர் மதிவாணன், பேரா.அமிர்தலிங்கம் ஆகியோருக்கும் என் நன்றியை உரித்தாக்கிக் கொள்கிறேன்.

என் வாழ்வுக்கு வழிகாட்டியாகவும் எனக்கு வேண்டிய உதவிகளை ஒவ்வொரு நாளும் செய்துகொண்டிருக்கும் என் ஆசான் முனைவர் மு.அருணாச்சலம் அவர்களுக்கும் முனைவர் மு.கார்த்திகேயன் அவர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

ஆய்வு எழுதுவதற்குத் தூண்டுகோலாய் அமைந்து என்னை ஆற்றுப்படுத்திய முனைவர் கா.வாசுதேவன், முனைவர் நாராயணநம்பி, முனைவர் மணிகண்டன் அவர்களுக்கு நன்றிகூறக் கடமைப்பட்டுள்ளேன்.

ஆய்வுக்கு வேண்டிய இதழ்கள் கிடைக்க உதவிய செந்தமிழ்க் கல்லூரி நூலகம், கரந்தைத் தமிழ்ச்சங்க நூலகம், மறைமலை அடிகள் நூலகம், ரோஜாமுத்தையா நூலகம், உலகத்தமிழராய்ச்சி நிறுவனம், கன்னிமாரா பொதுநூலகம் ஆகியவற்றிக்கும் என் நன்றியை உரித்தாக்குகின்றேன்.

நான் நன்னிலை பெற்றுயர நாளும் தன்னை வருத்திக்கொண்டு என்னை உயர்த்தும் என் அன்புக்குரிய பெற்றோர்கள் திரு.பெ.அழகர் - திருமதி அ.சண்முகம், சகோதரர்கள் அ.பாலசுப்பிரமணியன், அ.தர்மராஜன் ஆகியோருக்கும் என் நெஞ்சார்ந்த நன்றி.

எனது ஆய்வுக்கு உதவிய கா.குமார், மு.முனீஸ்மூர்த்தி, மா.பரமசிவன், ம.மணிகண்டன், கரு.மணிமேகலை, த.சத்தியராஜ், ரமேஷ்பாபு, இரா.மாரிமுத்து, அ.இரவி, கா.சத்தியமூர்த்தி, பூமி, ஆனந், யா.சாம்ராஜ், பழனிமுத்து, இ.முனியசாமி, பா.கவிதா, செ.சரிதா ஆகியோருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். இவ்வாய்வேட்டினைச் சிறப்பாக வடிவமைத்த காரைக்குடி மகேஷ் கணினி நிறுவனத்திற்கும் என் நன்றியை உரித்தாக்குகின்றேன்.

நன்றியுடன்

**அ.இராஜசேகர்**

# குறுக்கவிளக்கம்

| | |
|---|---|
| ப. | - பக்கம் |
| மேலது | - மேற்குறிப்பிட்ட நூல் |
| நற். | - நற்றிணை |
| குறு. | - குறுந்தொகை |
| ஐங். | - ஐங்குறுநூறு |
| பதி. | - பதிற்றுப்பத்து |
| பரி. | - பரிபாடல் |
| கலி. | - கலித்தொகை |
| அகம். | - அகநானூறு |
| புறம். | - புறநானூறு |
| முரு. | - முருகாற்றுப்படை |
| பொரு. | - பொருநராற்றுப்படை |
| முல்லை. | - முல்லைப்பாட்டு |
| மது. | - மதுரைக்காஞ்சி |
| நெடு. | - நெடுநல்வாடை |
| குறி. | - குறிஞ்சிப்பாட்டு |
| பட். | - பட்டினப்பாலை |
| மலை. | - மலைபடுகடாம் |

# உள்ளுறை

### இயல் மூன்று

## குறுந்தொகை ஆய்வுகள்



### இயல் நான்கு

## அகநானூற்று ஆய்வுகள்

# முன்னுரை

தமிழகத்தில் இதழியல் உருவாக்கம் ஆங்கிலேய வல்லாண்மை, மதப் பரவல் முதலானவற்றின் அடிப்படையில் பயணத்தைத் தொடங்கிற்று. இப் பயணப்பொழுதில் இந்திய விடுதலையைச் சுமந்த இதழ்கள் எழுச்சியுற்றன. இவ்வெழுச்சியில் ஒருசாரார் தமிழிலக்கியம், தமிழர் மெய்யியல், கலை பற்றிய கருத்தோட்டங்களைத் தமிழக மக்களிடம் கொண்டுசெல்லவேண்டிய தேவைகளை உணர்ந்தனர். இதனால் தமிழகத்தில் இலக்கிய இதழ்கள் தோற்றம் பெற்றன. இவற்றில் தொடக்ககால இலக்கிய இதழ்களான செந்தமிழ், செந்தமிழ்ச்செல்வி, தமிழ்ப்பொழில் ஆகியவை குறிப்பிடத்தக்கவை.

## ஆய்வுத் தலைப்பு

**“இதழ்கள் வாயிலாக அறியலாகும் சங்க இலக்கிய ஆய்வுகள்”** என்பது ஆய்வுத் தலைப்பாகும்.

## ஆய்வு நோக்கம்

இலக்கிய இதழ்களில் வெளிவந்துள்ள சங்க இலக்கியம் தொடர்பான கட்டுரைகளில், சங்க இலக்கியப் பாடல்களைக் கட்டுரையாசிரியர்கள் தம் கருத்துப்புலப்பாட்டுக்கு இணங்க எவ்வாறு வாசித்துப் பயன்படுத்தியுள்ளனர் என்பதைக் கண்டறிவது இவ்வாய்வின் நோக்கமாகும்.

## ஆய்வு முன்னோடிகள்

இலக்கிய இதழ்க் கூறுகளையும் இலக்கிய இதழின் இலக்கியப் பங்களிப்பையும் விளக்கும் ஆய்வான பி.தெட்சிணாமூர்த்தியின் ‘செந்தமிழ்ச் செல்வியின் இலக்கியப் பணி,’ தமிழ் இலக்கிய இதழ்களின் சிறப்பியல்புகளைக் கூறும் நூல்களான இ.சுந்தரமூர்த்தி, மா.ரா.அரசு ஆகியோர் பதிப்பித்த ‘இலக்கிய இதழ்கள்,’ ‘தமிழ் ஆய்வு இதழ்கள்,’ செந்தமிழ் இதழின் அடைவு குறித்த பி.எஸ்.சுப்பிரமணியனின், ‘ANNOTATED INDEX TO CENTAMIL THE JOURNAL OF THE MADURAI TAMIL SANGAM’ எனும் நூலும், மதுரைத் தமிழ்ச்சங்கம் வெளியிட்ட ‘செந்தமிழ்த் தொகுதிகள் அட்டவணைக் குறிப்பு’ எனும் நூலும் இவ்வாய்வின் முன்னோடிகளாகத் திகழ்கின்றன. இந்த நூல்கள் இதழ்களின் தோற்றம், இதழ்களில்

இடம்பெற்றுள்ள பகுப்பு முறை, இதழ்களின் நோக்கம், சங்க இலக்கியம்முதல் தற்கால இலக்கியம் வரையிலான பொதுவான கருத்து முதலானவற்றை எடுத்தியம்புகின்றன. ஆனால் இவ்வாய்வு இலக்கிய இதழ்களில் உள்ள சங்க இலக்கியம் தொடர்பான கட்டுரைகளை மட்டும் ஆய்வுக்கருவாகக் கொண்டு விரிவாக ஆராய்கிறது.

## ஆய்வு எல்லை

1902 ஆம் ஆண்டு முதல் 2007 ஆம் ஆண்டு வரை வெளிவந்துள்ள செந்தமிழ் இதழில் 101 தொகுதிகள் வெளிவந்துள்ளன. இவற்றில் 52, 53, 62, 75, 78, 82, 91, 93 ஆகிய தொகுதிகள் தற்பொழுது கிடைக்கப்பெறவில்லை. இவ் எட்டு தொகுதிகளில் உள்ள கட்டுரைகள் போக, எஞ்சிய தொகுதிகளில் 87 சங்க இலக்கியக் கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன.

அதேபோல் 1923 ஆம் ஆண்டு முதல் 2007 ஆம் ஆண்டுவரை வெளிவந்துள்ள செந்தமிழ்ச்செல்வி இதழ் இரண்டாம் உலகப்போரின் போது வெள்ளைத்தாள் கிடைக்கப்பெறாமையால் 28 இதழ்கள் வெளிவரவில்லை. ஆக, தற்பொழுது 82 சிலம்புகள் காணப்படுகின்றன. இவற்றில் ஆய்வாளர்க்கு (1931-38), (1952-1957), 69, 70, 89, 90, 96, 97 முதலான 20 ஆண்டு இதழ்கள் கிடைக்கப்பெறவில்லை.* இவ்இருபது ஆண்டு இதழ்களில் உள்ள கட்டுரைகள் போக ஏனைய இதழ்களில் 180 சங்க இலக்கியக் கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன.

1925 ஆம் ஆண்டு முதல் 2007 ஆம் ஆண்டுவரை வெளிவந்துள்ள தமிழ்ப்பொழில் இதழில் 82 துணர்கள் வெளிவந்துள்ளன. இவற்றில் 1960 முதல் 1968 வரையிலான 8 ஆண்டு இதழ்கள் ஆய்வாளர்க்குக் கிடைக்கப்பெறவில்லை.* இவ் எட்டு ஆண்டு இதழ்களில் உள்ள

---

குறிப்பு : * இக்குறியிடப்பட்ட துணர்கள் மற்றும் ஆண்டுகளுக்கான செந்தமிழ்ச்செல்வி, தமிழ்ப்பொழில் இதழ்கள் 2008 இல் தரவுகள் திரட்டும்போது கிடைக்கப்பெறவில்லை. ஆனால், ஆய்வு முடிவுக்குப்பின் தற்பொழுது கிடைத்துள்ளன. 'தமிழ்ப்பொழில்' இதழ் தற்பொழுது தஞ்சை கரந்தைத் தமிழ்ச்சங்கத்தில் 'பைண்டிங்' செய்து அழகாக வைக்கப்பெற்றுள்ளது.

கட்டுரைகள் போக எஞ்சிய இதழ்களில் 90 சங்க இலக்கியக் கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன.

ஆக, மூன்று இலக்கிய இதழ்களுக்கும் உரிய தற்பொழுது கிடைத்துள்ள சங்க இலக்கிய ஆய்வுக் கட்டுரைகள் 357. எனினும் காலத்தால் முற்பட்ட செந்தமிழ் இதழில் அதிக அளவிலான கட்டுரைகள் கிடைக்கப்பெறாமையாலும் ஆய்வின் பக்க எல்லை கருதியும் செந்தமிழ் இதழில் வெளிவந்த கட்டுரைகள் இங்கு ஆய்வுக்கு உட்படுத்தப் பெறவில்லை. இருப்பினும் இவ்விதழில் இடம்பெற்றுள்ள கட்டுரைகள் தொடர்பான விபரம் பின்னிணைப்பில் அளிக்கப்பெற்றுள்ளது.

## சான்றாதாரங்கள்

### முதன்மைச் சான்றாதாரங்கள்

செந்தமிழ்ச்செல்வி, தமிழ்ப்பொழில் ஆகிய இலக்கிய இதழ்களில் 270 சங்க இலக்கிய ஆய்வுக்கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன. இவற்றில் நற்றிணை, குறுந்தொகை, அகநானூற்றுப் பாடல்கள் இடம்பெறும் ஆய்வுக் கட்டுரைகளின் எண்ணிக்கை 100 ஆகும். இந்த 100 ஆய்வுக்கட்டுரைகளும் முதன்மைச் சான்றுகளாகக் கொள்ளப்பெற்றுள்ளன.

### துணைமைச் சான்றாதாரங்கள்

ஆய்வுப்பொருள் தொடர்பாக இதுகாறும் வெளிவந்துள்ள ஆய்வுநூல்கள், கட்டுரைகள் முதலானவை இவ்வாய்வுக்குத் துணைமைச்சான்றுகளாகக் கொள்ளப்பெற்றுள்ளன.

## ஆய்வு அணுகுமுறை

இலக்கிய இதழ்களில் இடம்பெற்றுள்ள சங்க இலக்கியப் பாடல்களைக் கட்டுரையாசிரியர்கள் கையாண்டமைக்கான காரணத்தை அறியும் வகையில் விளக்கவியல் அணுகுமுறையே இந்த ஆய்வில் பின்பற்றப்பட்டுள்ளது.

## இயல் பகுப்புகள்

இவ்ஆய்வு ஆய்வுஅறிமுகம், நிறைவுரை நீங்கலாகப் பின்வரும் நான்கு இயல்களைக் கொண்டுள்ளது. அவை வருமாறு:

*இயல் 1 - இலக்கிய இதழ்களின் தோற்றமும் வளர்ச்சியும்*

*இயல் 2 - நற்றிணை ஆய்வுகள்*

*இயல் 3 - குறுந்தொகை ஆய்வுகள்*

*இயல் 4 - அகநானூற்று ஆய்வுகள்.*

## ஆய்வு அறிமுகம்

ஆய்வுஅறிமுகத்தில் முன்னுரை, ஆய்வுத்தலைப்பு, ஆய்வுநோக்கம், ஆய்வுமுன்னோடிகள், ஆய்வுஎல்லை, சான்றாதாரங்கள் (முதன்மை, துணை) ஆய்வுஅணுகுமுறை, இயல்பகுப்புகள் முதலான செய்திகள் விளக்கப்பெற்றுள்ளன.

## இயல் ஒன்று

**'இலக்கிய இதழ்களின் தோற்றமும் வளர்ச்சியும்'** எனும் முதல் இயலினுள் இலக்கிய இதழ்களின் தோற்றம், வளர்ச்சி, வடிவமைப்புகள், இலக்கியப் பங்களிப்பு, இதழ்த்தொகுதிகள், மதிப்புரைகள், இதழின் பிறகுறிக்கோள்கள் முதலான பல செய்திகள் விளக்கமாகவும் விரிவாகவும் ஆராயப்பெற்றுள்ளன.

## இயல் இரண்டு

செந்தமிழ்ச்செல்வி இதழில் நற்றிணைப் பாடல்கள் 53 கட்டுரைகளில் இடம்பெற்றுள்ளன. இக்கட்டுரைகளில் இடம்பெறும் பாடல்களின் எண்ணிக்கை 178 ஆகும். இதேபோல் தமிழ்ப்பொழில் இதழில் நற்றிணைப் பாடல்கள் 18 கட்டுரைகளில் இடம்பெற்றுள்ளன. இவ் இக்கட்டுரைகளில் இடம்பெறும் பாடல்களின் எண்ணிக்கை 119 ஆகும். ஆக, இந்த 297 நற்றிணைப் பாடல்கள் சங்க மக்களின் வாழ்வியல் கூறுகள், தாவரங்கள், விலங்குகள் தொடர்பான இயற்கைக் கருத்தாக்கங்கள், சங்கப் பாடல்களில் இடம்பெறும் சொற்சிறப்பு, பிற்கால நூல்களோடு நற்றிணைப் பாடல்களை ஒப்பிட்டுக் காட்டும் தன்மை, சங்கப்பாடல்களின் காலவரையறை, சங்கப்பாடல்களுக்கு உரைகூறும் பாங்கு ஆகிய நோக்கங்களின் அடிப்படையில் கட்டுரையாசிரியர்கள் வாசித்துள்ள பாங்கு **'நற்றிணை ஆய்வுகள்'** எனும் இரண்டாம் இயலினுள் விளக்கப்பெற்றுள்ளது.

**மூன்றாம் இயல்**

செந்தமிழ்ச்செல்வி இதழில் குறுந்தொகைப் பாடல்கள் 39 கட்டுரைகளில் இடம்பெற்றுள்ளன. இக்கட்டுரைகளில் இடம்பெறும் பாடல்களின் எண்ணிக்கை 102 ஆகும். இதேபோல் தமிழ்ப்பொழில் இதழில் குறுந்தொகைப் பாடல்கள் 20 கட்டுரைகளில் இடம்பெற்றுள்ளன. இவ்இருபது கட்டுரைகளில் இடம்பெறும் குறுந்தொகைப் பாடல்களின் எண்ணிக்கை 73 ஆகும். இவ்விரு இலக்கிய இதழ்களில் இடம்பெறும் குறுந்தொகைப் பாடல்கள் சங்க மக்களின் வாழ்வியல், இயற்கை, சங்கப் பாடல்களில் இடம்பெறும் சொற்களின் தன்மை, பாடல்களில் இடம்பெறும் உத்திமுறை, மொழிப்பயன்பாட்டுநிலை, கவிதைநயம், சங்கப் பாடல்களின் காலவரையறை ஆகிய நோக்கங்களின் அடிப்படையில் 175 குறுந்தொகைப் பாடல்கள் கட்டுரையாசிரியர்களால் வாசிக்கப்பெற்றுள்ள முறை '**குறுந்தொகை ஆய்வுகள்**' எனும் மூன்றாம் இயலினுள் விளக்கப்பட்டுள்ளது.

**நான்காம் இயல்**

செந்தமிழ்ச்செல்வி இதழில் அகநானூற்றுப்பாடல்கள் 64 கட்டுரைகளில் இடம்பெற்றுள்ளன. இவ் அறுபத்து நான்கு கட்டுரைகளில் இடம்பெறும் அகநானூற்றுப் பாடல்களின் எண்ணிக்கை 227 ஆகும். அதேபோல் தமிழ்ப்பொழில் இதழில் அகநானூற்றுப் பாடல்கள் 19 கட்டுரைகளில் இடம்பெற்றுள்ளன. இக்கட்டுரைகளில் இடம்பெறும் பாடல்களின் எண்ணிக்கை 101 ஆகும். இவ்விரு இலக்கிய இதழ்களில் இடம்பெறும் 328 அகநானூற்றுப் பாடல்கள் சமூக வாழ்வியல், இயற்கை, சங்கப்பாடலினுள் மொழிப்பயன்பாடு, அறிவியலோடு இலக்கியம் இணைவு பெறும் தன்மை, சங்க இலக்கியத்தின் வரலாற்றுத் தன்மையறியும் நோக்கு, புலவர் பெயரில்லா அகநானூற்றுப் பாடல்களுக்குப் பெயர் அறியும் சிறப்பு ஆகிய நோக்கங்களின் அடிப்படையில் கட்டுரையாசிரியர்களால் வாசிக்கப்பெற்ற தன்மை '**அகநானூற்று ஆய்வுகள்**' எனும் நான்காம் இயலினுள் விளக்கப்பெற்றுள்ளது.

## ஆய்வுநிறைவுரை

இப்பகுதியில் 'இதழ்கள் வாயிலாக அறியலாகும் சங்க இலக்கிய ஆய்வுகள்' என்னும் இந்த ஆய்வில் கண்டறிந்த ஆய்வு முடிவுகள் நிரல்படத் தொகுத்துத் தரப்பெற்றுள்ளன.

## இயல்களில் கருத்து விளக்கமுறை

1. 'நற்றிணை நல்லகுறுந்தொகை' எனும் பழம்பாடல் அடிப்படையில் இயல்கள் வரிசைப்படுத்தப்பட்டுள்ளன. எனவே, நற்றிணை தொடர்பான இயலில் கட்டுரையில் பெயர் குறிப்பிட்டு, அக்கட்டுரையினை எழுதியவர் பெயரும் தவறாமல் குறிப்பிடப்பட்டுள்ளது. பெரும்பாலும் இதே கட்டுரைகள் அடுத்தடுத்த இயல்களில் அமையும்போது ஆசிரியர் பெயர் குறிப்பிடாமலும், வேறு கட்டுரை இடம்பெறும்போது ஆசிரியர் பெயர் குறிப்பிடப்பட்டும் உள்ளன.

2. இயல்களில் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்ற திணை அடிப்படை முறையினைக் கருத்திற்கொண்டு கட்டுரைகள் வரிசைப்படுத்தி விளக்கப்பெற்றுள்ளன.

3. ஒவ்வொரு இயலின் இறுதிப் பகுதியானது தொகுப்புரை, முடிவுரை என்று அமைக்கப்பெற்றுள்ளது. தொகுப்புரையில், கட்டுரையாளர்கள் சங்க இலக்கியப் பாடல்களை எடுத்தாண்டதற்கான காரணங்கள் சான்றுகளுடன் விரிவான நிலையில் பகுத்து விளக்கப்பெற்றுள்ளன. இந்த விளக்கங்களை அடிப்படையாகக் கொண்டு கட்டுரையாளர்கள் சங்க இலக்கியப் பாடல்களை வாசித்ததற்கான நோக்கங்கள் வரையறுத்த நிலையில் முடிவுரைப்பகுதியில் அளிக்கப்பெற்றுள்ளன.

4. கட்டுரையாளர்கள் கட்டுரையில் சங்கப்பாடல்களைப் பயன்படுத்தும் போது சில இடங்களில் பாடல் முழுமையையும், சில இடங்களில் தனக்கு வேண்டிய பாடல் அடிகளை மட்டும் பயன்படுத்தி உள்ளனர். இப்பாடல்களை ஆய்வில் எடுத்தாளும்போது தேவையான இடங்களில் பாடல் முழுமையும் பாடல் அடிகளும் பயன்படுத்தப்பட்டுள்ளன. ஆனால் சில இடங்களில் ஆய்வேட்டின் பக்க எல்லை கருதிப் பாடல் அடிகளின் பொருள்மட்டுமே பயன்படுத்தப்பட்டுள்ளது.

## சான்றெண் அளிப்புமுறை

இந்த ஆய்வேட்டின் சான்றெண் கீழ்வருமாறு அளிக்கப்பெறுகின்றது:

நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு என்று நூல்களின் பெயரை மையமாகக் கொண்டு இயல்கள் அமைக்கப்பெற்றதால், அந்தந்த இயல்களில் அந்தந்த நூல்களின் பாடல்களுக்குரிய கருத்துகள் எடுத்தாளப்பெறுகையில் சுருக்கக்குறியீடு இன்றிப் பாடல் எண்கள் மட்டுமே அடைப்புக்குள் அளிக்கப்பெற்றுள்ளன. இதே இடங்களில் வேறு நூல்களின் பாடல் கருத்துகள் எடுத்தாளப்பெறுகையில் சுருக்கக் குறியீட்டுடன் பாடல் எண் அடைப்புக்குள் அளிக்கப்பெற்றுள்ளது.

இயல்களில் கட்டுரைகளை விளக்கும் நிலையில் காலவரிசை முறையை அல்லது கட்டுரைப்பெயர் அகரவரிசையை அல்லது கட்டடரையாளர் பெயர் அகரவரிசையைக் கருத்தில் கொள்ளுதல் பொது ஆய்வுமரபு. ஆனால் இந்த ஆய்வின் நோக்கத்திற்கு அம்முறைகள் எவையும் பெரும்பயன் அளிக்காது என்று கருதப்பெற்றது. எனவே, அவ்விளக்கமுறைகள் இவ்வாய்வில் மேற்கொள்ளப்பெறவில்லை.

கட்டுரைகளை விளக்குகையில், கட்டுரைகளுக்குரியத் தலைப்புகளே இந்த ஆய்வில் உட்தலைப்புகளாக அளிக்கப் பெற்றுள்ளன. கட்டுரை ஆசிரியர் பெயரும், ஆண்டும், மாதமும் அங்கேயே அளிக்கப்பெற்றுள்ளன. எனவே கட்டுரைப் பொருளை எடுத்து விளக்குகையில் கட்டுரையில் இருந்து சிறுபகுதி மேற்கோளாக எடுத்தாளப்பெற்றால் அங்குச் சான்றெண் விளக்கம் அளிக்கப்பெறவில்லை.

## துணைநூற்பட்டியல்

ஆய்வுரையை அடுத்து ஆய்வுக்குப் பயன்பட்ட நூல்கள், கட்டுரைகள் அடங்கிய துணைநூற்பட்டியல் அகரவரிசை முறையில் இடம்பெற்றுள்ளது.

## பின்னிணைப்பு

துணைநூற்பட்டியலை அடுத்துள்ள பின்னிணைப்புப் பகுதியில் செந்தமிழ், செந்தமிழ்ச்செல்வி, தமிழ்ப்பொழில் ஆகிய மூன்று இலக்கிய இதழ்களில் இடம்பெற்றுள்ள சங்க இலக்கியக் கட்டுரைகள் ஆசிரியர் பெயருடன் கொடுக்கப்பெற்றுள்ளன.

# இலக்கிய இதழ்களின் தோற்றமும் வளர்ச்சியும்

## 1.0.முன்னுரை

தமிழ் இலக்கிய வரலாற்றில் இதழ்கள் குறிப்பிடத்தக்க இடத்தைப் பெற்றுள்ளன. பழைய, புதிய இலக்கிய வகைகளை எடுத்து விளக்குவதில் தமிழ் ஆய்வு இதழ்களுக்கெனத் தனி இடம் உண்டு. தமிழைப் பல்வேறு போக்குகளில் ஆய்வு செய்யும் நிலையிலும் இத்தகைய ஆய்வுகளை ஊக்கப்படுத்தும் வகையிலும் இதுகாறும் பல்வேறு ஆய்வு இதழ்கள் வெளிவந்திருக்கின்றன (விபரம் : பின்னிணைப்பு - 1). இவற்றில் குறிப்பிடத்தக்க இடத்தைப் பெறுவன 'செந்தமிழ்,' 'செந்தமிழ்ச்செல்வி,' 'தமிழ்ப்பொழில்' ஆகிய இதழ்களாகும். இத்தகைய இதழ்களின் தோற்றத்தையும் வளர்ச்சியையும் சிறப்பையும் விளக்குவது இவ்வியலின் நோக்கமாகும்.

## 1.1.செந்தமிழ்

பழங்கால இலக்கிய இதழ்களில் முதலிடம் பெறுவது 'செந்தமிழ்' எனும் இதழாகும். இவ்விதழ் 1902 ஆம் ஆண்டு முதல் மாத இதழாக வெளிவருகின்றது. சேதுபதி மன்னரால் தொடங்கிவைக்கப்பட்டு மதுரைத் தமிழ்ச்சங்கத்தால் இன்றுவரை இவ்விதழ் வெளியிடப்பட்டு வருகின்றது. செந்தமிழ் இதழில் தமிழ்ப்புலமை பெற்ற ஆசிரியர்களின் ஆராய்ச்சிக்கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன.

### 1.1.1.செந்தமிழ் இதழின் சங்க இலக்கியப் பணி

தோற்றம் முதல் 2007 வரையிலான செந்தமிழ் இதழ்களை 25 தொகுதிகளாகப் பிரித்து 4 பிரிவுக்குள் அடக்கலாம். இந்த 4 பிரிவுகளுக்குள் உள்ள கட்டுரைகளைப் பொருண்மை அடிப்படையில் பின்வருமாறு வகைப்படுத்தலாம். தொகுதிகளின் பிரிப்புமுறை வருமாறு.

1. 1 - 25
2. 26 - 51
3. 52 - 76
4. 77 - 101.

**1-25**

இத்தொகுதிகளில் பத்திராசிரியர், பொன் பாண்டித்துரைத்தேவர், மு.இராகவையங்கார், நாராயணையங்கார், கே.முத்துஸாமிஐயன், கந்தசாமியார், அ.குமாரசுவாமிப்பிள்ளை, சோமசுந்தரதேசிகன், ஒருமாணவன், ஆ.கார்மேகக்கோன், அ.கந்தசாமிப்பிள்ளை, எஸ்.வையாபுரிப்பிள்ளை, எஸ்.ரங்கன், ஆர்.எஸ்.நாராயணஸ்வாமி, சே.சிவஞானம்பிள்ளை, சு.ஸ்ரீநிவாஸயங்கார், செலுவையர், வெ.ப.சுப்பிரமணிய முதலியார், சி.வீரபாகுப்பிள்ளை, கே.எஸ்.நவநீதகிருஷ்ணபாரதி, டி.என்.அப்பனையங்கார், பெயர்விழையான்தச்சநல்லூரர் முதலான கட்டுரையாசிரியர்கள் கட்டுரைகள் எழுதியுள்ளனர். இவர்களில் பத்திராசிரியர் - 2 கட்டுரைகளும், நாராயணையங்கார் - 2 கட்டுரைகளும், சோமசுந்தரதேசிகன் 4 கட்டுரைகளும், எஸ்.வையாபுரிப்பிள்ளை 3 கட்டுரைகளும், நாராயணையங்காரும், பத்திராசிரியரும் சேர்ந்து 1 கட்டுரையும் எழுதியுள்ளனர்.

'நற்றிணை தொடர்பாக 2 கட்டுரைகளும், குறுந்தொகை தொடர்பாக - 5 கட்டுரைகளும், ஐங்குறுநூறு தொடர்பாக - 1 கட்டுரையும், பரிபாடல் தொடர்பாக - 4 கட்டுரைகளும், கலித்தொகை தொடர்பாக - 1 கட்டுரையும், புறநானூறு தொடர்பாக - 2 கட்டுரைகளும், திருமுருகாற்றுப்படை தொடர்பாக - 1 கட்டுரையும், மதுரைக்காஞ்சி தொடர்பாக - 1 கட்டுரையும், நெடுநல்வாடை தொடர்பாக - 1 கட்டுரையும், புறப்பாடல்கள் தொடர்பாக - 5 கட்டுரைகளும், அகப்பொருள் பற்றி - 1 கட்டுரையும், சங்கச் செய்யுளில் ஏகாரம் அடுத்த ஒனீற்றுவிளி பற்றி - 1 கட்டுரையும், மன்னர்கள் பற்றி - 2 கட்டுரைகளும், புலவர்கள் பற்றி - 2 கட்டுரைகளும் காணப்படுகின்றன'[1] ஆக 1 ஆம் தொகுதி முதலாக 25 ஆம் தொகுதிவரை உள்ள செந்தமிழ் இதழ்களில் 29 சங்க இலக்கியக்கட்டுரைகள் காணப்படுகின்றன.

**26-51**

இத்தொகுதிகளில் கு.குமாரசாமி, பி.எஸ்.சுப்பிரமணியசாஸ்திரி, ஆர்.வீரராகவன், ஜெ.நாராயணசுந்தரமையங்கார், சி.சுப்பிரமணியம்,

எஸ்.எஸ்.பாரதி, எஸ்.வையாபுரிப்பிள்ளை, சி.கணேசையர், சு.குமாரஸ்வாமி ஆச்சாரி, ஆர்.வீரபத்திரன், மு.இராகவையங்கார் முதலான ஆசிரியர்கள் கட்டுரைகள் எழுதியுள்ளனர். இவர்களில் சு.குமாரஸ்வாமி ஆச்சாரி - 2 கட்டுரைகளும், வையாபுரிப்பிள்ளை - 4 கட்டுரைகளும் எழுதியுள்ளனர்.

'பதிற்றுப்பத்து தொடர்பாக - 1 கட்டுரையும், பரிபாடல் தொடர்பாக 1 கட்டுரையும், கலித்தொகை தொடர்பாக - 2 கட்டுரைகளும், அகநானூறு தொடர்பாக - 2 கட்டுரைகளும், புறநானூறு தொடர்பாக - 4 கட்டுரைகளும், திருமுருகாற்றுப்படை தொடர்பாக - 3 கட்டுரைகளும், பட்டினப்பாலை தொடர்பாக - 2 கட்டுரைகளும், பத்துப்பாட்டு தொடர்பாக - 1 கட்டுரையும் புறப்பாட்டு தொடர்பாக - 1 கட்டுரையும், மன்னர்கள் தொடர்பாக - 1 கட்டுரையும் இடம்பெற்றுள்ளன'[2] ஆக 26 ஆம் தொகுதி முதல் 51 ஆம் தொகுதிவரை உள்ள செந்தமிழ் இதழில் 18 சங்க இலக்கியக் கட்டுரைகள் காணப்படுகின்றன.

**52-76**

இத்தொகுதிகளில், தே.தியாகராசன், நா.இராமய்யாபிள்ளை, வி.ப.கா.சுந்தரம், கோமதி சுப்பிரமணியன், தி.வேலன், மா.இளையபெருமாள், இ.நாச்சிமுத்து, ஆர்.பத்மநாதன், சி.வை.தாமோதரம்பிள்ளை ஆகியோர் கட்டுரைகள் எழுதியுள்ளனர்.

'நற்றிணை தொடர்பாக - 1 கட்டுரையும், பரிபாடல் தொடர்பாக 2 கட்டுரைகளும், கலித்தொகை தொடர்பாக - 2 கட்டுரைகளும், அகப்புறம் தொடர்பாக - 2 கட்டுரைகளும், அகப்பொருள் தொடர்பாக - 1 கட்டுரையும், அகத்திணை தொடர்பாக - 1 கட்டுரையும், சங்ககால ஊர்ப்பெயர் தொடர்பாக - 1 கட்டுரையும் காணப்படுகின்றன'[3] ஆக 52 ஆம் தொகுதி முதலாக 76 ஆம் தொகுதி வரை உள்ள செந்தமிழ் இதழ்களில் 10 சங்க இலக்கியக் கட்டுரைகள் காணப்படுகின்றன.

**77-101**

இத்தொகுதிகளில் ப.பழனியம்மாள், நா.பாலுசாமி, சா.அங்கயற்கண்ணி, அ.மா.பரிமணம், அ.தட்சிணாமூர்த்தி, பா.சூரியநாராயணன்,

எஸ்.செளந்தரபாண்டியன், அகத்தியலிங்கம், தெ.திருஞானமூர்த்தி, க.சி.அமுடையார், சுப்பிரமணியன், சி.பாண்டுரங்கன், தி.நெல்லையப்பன், பெ.சுயம்பு, நிர்மலாமோகன், தமிழண்ணல், மு.மீனா, சுந்தரி சிவக்கண்ணன், இரா.சதாசிவம், ந.அருண்மொழி, வீ.காந்திமதி, இரா.சுதமதி, கு.கதிரேசன், லோகநாயகி முதலானோர் கட்டுரைகள் எழுதியுள்ளனர். இவர்களில் பழனியம்மாள் - 2 கட்டுரைகளும், பரிமணம்-2 கட்டுரைகளும், தெ.ஞானமூர்த்தி - 2 கட்டுரைகளும், அ.தெட்சிணாமூர்த்தி - 2 கட்டுரைகளும் தி.நெல்லையப்பன் - 2 கட்டுரைகளும் எழுதியுள்ளனர்.

'நற்றிணை தொடர்பாக - 1 கட்டுரையும், குறுந்தொகை தொடர்பாக- 1 கட்டுரையும், ஐங்குறுநூறு தொடர்பாக - 1 கட்டுரையும், பதிற்றுப்பத்து தொடர்பாக - 1 கட்டுரையும், அகநானூறு தொடர்பாக - 2 கட்டுரைகளும், புறநானூறு தொடர்பாக - 4 கட்டுரைகளும், மதுரைக்காஞ்சி தொடர்பாக-1 கட்டுரையும், சங்க இலக்கிய நகைச்சுவை தொடர்பாக - 1 கட்டுரையும், பொருளியல் நோக்கு தொடர்பாக - 1 கட்டுரையும், அகப்பாடலில் அவர் எனும் தலைப்பில் - 1 கட்டுரையும், பாட்டும் தொகையும் பற்றி 1 கட்டுரையும், அரசுஅமைப்பு குறித்து - 1 கட்டுரையும், சங்க இலக்கியம் செவ்வியல் இலக்கியங்களே எனும் தலைப்பில் - 1 கட்டுரையும், சிற்பக்குறிப்பு குறித்து - 1 கட்டுரையும், வரலாற்று உவமை குறித்து 1 கட்டுரையும், கபிலர் பாடல்கள் குறித்து - 1 கட்டுரையும், முல்லைநில உயிர்ச்சூழல் பற்றி - 1 கட்டுரையும், குறிஞ்சிச் சிந்தனை பற்றி - 1 கட்டுரையும், பரணர் பற்றி - 1 கட்டுரையும், சங்கக் குடும்பம் பற்றி -1 கட்டுரையும், சங்க இலக்கிய மதிப்புக்கல்வி குறித்து - 1 கட்டுரையும் அகவாழ்வியல் நிமித்தம் குறித்து 1 கட்டுரையும், சங்க நாடகக்கூறு தொடர்பாக - 1 கட்டுரையும், வஞ்சிதானே முல்லையது புறனே என்னும் தலைப்பில் - 1 கட்டுரையும், சங்க இலக்கிய மழலை குறித்து - 1 கட்டுரையும், நாட்டுப்புற நிகழ்த்துக்கலை குறித்து - 1 கட்டுரையுமாகச் சங்க இலக்கியக் கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன.'[4] ஆக 77 ஆம் தொகுதி முதலாக 101 ஆம் தொகுதிவரை உள்ள செந்தமிழ் இதழில் 30 சங்க இலக்கியக் கட்டுரைகள் காணப்படுகின்றன.

## 1.2.செந்தமிழ்ச்செல்வி

சிறந்த தமிழ் ஆராய்ச்சித் திங்களிதழான செந்தமிழ்ச்செல்வி 1923 ஆம் ஆண்டு, ஜனவரி - பிப்ரவரி மாதத்திலிருந்து இன்றுவரை திங்கள்தோறும் வெளிவந்துகொண்டிருக்கின்றது. தமிழ்மொழியில் வெளிவரும் தலைசிறந்த இலக்கிய இதழ்களில் ஒன்றாகச் செந்தமிழ்ச்செல்வி விளங்குகின்றது. இது திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகத்தினின்று வெளிவருகின்றது. இவ்விதழின் தொடக்ககால ஆசிரியர் தாமரைச்செல்வர் திரு.வ.சுப்பையாபிள்ளையாவார். இவ்விதழில் பல சிறந்த தமிழ்ஆராய்ச்சிக் கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன.

செந்தமிழ்ச்செல்வி என்பதற்கான பெயர்க்காரணத்தையும் இதழ்நோக்கத்தையும் இதழின் உட்பகுப்பு நிலையையும் அறிந்துகொள்ளக் கீழ்வரும் கருத்துகள் துணைநிற்கின்றன.

> "தமிழ்ப் பெண்ணின் பெயர்தாங்கி, என்றும் செல்வியாக விளங்கும் வண்ணம் 'செந்தமிழ்ச்செல்வி' எனும் பெயரைத் தமிழ்ப்பற்றுப் பணிகாரணமாக அமைத்தனர். தமிழன்னையின் காலில் அணியப்பெற்ற சிலம்பு ஆண்டையும், அதனுள்ளிருக்கும் பரல் திங்களையும் குறிக்கும்படி இதழின் பகுப்புமுறை காணப்படுகின்றது. பெரும்பகுப்பு சிலம்பு எனில் சிறுபகுப்பு பரல் ஆகும். செந்தமிழ்ச்செல்வி இலக்கிய ஏடாதலின் முதற்காப்பியத்தில் மரூஉப்பெயர் இதழின் பெரும் பகுப்பாகவும் கண்ணகியின் நீதிநிலை நாட்டப்பெற்ற போது சான்றாக விளங்கிய பரல் சிறு பகுப்பாகவும் அமைந்துள்ளன."[5]

> "1923 ஆம் ஆண்டு சனவரித திங்கள் வெளியிடப்பட்ட முதல் இதழில் 'நமது பத்திரிகை' என்ற தலைப்பில் இதழாசிரியர் மணி. திருநாவுக்கரசு முதலியார் தலையங்கம் எழுதியுள்ளார். "எனவே நமது 'செந்தமிழ்ச் செல்வி'க்குத் தமிழ் ஒரு கண்ணும் சைவம் மற்றொரு கண்ணுமாகத் துலங்கும் என்பது சொல்லாமே அமையும்." (சிலம்பு 1, பக்கம் 3) என்று குறிப்பிட்டுள்ளார்."[6]

1923 ஆம் ஆண்டு முதல் இன்றுவரை சிறப்பான முறையில் வெளிவந்துகொண்டிருக்கின்ற செந்தமிழ்ச்செல்வி, சில ஆண்டுகள் தடைபெற்றுள்ளது. இதற்கான காரணம் பின்வருமாறு குறிக்கப்பெற்றுள்ளது.

> "இரண்டாம் உலகப்போரினால் 1943 இல் தாள் கட்டுப்பாட்டுச் சட்டம் வந்தது. அதனால் வெள்ளைத்தாள்களில் செய்திகளை அச்சிடக்கூடாத நெருக்கடி ஏற்பட்டது. அப்பொழுது செய்தி அச்சுத்தாளில் செந்தமிழ்ச்செல்வி அச்சிட்டு வெளியிட விரும்பாமல் 1944 மேத் திங்கள் முதல் 1947 ஆகஸ்டுத் திங்கள் வரை நிறுத்திவைக்கப்பெற்றது."[7]

செந்தமிழ்ச்செல்வி இதழ் தொடக்கநிலையில் 32 பக்கங்களைக் கொண்டதாக விளங்கியது. ஆனால் தற்பொழுது வெளிவரும் இதழ்கள் 40, 48 பக்கங்களை உடையனவாகக் காணப்படுகின்றன. உள்ளுறை முன் அட்டையின் வெளிப்பகுதியிலோ (1943 கார்த்திகை) உட்பகுதியிலோ (1947 அக்டோபர்) காணப்படுகின்றது. பின் அட்டைப்பகுதி கட்டுரைகளாலும் கவிதைகளாலும் நிறைந்து காணப்படுகின்றது. இவ்விதழில் கட்டுரைகள் தொடர் கட்டுரை, தனிக்கட்டுரை என இருநிலைகளில் காணப்படுகின்றன. இதழின் உட்பகுதியில் 'ஓம்' என்ற குறியீடும், செந்தமிழ்ச்செல்வி என்ற பெயரும், முல்லை, மருதம், குறிஞ்சி, பாலை, நெய்தல் என்ற அமைப்பு முறையில் படங்களும் காணப்படுகின்றன.

தொடக்ககாலத்தில் தமிழ்ஆண்டு குரோதன, அட்சய என்றும், பின் மெய்கண்டார் ஆண்டு என்றும், தற்பொழுது திருவள்ளுவராண்டு என்றும் குறிக்கப்பட்டுள்ளது. தமிழ்மாதங்களும், ஆங்கிலமாதங்களும் இதழ்களில் காணப்படுகின்றன.

### செந்தமிழ்ச்செல்வியின் பங்களிப்பு

*செந்தமிழ்ச்செல்வி இதழ் சமயப்பணி, இலக்கியப்பணி, வரலாற்றுப்பணி, சொல்லாராய்ச்சிப்பணி, நாடகப்பணி, இசைப்பணி, மொழிபெயர்ப்பு, கலைச்சொல்லாக்கம், தமிழ்முழக்கம், அறிவியல் ஆய்வு முதலான பன்முகத்தன்மைகளுடன் வெளிவருகின்றது.*

### 1.2.1.செந்தமிழ்ச்செல்வியின் சங்க இலக்கியப் பணி

*1923 முதல் 2007 வரையிலான செந்தமிழ்ச்செல்வி இதழ்களை மூன்று பெரும் பகுப்பிற்குரியனவாகப் பகுத்து விளக்கலாம். அப்பகுப்பு வருமாறு:*

*1. 1923 - 1950*

*2. 1951 - 1978*

*3. 1979 - 2007.*

### 1923 - 1950

*இவ்வாண்டுகளில் வா.மகாதேவமுதலியார், வ.சு.செங்கல்வராயப்பிள்ளை, மயிலை சீனி.வேங்கடசாமி, திரிபுர.ம.பெரியசாமி, க.ப.சந்தோஷம், ந.மு.வேங்கடசாமிநாட்டார், க.சுப்பிரமணியன், கபசம், வே.நாகலிங்கம், அ.நடராஜபிள்ளை, இளவழனார், மகிழ்நன், எஸ்.நடேசன், கண்ணம்மாள், மேரி மாசிலாமணி, ஔவை சு.துரைசாமிப்பிள்ளை, மா.இராசமாணிக்கம், டி.வி.சதாசிவப் பண்டாரத்தார், மு.அப்துல்மஜீது, வெ.பார்வதியம்மாள், பொ.இரத்தினம், கே.கோவிந்தன், லூர்துசாமி, மு.வீரபாகுப்பிள்ளை, சி.து.கன்னிசாமி, நா.நல்லொளியன், என்.கே.வேலன் முதலான அறிஞர் பெருமக்கள் கட்டுரைகள் எழுதியுள்ளனர். இவர்களில் ந.மு.வேங்கடசாமிநாட்டார் - 5 கட்டுரைகளும், மயிலைசீனி வேங்கடசாமி- 2 கட்டுரைகளும், க.சுப்பிரமணியன் 2 கட்டுரைகளும், இளவழனார் - 2 கட்டுரைகளும், ஔவை.சு.துரைசாமிப் பிள்ளை - 2 கட்டுரைகளும், சி.து.கன்னிசாமி - 2 கட்டுரைகளும் மேரிமாசிலாமணி - 2 கட்டுரைகளும் எழுதியுள்ளனர். ஆசிரியர் பெயர் இல்லா (1944 மாசி புறநானூற்றுப் பொன்மொழிகள்) ஒரு கட்டுரையும் இடம்பெற்றுள்ளது.*

*'நற்றிணை தொடர்பாக - 1 கட்டுரையும், குறுந்தொகை தொடர்பாக 1 கட்டுரையும், பதிற்றுப்பத்து தொடர்பாக - 3 கட்டுரைகளும், பரிபாடல்*

தொடர்பாக 1 கட்டுரையும், கலித்தொகை தொடர்பாக - 5 கட்டுரைகளும், அகநானூறு தொடர்பாக - 1 கட்டுரையும், புறநானூறு தொடர்பாக - 7 கட்டுரைகளும், திருமுருகாற்றுப்படை தொடர்பாக - 2 கட்டுரைகளும், முல்லைப் பாட்டு தொடர்பாக 1 கட்டுரையும், குறிஞ்சிப்பாட்டு தொடர்பாக 1 கட்டுரையும், பத்துப்பாட்டு தொடர்பாக - 1 கட்டுரையும், அகம், புறம் பற்றி - 2 கட்டுரைகளும் சங்கநூல்களில் சைவச்சிறப்பைக்கூற- 1 கட்டுரையும், தமிழ்மக்களின் சிறப்பை எடுத்துவிளக்கும் வகையில் - 3 கட்டுரைகளும், சங்ககால அன்னதானம் பற்றி - 1 கட்டுரையும், சங்கப்புலவர்களின் சிறப்பை விளக்க - 1 கட்டுரையும், சங்கப்பாணர், பரணர்களின் சிறப்பியல்புகளை எடுத்துக்காட்ட - 2 கட்டுரைகளும், பண்டைய அரசியலை விளக்க 1 கட்டுரையும், சங்ககால மதுரை பற்றிக் கூற - 1 கட்டுரையும், தமிழிலக்கியங்களில் தாவரவிலங்கு பற்றிக் கூற - 3 கட்டுரைகளும் இடம்பெற்றுள்ளன'[8] ஆக 1923 ஆம் ஆண்டு முதல் 1950 ஆம் ஆண்டுவரை 39 சங்க இலக்கியக்கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன. இக்கட்டுரைகளைக் கீழ்வருமாறு பகுக்கலாம்.




## 1951-78

இவ்வாண்டுகளில் மயிலை.சீனி.வேங்கடசாமி, சு.குமாரஸ்வாமி, கு.கோதண்டபாணி, மது.ச.விமலானந்தம், அரங்கநாகலிங்கம், பெ.கோவிந்தன், பி.எல்.சாமி, ஆ.சிவலிங்கனார், அறிவுஒளி, வை.தட்சிணாமூர்த்தி, ச.கணபதி, மா.எழில்முதல்வன், கா.பொ.இரத்தினம், கு.சுந்தரமூர்த்தி, சொ.சிங்காரவேலன், ஞா.தேவநேயன், தி.சங்குப்புலவர், செஞ்சொற்கொண்டல், வீ.ப.கா.சுந்தரம், தாயம்மாள்அறவாணன், இறைக்குருவனார் முதலான

அறிஞர்கள் கட்டுரை எழுதியுள்ளனர். இவர்களில் 31 கட்டுரைகள், பி.எல்.சாமியும், 2 கட்டுரைகள் சிங்காரவேலனும், 2 கட்டுரைகள் தி.சங்குப்புலவரும் எழுதியுள்ளனர். மேலும் ஆசிரியர் பெயர் இல்லாத (1961 அக்டோபர் சங்கநூற்களின் தனிச்சிறப்பு) (சங்கஇலக்கிய வெளியீட்டு நிறைவு விழா வாழ்த்துக்கள் 1961 புரட்டாசி - ஐப்பசி) இரண்டு கட்டுரைகளும் இடம்பெற்றுள்ளன.

'நற்றிணை தொடர்பாக - 1 கட்டுரையும், பரிபாடல் தொடர்பாக-1 கட்டுரையும், கலித்தொகை தொடர்பாக - 2 கட்டுரைகளும், நெடுநல்வாடை தொடர்பாக - 1 கட்டுரையும், பத்துப்பாட்டு தொடர்பாக-2 கட்டுரைகளும், பட்டினப்பாலை தொடர்பாக - 2 கட்டுரைகளும், ஆற்றுப்படை குறித்து 1 கட்டுரையும், சங்கத்தமிழரின் வாழ்வியல் கருத்துகளைக் கூறும் முகமாக - 8 கட்டுரைகளும், சங்கநூலின் தனிச்சிறப்பியல்புகள் குறித்து - 7 கட்டுரைகளும், தாவரங்கள் தொடர்பாக-4 கட்டுரைகளும், விலங்குகள் தொடர்பாக - 10 கட்டுரைகளும், பறவைகள் தொடர்பாக 10 கட்டுரைகளும், ஊர்வன தொடர்பாக - 1 கட்டுரையும், கடல்வாழ்விலங்குகள் தொடர்பாக - 3 கட்டுரைகளும், துறைமுகம் தொடர்பாக - 2 கட்டுரைகளும் இடம்பெற்றுள்ளன.'[9] ஆக 1951 முதல் 1978 வரையிலான ஆண்டுகளில் 55 சங்க இலக்கியக்கட்டுரைகள் காணப்படுகின்றன.




## 1979 - 2007

இவ்வாண்டுகளில், பி.எல்.சாமி, கா.காளிமுத்து, சரளா இராசகோபாலன், வீ.ப.கா.சுந்தரம், எல்.சௌந்தரபாண்டியன், இளங்குமரன், ஆ.பழநி, இராஜகோபாலன், சிவ.மங்கையர்க்கரசி, கா.கார்த்திகேயன், திருமேனி நாகராஜன், இ.க.கந்தசுவாமி, கிரேஸ்

செல்வராஜ், எஸ்.கணேசன், மா.மீனாட்சிசுந்தரம், மார்கரெட் பாஸ்டின், ரா.இராமையா, ந.சுப்பிரமணியம், கி.இராசா, ப.அனுசூயா, சு.பன்னீர்செல்வம், சா.நடராஜவேலு, பி.இராமநாதன், பொன்முகிலன், பொற்கோ, தெ.முருகசாமி, ஆ.சிவலிங்கனார், வாணிஅறிவாளன், மு.இளங்கோவன் முதலானோர் கட்டுரை எழுதியுள்ளனர். இவர்களில் பி.எல்.சாமி - 52 கட்டுரைகளும், ஆ.சிவலிங்கனார் - 2 கட்டுரைகளும், பொற்கோ - 2 கட்டுரைகளும், கி.இராசா - 2 கட்டுரைகளும், இளங்குமரன்-2 கட்டுரைகளும் எழுதியுள்ளனர். ஆசிரியர் பெயர் இல்லாத (சங்கக்கூத்தும் தெருக்கூத்தும் - 1982 ஆகஸ்ட், கலித்தொகையில் நாடகத்திறன் - 1966 சூலை) இரண்டு கட்டுரைகளும் இடம்பெற்றுள்ளன.

'நற்றிணை தொடர்பாக - 1 கட்டுரையும், குறுந்தொகை தொடர்பாக-2 கட்டுரைகளும், பதிற்றுப்பத்து தொடர்பாக - 1 கட்டுரையும் கலித்தொகை தொடர்பாக - 1 கட்டுரையும், புறநானூறு தொடர்பாக - 7 கட்டுரைகளும், குறிஞ்சிப்பாட்டு தொடர்பாக - 2 கட்டுரைகளும், மலைபடுகடாம் தொடர்பாக - 1 கட்டுரையும், சங்கமக்கள் வாழ்வியல் குறித்து - 6 கட்டுரைகளும், தாவரங்கள் குறித்து - 34 கட்டுரைகளும், பூச்சி குறித்து - 3 கட்டுரைகளும், வண்டு குறித்து - 1 கட்டுரையும், ஊர்வன, குளவி குறித்து - 7 கட்டுரைகளும், கடல்வாழ் உயிரினங்கள் தொடர்பாக - 2 கட்டுரைகளும், நடப்பன குறித்து - 1 கட்டுரையும், தாவுவன தொடர்பாக-1 கட்டுரையும், துறைமுகம் தொடர்பாக - 2 கட்டுரைகளும், சங்ககாலமா? சங்கக் காலமா? என ஆராயும் நோக்கில் - 3 கட்டுரைகளும், பெயரில்லாப் பாடலுக்குப் பெயர்தேட - 1 கட்டுரையும், அந்தாதி தொடர்பாக - 1 கட்டுரையும், சங்கப்புலவர் தொடர்பாக - 1 கட்டுரையும், சங்க நூல்களில் ஏறிய தவறுநீக்கல் என்ற தலைப்பில் - 1 கட்டுரையும், சங்க இலக்கியத்தில் தொல்காப்பியம் குறித்து - 1 கட்டுரையும், சங்க இலக்கியக் கருத்தாய்வில் காணப்படும் நச்சுவிதை என்ற தலைப்பில் 1 கட்டுரையும், அக இலக்கியத்தில் அரியவெண்பா என்னும் தலைப்பில் 1 கட்டுரையும், வரலாற்று நோக்கில் சங்க இலக்கியத்தைக் காண 1 கட்டுரையும், யாயும், யாயும் செம்புலப் பெயல்நீரார் சார்பாக - 2 கட்டுரைகளும், சங்க இலக்கியமும் உ.வே.சா-வும் குறித்து - 1 கட்டுரையும் இடம்பெற்றுள்ளன.'[10] ஆக

*1979 முதல் 2007 வரையிலான ஆண்டுகளில் - 86 சங்க இலக்கியக் கட்டுரைகள் காணப்படுகின்றன.*




## 1.3.தமிழ்ப்பொழில்

*1925 ஆம் ஆண்டு ஏப்ரல் (குரோதன ஆண்டு - சித்திரை) இவ்விதழ் கரந்தைத் தமிழ்ச்சங்கத்தால் தொடங்கப்பெற்றது. தொடக்கம் முதல் இன்றுவரை சிறந்த கட்டுரையாசிரியர்களால், பல அரிய கட்டுரைகளை இவ்விதழ் வெளியிட்டு வருகின்றது.*

*தமிழ்ப்பொழில் என இவ்விதழுக்குப் பெயரிட்டமைக்குச் சில காரணங்கள் உண்டு. அதனை ஆர்.வேங்கடாசலம் கீழ்வருமாறு விளக்குவார்.*

> *"தனது பசுநிறத்தால் வண்டொலியால் தீங்கனியால் மலர் மணத்தால் பைம்புற்றரையாம், கண்டுகேட்டு உண்டு உயிர்த்து உற்ற அறியும் பேரன்பினைத் தன்பால் எய்தும் எத்திறத்தோர்க்கும் எஞ்ஞான்றும் தரவல்லது 'பொழில்' ஒன்றேயன்றோ! எனவே இங்ஙனம் ஒப்பும் உயர்வுமில்லாத சிறப்பினதாகிய பொழிலின் பொற்பினை... யுணர்ந்தே இந்தத் திங்களிதழிற்கு தமிழ்ப்பொழில் எனப் பெயரிட்டனம்."[11]*

*இதழின்நோக்கமும், இவ்விதழில் இடம்பெறவேண்டிய பொருட்களும் கீழ்வருமாறு வரையறுக்கப்பெற்றுள்ளன.*

> *"இவ்விதழ் ஓர் தமிழ்ச்சங்கத்தின் வெளியீடு என்னும் தகுதிக்கேற்ப, தமிழ் வளர்ச்சியும், தமிழர் மேம்பாடும் பற்றிய அருமைக் கட்டுரைகளையே தன்னகத்துக் கொண்டுவரும். தமிழ்மொழிவரலாறு, தமிழர்வரலாறு, தமிழ்ச்சொல்லாக்கம், தமிழ்நூல் ஆராய்ச்சி, பழந்தமிழ்நூல் வெளியீடு, தமிழ்நூல் மதிப்புரை, தமிழ்ச்சங்கச் செய்திகள் முதலிய எண்ணில்*

பல்வகையானமையும் சிறந்த கட்டுரைகள், ஆங்கில ஆரியம் தமிழ்மொழிகளில் வல்லோர் பலரால் கற்றாரேயன்றிக் கற்போர்க்கும் பயனுறத்தக்க நெறியில் தெள்ளிய இனிய தீந்தமிழ் நடையில் எழுதப்பெறும்"[12] என்பர் ஆர்.வேங்கடாசலம்.

கரந்தைத் தமிழ்ச்சங்கம் தொடர்பான செய்திகள், கருத்துரைகள் நூல்மதிப்புரைகள், கவிதைகள், நாடகங்கள், படைப்புக்கட்டுரைகள், வாழ்வியல்கட்டுரைகள், தமிழ்நேயக்கட்டுரைகள், அறவியல்கட்டுரைகள், இலக்கியக்கட்டுரைகள், இலக்கணக்கட்டுரைகள், தமிழக வரலாற்றுக் கட்டுரைகள், தமிழ்ப்பண்பாட்டுக்கட்டுரைகள், கலைச் சொல்லாக்கக் கட்டுரைகள், கல்வெட்டு வெளியீடுகள் எனப் பலவகைப்பட்ட கட்டுரைகளை இவ்விதழ் படைப்புகளாகக் கொண்டுள்ளது.

### 1.3.1.தமிழ்ப்பொழில் இதழின் சங்க இலக்கியப்பணி

1925 முதல் 2007 வரையிலான தமிழ்ப்பொழில் இதழ்களை மூன்று பெரும் பகுப்பிற்குரியனவாகப் பகுத்து விளக்கலாம். அப்பகுப்பு வருமாறு:

- 1925 - 1950
- 1951 - 1976
- 1977 - 2003
- 2004 - 2007

### 1925 - 1950

இவ்வாண்டுகளில் கே.சோமசுந்திரதேசிகன், இதழாசிரியர், சு.துரைசாமிப்பிள்ளை, டி.வி.சதாசிவப்பண்டாரத்தார், அ.வரதஞ்சையப்பிள்ளை, எல்.உலகநாதபிள்ளை, வேங்கடாசலம்பிள்ளை, எஸ்.தெண்டபாணி, மி.பெ.இராமநாதஞ்செட்டியார், ச.தண்டபாணிதேசிகன், ஐ.நடேசபிள்ளை, எம்.நடேசமுதலியார், ஜி.சுப்பிரமணியபிள்ளை, ந.மு.வேங்கடசாமி நாட்டார், சி.இலக்குவனார், எஸ்.நாராயணசாமி, உழவன், கு.சின்னையன், அ.அரங்கசாமி, வே.கோபாலன் முதலான சிறந்த ஆசிரியர்கள் கட்டுரை எழுதியுள்ளனர். இவர்களில் ஔவை சு.துரைசாமிப் பிள்ளை - 5 கட்டுரைகளும், சு.தண்டபாணிதேசிகன் - 2 கட்டுரைகளும், கே.சோமசுந்தரம்பிள்ளை- 5 கட்டுரைகளும் எழுதியுள்ளனர்.

‘நற்றிணைதொடர்பாக - 2 கட்டுரைகளும், ஐங்குறுநூறு தொடர்பாக-1 கட்டுரையும், பதிற்றுப்பத்து தொடர்பாக - 2 கட்டுரைகளும், கலித்தொகை தொடர்பாக - 1 கட்டுரையும், அகநானூறு தொடர்பாக - 1 கட்டுரையும், புறநானூறு தொடர்பாக - 1 கட்டுரையும், திருமுருகாற்றுப்படை தொடர்பாக - 1 கட்டுரையும், பத்துப்பாட்டு தொடர்பாக - 1 கட்டுரையும், குறிஞ்சிப்பாட்டு தொடர்பாக - 1 கட்டுரையும், முல்லைப்பாட்டு தொடர்பாக - 2 கட்டுரைகளும், மதுரைக்காஞ்சி தொடர்பாக - 1 கட்டுரையும், மலைபடுகடாம் தொடர்பாக - 2 கட்டுரைகளும், சங்ககால அரசர்களையும் புலவர்களையும் எடுத்துக்காட்டி அவர்களின் சிறப்பை விளக்க - 8 கட்டுரைகளும், சங்க மக்கள் குறித்து விளக்க - 4 கட்டுரைகளும் இடம்பெற்றுள்ளன’[13] ஆக 1925 முதல் 1950 வரையிலான ஆண்டுகளில் 28 சங்க இலக்கியக் கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன.

தமிழ்ப்பொழில்
(1925 - 1950)

சங்க நூல்கள் அரசு மக்கள்

## 1951 - 1976

இவ்வாண்டுகளில் வேலூர்க்காரழகன், அடிகளாசிரியர், கே.சோமசுந்தரம்பிள்ளை, சொ.சிங்காரவேலனார், மு.அருணாச்சலம்பிள்ளை, சாமி.சிதம்பரனார், ப.சுந்தரேசன், சாமி செல்வவிநாயகம், கு.சீனிவாசன், மு.இராதாகிருட்டிணன், துரை.பிச்சை, சாலினி இளந்திரையன், ஆ.பாலன், தட்சிணாமூர்த்தி, கு.சிவஞானம், இரா.சுப்பிரமணியன் முதலான ஆசிரியர்கள் கட்டுரை எழுதியுள்ளனர். இவர்களில் சாமிசிதம்பரனார் - 4 கட்டுரைகளும், சொ.சிங்காரவேலனார் - 2 கட்டுரைகளும், கே.சோமசுந்தரம் - 2 கட்டுரைகளும், தட்சிணாமூர்த்தி - 2 கட்டுரைகளும் எழுதியுள்ளனர்.

‘நற்றிணை தொடர்பாக - 3 கட்டுரைகளும், குறுந்தொகை தொடர்பாக - 2 கட்டுரைகளும், கலித்தொகை தொடர்பாக - 3

கட்டுரைகளும், புறநானூறு தொடர்பாக-2 கட்டுரைகளும், திருமுருகாற்றுப்படை தொடர்பாக - 1 கட்டுரையும், நெடுநல்வாடை தொடர்பாக - 1 கட்டுரையும், சங்ககால மன்னர்கள் பற்றி-1 கட்டுரையும், சங்கமக்களின் வாழ்வியல் செய்திகள் பற்றி - 6 கட்டுரைகளும், தாவர விலங்குகள் பற்றி - 3 கட்டுரைகளும் இடம்பெற்றுள்ளன'[14] ஆக 1951 முதல் 1976 வரையிலான ஆண்டுகளில் 22 சங்க இலக்கியக் கட்டுரைகள் காணப்படுகின்றன.




**1977-2003**

இவ்வாண்டுகளில் சா.பன்னீர்ச்செல்வம், கே.சோமசுந்தரம், இரா.சுந்தரமூர்த்தி, பா.வீரப்பன், ஏ.ஆதித்தன், க.சுப்பிரமணியன், மா.தமிழ்மாறன், அடிகளாசிரியர், பி.எல்.சாமி, நா.செல்வராசு, இரா.இராசகோபாலன், மு.பெரி.மு.இராமசாமி, க.த.திருநாவுக்கரசு, பூரணசந்திரஜீவா, பெ.மாதையன், ந.விசாலாட்சி, நா.ஆறுமுகம், பழ.முத்தப்பன், சா.அங்கயற்கண்ணி, கி.இராசா, வி.சா.பாலசுப்பிரமணியன், ந.கந்தசாமி, சு.தமிழ்வேலு, சௌந்தரபாண்டியன், வ.கிருஷ்ணன், இரெ.குமரன், க.அன்பழகன், ச.கு.பன்னீர்ச்செல்வம், சி.அரசப்பனார், க.அமுதா, சோ.முத்தமிழ்ச்செல்வன், சி.மகேசுவரி முதலான ஆசிரியர்கள் கட்டுரைகள் எழுதியுள்ளனர். இவர்களில் சுந்தரமூர்த்தி - 2 கட்டுரைகளும், இராசகோபாலன் - 2 கட்டுரைகளும், மாதையன் - 2 கட்டுரைகளும், கி.இராசா - 3 கட்டுரைகளும், சோ.முத்தமிழ்ச்செல்வன் - 2 கட்டுரைகளும் எழுதியுள்ளனர்.

'நற்றிணை தொடர்பாக - 1 கட்டுரையும், குறுந்தொகை தொடர்பாக-2 கட்டுரைகளும், கலித்தொகை தொடர்பாக - 4 கட்டுரைகளும், புறநானூறு தொடர்பாக - 3 கட்டுரைகளும், திருமுருகாற்றுப்படை தொடர்பாக - 1 கட்டுரையும், பொருநராற்றுப்படை

தொடர்பாக - 1 கட்டுரையும், குறிஞ்சிப்பாட்டு தொடர்பாக - 1 கட்டுரையும், முல்லைப்பாட்டு தொடர்பாக - 2 கட்டுரைகளும், ஆற்றுப்படை - 3 கட்டுரைகளும், தமிழர் வாழ்வியல் தொடர்பாக - 8 கட்டுரைகளும், சங்ககாலப் பேச்சுநடை தொடர்பாக - 1 கட்டுரையும், அறவியல் தொடர்பாக - 1 கட்டுரையும், அறிவியல் தொடர்பாக - 1 கட்டுரையும், அகத்திணை மரபு தொடர்பாக-1 கட்டுரையும், சங்கக் கல்வெட்டுச்சொற்கள் தொடர்பாக - 1 கட்டுரையும், சங்ககால ஆய்வுகள் குறித்து 2 கட்டுரைகளும், சங்கச் சமுதாயச் சூழலில் தண்ணடை நல்கலும், பிள்ளையாட்டும் தொடர்பாக-1 கட்டுரையும், புற இலக்கியவகை தொடர்பாக- 1 கட்டுரையும், சங்ககாலச் சொற்பயன்பாடு குறித்து - 1 கட்டுரையும், மருதனிளநாகனார் பாடல் வெளிப்பாடு குறித்து - 1 கட்டுரையும் இடம்பெற்றுள்ளன'[15] ஆக 1977 முதல் 2003 வரையிலான ஆண்டுகளில் 37 சங்க இலக்கியக் கட்டுரைகள் காணப்படுகின்றன.




## 2004 - 2007

இவ்வாண்டுகளில் சி.மகேசுவரி, க.அன்பழகன், அ.ஜெயக்குமார், ஆகியோர் கட்டுரை எழுதியுள்ளனர். இவற்றுள் 'ஆற்றுப்படை தொடர்பாக- 1 கட்டுரையும், சொற்பயன்பாடு தொடர்பாக - 1 கட்டுரையும், தழையுடை தொடர்பாக - 1 கட்டுரையும் இடம்பெற்றுள்ளன.'[16] ஆக 2004 முதல் 2007 வரையிலான ஆண்டுகளில் 3 சங்க இலக்கியக் கட்டுரைகள் காணப்படுகின்றன.



## 1.4.தொகுப்புரை

இவ்வியலின்வழி அறியலாகும் செய்திகள் வருமாறு:

- செந்தமிழ் இதழ் தோற்றம் முதல் 2007 வரை 101 தொகுதிகளைக் கொண்டு காணப்படுகின்றது. இத்தொகுதிகளை (1-25), (26-51), (52-76), (77-101) என நான்கு பிரிவுகளாகப் பிரிக்கலாம். முதல் பிரிவில் 29 சங்க இலக்கியக் கட்டுரைகளும், இரண்டாம் பிரிவில் 18 சங்க இலக்கியக் கட்டுரைகளும், மூன்றாம் பிரிவில் 10 சங்க இலக்கியக் கட்டுரைகளும், நான்காம் பிரிவில் 30 சங்க இலக்கியக் கட்டுரைகளும் காணப்படுகின்றன. ஆக, இவ்விதழில் மொத்தம் 87 சங்க இலக்கியக் கட்டுரைகள் காணப்படுகின்றன. இக்கட்டுரைகள் சங்கநூல்கள், மன்னர்கள், புலவர்கள், அகப்பொருள், அகத்திணை, சங்ககால ஊர்ப்பெயர்கள், சங்ககாலச் சிறப்பக்குறிப்புகள், சங்கமக்கள் வாழ்வியல் எனும் பொருண்மைகளுக்கு உரியனவாக உள்ளன.

- செந்தமிழ்ச்செல்வி வெளிவந்த ஆண்டு முதல் 2007 வரையிலான ஆண்டுகளை (1923-1950) (1957-1978) (1979-2007) எனப் பிரிக்கலாம். முதல் பிரிவில் 39 சங்க இலக்கியக் கட்டுரைகளும், இரண்டாம் பிரிவில் 55 சங்க இலக்கியக் கட்டுரைகளும், மூன்றாம் பிரிவில் 86 சங்க இலக்கியக் கட்டுரைகளும் காணப்படுகின்றன. ஆக, இவ்விதழில் மொத்தம் 180 சங்க இலக்கியக் கட்டுரைகள் காணப்படுகின்றன. இக்கட்டுரைகள், தமிழ்மக்கள் வாழ்வு, அரசியல், தாவரவிலங்குகள், சங்கநூலின் தனிச்சிறப்பு எனும் பொருண்மைகளுக்கு உரியனவாக உள்ளன.

- தமிழ்ப்பொழில் வெளிவந்த ஆண்டு முதல் 2007 வரை உள்ள ஆண்டுகளை (1925-1950) (1951-1976) (1977-2003) (2004-2007) என நான்கு பிரிவுகளாகப் பிரிக்கலாம். முதல் பிரிவில் - 28 சங்க இலக்கிய கட்டுரைகளும், இரண்டாம் பிரிவில் 22 கட்டுரைகளும், மூன்றாம் பிரிவில் - 37 கட்டுரைகளும், நான்காம் பிரிவில் - 3 கட்டுரைகளும் காணப்படுகின்றன. ஆக, இவ்விதழில் மொத்தம் உள்ள சங்க இலக்கியக் கட்டுரைகளின் எண்ணிக்கை - 90 ஆகும். இக்கட்டுரைகள் சங்க

நூல்களின் சிறப்பு, சங்ககால அரசு, சங்கமக்கள் வாழ்வியல், தாவரவிலங்குகள் பற்றிய செய்திகள், பேச்சுநடை, சொற்பயன்பாடு எனும் பொருண்மைகளுக்குரியனவாக உள்ளன.

## சான்றெண் விளக்கம்

1. *நற்.(21-11, 24-8, 10 ஆனி), குறு.(14-5), (14-9), (16-11), (17-5), (21-07), ஐங்.(17-10), பரி.(13, 14-2, 19-11), கலி.(20-1), புறம்.(14-4, 21-6), முரு.(20-6), மது.(7-2), நெடு.(24-1), புறப்பாட்டு.(16-5), (17-2), (17-6,8), (18-1), (19-2) அகப்பொருள் (9-5), மன்னர்கள் (11-2, 20-1,3), புலவர்கள் (19-9, 22-8, 9, 10, 23-3), சங்கச்செய்யுளில் ஏகாரம் அடுத்த ஒனீற்றுவிளி (19-6).

2. *பதி.(31-8), பரி.(49-11), கலி.(45-9, 10, 49-5,6), அகம்.(38-3, 39-11, 12), புறம்.(28-4, 28-9, 29-1,3,9,11, 32-4, 35-12), முரு.(28-8, 38-1), (40-1,2,3) (46-10, 12), பட்.(39-3, 44-6, 7, 8), பத்துப்பாட்டு (41), புறப்பாட்டு (33-1), மன்னர்கள் (48-11, 12;49-1, 2, 3, 4, 5, 7, 8, 9, 11, 12; 50-1, 2, 3, 4, 5, 11, 12).

3. *நற்.(54-10, 11, 55-2, 6), பரி.(59-3, 4, 5), (71-4), கலி.(63-1), (74-1), அகம்புறம் (54;60-10,11,12), அகப்பொருள் (55-8), அகத்திணை (55-9), சங்ககால ஊர்ப்பெயர்கள் (66-3).

4. நற். (95-1), குறு.(101), ஐங்.(100), பதி.(92-11), அகம்.(86-3), (86-4) புறம்.(92-8, 9, 10), (95-1), (96-12), (100), நெடு.(88-3), மது.(98-5), சங்க இலக்கிய நகைச்சுவை (83-1), பொருளியல் நோக்கு (83-3,4), அவர் (85-2), பாட்டும் தொகையும் (86-3), அரசு அமைப்பு (87-2), செவ்வியல் இலக்கியம் (90-12), சிற்பக்குறிப்பு (94-6,7), வரலாற்றுக் குறிப்பு (94-9), கபிலர் பாடல்கள் (94-8), முல்லைநில உயிர்ச்சூழல் (94-2), குறிஞ்சிச்சிந்தனை (95-5), பரணர் (97-2), சங்கக் குடும்பம் (98-9,10),

---

குறிப்பு : * இக்குறியிடப்பட்ட குறியீட்டில் 21-11 என்று குறிக்கப்பெறுவதில் முதலில் இடம்பெறும் எண் தொகுதியைக் குறிக்கும்.
சிறுகோட்டுக்குப்பின் இடம்பெறும் எண் பகுதியைக் குறிக்கும்.
முதலில் இடம்பெறும் எண் மட்டுமே இருந்தால் அது தொகுதியையே குறிக்கும்.

சங்க இலக்கிய மதிப்புக்கல்வி (99), வாழ்வியல் நிமித்தங்கள் (99), சங்கநாடகக்கூறுகள் (99), வஞ்சிதானே முல்லையது புறனே (100), சங்க இலக்கியத்தில் மழலை (100), சங்க இலக்கிய நாட்டுப்புற நிகழ்த்துக்கலை (101).

5. பி.தெட்சிணாமூர்த்தி, செந்தமிழ்ச்செல்வியின் இலக்கியப்பணி ப.5.

6. மேலது, ப.4.

7. இ.சுந்தரமூர்த்தி, மா.ரா.அரசு (பதி.), இந்திய விடுதலைக்கு முந்திய தமிழ் இதழ்கள், ப.256.

8. **எட்டுத்தொகை** - நற்.(1947 டிசம்பர்), குறு.(1941-42 மாசி), பதி.(1928 ஜனவரி - பிப்ரவரி), (1928 அக்டோபர் - டிசம்பர்), (1942-43 கார்த்திகை), பரி.(1939-40 வைகாசி), (கலி.1923 அக்டோபர் - நவம்பர்), (1928 ஜூலை-செப்டம்பர்), (1928 செப்டம்பர்-அக்டோபர்), 1939-1940 ஆவணி-கார்த்திகை, மாசி-பங்குனி), (1948-49 ஜூன்), அகம்.(1941-42 ஐப்பசி), புறம்.(1925 மார்ச் - அக்டோபர்), (1927 நவம்பர் - டிசம்பர்), (1930 ஜனவரி - பிப்ரவரி), (1930 ஜனவரி - பிப்ரவரி), (1939 - 40 பங்குனி), (1941-42 ஆனி-ஆடி), (1944 மாசி), **பத்துப்பாட்டு** - முரு.(1923 ஜனவரி - நவம்பர்), (1929 ஜனவரி, ஆகஸ்ட்), முல்லை.(1940-41 புரட்டாசி), குறி.(1927-28, டிசம்பர், ஜனவரி), பத்துப்பாட்டு (1928 மே, ஜூன்), **தமிழர் வாழ்வியல்** - அகம், புறம் (1925-26, ஜூலை, ஜனவரி), (1942-43 பங்குனி), சைவசமயமும் சங்க இலக்கியமும் (1929 ஜூலை-ஆகஸ்ட்), தமிழ்மக்கள் சிறப்பு (1939-40 பங்குனி) (1940-41 மாசி), (1941-42 புரட்டாசி), அன்னதானம் (1940-42, புரட்டாசி), பாணர் (1941-42 ஆவணி), பரணர் (1949 ஆகஸ்ட்), **அரசியல்** - புலவர் (1941-42 புரட்டாசி), படை (1948 மே), அரசியல் (1948 நவம்பர்), மதுரை நகர் சிறப்பு (1950 நவம்பர்), **தாவரவிலங்குகள்,** தாவரம் (1948 ஜனவரி, பிப்ரவரி, ஏப்ரல்), (1950 நவம்பர்), விலங்குகள் (1950 செப்டம்பர்).

9. ***சங்க நூல்கள்*** - *நற்.(1958 ஏப்ரல்), பரி.(1963 நவம்பர்), கலி.(1971 ஆகஸ்ட்), (1971 நவம்பர்), நெடு.(1966-67 ஜனவரி, பிப்ரவரி), பத்துப்பாட்டு (1966-67 ஏப்ரல்), (1972 மார்ச்), பட்.(1958 மே), (1964 சூன்), ஆற்றுப்படை (1977-78 செப்டம்பர்),* ***சங்கத்தமிழர் வாழ்வியல்-*** *குறிஞ்சித்திணை (1958 சூலை), (முல்லைப்பண் 1958 மார்ச் - நவம்பர்), மணமுறை (1960 அக்டோபர்- டிசம்பர்), காதல், காமம் (1964 ஜுன்), சமஉடைமை (1973 டிசம்பர்), மணிகள் (1976 செப்டம்பர்-டிசம்பர், ஜனவரி-ஜுலை), கள்ளர் வேட்டைமுறை (1976 ஆகஸ்ட்), ஆடைஅணிகலன்கள் (1976-77 செப்டம்பர்-ஜுலை, 1977-78 செப்டம்பர்-நவம்பர், ஜனவரி-மார்ச், ஜுன்-ஆகஸ்ட்),* ***சங்கநூலின் தனிச்சிறப்புகள்*** *- சங்க நூலில் திருமணமுறை (1951 ஜுன்), பாரிகொடை (1958 சூலை), சங்கப்பாடல் மொழிபெயர்ப்பு (1960 செப்டம்பர், டிசம்பர்), சங்கநூல் சிறப்பு (1961 அக்டோபர்), சங்க இலக்கிய வெளியீட்டு நிறைவு விழா (1961 நவம்பர்), சங்கச் செய்யுள்நடை (1962 பிப்ரவரி-சூலை), உரையும், பாட்டும் (1963 டிசம்பர்),* ***தாவரவிலங்குகள்-*** *மரம் - ஆலமரம் (1964 மார்ச்), முண்டகம், முள்ளி (1968 மார்ச்), இரம் (1974 சூலை), மரம், செடி,கொடி (1974 ஜுன், ஆகஸ்ட்), விலங்குகள் - களிறும் குளிறும் (1959 ஆகஸ்ட்), குரங்கு, முசு, ஊகம் (1964 சூலை), கரடி (1966 ஜுன்), நரி (1966-67 டிசம்பர்) மான் (1966-67 செப்டம்பர் - அக்டோபர்), நீர்நாய் (1967 செப்டம்பர்), புலி (1968 மார்ச்-மே), கேழல் (1968 சூலை), முயல் (1968 ஆகஸ்ட்), முளவுமா முயலா (1974 செப்டம்பர்), பறவைகள் - காக்கை (1968 மார்ச்), குருகு (1971 ஆகஸ்ட்), யானையங்குருகு (1971 செப்டம்பர்), அன்னம் (1971 - நவம்பர்), பெருங்குருகு பெருநாரை (1971 அக்டோபர்), கருங்கால் வெண்குருகு, வெள்ளாங்குருகு, சிறுவெள்ளாங்குருகு (1971 நவம்பர்), நாரையும் கொக்கும் (1972 பிப்ரவரி), எருவை, பாறும் (1972 ஆகஸ்டு), மயில் (1972 சூலை), கூகைக்கோழி (1975 பிப்ரவரி, மார்ச்) ஊர்வன - பாம்பு (1971 மே-சூன்), கடல்வாழ்விலங்குகள் - முதலை இடங்கர் (1975 ஏப்ரல்), மீன்கள் (1976 அக்டோபர்-சூன்), கடல்வாழ் விலங்கு (1968 அக்டோபர்), துறைமுகம் - காவிரிப்பூம்பட்டினம் (1951 மே), கோடிக்கரை (1976 செப்டம்பர்).*

10. **சங்கநூல்கள்** - *நற்.(2007 அக்டோபர்), குறு.(1982 ஆகஸ்ட்) (2006 ஜனவரி), பதி.(1982 ஏப்ரல்), கலி.(1996 சூலை) (1987 ஜனவரி), புறம்.(1991 நவம்பர்), (1993 சூலை) (2000 பங்குனி - சித்திரை), (2000 பங்குனி - சித்திரை) (2002 மார்கழி - தை) (2002 ஆனி), (2007 மார்ச்), குறிஞ்சிப்பாட்டு (1985 மார்ச்-ஜுலை), (1985 ஆகஸ்டு), மலை (2006 ஏப்ரல்),* **சங்கமக்களின் வாழ்வியல்** - *சங்ககாலத்துத் தெருக்கூத்து (1982 ஆகஸ்ட்), காசு (1992 மார்ச்), யாழ் (1994 மே), வாழ்வியல் (2002 செப்டம்பர் - நவம்பர்), பெண்ணியம் (2007 சூன்), மனிதவள மேம்பாடு (2007 மே),* **தாவரவிலங்குகள்** - *மரம் - உகாய் (1980 ஏப்ரல்) தடவு, பிடவு (1980 ஆகஸ்டு - செப்டம்பர்), தில்லை, குல்லை (1980 டிசம்பர்), ஞாழல் (1982 ஏப்ரல், மே), ஆலம் (1983 செப்டம்பர்), யாமரம் (1984 ஏப்ரல்), ஓமை (1984 மே), கரந்தை (1984 சூன்), நாகம், வழை (1984 ஆகஸ்ட்), ஞெமை (1984 அக்டோபர்), மூங்கில் (1984 நவம்பர்), வாகை உழிஞ்சில் (1986 சூன்), ஆசினி (1986 டிசம்பர்), வெட்சி (1986 அக்டோபர்), கண்டல் (1987 ஜனவரி), துடரி (1987 ஜனவரி), முருங்கை (1988 ஏப்ரல்), கமுகு (1988 ஆகஸ்ட்), இமுப்பை (1988 அக்டோபர்), மயிலை (1989 சனவரி), கடம்பு (1993 செப்டம்பர்), பயிர் - நெல் (1983 மார்ச்), வரகு (1985 ஆகஸ்டு), கோரை - பைஞ்சாய் (1983 ஏப்ரல்), கொடி - உன்னமும், ஆவிரையும் (1984 பிப்ரவரி), செடி - முண்டகம், முள்ளி (1986 மார்ச்), வள்ளி கவலை (1986 மே), பயரும் உழுந்தும் (1987 பிப்ரவரி), களா (1987 மார்ச்), மஞ்சள், இஞ்சி (1987 சூலை), எருவை, நாணல் (1988 ஜனவரி), கூதளம், குளவி, குல்லை (1988 செப்டம்பர்), உன்னமும் முஞ்ஞையும் (1991 டிசம்பர்), விலங்குகள், பூச்சி - மூதாய் (1981 நவம்பர்), சிதலையும், ஈயலும் (1987 நவம்பர்), மின்மினி (1988 சனவரி), வண்டு - சிள்வீடு (1980), ஊர்வன - ஓந்தி (1981 செப்டம்பர்), உடும்பு (1982 மார்ச்), பல்லி (1982 செப்டம்பர்), ஆமை (1984 சூலை), (1987 பிப்ரவரி), (1991 நவம்பர்), குளவி - (1981 மே), கடல்வாழ் உயிர்கள் - இடங்கரும், கராமும் (1982 ஏப்ரல்), சங்கு (1992 நவம்பர், டிசம்பர்), நடப்பன - யானை (2005 செப்டம்பர்), தாவுவன - தவளையும், தேரையும், நுணலும் (1992 ஜனவரி), பிற துறைமுகம் - பவத்திரி (1979 சூலை-ஆகஸ்ட்), துறைமுகங்கள் (1993 நவம்பர் - டிசம்பர்), சங்ககாலமா? சங்கக் காலமா? (1986 ஆகஸ்டு), (1986 மே-ஆகஸ்டு) (1987*

*சூலை), ஆசிரியர் பெயரில்லாப் பாடலுக்குப் பெயர்தேடல் (1988 ஜனவரி- ஆகஸ்டு), அந்தாதி (1988 நவம்பர்), சங்கப்புலவர் (2000 தை), சங்கநூல்களில் ஏறிய தவறுநீக்கல் (2000 கார்த்திகை), சங்க இலக்கியமும் தொல்காப்பியமும் (2003 அக்டோபர்), சங்க இலக்கியக் கருத்தாய்வில் நச்சுவிதை (2004 பிப்ரவரி, மார்ச்), அக இலக்கியத்தில் அரியவெண்பா (2004 மே-சூன்), வரலாற்று நோக்கில் சங்க இலக்கியம் (2004 நவம்பர்), யாயும் யாயும் செம்புலப்பெயல்நீரார் (2005, சூலை ஆகஸ்டு) (2005 ஆகஸ்டு) சங்க இலக்கியமும் உ.வே.சா.வும் (2007 செப்டம்பர்).*

11. *இ.சுந்தரமூர்த்தி, மா.ரா.அரசு (பதி.), இந்திய விடுதலைக்கு முந்திய தமிழ் இதழ்கள், ப.271.*

12. *மேலது, ப.271.*

13. ***சங்கநூல்கள் :** நற்.(1934-35 ஆடி), (1936-37 தை), ஐங்.(1933-34 மாசி), பதி.(1948-49 தை, பங்குனி), (1949-50 ஆனி), கலி.(1929-30 ஆடி, புரட்டாசி, 1933 ஆடி, கார்த்திகை, 1934-35 ஐப்பசி, 1935-36 மார்கழி), அகம்.(1934-35 கார்த்திகை), புறம்.(1933-34 ஆவணி), முரு.(1939-40 மாசி), **பத்துப்பாட்டு** - (பொரு.1934-35 ஆடி), குறிஞ்சிப்பாட்டு (1934 பங்குனி), முல்லை.(1932-33 கார்த்திகை) (1935-1936 மார்கழி), மது.(1928-29 தை- பங்குனி), மலை (1943 மார்கழி-தை), (1945-46 கார்த்திகை-மார்கழி), **அரசியல், மன்னர்கள்** - சங்ககாலச் சோழர்கள் (1925-26 சித்திரை, தை), தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் (1925-27 ஐப்பசி, கார்த்திகை, மாசி, பங்குனி), முதலாம் குலோத்துங்கச்சோழன் (1926-27 மாசி, பங்குனி, வைகாசி-ஆனி, ஆடி-ஆவணி), **புலவர்கள்** - முடத்தாமக்கண்ணியார் (1926-27), பெண்பாற்புலவர்கள் (1928-29 தை-பங்குனி), பாலைபாடிய பெருங்கடுங்கோ (1942-43 பங்குனி), வெள்ளிவீதியார் (1943 ஐப்பசி), ஔவை.பாரி மகளிர் (1945-46 சித்திரை), **சங்ககால மக்கள்** - நற்றாய், செவிலி (1925-26 ஆவணி), பரணர் (1936-37 ஆடி, ஆவணி), (1936-37 ஆனி), அகம், புறம் (1942 புரட்டாசி).*

14. ***சங்கநூல்கள் :** நற்.(1956 தை, பங்குனி, 1957 சித்திரை, வைகாசி), (1960 மார்கழி), (1969 மார்கழி), குறு.(1958-59 ஐப்பசி, கார்த்திகை), (1971*

புரட்டாசி), கலி.(1951-52 கார்த்திகை), (1957 மார்கழி) (1958 புரட்டாசி-ஐப்பசி), புறம்.(1956-57 ஐப்பசி) (1960 கார்த்திகை), முரு.(1952-53 கார்த்திகை, தை-பங்குனி) நெடு.(1970-71 தை). **மன்னர்கள்** (1957 வைகாசி), **சங்கமக்களின் வாழ்வியல்**- முல்லைத்திணை (1951 புரட்டாசி), பாணர் இசை (1957-58 மார்கழி, தை), நம்பிக்கை (1959 ஆடி), பெண்களின் சிறப்பியல்புகள் (1959 ஆடி), கலைவளர்ச்சி (1959-60 கார்த்திகை, மார்கழி), சங்கமக்களின் பாத்திரப்பண்பு (1969 ஐப்பசி), **தாவரவிலங்குகள்** - தாவரங்கள் (1959-60 சித்திரை), (1975 வைகாசி), விலங்குகள்: (1969 கார்த்திகை).

15. **சங்கநூல்கள் :** நற்.(1999 சித்திரை), குறு.(1988) (1990 மாசி), கலி.(1979 கார்த்திகை, தை), (1984 கார்த்திகை, மார்கழி), (1989 சித்திரை), (1996 மாசி), புறம்.(1980 ஏப்ரல் - மே), (1993 வைகாசி) (1999 மார்கழி), முரு.(1985 ஆடி), பொரு.(1980 மாசி), குறிஞ்சிப்பாட்டு (1979 ஆவணி-ஐப்பசி), முல்லை (1986 ஐப்பசி) (1987 ஆடி), **தமிழர் வாழ்வியல்** - ஆலமர்கடவுள் (1986 ஐப்பசி), குறிஞ்சித்தலைமகள் (1979 சித்திரை, வைகாசி), (1986 அக்டோபர், நவம்பர்), துணங்கைக்கூத்து (1991 ஆனி), பேய் (1993 ஆகஸ்ட் - செப்டம்பர்), சங்கச் சமூகமும் உயர்நிலை உலகமும் (1994 ஐப்பசி), கைம்மை (1998 சித்திரை), வாழ்வியல் கருத்துகள் (2001 தை), சங்ககாலப் பேச்சுநடை (1992 பங்குனி), **ஆற்றுப்படை** - (1977 ஆவணி - புரட்டாசி), (1983 தை), (2001 மார்கழி-பங்குனி), அறவியல் (1996 சித்திரை) அறிவியல் (2001 மாசி), **பிற** - அகத்திணை மரபுகள் (1975 கார்த்திகை), சங்க இலக்கியக் கல்வெட்டுச் சொற்கள் (1985 ஆடி), சங்ககால ஆய்வுகள் (1987 ஆவணி) (1988 வைகாசி-ஆனி), சங்கச் சமுதாயச் சூழலின் தண்ணடை நல்கலும், பிள்ளையாட்டும் (1988), புறஇலக்கிய வகை (1996 புரட்டாசி), சங்ககாலச் சொற்பயன்பாடு (2000 மாசி), மருதனிளநாகனார் பாடல் (2001 வைகாசி), (2001 பங்குனி-சித்திரை).

16. சொற்பயன்பாடு (2007 ஐப்பசி), ஆற்றுப்படை (2006-07 பங்குனி-சித்திரை), தழையுடை (2007 ஐப்பசி).

# நற்றிணை ஆய்வுகள்

## 2.0 முன்னுரை

*எட்டுத்தொகையில் முதலாவது நூல் நற்றிணையாகும். இது ஒன்பது அடிச்சிற்றெல்லையும், பன்னிரண்டடிப் பேரெல்லையும் உடைய நானூறு பாக்களை உடையது. இந்நானூற்றுள் 110 ஆம் பாடலும் 379 ஆம் பாடலும் பன்னிரண்டடிகளுக்கு மேலுள்ளன. நற்றிணையைத் தொகுத்தவர் பன்னாடுதந்த பாண்டியன் மாறன்வழுதி. தொகுப்பித்தவர் பெயர் தெரியவில்லை. நூலைப் பாடிய புலவர்களின் எண்ணிக்கை-175 ஆகும். இந்நற்றிணைப் பாடல்கள் 'செந்தமிழ்ச்செல்வி,' 'தமிழ்ப்பொழில்,' இதழ்களில் காணப்படும் சங்க இலக்கியம் தொடர்பான ஆய்வுப்போக்குகளில் இடம்பெற்றுள்ளன. இவ்வாறு இடம்பெற்றுள்ள பாடல்களைத் தொகுத்து, அவற்றைத் திணை அடிப்படையில் பாகுபாடு செய்து, அப்பாடல்களைக் கட்டுரை ஆசிரியர்கள் எவ்வாறு தங்களின் கருத்திற்கு இணங்கப் பயன்படுத்தியுள்ளனர் என்பதை விளக்குவது இவ்வியலின் நோக்கமாகும்.*

பகுதி ஒன்று

## 2.1 செந்தமிழ்ச் செல்வி

*'செந்தமிழ்ச்செல்வி' இதழில் இடம்பெற்றுள்ள சங்க இலக்கியம் தொடர்பான கட்டுரைகளில் பயன்படுத்தப்பட்டுள்ள நற்றிணைப் பாடல்களின் எண்ணிக்கை - 178 ஆகும். இவை குறிஞ்சிக்குரியவை - 51, முல்லைக்குரியவை - 09, மருதத்திற்குரியவை - 14, நெய்தலுக்குரியவை - 59, பாலைக்குரியவை - 45 என அமைந்துள்ளன (விரிவு : பின்னிணைப்பு-5). இப்பாடல்கள் ஒருமுறையும், ஒன்றுக்கு மேற்பட்ட முறையும் கட்டுரையாளர்களால் எடுத்தாளப்பெற்றுள்ளன. அவை தொடர்பான விபரம் வருமாறு.*

| வ. எண் | திணை | ஒருமுறை | இருமுறை | மும்முறை | நான்குமுறை |
|---|---|---|---|---|---|
| 1. | குறிஞ்சி | 01, 335, 334, 95, 356, 265, 336, 386, 75, 168, 285, 326, 264, 357, 396, 276, 220, 08, 297, 379, 176, 268, 301, 44, 156, 244, 313, 376, 51, 77, 347, 332, 383, 158, 322, 5, 6 | 98, 32, 151, 119, 125, 261, 13, 34, 25, 294, 232, 328 | 292 | 82 |
| 2. | முல்லை | 169, 248, 321, 221, 121, 99, 89 | 115 | 59 | --- |
| 3. | மருதம் | 180, 260, 100, 340, 400, 90, 60, 280, 30 | 230, 70, 310, 390, 380 | --- | --- |
| 4. | நெய்தல் | 263, 178, 288, 272, 159, 175, 291, 45, 199, 303, 392, 223, 132, 91, 287, 96, 106, 267, 315, 295, 331, 172, 235, 35, 15, 4, 183, 385, 388, 159, 369, 123, 345, 363, 372, 245, 358 | 127, 258, 195, 78, 27, 215, 49, 111, 31, 211, 239, 74, 167, 278, 101 | 311, 19, 131, 54, 191, 67 | 207 |
| 5. | பாலை | 246, 308, 73, 325, 92, 14, 305, 262, 264, 03, 269, 346, 333, 29, 02, 148, 391, 162, 113, 337, 09, 296, 86, 43, 189, 66, 84, 137, 198, 318, 107, 76, 186, 92, 362, 256, 281, 352, 302, 274 | 366, 110, 279, 252, 343 | --- | --- |

### 2.1.1 குறிஞ்சி

*செந்தமிழ்ச்செல்வி இதழில் 27 ஆய்வுக்கட்டுரைகளில் இடம்பெற்றுள்ள நற்றிணைக்குரிய குறிஞ்சித்திணைப் பாடல்களின் எண்ணிக்கை - 51 ஆகும்.*

**சங்க இலக்கியத்தில் பல்லி**

*இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1982 செப்டம்பர்). பல்லி சூழ்நிலைக்கேற்ப உடல்நிறத்தையும், உறுப்புகளின் நிறத்தையும் மாற்றிக்கொள்ளும், மேற்கூரையில் தலைகீழாக நடக்கும் தன்மையுடையது. பல்லியின் ஒலி எழுப்பும் செயல்பாட்டை அக்காலம் முதல் இக்காலம்வரை மக்கள் நற்சொல் கேட்கும் முறைக்குப் பயன்படுத்துகின்றனர் எனப் பல்லி பற்றிய கருத்துகளை எடுத்துக்கூறி விளக்குவது இக்கட்டுரையின் நோக்கமாக அமைகின்றது. இதற்காக நற்றிணையின் 98 ஆம் பாடலின் அடிகள் எடுத்தாளப்பெற்றுள்ளன.*

**சங்க இலக்கியங்களில் இல்லையா?**

*இக்கட்டுரை சு.குமாரஸ்வாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1951 ஜூன்). எட்டுவகைத் திருமண முறையில் காந்தர்வ மணமே சிறந்தது. இதுவே பண்டைத்தமிழர் மணமுறை என்பர் சிலர். தமிழர்கள் ஒவ்வொருவரும் தமக்குரிய காதலரைத் தாமே தேர்ந்துகொண்டனர் ; ஒருவருக்குரிய காதலரைப் பிறர் தேர்ந்தெடுக்கும் வழக்கம் இந்நாட்டில் இல்லை என்பவர் சிலர். இக்கொள்கை உண்மையா? வாழ்க்கைத்துணையைத் தேர்ந்தெடுப்பது எவரின் கடமை? எனக் கண்டறிந்து விளக்குவது இக்கட்டுரையின் நோக்கம். இதில் நற்றிணையின் 32, 151 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.*

*தலைவியை விரும்புபவனும், தலைவியால் விரும்பப்படுபவனும் தலைவியின் தன்மைக்கு ஏற்றவனா? எனப் பெற்றோர் ஆராய்ந்து அறிந்த பின்தான் ஒருவனைத் தலைவி காதலனாகக் கொள்ளவேண்டும் என்ற கருத்தை விளக்கி, களவொழுக்கத்தில் தலைவனோடு புணர்ந்த தலைவி அப்புணர்ச்சியை மறைக்க முயற்சிப்பாள். இருப்பினும் தலைவியின் செயலை அறிந்த தாய் தலைவியை இச்செறித்துத் திருத்த முயல்வாள் என்ற*

கருத்தை எடுத்துக்காட்டி, மகளுக்கேற்ற மணாளனைத் தேர்ந்தெடுக்கும் பொறுப்பு தமருக்கும் தாய்தந்தையருக்கும் உண்டு என்பதைத் தெளிவுபடுத்தவே நற்றிணையின் 32, 151 ஆம் பாடல்களை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## நற்றிணையிலே நம் வள்ளுவர்

இக்கட்டுரை மது.ச.விமலானந்தம் என்பவரால் எழுதப்பெற்றுள்ளது (1958 ஏப்ரல்). நற்றிணை நானூறு பாடல்களில் நல்லிசைப் புலவர் சிலர் குறளையும் பயன்படுத்தியுள்ளனர். அவற்றை எடுத்து விளக்குவது கட்டுரையின் நோக்கமாகும். இதில் நற்றிணையின் 1, 32, 335 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

‘தண்ணீர் இல்லாமல் இவ்வுலகம் அமையாது. அதுபோல தலைவன் இல்லாமல் நான் இல்லை. மேலும் தலைவன் பிரிவால் என் மேனியில் பசலை உண்டாகும் என்று அஞ்சி, தலைவன் பிரிவைச் செய்யாது வருவான் என்று தலைவி கூறுவது,

“நீரின் றமையா வுலகம் போலத்
தம்மின் றமையா நந்நயந் தருளி
நறுநுதல் பசத்த லஞ்சிச்
சிறுமை உறுபவோ செய்பறி யலரே”(1)

இப்பாடல் அடிகளின் பொருளாகும். ‘நீர் இன்றி அமையாது உலகு’ என்ற கருத்து நற்றிணையில் தலைவன் தலைவி அன்புக்கும், குறளில் வான்மழை சமுதாய ஒழுக்கம் போன்றவற்றிற்கும் பயன்படுத்தப்பட்டுள்ளது என விளக்க இப்பாடலை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

“அம்மலை கிழவோன் நந்நயந் தென்றும்
வருந்தின னென்பதோர் வாய்ச்சொல் தேறாய்
............. ............. .............
............. ............. .............
நாடி நட்பி னல்லது
நட்டு நாடார்தம் ஒட்டியோர் திறத்தே” (32)

‘தலைவியைத் தலைவன் காண விழைகின்றான். ஆனால் தலைவி தலைவனைக் காண மறுக்கின்றாள். இதை அறிந்த தோழி, தலைவியை நோக்கி அறிவுமிக்க சான்றோர் நட்புக்கொள்ள விரும்புபவர்களின் குணங்களை நன்கு ஆராய்ந்து நட்புக்கொள்வர். ஆனால் நீ தலைவனிடம் ஆராயாது நட்புக்கொள்ளாமல் இப்பொழுது வெறுத்தல் தகாது எனக் கூறுவது’ பாடல் அடிகளின் பொருளாகும். “ஆராயாது அன்புகொள்ளல் அழிவைத்தரும். அன்புகொண்டு பின் ஆராய்தல் பழியைத் தரும்” என்ற கருத்து குறளிலும் நற்றிணையிலும் சிறப்பான முறையில் காணப்பட்டுள்ளது என விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

“செம்முக மந்தி ஆரும் நாட
முந்தை இருந்து நட்டோர் கொடுப்பின்
நஞ்சும் உண்பர் நனிநா கரிகர்
அஞ்சில் ஓதி யென்தோழி தோள் துயில்
நெஞ்சின் இன்புறாய் ஆயினும், அதுநீ
என்கண் ஓடி அளிமதி -
நின்கண் அல்லது பிறிதியாதும் இலளே” (355)

‘நட்புடைய நல்ல கண்ணோட்டமுடையார் முன், நஞ்சைக் கலந்து கொடுத்து உண்ணச் சொன்னாலும், அவர்கள் அதனை உண்டு நல்ல கண்ணோட்டமுடையார் என்பதை மெய்ப்பிப்பர். அத்தகைய திட்பமான நட்பாளனாகிய தலைவா! நீ என்பால் உள்ள கண்ணோட்டத்தால் தலைவியிடம் தலையளிசெய்’ எனத் தோழி தலைவனிடம் கூறுவது பாடல் அடிகளின் கருத்தாகும். “தனக்கு நஞ்சே கொடுக்கப்படினும் கொடுத்தோர் நெஞ்சம் வருந்தாமல் நஞ்சை உண்ணவேண்டும் அத்தகைய சிறப்புடையவரே நல்லவர்” என்ற கருத்து திருக்குறளிலும் நற்றிணையிலும் இடம்பெறும் தன்மையை எடுத்துக்காட்ட இப்பாடலை ஆசிரியர் கையாண்டுள்ளார். நற்றிணையிலும் திருக்குறளிலும் ஒத்த கருத்துகள் சிறப்பான முறையில் இடம்பெற்றுள்ளன என்பதைத் தெளிவுபடுத்த மேலே இடம்பெற்றுள்ள பாடல்களை இக்கட்டுரையாசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

### குரங்கு, முசு, ஊகம்

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1964 சூலை). சங்க இலக்கியத்தில் காணப்படும் குரங்கு, முசு, ஊகம் என்ற மூன்றுவகைக் குரங்குகள் பற்றிய செய்திகளை விலங்கு நூற்படி ஆராய்ந்து விளக்குவது கட்டுரையின் நோக்கமாகும். இதில் நற்றிணையின் 334, 95, 151 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

கரிய விரலையும், சிவந்த முகத்தையும் உடைய மந்தியின் கூட்டம் மலைஅருவிகளில் ஆடி, மூங்கில் கழைகளில் ஊசலாடி, வேங்கை மலர்கள் மலைச்சுனைநீரில் உதிருமாறு ஆண்குரங்கோடு புணரும் என்பது 334 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். அத்திப்பழம் போன்ற சிவந்த முகத்தையும், பஞ்சுபோன்ற தலையையும் உடைய குரங்கின் குட்டி ஆடும். அதைக் கண்ட குறவர் குடியின்கண் உள்ள சிறுவர்கள் பெரிய பாறையின் பக்கம் உள்ள மூங்கில்மேல் விசைத்தெழுந்து ஏறிநின்று தாளம் கொட்டுவர்' என்பது 95 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். களவுப்புணர்ச்சியில் கடுவனோடு இணைந்த மந்தி அதைச் சுற்றம் அறியுமோ என எண்ணி, வேங்கைமரத்தில் ஏறிநின்று சுனைநீரை நோக்கிப் புணர்ச்சியில் குலைந்த உச்சி மயிரைத் திருத்தும் என்பது 151 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும்.

'சங்க இலக்கியத்தில் செம்முகமந்தி, செம்முகப்பெருங்கிளை மந்தி எனக் கூறப்படும் குரங்குகளை விலங்குநூலார் BONNET MACHQUE என அழைப்பர். இக்குரங்குகள் குல்லாய் போட்டது போல தலையில் வட்டமாக மயிர் அமைந்திருக்கும். இதன் முகம் மற்றும் முடி இளஞ்சிவப்பாகக் காணப்படும்' எனக் குரங்கு பற்றிய செய்திகளை எடுத்துக்காட்ட மேலே இடம்பெற்றுள்ள மூன்று பாடல்களின் அடிகளையும் ஆசிரியர் கையாண்டுள்ளார்.

### சங்க இலக்கியத்தில் அன்னம்

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1971 நவம்பர்). சங்க இலக்கியத்தில் காணப்படும் 'அன்னம்' என்ற பறவையின் செயல்பாடுகளையும், வாழிடத்தையும், அப்பறவையினத்தின் பண்புகளையும்

விளக்குவது இக்கட்டுரையின் நோக்கம். இதில் நற்றிணையின் 356 ஆம் பாடலின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

'விலகிய சிறகையும், சிவந்த காலினையும் உடைய அன்னம் கடலில் இரைதேடி, இமயமலையில் உள்ள தன் பார்ப்புகளுக்குக் கொண்டு செல்லும். இவ்வாறு செல்வதாலும், வருவதாலும் தன் வருந்துதலில்லாத சிறகு வருந்தும்' என்பது பாடல் அடிகளின் பொருளாகும். அன்னப் பறவையானது இமயமலைப் பள்ளத்தாக்கில் முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்கும். மேலும் இப்பறவை நெடுந்தொலைவு பறந்து செல்லும் தன்மையுடையது என அன்னம் பற்றிய செய்திகளை எடுத்து விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

**சங்க இலக்கியத்தில் கள்ளரின் வளைதடி**

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1976 ஆகஸ்ட்). அக்காலத்தில் கள்ளரும் மறவரும் சிறுவிலங்குகளை வேட்டையாடவும், படைக்கருவிக்காகவும் வளைதடியைப் பயன்படுத்தினர். அவ்வளைதடியின் சிறப்பையும், அதன் அமைப்புமுறையையும் எடுத்துவிளக்குவது இக்கட்டுரையின் நோக்கமாகும். இதில் நற்றிணை 265 ஆம் பாடலின் அடி இடம்பெற்றுள்ளது.

"சிறுகோற் சென்னியா ரேற்றன்ன"

சிற்றூர் பலவற்றை ஆளுதற்குரிய சிறுகோல் உடையவன் சோழன் என்பது பாடல் அடியின் பொருளாகும். 'சிறுகோல்' என்ற இச்சொல் குதிரையை விரையச் செலுத்தும் முட்கோலைக் குறிக்கும் என்று அறிஞர்கள் கூறுவர்' என எடுத்துக்காட்ட இப்பாடல் அடியை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

**சங்க இலக்கியத்தில் கேழல்**

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1968 சூலை). சங்க இலக்கியத்தில் காட்டுப் பன்றிக்குக் 'கேழல்' என்ற பெயரே பல பாடல்களில் வழங்கப்பட்டுள்ளது. மேலும், காட்டுப் பன்றியின் உருவம், நிறம், குணம் ஆகியவற்றை விளக்குவதும் காட்டுப் பன்றியை வீட்டுப்பன்றியிலிருந்து வேறுபடுத்தி விளக்குவதும் இக்கட்டுரையின்

நோக்கமாகும். இக்கட்டுரையில் நற்றிணையின் 98, 336, 82, 386, 119 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

"எய்ம்முள் அன்ன பரூஉமயிர் எருத்தின்
செய்யும் மேவல் சிறுகட் பன்றி" (98)

முள்ளம்பன்றியின் முள்ளைப்போன்ற பருத்த மயிரும், சிறிய கண்ணும் உடைய பன்றி, உயர்ந்த மலையிடத்தே உள்ள பெரிய தினைப்புனத்தில் மேயக்கருதும் என்பது 98 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். 'உயர்ந்த தினைப்புனத்தை மேயக்கருதிய காட்டுப்பன்றி பொறி அமைக்கப்பட்ட வழியில் அறியாது செல்ல நினைத்தபோது பல்லியானது ஒலி எழுப்புகின்றது. இவ்வொலியைக் கேட்ட பன்றி தனக்குத் துன்பம் வருமோ என எண்ணி மேயச்செல்லாமல் தன் இருப்பிடம் செல்லும்' என்பது 336 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். முள்ளம்பன்றியின் முள்போல, காட்டுப் பன்றிக்குக் கழுத்தில் மயிர்க்கற்றை காணப்படும் என விளக்கவும், அக்காலத்தில் விளைச்சலைப் பாதுகாப்பதற்காகக் காட்டுப் பன்றியைப் பொறிவைத்துப் பிடிக்கும் பழக்கம் இருந்ததை எடுத்துக்காட்டவும் இப்பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

"பிணர்ச்சுவல் பன்றி தோன்முலைப் பிணவொடு" (336)

சொரசொரப்பான பிடரியையுடைய ஆண்பன்றி, தோலாய் வற்றிவிட்ட முலையையுடைய பெண்பன்றியுடன் சேர்ந்து தினைக்கதிரைத் தின்னும் என்பது பாடலடியின் பொருளாகும். கானவன் வில்லினால் அம்பெய்து வெண்மையான தந்தத்தையுடைய ஆண்பன்றியைக் கொல்வான் என்பது 336 ஆம் பாடல் அடியின் பொருளாகும். காட்டுப்பன்றியில் ஆண்பன்றிக்குச் சொரசொரப்பான பிடரியும், பெண்பன்றிக்கு நான்கு காம்புள்ள மடியும், பன்றிக்கு வெண்கோடு போன்ற கடைவாய்ப்பற்களும் (Tushes) உண்டு எனப் பன்றி பற்றிய செயல்பாடுகளை எடுத்துக்காட்ட இப்பாடல் அடியை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

"சிறுகட் பன்றிப் பெருஞ்சின ஒருத்தல்
சேறாடு இரும்புறம் நீறொடு சிவண" (82)

சிறிய கண்ணும் பெரிய சீற்றமும் கொண்டதாய் விளங்கும் ஆண் பன்றி

சேற்றில் உழுதலால் அதனுடைய முதுகுப்புறத்தில் புழுதி படிந்திருக்கும் என்பது பாடல் அடிகளின் பொருளாகும்.

"பெருஞ்சின ஒருத்தல்" (82)

காட்டுப்பன்றி மிகுந்த சீற்றம் கொண்டது என்பது இப்பாடல் அடியின் பொருளாகும். நன்றாக வளர்ந்த காட்டுப்பன்றியின் நிறம் கருமையாக இருக்கும் என விளக்கவும், இப்பன்றி மிகவும் அறிவுக்கூர்மை உடைய விலங்கு மற்றும் மனதைரியமும் வீரமும் வாய்ந்தது என எடுத்துக்காட்டவும் மேலே இடம்பெற்றுள்ள பாடல் அடியை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

"தினையுண் கேழல் இரியப் புனவன்
சிறுபொறி மாட்டிய பெருங்கல் அடாஅர்" (119)

தினைப்புனத்திலே மேயும் பன்றியைக் கொல்ல, அப்புனத்தினுடைய தலைவன் சிறுபொறி வைப்பான். அதில் புலி புகுந்து இறக்கும் என்பது பாடல் அடிகளின் பொருளாகும். விளை நிலங்களைப் பாதுகாப்பதற்காக, பன்றியைப் பொறிவைத்துப் பிடிக்கும் பழக்கம் அக்காலத்தில் இருந்தது என்பதை எடுத்துரைக்க இப்பாடல் அடியை ஆசிரியர் கையாண்டுள்ளார். கானவர் விளைவித்த தினைக்கதிரை உண்ணும் பன்றி மலைப்பிளவைத் தனக்குத் தங்குமிடமாகக் கொண்ட புலிக்கு அஞ்சாது, மூங்கில் வளர்ந்த மலைச்சாரலில் தூங்கும் என்பது 386 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். காட்டுப் பன்றியின் உணவுப்பழக்கத்தை எடுத்துக்காட்டவும், அதன் வீர உணர்வை வெளிப்படுத்தவும் இப்பாடல்அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் பாம்பு

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1971 மே, சூன்). சங்க இலக்கியத்தில் காணப்படும் நல்லபாம்பு, பச்சைப்பாம்பு, பெரும்பாம்பு, வழலைப்பாம்பு, கடற்பாம்பு போன்ற பாம்பு வகைகளை விளக்குவதும், இப்பாம்புகள் உணவு தேடும் முறை, தோலுரிக்கும் செயல் ஆகியவற்றை எடுத்துக்காட்டுவதும் இக்கட்டுரையின் நோக்கமாகும். இதில் நற்றிணை 75, 125, 168, 261, 285 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

"களிறகப் படுத்த பெருஞ்சின மாசுணம்

வெளிறில் காழ்மரம் பிணித்து நனிமிளிர்க்கும்" (261)

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன. வைரம் பாய்ந்த சந்தன மரத்தை யானையையே! அகப்படுத்திய மலைப்பாம்பு புரட்டும் என்பது பாடலடிகளின் பொருளாகும். மலைப்பாம்பை 'மாசுணம்' என்றும், 'பாந்தள்' என்றும் அழைப்பர். மலைப்பாம்புகள் சுற்றியிருக்கும் சந்தனமரமே சிறந்த சந்தனமரம் என்று அறிஞர்கள் கருதுவர்' என்ற கருத்தை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

"பூம்பொறிப் பொலிந்த அழலுமிழ் அகன்பைப்

பாம்புயி ரணங்கி யாங்கும் ஈங்கிது" (75)

'பொலிவுடைய புள்ளிகள் அமைந்த, நெருப்பைப் போன்ற நஞ்சை உமிழ்கின்ற அகன்ற படம்உடைய பாம்பு உயிர்களைக் கொல்ல, கடித்து வருத்தும்' என்பது பாடல் அடிகளின் பொருளாகும். பாம்பின் கழுத்து பைபோல விரிந்து படமெடுத்து ஆட உதவுகின்றது 'படம்எடுத்து ஆடும் பாம்பைப் 'பைஅணந்து' என்றும் படம் ஒடுக்கித் தணியும் பாம்பை 'பை அவிந்த' என்றும் அழைப்பர்' என்ற கருத்தை விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

ஆண்கரடி இரைதேடிச் செல்லும்போது பாம்பு வாழும் புற்றைக் கண்டு பெயர்த்து அப்புற்றில் உள்ள நல்லபாம்பு நடுங்கும்படி முழங்கும் என்பது 125 பாடலடிகளின் பொருள். நல்லபாம்பு வாழும் இடமான 'புற்றை' எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

வருத்துகின்ற இயல்புடைய பாம்புகள் மிகுந்து இயங்கும் நள்ளிரவுப் பொழுதில் தலைவியைக் காணத் தலைவன் வருகின்றான். இதை அறிந்த தோழி, தலைவி வருந்தும் வண்ணம் நீ இரவில் வருதல் பண்பன்று என்று கூறுவது 168 பாடலடிகளின் பொருளாகும். பாம்புகள் இரவில் இரைதேடும் என்ற கருத்தை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

தலைவன், தலைவியைக் காணப் பாம்புகள் இரையைத் தேடும் மிக்க இருள்நிறைந்த இரவின் நடுயாமத்தில் வருவான் என்று கூறுவது 285 ஆம் பாடல் அடியின் பொருளாகும். பாம்பு இரைதேடும் நேரத்தையும், பாம்புகளின் செயல்பாடுகளையும் எடுத்துக்காட்ட இப்பாடல்அடி ஆசிரியரால் கையாளப்பெற்றுள்ளது.

## சங்க இலக்கியத்தில் நாரையும் கொக்கும்

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1972 பிப்ரவரி). சங்க இலக்கியத்தில் இடம்பெறும் நாரை, கொக்கு போன்ற பறவைகளின் இருப்பிடமுறையையும், அவற்றின் உணவுமுறையையும் செயல்பாடுகளையும் விளக்குவது இக்கட்டுரையின் நோக்கம். இதில் நற்றிணையின் 326 ஆம் பாடலின்,

"கொழுஞ்சுளைப் பலவின் பயங்கெழு கவாஅன்
செழுங்கோள் வாங்கிய மாச்சினைக் கொக்கின்
மீன்குடை நாற்றந் தாங்கல் செல்லாது
துய்த்தலை மந்தி தும்மும் நாட"

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன. 'பலாமரத்தின் செங்குத்தான கிளையில், கூடுகட்டிய கொக்கு, அவ்விடத்து மீனைக்கொண்டுவந்து தின்னும். இதனால் ஏற்படும் நாற்றத்தைத் தாங்கமுடியாத மந்தி தும்மும். இத்தகைய மலைநாட்டையுடைய தலைவன்' என்பது பாடல் அடிகளின் பொருளாகும். கொக்கின் உணவு முறையினை அறியவும், கொக்கு தன் பிள்ளைகட்கு இரைதேடிக்கொடுக்கும் தன்மையை எடுத்துக்காட்டவும் இப்பாடலடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் மயில்

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1972 சூலை). சங்க நூல்களில் காணப்படும் காட்டுமயில், வீட்டுமயில், பழன மஞ்ஞை போன்றவற்றை விளக்குவதும் மயிலின் நிறம், உருவம், அழகு ஆகியவற்றை எடுத்துரைப்பதும் மயில் வாழும் இடம், அவற்றின் உணவுமுறை ஆகியவற்றைச் சுட்டிக்காட்டுவதும் இக்கட்டுரையின் நோக்கமாகும். இதில் நற்றிணை 13, 264, 357, 396, 276 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

"வேங்கை வீயுகு மோங்குமலைக் கட்சி

மயிலறி பறியா மன்னோ" (13)

மலையில் உள்ள உயர்ந்த வேங்கை மரத்தின்கண் மயில்கள் கூடுகட்டி இருக்கும். இம்மயில்கள் அறியாது எனக் கருதிக்கொண்டு கிளிகள் தினைக்கதிர்களைக் கவர்ந்து செல்லும் என்பது பாடல் அடிகளின் பொருளாகும். காட்டுமயில்கள் மூங்கில்காடுகளிலும் வேங்கைமரத்திலும் வாழும் தன்மை கொண்டது என விளக்கவும், பாடலில் இடம்பெறும் 'கட்சி' எனும் சொல் மயில்கள் இரைதேடி உரிமையாக்கிக்கொள்ளும் இடத்தைக் குறிக்கும் என எடுத்துக்காட்டவும் இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

"மணிபுரை எருத்தின் மஞ்ஞை போலநின்" (264)

நீலமணி போன்ற கழுத்தினையுடைய மயில் ஆடும் என்பது பாடல் அடியின் பொருளாகும். மயிலின் கழுத்து ஒளிவிடும் நீலநிறமாக இருக்கும் என்ற கருத்தை எடுத்தியம்புவதற்கு இப்பாடல் அடியை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

"பெயலுழந்து உலறிய மணிப்பொறிக் குடுமிப்" (357)

அழகிய புள்ளிகளோடு பீலியையுடைய மயில் மழையில் நனைந்து நிற்கும் என்பது பாடல் அடிகளின் பொருளாகும். மயிலின் தலையில் குடுமி காணப்படும் என விளக்க இப்பாடல் அடியினை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

வானுயர வளர்ந்து நிற்கும் மலையின் பக்கத்தில் அழகிய புள்ளிகளோடு பீலியையுடைய மயில் மழையில் நனைந்து நிற்கும் என்பது 357 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். மயில் மழைபெய்தால் நனையும். மேலும் கூட்டமாகச் சேர்ந்து பாறையின் மேல் ஏறி நின்று இளவெயில் காயும் என்ற கருத்தை எடுத்துரைக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

தினைப் புனக்காவலன் நெடிய கால்களுடன் அமைத்த காட்டுப் பரணியை இருப்பிடமாகக் கருதி மயில்கள் தங்கும் என்பது 276 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். மயில் உயரமான இடத்தில் தன் இருப்பிடத்தைத்

தேடிக்கொள்வது வழக்கம் என்ற கருத்தை விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

வேங்கை மரத்தின் பூஞ்சினையில் புகுந்தமயில் மகரந்தம் தெளிக்கப்பட்ட தோகையுடன் கூட்டமாகச் சேர்ந்து பாறையின் மேல் ஏறி நின்று இளவெயில் காயும் என்பது 396 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். மயில் பாறையில் வெயில் காயும் குணமுடையது என்பதை விளக்குவதற்கு இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க நூல்களில் மீன்கள்

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1976-77 அக்டோபர் - சூன்). சங்க நூல்களில் இருபதுக்கு மேற்பட்ட மீன்வகைகள் கூறப்பட்டுள்ளன. இம்மீன் வகைகளை விளக்குவதும், அவற்றின் உணவுமுறை, இருப்பிடம், மீனின் உடல்அமைப்பு ஆகியவற்றை எடுத்துக்காட்டுவதும் இக்கட்டுரையின் நோக்கமாகும். இதில் நற்றிணையின் 220 ஆம் பாடலின்,

"கயலேர் உண்கட் குறுமகட்கு"

எனும் அடி இடம்பெற்றுள்ளது. கயலை ஒத்த கண்களில் மைதீட்டப்பெற்ற இளமகள் என்பது பாடலடியின் பொருளாகும். கயல்மீன்களில் வெண்கயல், செங்கயல், கருங்கயல் என்ற மூன்று வகைகள் உண்டு என விளக்க இப்பாடல் அடியை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் முதலையும் இடங்கரும் கராமும்

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1975 ஏப்ரல்). 'இந்தியாவில் மூன்று முதலை இனங்கள் இருக்கின்றன. இவற்றில் இரண்டுவகை முதலைகள் தமிழ்நாட்டிலும், தென்னாட்டிலும் காணப்படுகின்றன. ஒருவகை முதலை வடநாட்டில் மட்டும் காணப்படுகின்றது. இந்த மூன்று வகைகளும் முதலை, இடங்கர், கராம் என்று சங்க நூல்களில் அழைக்கப்படுகின்றன.' இந்த முதலையினங்களைப் பற்றி விளக்குவது இக்கட்டுரையின் நோக்கம். இதில் நற்றிணையின் 292 ஆம் பாடலின்,

“கருங்கற் கான்யாற்று அருஞ்சுழி வழங்குங்

கராஅம் பேணாய் ; இரவரின்”

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன. கரிய பாறைகளில் ஓடிவரும் காட்டு ஆற்றில் கடத்தற்கரிய நீர்ச்சுழிகள் உள்ள இடங்களில் முதலைகள் இயங்கும் என்பது பாடலடிகளின் பொருளாகும். கராம் என்பது வடநாட்டில் கங்கை ஆற்றில் உள்ள ஒருவகை முதலை என்றும், இந்தக் கராம் மீன்களை மட்டுமே தின்னும், மனிதர்களையும் விலங்குகளையும் அணுகாது என விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் மணிகள்

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1976 செப்டம்பர், நவம்பர், டிசம்பர், ஜனவரி - ஜூலை). சங்க இலக்கியத்தில் முத்து, மாணிக்கம், நீலம், புட்பராகம், வைடூரியம், கோமேதகம் ஆகியவை மணிகளாக அழைக்கப்பட்டன. இவற்றைப் பற்றி விளக்குவது இக்கட்டுரையின் நோக்கமாகும். இதில் நற்றிணை 8, 292 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

“திருமணி புரையுமேனி மடவோள்” (8)

அழகிய நீலமணி போன்ற மேனியை உடைய இளம்பெண் என்பது பாடல் அடியின் பொருளாகும். ‘ஈழநாட்டின் உயர்ந்த நீலமணிகள் முசிறி, தொண்டி ஆகிய துறைமுகங்கள் வழியாக ஏற்றுமதி செய்யப்பட்டது எனத் தாலமி பெரிப்புளூஸ் கூறுவர். அதேபோல் காஸ்மோஸ் போன்ற ஆசிரியர்களும் இக்கருத்தை விளக்கியுள்ளனர். மேலும் நீலமணி பர்மா, சயாம் ஆகிய நாடுகளுக்கு ஏற்றுமதியானது என கிரேக்க, ரோம ஆசிரியர்களும் ஆப்பிரிக்காவுக்கும் மேலைநாடுகளுக்கும் ஏற்றுமதி செய்யப்பட்டன எனக் கிரேக்கர்களும் கூறுகின்றனர் என விளக்கவும், ரோம அரசர்கள் நீலமணியை மோதிரத்தில் அணிந்த செயலை எடுத்துக்காட்டவும்’ இப்பாடல் அடியை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

தலைவியைத் தலைவன் காணச்செல்லும் வழியில் கரைகளில் யானை போரிடலால் கரைகள் இடிந்து பொன் முதலாயின மின்னும், காட்டு ஆறுகளில் முதலை இயங்கும். எனவே இரவில், இவ்வழியில் நீ

வந்தால் தலைவி உயிர்வாழமாட்டாள் எனத் தலைவனை நோக்கித் தோழி கூறுவது 292 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். 'பளிங்கு விலைகுறைந்த மணியாகும். இது காவிரி ஆறு பாயும் பள்ளத்தாக்கில் பழங்காலத்தில் கிடைத்துள்ளது. பளிங்கு, கண்ணாடிபோல இருக்கும்' என்ற செய்திகளை எடுத்துக்காட்ட இப்பாடல்அடிகளை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

## சங்க நூல்களில் ஞாழல்

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றுள்ளது (1982 ஏப்ரல், மே). ஞாழல்மரமானது கடற்கரையோரங்களில் சதுப்பு நிலத்தில் காணப்படும். இம்மரம் உப்புநிறைந்த சதுப்புநிலக்காடுகளில் நன்றாக வளரும். இதன் இலை சிறியதாக இருக்கும் என ஞாழல் மரத்தைப் பற்றி ஆராய்ந்து விளக்குவது இக்கட்டுரையின் நோக்கமாகும். இதில் நற்றிணை 82, 297 ஆகிய பாடல்களின் எண்கள் இடம்பெற்றுள்ளன.

இப்பாடல்களை 'மதுரை அளக்கர் ஞாழார்மகனார் மள்ளனார் என்ற புலவர் இயற்றியதாக நூற்பதிப்புக்களில் உள்ளது என்றும், அளக்கர் என்ற சொல்லுக்கு உப்பளம், சேறு என்ற பொருள்களைப் பிங்கலந்தை நிகண்டு குறிப்பிட்டுள்ளது என்றும், ஞாழல்மரம் உப்பளச் சூழ்நிலைகளிலும் கடலோரத்துச் சேற்றுக்காடுகளிலும் வளரும் இதனால் மேற்கூறிய பாடல்களை எழுதியவர் அளக்கர் ஞாழலார் என்று இருந்திருக்க வேண்டும்' என்று விளக்க இப்பாடல் எண்களை இக்கட்டுரையாசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

## சங்க நூல்களில் நாகமும் வழையும்

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1984 ஆகஸ்ட்). நாகமரத்தின் சிறப்பையும், வழைமரத்தின் தன்மையையும் விளக்கிக் காட்டுவது இக்கட்டுரையின் நோக்கமாகும். இதில் நற்றிணையின் 82 ஆம் பாடலின்,

"போகிய நாகப் போக்கருங் கவலை"

எனும் அடி இடம்பெற்றுள்ளது. உயர்ந்த நாகமரங்களைக் கொண்ட, செல்லுவதற்கு அரிதாக உள்ள கவர்ந்தவழி என்பது பாடலடியின்

பொருளாகும். நாகமரம் மிகவும் உயர்ந்து காணப்படும். இதன் பூ நறுமணம் உடையது. நறுவீயுறைக்கும் நாகம், நறும் போதும் கஞலிய நாகுமுதிர்நாகம், நாகநறுமலர், நறுவிரையன நாகம், நாகம் நாறும் என்றெல்லாம் இதன் பூவைக் குறிப்பிடுவர் என விளக்க இப்பாடல் அடியை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## குறிஞ்சிப்பாட்டில் வரும் செடிகொடி மரப்பெயர்கள்

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1985 மார்ச்-ஜூலை). பத்துப்பாட்டில் ஒன்றான குறிஞ்சிப்பாட்டில் பல செடி, கொடி, மரப்பெயர்கள் காணப்படுகின்றன. குறிப்பாக 99 செடி, கொடிகள் இருப்பதாகக் கணக்கு எடுக்கப்பட்டுள்ளது. இவற்றின் தன்மை நிறம், மருத்துவக்குணம் ஆகியவற்றை விளக்குவது இக்கட்டுரையின் நோக்கம். இதில் நற்றிணை 34, 294, 379, 176, 268, 301, 232, 292 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன. ‘செங்காந்தள் போன்ற அழகுடைய மலர்கள் தமிழ்நாட்டில் மிகச் சிலவே உள்ளன. எனவே குறிஞ்சிப்பாட்டில் இச்செடியை முதலில் கூறுவர். மேலும் இச்செடியை Gloriosa Superda என அறிவியலில் அழைப்பர்’ எனக் குறிஞ்சிப்பாட்டில் செங்காந்தள் முதல் முதலில் எடுத்தாளப்பெற்றமைக்கான காரணத்தை விளக்கவும் அதன் அறிவியல் பெயரை விளக்கவும் 34, 294, 379 ஆகிய பாடல்களின் எண்களை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

குறிஞ்சிச்செடியானது 12 ஆண்டுகளுக்கு ஒருமுறை பூக்கும் தன்மையுடையது. இதன் மணமும், தேனும் சிறப்பான முறையில் காணப்படும். குறிஞ்சியின் பூ மலைச்சாரலில் பூக்கும்போது சாரல் முழுவதும் நீலப்படலம் படிந்தாற்போல இருக்கும் என்ற கருத்துகளை எடுத்துக்காட்ட 176, 268, 301 ஆகிய பாடல்களின் எண்களை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

‘வேரல் எனும் செடி சிறிய மூங்கில் என அழைக்கப்படும். இது நீலகிரிச் சாரல்களில் புதர்போல வளரும் தன்மையுடையது. இதை, சோலைக் குன்றில் வாழும் மக்கள் வேலியாகப் பயன்படுத்துவர். Arundunaria Wightiana என இச்செடியை அறிவியலில் அழைப்பர்.’ வேரல் பற்றியும்

அதன் சிறப்பு பற்றியும் விளக்க 232 ஆம் பாடலை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

குளவி எனும் செடிக்கு நச்சினார்க்கினியர் 'காட்டுமல்லி' என்றும் பிறநூலாசிரியர்கள் 'மலைப்பச்சை' என்றும் பொருள் கொண்டுள்ளனர். இக்குளவியின் இலையை மகளிர் கூந்தலில் அணிந்துகொள்வர் என விளக்க 292 ஆம் பாடலை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க நூல்களில் வள்ளியும் கவலையும்

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1986 மே). சங்க நூல்களில் இடம்பெறும் வள்ளி, கவலைக் கொடிகளின் பயனையும், அதன் வகைகளையும் விளக்குவது இக்கட்டுரையின் நோக்கமாகும். இதில் நற்றிணை 328, 82 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

"கிழங்குகீழ் வீழ்ந்து தேன்மேல் தூங்கிச்
சிற்சில வித்திப் பற்பல விளைந்து" (328)

'கிழங்குகள் மண்ணில் கீழே இறங்கிக் கிடக்கும். தேனடைகள் மலையில் தொடுக்கப்பெற்றிருக்கும். விதைகள் விதைத்த அளவில் தினைக்கதிர்கள் பலவாக விளைந்து நிற்கும் இத்தகைய செல்வச் சிறப்புமிக்க குன்றநாடன்' என்பது பாடலடிகளின் பொருளாகும். முருகவேலுடன் கூடிச்சென்ற வள்ளிநாயகி என்பது 82 ஆம் பாடல் அடியின் பொருளாகும். 'வள்ளிச் செடியானது வெற்றிலைக்கொடி போன்ற இலைகளையுடையது. இதன் கிழங்குகளை அக்கால மக்கள் தோண்டி எடுத்து உண்பர். சங்ககாலத்தில் கூறப்பட்ட வள்ளி (Dioscorea Pentaphyila) ஆகும். இதை இப்பொழுது சிறுகொடி, வள்ளிக்கொடி, காட்டுவள்ளி என்று அழைப்பர்' என வள்ளிச்செடி பற்றிய கருத்துகளைத் திறம்பட எடுத்துக்கூற இப்பாடல்களின் அடிகள் ஆசிரியரால் கையாளப்பெற்றுள்ளன.

## சங்க நூல்களில் மின்மினி

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1988 ஜனவரி). மின்மினியில் ஆண் பறக்கும் தன்மையுடைய பூச்சியாகும். பெண்

ஊரும் தன்மையுடைய புழுவாகும். ஆண் பூச்சி விட்டுவிட்டு ஒளிரும். பெண்புழு தொடர்ந்து ஒளிரும் தன்மையுடையது. இவ்வாறு மின்மினிப் பூச்சிகள் பற்றிய பல செய்திகளை எடுத்துக்காட்டி விளக்குவது இக்கட்டுரையின் நோக்கமாகும். இதில் நற்றிணை 44 ஆம் பாடலின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

“குடக்காய் ஆசினிப் படப்பை நீடிய
பன்மர உயர்சினை மின்மினி விளக்கத்துச்
செல்மழை யியக்கம் காணும்”

குறவர்கள் ஆசினிப் பலாவையுடைய தோட்டத்தில் உள்ள மின்மினிகளின் ஒளியைக்கொண்டு, வானிற் செல்லுகின்ற மழைமுகிலின் இயக்கத்தைக் காணுவர் என்பது பாடலடிகளின் பொருளாகும். மின்மினியில் ஆண்பூச்சியும் பெண்புழுவும் ஒளிரும் தன்மையுடையன என்பதை எடுத்துரைக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

## சங்க நூல்களில் எருவையும் நாணலும்

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1988 ஜனவரி). சங்க நூல்களில் எருவை என்ற பெயர் பிணந்தின்னிக் கழுகையும் ஒருவகைப் புல்லையும் குறித்து வழங்கியது. இக்கட்டுரையில் எருவை என்ற புல்வகை விளக்கப்பட்டுள்ளது. இதில் நற்றிணை 156, 261, 294 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

கொறுக்கச்சி முளைத்து அடர்ந்து காணப்படும், பெரிய மலைப்பக்கத்தில் உள்ள சிறுகுடி என்பது 156 ஆம் பாடல் அடியின் பொருளாகும். சந்தனத்தின் நறுமணமும் கொறுக்கச்சிச் செடியின் நீண்ட மலரின் நறுமணமும் உடைய பெரிய மலையின்கண் உள்ள சிறிய வழியில் தலைவன் வருவான் என்பது 261 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும்.

“மாயம் அன்றுதோழி வேய்பயின்று
எருவை நீடிய பெருவரை அகந்தொறுந்” (294)

கொறுக்கச்சி முளைத்துப் பரவியுள்ள பெரியமலை என்பது பாடல் அடிகளின் பொருளாகும். எருவை என்பதற்கு உரையாசிரியர்களிடம் பல மாறுபட்ட கருத்துகள் காணப்படுகின்றன என விளக்கவும், எருவை என்பது

கொறுக்கச்சி, கொறுக்காந்தட்டை எனப்படும் ஒருவகை நாணற்புல்லே என விளக்கவும் இப்பாடல்அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க நூல்களில் கூதளமும் குளவியும் குல்லையும்

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1988 செப்டம்பர்). கூதளம், குளவி, குல்லை ஆகிய மரஞ்செடிகளின் சிறப்பையும் அவை வாழும் சூழ்நிலையையும் விளக்குவது இக்கட்டுரையின் நோக்கம். இதில் நற்றிணை 119, 244, 313, 376, 51, 232 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

"பெருவரை நீழல் வருகுவன் குளவியொடு
கூவிளந் ததைந்த கண்ணியன் யாவதும்" (119)

தலைவன் காட்டுமல்லிகையுடன் கூதளமலர் சேர்த்துக்கட்டிய செறிந்த மாலை அணிந்தவனாய்த் தலைவியைக் காணவருவான் என்பது பாடல் அடிகளின் பொருளாகும். 'கூதளத்தை 'சிறுதாளி' என்றும் அழைப்பர். இச்செடி வெண்மையான பூக்களைப் பூக்கும். இது 3000 அடி வரை உள்ள குன்றுகளில் காணப்படும்' எனக் கூதளச்செடியின் சிறப்பினை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

மழைபெய்யக்கூடிய பெரிய குளிர்ச்சியான சாரலில் கூதிர்காலத்தில் கூதளம் மலரும் என்பது 244 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். காந்தள் கமழ்கின்ற, குலைமலரும் சிறப்பான சாரலில் கூதளஞ்செடிகள் படர்ந்துகிடக்கும் என்பது 313 ஆம் பாடலடிகளின் பொருளாகும். குல்லை, காட்டுமல்லி, கூதாளி, குவளை ஆகியவற்றின் மலர்களால் புனைந்த மிகக் குளிர்ந்த மாலையை உடையவன் தலைவன் என்பது 376 ஆம் பாடலடிகளின் பொருளாகும். கூதளம் சிறுமலையிலும், பெருவரையிலும், மலைச்சாரலிலும், நீர்நிலையிலும், நீர்திகழ்சிலம்பிலும், நெடுவரையிலும் பெரும்பாலும் காணப்படும் இச்செடி தனியாகவும், கொத்துக்கொத்தாகவும் வெண்மையான பூக்களைப் பூக்கும் தன்மையுடையது எனக் கூதளம் வளரும் இடத்தையும் அச்செடியில் காணப்படும் பூக்களின் நிறத்தையும், வடிவத்தையும் எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

பரந்த அடியையும், கரிய சேற்றைத் தன் நெற்றியில் உடையதுமான யானை, பெரிய குளிர்ச்சியையுடைய பச்சிலை மரத்தை முறித்துப்போடும் என்பது 51 ஆம் பாடலடிகளின் பொருளாகும். சிறிய கண்ணையும் பெரிய கையையும் உடைய ஆண், பெண் ஆணையினம் மலைப்பச்சை சூழ்ந்த குளிர்ந்த குளத்தில் மெய்தளருமாறு புணரும் என்பது 232 ஆம் பாடலடிகளின் பொருளாகும். குளவி பெருவரையிலும், கொல்லிமலையிலும் அரலைக்குன்றிலும், சாரலிலும், அருவியிலும், குண்டுசுனைகளிலும், நீரிழிமருங்கிலும், தண்கயத்திலும் காணப்படும் எனக் குளவி வளரும் இடங்களை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்ககாலத்தில் யானைகள்

இக்கட்டுரை வாணிஅறிவாளன் என்பவரால் எழுதப்பெற்றதாகும் (2005 செப்டம்பர்-நவம்பர்). சங்க அக இலக்கியத்திலும் புற இலக்கியத்திலும் காணப்படும் ஒரு விலங்கு யானையாகும். இந்த யானைகளின் பயன்பாடுகளைப் பற்றிய செய்திகளைத் தருவது இக்கட்டுரையின் நோக்கமாகும். இதில் நற்றிணை 125 ஆம் பாடலின்,

"மென்திணை நெடும்போர் புரிமார்
துஞ்சுகளிறு எடுப்புந் தம்பெருங்கல் நாட்டே"

'திணைக்கதிரை அடித்து நெடும்போராகக் குவிக்க எண்ணி உறங்கும் குறவரை யானை முழங்கி எழுப்புகின்ற பெரிய நாட்டுக்குத் தலைவன், நம்மை மணம்புரிந்து கொண்டு செல்வர்' எனத் தலைவியிடம் தோழி கூறுவது பாடல் அடிகளின் பொருளாகும். திணைக்கதிரடிக்கத் திணைப்புனங்களில் யானை பயன்படுத்தப்பட்டது என்ற கருத்தை விளக்க இப்பாடல்அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க நூல்களில் சங்குகள்

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1992 நவம்பர், டிசம்பர்). சங்க நூல்களில் 'சங்கு' வளையென்று அழைக்கப்பட்டுள்ளது. மேலும் அரிதாகக் கிடைக்கும் வலம்புரிச்சங்கு, பணிலம் போன்ற சங்குகளை விளக்குவது இக்கட்டுரையின் நோக்கம். இதில் நற்றிணை 77, 25 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

"அவ்வளை வெரிநி னரக்கீர்த் தன்ன" (25)

அழகிய சங்கின் முதுகில் அரக்கைத் தீற்றினாற் போன்ற சிவந்த வரிபொருந்திய இதழை உடைய நறுவம்பூ என்பது பாடலடியின் பொருளாகும்.

"வாளரம் பொருத கோண்ஏர் எல்வளை

அகன்தொடி செறித்த முன்கை" (77)

வாளரத்தால் அராவிய வளையலையும், அகன்ற தொடியையும் அணிந்த தலைவி என்பது பாடலடிகளின் பொருளாகும். அக்கால மக்கள் கடலுக்குச் சென்று நீரில் மூழ்கி சங்குகளை எடுத்தனர் என விளக்கவும், சங்குகளை வெட்டி வளையல்கள் செய்து மகளிர் அணிந்தனர் என்பதை எடுத்துக்காட்டவும், இப்பாடல்அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார். சங்ககால மக்கள் சங்குகளை வேட்டையாடிய முறையினையும், வேட்டையாடிய சங்குகளைப் பயன்படுத்திய விதத்தையும் இக்கட்டுரையின் மூலம் அறியமுடிகின்றது.

## சங்க நூல்களில் தவளையும் தேரையும் நுணலும்

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1992 ஜனவரி). சங்க இலக்கியத்தில் காணப்படும் தவளை, தேரை, நுணல் போன்றவற்றின் உடலமைப்பினை விளக்குவதும், அவற்றின் வாழிடங்களை எடுத்துரைப்பதும் இக்கட்டுரையின் நோக்கமாகும். இதில் நற்றிணையின் 347 ஆம் பாடலின்,

"வேனில் தேரையின் அளிய

காண விடுமோ தோழியென் நலனே"

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன. 'கோடைக்காலத்தில் தவளை மணலுக்குள் புதைந்துகிடப்பதுபோல உடலினுள்ளே மறைந்த படர்ந்து அழகு நலன்கள் தலைவனைக்காணாததால் பசலை படர்ந்து உள்மறையும்' என்பது பாடல் அடிகளின் பொருளாகும். 'தவளைகள், நீரிலும் நிலத்திலும் வாழும் தன்மையுடையன ; தாவித் தாவிச் செல்லும் தன்மையுடையன, தோல் வழவழப்பாக இருக்கும், வெப்பமான கோடைக்காலங்களில் மண்ணிலே புதைந்து உறங்கும்' என்ற செய்திகளை எடுத்துரைக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க நூல்களில் கடம்பு

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1993 செப்டம்பர்). கடம்புமரத்தின் சிறப்பையும் அதன் பூ அமைப்பையும் விளக்குவது இக்கட்டுரையின் நோக்கம். இதில் நற்றிணை 34 ஆம் பாடலின்,

"கார்நறுங் கடம்பின் கண்ணிசூடி
வேலன் வேண்ட வெறிமனை வந்தோய்"

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன. 'கார்காலத்தில் மலர்கின்ற நறுமணமுடைய கடம்ப மாலையைச் சூடி வேலனைப் படிமத்தான் வேண்ட, வெறிகளத்துப் பலிபெற வேலன் வந்தான்' என்பது பாடலடிகளின் பொருளாகும். கடம்பமரம் முருகனுக்குரியது. இது கார்காலத்தில் பூக்கும் தன்மையுடையது என விளக்க இப்பாடல்அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் புலி

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1968 மார்ச், ஏப்ரல், மே). சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ள புலிகளின் வேட்டையாடும் பண்பு, அவற்றின் நிற அமைப்பு, அவை வாழும் இடம் ஆகிய பலவற்றை எடுத்துக்காட்டுவது இக்கட்டுரையின் நோக்கமாகும். இதில் நற்றிணை 332, 383, 158, 322 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

மலைப்பிளவில் பெண்புலி குட்டிகளை ஈனும். இப்பெண்புலியின் பசியினைப் போக்கக் கருதிய கரியநிறம் உடைய வலிய புலி, இரைவேட்கையால் பதுங்கியிருக்கும் என்பது 332 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். புலி பதுங்கியிருந்து வேட்டையாடும் குணம் உடையது. இது குட்டிபோடும் காலத்தில் புதர்நிறைந்த குகையில் மறைவான இடத்தில் குட்டிபோடும் தன்மையுடையது என்ற கருத்தை விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

"கல்லயல் கலித்த கருங்கால் வேங்கை
அலங்கலம் தொடலை அன்ன குருளை" (383)

தழைத்த கரிய அடிப்பகுதியை உடைய வேங்கை மலரால்

தொடுக்கப்பட்ட அசையும் அழகுடையதாகிய மாலையைப் போன்ற குட்டிகளை ஈன்றதால் பெண்புலி பசியால் வருந்தும் என்பது பாடலடிகளின் பொருளாகும். வேங்கைமலர்கள் நிறைந்த மாலையைப்போலப் புலியின் தோலில் புள்ளிகள் காணப்படும். புலி வாழும் அடர்ந்த காடுகளில் வேங்கை மரமும் காணப்படும் என்ற கருத்தை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

குகையிடத்தே பதுங்கியிருந்த புலி, யானையைக் கொன்று அதன் குருதியைக் குடிக்கும். பின்னர்க் குருதிகுடித்த வாயை வேங்கையின் அடிமரத்திற்சென்று துடைக்கும் என்பது 158 ஆம் பாடலடிகளின் பொருளாகும். புலியின் வேட்டைத்தன்மையை எடுத்துக்கூறவும், வேங்கைமரம் என்ற பெயர் புலிசென்று குருதிபடிந்த தன் வாயினை வேங்கைமரத்தில் துடைத்ததால் தோன்றிற்று என்பதை உணர்த்தவும் இப்பாடல்அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

ஊனைத் தின்னும் பெண்புலியின் பசியைப் போக்க எண்ணிய ஆண்புலி, மக்கள் இயங்குகின்ற, நுழைவதற்கு அரிய சிறுவழியை அடுத்துப் பதுங்கிப்பார்க்கும் என்பது 322 ஆம் பாடலின் பொருளாகும். சங்ககாலத்தில் மனிதனை வேட்டையாட எண்ணிய புலிகள் ஆட்கள் நடமாடும் வழியில் குகையமைத்துப் பதுங்கியிருந்து வேட்டையாடின என்ற கருத்தை விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## தமிழிலக்கியத்தில் தாவர நூலின் நுட்பங்கள்

இக்கட்டுரை லூர்துசாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1948 ஜனவரி, பிப்ரவரி, ஏப்ரல்). தமிழ் இலக்கியங்களில் இடம்பெற்றுள்ள தாவரங்களில் காணப்படும் வேர்கள், பட்டை, இலை, பூ, பூந்தாது, காய், பழம், விதை, புல்லுருவித்தன்மை, பூக்கள் கதிரவனை நோக்கித் திரும்பும் தன்மை, நிழலில் வளரும் செடிகளின் இலைகள் பச்சைத்தன்மை இழந்து வெளிறிப்போதல், இரவு மகரந்தச்சேர்க்கை போன்ற தாவரங்களின் நுட்பமான கருத்துகளை எடுத்து விளக்குவது கட்டுரையின் நோக்கமாகும். இதில் நற்றிணை 328, 05, 06, 13, 25 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

கிழங்குகள் மண்ணில் இறங்கியும் தேனடைகள் மலையில் உள்ள மரக்கிளையில் கட்டப்பட்டும் இருக்கும் தலைவனின் மலைநாடு எனத் தலைவனின் நாட்டுச் சிறப்பு பற்றிக் கூறுவது 328 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். பாலைநில மரங்களின் வேர்கள் மிக நீண்டு காணப்படும். ஆனால் நீர்வாழ் செடிகளின் வேர்கள் நன்றாக வளர்ச்சிபெறாமல் கிழங்குபோல் இருக்கும். இவ்வேர் உணவு சேகரிப்பதற்குப் பயன்படும். நிலத்திற்கு ஏற்றவாறு வேர்கள் மாறுபடும் தன்மையையும், வேரின் பயன்பாடுகளையும் எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

"குறவர் கொன்ற குறைக்கொடி நறைப்பவர்
நறுங்காழ் ஆரஞ் சுற்றுவன அகைப்பப்" (5)

குறவர் வெட்டி அழித்தலால் குறைப்பட்ட நறைக்கொடிகள் நறுமணம் கமழும் சந்தனமரத்தின் மீது சுற்றிப் படர்ந்தன என்பது பாடலடிகளின் பொருளாகும். சந்தனமரம் தன் உணவில் ஒரு பாகத்தை மட்டும் உண்டுபண்ணி மீதியைப் பிற செடிகளிலிருந்து கவரும் புல்லுருவித்தன்மை உடையது என விளக்கவும், இப்புல்லுருவித்தன்மையால்தான் சந்தனமரம் வைரம்பாய்ந்து நறுமணம் உடையதாகக் காணப்படுகின்றது என எடுத்துரைக்கவும் இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

குமிழ மரத்தின் வளைந்த மூக்கையுடைய முற்றிய கனிகள் என்பது 06 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். கொல்லன் உலைக்களத்தில் அடிக்கும் இரும்பின் பொறி சிதறுவதுபோல பல காயையுடைய வேங்கை மரத்தின் மலர்கள் உதிரும் என்பது 13ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். மரஞ்செடி கொடிகளின் பழங்களைப் பற்றிய வருணனைகளை எடுத்துக்காட்டவும், அவற்றின் நிறம், உருவம், அமைப்பு, சுவை போன்றவற்றை விளக்கவும் இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

அழகிய சங்கின் முதுகில் அரக்கைத் தீற்றினாற்போன்ற சிவந்த வரி பொருந்திய இதழை உடையது நெடுந்தூரம் மணம் வீசும் நறுவம் பூ என்பது 25 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். நறுவம் பூ, வெள்ளை

நிறமுடையது. இதில் காணப்படும் சிவந்த வரிகள் தேனிருக்கும் இடத்தைத் தேனீக்குச் சுட்டிக்காட்டும், இத்தேனை எடுக்கும் தேனீக்கள் தேனெடுத்துத் திரும்பும்போது நறுவம்பூவின் மகரந்தம் தேனீயின் மீது படும். அத்தேனீ பிரிதொரு மலரை நாடும்போது மகரந்தச்சேர்க்கை நடைபெறும். மலர்களிடையே நடைபெறும் மகரந்தச்சேர்க்கையை எடுத்து விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

### 2.1.2 முல்லை

செந்தமிழ்ச்செல்வி இதழில் 10 ஆய்வுக்கட்டுரைகளில் இடம்பெற்றுள்ள நற்றிணைக்குரிய முல்லைத்திணைப் பாடல்களின் எண்ணிக்கை - 09 ஆகும்.

### சங்க இலக்கியத்தில் பல்லி

பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்ற இக்கட்டுரையில் நற்றிணை 169 ஆம் பாடலின்,

"முன்னியது முடித்தனம் ஆயின் நன்னுதல்
வருவம் என்னும் பருவரல் தீரப்
படுங்கொல் வாழி நெடுஞ்சுவர்ப் பல்லி
பரல்தலை போகிய சிரல்தலைக் கள்ளி"

எனும் பாடலடிகள் இடம்பெற்றுள்ளன. வினைமுடித்து வரும் தலைவனின் வருகையை, நெடிய சுவரின் கண் உள்ள பல்லி, தலைவிக்குத் துன்பம் தீர்க்கும் வகையில் ஒலி செய்து தெரிவிக்குமோ? எனத் தலைவன் எண்ணுவது பாடல் அடிகளின் பொருளாகும். பல்லி ஒலி எழுப்பும் செயலை மக்கள் சகுனம் பார்க்கப் பயன்படுத்தினர் என்பதை விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

### சங்க நூல்களில் ஞாழல்

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும். இதில் நற்றிணையின் 321 ஆம் பாடல் இடம்பெற்றுள்ளது. 'இப்பாடல் மதுரை அளக்கர் ஞாழார்மகனார் என்ற புலவரால் இயற்றப்பட்டதாக நூற்பதிப்புகள் கூறுகின்றன. அளக்கர் என்னும் சொல்லுக்கு 'உப்பளம், 'சேறு' என்ற பொருளை பிங்கலந்தை நிகண்டு கூறியுள்ளது. ஞாழல்மரம்

உப்பளச் சூழ்நிலைகளிலும் கடலோரத்துச் சேற்றுக்காடுகளிலும் வளரும், ஆதலில் மேற்சொன்ன பாடலை எழுதியவர் 'அளக்கர்ஞாழலார்' என்று இருத்தல் வேண்டும். இப்போதைய நூல்களில் கூறப்படும் 'அளக்க ஞாழார்' என்ற பெயர் பொருளற்றதாகும். இந்தப் புலவர் பெயர் அளக்கர் ஞாழல் என்று அடைமொழியோடு பாடிய சொற்களால் பெயர் பெற்றிருக்கவேண்டும். அளக்கர் ஞாழல் என்ற தொடர் இப்புலவர் பாடிய பாடல்களில் இருந்திருக்க வேண்டும். சங்க நூல்களைத் தொகுக்கும்போது இப்பாடல் விடப்பட்டு இருக்கலாம்' என்று விளக்க இப்பாடல் எண்ணை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் மயில்

பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்ற இக்கட்டுரையில் நற்றிணை 115, 248 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன. மயிலின் அடிபோன்ற இலையையும், கரிய கதிராக அமைந்த பூங்கொத்துகளையும் உடைய நொச்சி என்பது 115 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். மயிலடிக்கு நொச்சியின் இலையை உவமையாக்கினர் என்ற கருத்தை எடுத்துக்காட்டவும், காட்டு நொச்சியைப் பிற்காலத்தில் 'மயிலடி' என்ற பெயரில் அழைத்த தன்மையை விளக்கவும் இப்பாடல் அடியை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

மேகம் பொய்யாக இடித்து முழக்கம் செய்தது. இம்முழக்கத்தை மெய்யெனக் கருதி அறியும் தன்மையில்லா மயில்கூட்டம் ஆரவாரித்தது என்பது 248 ஆம் பாடலடிகளின் பொருளாகும். மயில் கார்காலத்தில் கூவவும், ஆடவும் செய்யும் தன்மையுடையது என விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் முயல்

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1968 ஆகஸ்ட்). முயல் வாழும் இடம், அதன் கண் அமைப்பு போன்றவற்றை எடுத்து விளக்குவது இக்கட்டுரையின் நோக்கம். இதில் நற்றிணையின் 59 ஆம் பாடலடி இடம்பெற்றுள்ளது.

பகலில் முயலை வேட்டையாடும் வேட்டுவன், வேட்டைக்குக் கொண்டுசென்ற பண்டங்கள் பொதிந்த மூட்டையுடனே, ஏனைக் கருவிகளையும் இரவில் வீட்டிலே போட்டுவிட்டு மிகுதியாகக் கள்பருகி மயக்கத்தில் செருக்குற்றுக் கிடப்பான் என்பது பாடலடிகளின் பொருளாகும். முயல்கள் புன்புலத்திலும், காட்டு நாட்டிலும், முல்லை நிலத்திலும், வாழும் தன்மையுடையது. இது புதர், குறுங்காடு, விளைவயல் போன்ற சூழ்நிலையில் அதிகமாகக் காணப்படும் என்ற கருத்தை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் வரகு

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1985 ஆகஸ்ட்). முல்லை நிலத்திலும், புன்புலவையிலும், வன்பாலிலும், புன்புலத்திலும், செந்நிலத்திலும் வரகு விளையும். இதன் இலை கரும்பச்சையாகக் காணப்படும் என வரகின் விளைநிலத்தையும் அதன் பயன்பாடுகளையும் விளக்குவது இக்கட்டுரையின் நோக்கமாகும். இதில் நற்றிணை 121 ஆம் பாடலின்,

“விதையர் கொன்ற முதையற் பூழி
இடுமுறை நிரப்பிய ஈரிலை வரகின்
கவைக்கதிர் கறித்த காமர் மடப்பிணை”

என்னும் அடிகள் இடம்பெற்றுள்ளன. ஆயர்கள் பலமுறை உழுது பண்பட்ட பழங்கொல்லைப் புழுதியில் நிறைவுற வரகினை விதைத்தனர். இவை முளைத்துப் பசிய இலை நிரம்பிய கவைத்த கதிர்களாய் இருக்கும் என்பது பாடலடிகளின் பொருளாகும். வரகு விளையும் நிலத்தினை எடுத்துக்காட்டவும், கவைக்கதிர் என்று வரகின் கதிரை அழைப்பர், இது வானம் பார்த்த பயிராக விளையும் தன்மையுடையது என விளக்கவும் இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க நூற்களில் பயறும் உழுந்தும்

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1987 பிப்ரவரி). உழுந்து, பயறு போன்ற செடிகளின் காய் அமைப்பையும், அதன் பயன்பாட்டு முறையையும் விளக்குவது இக்கட்டுரையின் நோக்கமாகும்.

இதில் நற்றிணை 89 ஆம் பாடலின்,

"இரும்பனிப் பருவத்த மயிர்க்காய் உழுந்தின்

அகலிலை அகல வீசி அகலாது

அல்கலும் அலைக்கும் நல்கா வாடை"

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன. கார்காலத்தில் மிக்க முன்பனிப் பருவத்தில் மயிர்களைக் கொண்ட காய்களையுடைய உழுந்தின் அகன்ற இலைகள் எல்லாம் நீங்கும்படியாக வாடைக்காற்று வீசும் என்று தோழி தலைவியிடம் கூறுவது பாடலடிகளின் பொருளாகும். உழுந்திற்கு அகன்ற இலையும் மயிர்க்காயும் உண்டு என விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## தமிழிலக்கியத்தில் தாவரநூலின் நுட்பங்கள்

இக்கட்டுரை லூர்துசாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும். சங்க இலக்கியங்கள் தமிழ்நாட்டின் மரஞ்செடிகொடிகளின் வேர், அடிமரம், பட்டை, இலை, பூ, பூந்தாது, காய், பழம், விதை ஆகியவற்றைத் தெளிவாகப் பல இடங்களில் கூறியுள்ளன. மேலும், தாவரங்களில் காணப்படும் புல்லுருவித்தன்மை, பூக்கள் கதிரவனை நோக்கித் திரும்புந்தன்மை, நிழலில் வளரும் செடிகளின் இலைகள் இலைப்பச்சை இழந்து விளறிப்போதல், இரவு மகரந்தச்சேர்க்கை போன்ற தாவரங்களில் நுட்பமான கருத்துகளையும் கூறியுள்ளன. இக்கருத்துகளை எடுத்துக் கூறுவது கட்டுரையின் நோக்கமாகும். இதில் நற்றிணை 221 ஆம் பாடலின்,

"பொன்தொடர்ந் தன்ன தகைய நன்மலர்க்

கொன்றை ஒள்ளிணர் கோடுதொறும் தூங்க"

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன. பொற்காசினைத் தொங்க விட்டாற் போன்ற, அழகிய நல்ல பூக்கொன்றையில் ஒளிதிகழும் பூங்கொத்துகள் கிளைகள்தோறும் தொங்கும் என்பது பாடலடிகளின் பொருளாகும். மலர்கள் தனித்தும் கொத்தாகவும் வளரும் தன்மையுடையது. மலர்கள் கொத்தாக வளரும் தன்மைக்குத் தாவர நூலில் Inflousence என்றும், இலக்கியத்தில் 'இணர்' அல்லது 'தொடை' என்றும் அழைப்பர். கொன்றை கொத்தாக வளரும் தன்மையுடையதால் இது 'இணர்' வகையைச் சார்ந்தது என விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் மயிலை

பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்ற இக்கட்டுரையில் (1989 ஜனவரி) மயிலை மரம் வளரும் சூழலும், அதன் பூ, இலை அமைப்பும் விளக்கப்பட்டுள்ளது. மயிலை மரத்தினைப் பற்றி ஆராய்வது இக்கட்டுரையின் நோக்கமாகும். இதில் நற்றிணை 115 ஆம் பாடலின்,

"மயிலடி யிலைய மாக்குர னொச்சி"

எனும் அடி இடம்பெற்றுள்ளது. மயிலின் அடிபோன்ற இலையையும், கரிய கதிராக அமைந்த பூங்கொத்துகளையும் உடைய நொச்சி என்பது இப்பாடலடியின் பொருளாகும்.

வீட்டு வேலியாகவும், ஊர் வேலியாகவும் பயன்பட்ட வீட்டு நொச்சியின், ஐந்து பிரிவுகளையுடைய இலையை, ஐந்து விரல்களையுடைய 'மயிலடி இலை' என்று சங்க நூல்களில் ஒப்பிட்டுள்ளனர் என விளக்கவும், வீட்டு நொச்சியை 'மயிலடி' என்று குறிப்பிட்ட சங்க நூல் வழக்கு, பாமர மக்கள் வாயிலாகக் காட்டு நொச்சிக்குப் பெயராக வழங்கிவருகின்றது என எடுத்துக்காட்டவும் இப்பாடல் அடியை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க நூல்களில் தவளையும் தேரையும் நுணலும்

பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பட்ட இக்கட்டுரையில் நற்றிணைக்குரிய முல்லைத்திணை 59 ஆம் பாடல் எண் இடம்பெற்றுள்ளது. 'நுணலை' மனிதன் தின்றான் என்பதை இப்பாடல் எடுத்துக்காட்டுகின்றது என விளக்க இப்பாடல் எண்ணை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் ஆடை அணிகலன்கள்

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1976-77 செப்டம்பர்-ஜூலை), (1978-79 செப்டம்பர்-நவம்பர், ஜனவரி-மார்ச், ஜூன், ஆகஸ்ட்). பழந்தமிழர் சங்ககாலத்திலேயே ஆடை, அணிகலன்கள் அணிந்து சிறப்புற்று வாழ்ந்தனர் என்பதற்குச் சங்கச் சான்றுகள் பல உள்ளன. இச்சங்கச் சான்றுகளை மேலைநாட்டு வரலாற்று நூற்சான்றுகளோடும் வடநூற்சான்றுகளோடும் ஒப்பிட்டு ஆராய முயல்வது இக்கட்டுரையின் நோக்கமாகும். இதில் நற்றிணை 99, 59 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

"நீரற வறந்த நிரம்பா நீளிடைத்

துகில்விரித்து அன்ன வெயிலவிர் உருப்பின்" (99)

நீர் அறவே இல்லாது, வறட்சியுற்ற, கடக்க முடியாத நீண்ட வெளியில், வெள்ளை ஆடையை விரித்து வைத்தாற்போன்ற வெயில் அச்சம் தரக் கொளுத்தும் கொடிய காட்டில் தலைவன் வினைவயிற் பிரிந்தான் என்று தோழி கூறுவது பாடலடிகளின் பொருளாகும். பஞ்சினால் நெய்யப்பட்ட மிக நயமான உயர்ந்த ஆடை 'துகில்' ஆகும். இது, பிற்காலத்தில் மெல்லிய பட்டாடை என்றும் அழைக்கப்பட்டது என 'துகில் ஆடை' பற்றிய செய்திகளை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

துகில் ஆடையானது, வெயில்காயும் போது நீரில்லாத நீளிடையில் அலை அலையாகக் காணும் வெயில் ஆவிபோலக் காணப்படும் எனத் துகில் ஆடையின் மென்மையினை எடுத்துக்காட்ட 59 ஆம் பாடல் எண்ணை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

### 2.1.3 மருதம்

செந்தமிழ்ச்செல்வி இதழில் 09 ஆய்வுக் கட்டுரைகளில் இடம்பெற்றுள்ள நற்றிணை தொடர்பான மருதத்திணைப் பாடல்களின் எண்ணிக்கை - 14 ஆகும்.

### சங்க நூல்களில் பைஞ்சாய்

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1983 ஆகஸ்ட்). சங்க நூல்களில் ஒருவகைப் புல் நெய்தல் திணையில் கூறப்பட்டுள்ளது. இப்புல்லைச் சாய் என்றும், பைஞ்சாய் என்றும் அழைத்துள்ளனர். இது ஒருவகைக் கோரைப்புல். இதைப் பற்றி விளக்குவது இக்கட்டுரையின் நோக்கமாகும். இதில் நற்றிணை 60 ஆம் பாடலின்,

"நடுந ரோடுநீ சேறி யாயின்வண்

சாயும் நெய்தலும் ஓம்புமதி எம்மின்"

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன. உழவுத்தொழில் செய்யும் வயலிடத்தே வளமிக்க கோரைகளையும், களையெனக்கருதி அழித்துவிடாமல்

பாதுகாப்பாயாக என உழவனிடம் கூறுவதுபோல, தலைவி நிலையைத் தோழி தலைவனுக்குக் கூறுதல் பாடலடிகளின் பொருளாகும். நெய்தலிலும், கடற்கரைக் கானத்திலும், பௌவநீரிலும், நீர்த்துறையிலும், தன்பணையிலும் பைஞ்சாய்க்கோரை காணப்பட்டது. மேலும் கடற்கரையை ஒட்டிய கழனிகளிலும், நீர் திகழும் வயலிலும் பைஞ்சாய்க்கோரை பறிக்கப்பட்டது என்ற கருத்தை விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

### சங்க இலக்கியத்தில் கருங்கால் வெண்குருகும் வெள்ளாங்குருகும் சிறுவெள்ளாங்குருகும்

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1971 நவம்பர்). கருங்கால் வெண்குருகு, வெள்ளாங்குருகு, சிறுவெள்ளாங்குருகு போன்ற குருகுகளின் வாழிடங்களையும், அவை உணவுதேடும் இடங்களையும் இம்மூன்று பறவையினத்துக்கும் உள்ள வேறுபாடுகளையும் எடுத்து விளக்குவது கட்டுரையின் நோக்கம். இதில் நற்றிணையின் 70 ஆம் பாடல் இடம்பெற்றுள்ளது.

நீரில் துவைத்து வெளுத்த ஆடையைப்போன்ற வெண்மையான சிறிய வெள்ளாங்குருகே! நீ எம் ஊரில் உள்ள நீர்த்துறையில் இரைதேடிவிட்டு, தலைவன் ஊருக்கும் செல்கின்றாய். இப்படிச் செல்லும்போது நன்றி மறவாமல் தலைவனுக்கு என்னுடைய நோயைச் சொல்வாயாக என்று தலைவி குருகிடம் கேட்டது பாடலின் பொருளாகும். சிறுவெள்ளாங்குருகு, வெண்மையான நிறமுடையது எனச் சிறுவெள்ளாங்குருகின் நிறத்தை எடுத்துக்காட்ட இப்பாடல் ஆசிரியரால் எடுத்தாளப்பெற்றுள்ளது.

### சங்க இலக்கியத்தில் நாரையும் கொக்கும்

பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்ற இக்கட்டுரையில் நற்றிணை 180, 260, 100 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

"பழனப் பாகல் முயிறுமூசு குடம்பை
கழனி நாரை உரைத்தலிற் செந்நெல்" (180)

வயலில் உள்ள பலாமரத்தின் இலைகளைக் கூடாக்கி முயிறுகள் முட்டையிட்டு உறையும். அக்கூடுகளைக் கழனியின் கண் இரை

தேடுவதற்கு வந்த நாரை உறிஞ்சும் என்பது பாடலடிகளின் பொருளாகும். 'நாரை கடற்கரைக் கழிகளிலும், பொய்கைகளிலும், மருதநிலத்துக் கழனிகளிலும், பழனங்களிலும் காணப்படும். இந்நாரையைக் கழனிநாரை, பழனநாரை என்றும் அழைப்பர்.' நாரைகள் அயிரை, கயல், வாளை, இறால் முதலிய பல மீன்களையும் உண்ணும் என நாரை காணப்படும் இடம், நாரையின் வகைகள், நாரை உண்ணும் மீன்கள் போன்றவற்றை விளக்குவதற்காக இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

"கொக்கினுக்கு ஒழிந்த தீம்பழங் கொக்கின்
கூம்புநிலை அன்ன முகைய ஆம்பல்" (260)

மாமரத்தில் இருந்து விழும்பழம் கொக்கினது கூம்பியநிலை போன்ற அரும்புகளைக் கொண்ட ஆம்பல் பூக்கள் அதிகமாக உள்ள நீரில் விழும் என்பது பாடலடிகளின் பொருளாகும்.

"வள்ளுகிர்
மாரிக் கொக்கின் கூரலகு அன்ன
குண்டு நீராம்பல் தன்துறை யூரன்" (100)

பெரிய நகத்தை உடையதும், கார்காலத்தில் உலாவும் தன்மையுடையதுமான கொக்கின் கரிய மூக்குப் போன்ற ஆம்பல் மலர் தலைவனின் நீர்த்துறையில் காணப்படும் என்பது பாடலடிகளின் பொருளாகும்.

கொக்கின் கூம்புநிலையை எடுத்துக்காட்டவும், இந்தக் கூம்புநிலையை, Standing hunched up and Motion less எனப் பறவை நூலார் குறிப்பிடுவர் என எடுத்துரைக்கவும் இப்பாடலடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் ஆடை அணிகலன்கள்

பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்ற இக்கட்டுரையில் நற்றிணை 90, 380 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

ஆடைகளைத் துவைக்கும் செய்கையிலிருந்து கைஓய்வு கொள்ளாத வறுமையுற்ற புலைத்தி, கஞ்சியிட்டுப் புலர்த்திய சிறிய பூத்தொழிலை உடைய ஆடையைப் பரத்தையாகிய பெதும்பைப் பருவத்தினள் அணிவாள் என்பது 90 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும்.

*“நெய்யும் குய்யும் ஆடி மையொடு*

*மாசுபட் டன்றே கலிங்கமும் தோளும்” (380)*

*எனது ஆடையும், உடம்பும் நெய்யும், நறுமணப்புகையும், பிடித்தமையினால் அழுக்குற்றது எனத் தலைவியின் ஊடலைத் தீர்க்கவந்த பாணனுக்குத் தோழி கூறுவது பாடலடிகளின் பொருளாகும். ‘கலிங்கம்’ என்ற ஒருவகை ஆடையை ஆடவரும், பெண்டிரும் அணிந்தனர். இந்த ஆடை மிகவும் நுண்மையாகக் காணப்படும். கலிங்க ஆடையில் வெண்மையும், சிவப்பும் இருந்தன எனக் கலிங்க ஆடையைப் பற்றிய செய்திகளை விளக்க இப்பாடல் ஆசிரியரால் எடுத்தாளப்பெற்றுள்ளது.*

## சங்க நூல்களில் மீன்கள்

*பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்ற இக்கட்டுரையில் நற்றிணை 230, 70, 310, 340, 390, 400 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.*

*“கயற்கணங் கலித்த பொய்கை ஊர” (230)*

*மீன்கூட்டம் நிறைந்த பொய்கையை உடைய ஊரன் என்பது பாடலடியின் பொருளாகும். கயல்மீன் புதுநீரையும் மழைநீரையும் எதிர்த்துச் செல்லும் வழக்கமுடையது. நீர் வற்றும்போது சிறிதாகிய நீரை நோக்கிச் செல்லும் தன்மையுடையது எனக் கயல்மீனின் செயல்பாடுகளை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.*

*சிறிய வெண்மையான குருகுப்பறவை தலைவி ஊருக்கு வந்து அங்குள்ள நீருண்ணும் துறையில் கெளிற்று மீனைத் தின்றுவிட்டுப் பின்னர் தலைவன் ஊருக்குப் பெயர்ந்து செல்லும் என்பது 70 ஆம் பாடலடிகளின் பொருளாகும். ‘கெடிறு’ மீன் கெளிறு என்று பொருள் கூறப்பட்டுத் தற்காலத்தில் ‘கெளுத்தி’ என்ற பெயரில் வழங்குகின்றது. இம்மீன் செதிலற்ற தோலை உடையது. இது நீருக்கு அடியில் வாழும் தன்மையுடையது. இது நன்னீரில் வாழும் சிறப்புடையது எனக் ‘கெளிறு’ மீனின் பெயர் மாற்றத்தையும், அம்மீன் வாழும் இடம், அதன் அமைப்பு போன்றவற்றை விளக்கவும் இப்பாடல்அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.*

'வாளைமீன் பொய்கையிலும், குளத்திலும், கயத்திலும், கழனியிலும் வாழும் தன்மையுடையது. இது நன்னீரில் வாழும் மீன்களில் பெரிய அளவில் வளரும் தன்மையுடையது. இம்மீன் திரண்டு, நீண்டு இருப்பதால் கணைக்கோட்டு வாளை என்று அழைக்கப்படும். இதன் வாய் ஆழமாகப் பிளந்தது போலக் காணப்படும். இம்மீன் மிகவும் சுவையுடையதாக இருக்கும்' என வாளைமீன் பற்றிய செய்திகளை எடுத்துக்காட்ட 310, 340, 390, 400 ஆகிய பாடல்களை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் நீர்நாய்

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1967 செப்டம்பர்). சங்க நூல்களில் நீர்நாய் பற்றிய செய்திகள் பல காணப்படுகின்றன. அவற்றை எடுத்துக்காட்டி விளக்குவது இக்கட்டுரையின் நோக்கமாகும். இதில் நற்றிணை 390 ஆம் பாடலின்,

"வாளை வாளின் பிறழ நாளும்
பொய்கை நீர்நாய் வைகுதுயில் ஏற்கும்"

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன. வாளைமீன்கள் வாய்போன்று பிறழ, அவற்றை உண்ணாது அப்பொய்கையிலேயே நீர்நாய் தங்கித் துயிலும் என்பது பாடல் அடிகளின் பொருளாகும். 'நீர்நாய்கள் The common otter, the smooth Indian, otter, the clawless otter என மூன்று வகைப்படும். இதில் இரண்டாம் வகை நீர்நாயே சங்க இலக்கியத்தில் இடம்பெறும் நீர்நாயாகும். இது பெரிய ஏரி, குளங்களின் கரை, ஆறு, கால்வாய், நீர்நிறைந்த வயல், கடற்கழி போன்றவற்றில் வாழும். இது மீன்களை வேட்டையாடும் தன்மையுடையது. இதன் உடல் வழவழப்பாய்க் காணப்படும்' என நீர்நாய் பற்றிய செய்திகளை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## தமிழிலக்கியத்தில் தாவர நூலின் நுட்பங்கள்

லூர்துசாமி என்பவரால் எழுதப்பெற்ற இக்கட்டுரையில் நற்றிணை 230, 310 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

*"கணைக்கா லாம்பலமிழ்து நாறு தண்போது" (230)*

*திரட்சிமிக்க கால்களையுடைய ஆம்பலில் அமிழ்து மணக்கும் குளிர்ந்த மலர் காணப்படும் என்பது இப்பாடலடியின் பொருளாகும்.*

*"முயப்பிடிச் செவியி னன்ன பாசடைக்" (230)*

*ஆம்பல் நெருங்கிய பிடியானையின் செவிபோன்ற இலைகளை உடையது என்பது பாடலடியின் பொருளாகும். நீர்ச் செடியான ஆம்பலுக்குத் துளையுடைய தண்டும், பெரிய இலையும் உண்டு என விளக்க இப்பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.*

*"விளக்கி னன்ன சுடர்விடு தாமரைக்*
*களிற்றுச் செவியன்ன பாசடை தயங்க" (310)*

*விளக்கைப் போன்ற ஒளி வீசுகின்ற தாமரை மலருக்கு ஆண்யானையின் காதுபோன்ற பசுமையான இலைகள் உண்டு என்பது பாடலடிகளின் பொருளாகும். தாமரை போன்ற நீர்வாழ் செடிகளுக்கு இலை அகலமாகக் காணப்படுவதற்குக் காரணம் அதிகமான நீர்ப்போக்கு நிகழ, எனத் தாவர நூலின் நுட்பங்களை எடுத்துரைக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.*

## சங்க நூல்களில் ஆமை

*இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1984 ஜூலை). ஆமை முட்டையிட்டுப் பாதுகாக்கும் தன்மை, ஆமை வகைகள், ஆமையின் பயன்பாடு, அதன் குஞ்சுவின் நிற அமைப்பு, அறிவியல் பெயர் ஆகியவற்றை விளக்குவது இக்கட்டுரையின் நோக்கமாகும். இதில் நற்றிணை 280 ஆம் பாடலின்,*

*"பழன யாமைப் பாசறைப் புறத்துக்*
*கழனி காவலர் சுடுநந் துடைக்கும்"*

*எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன.*

*உழவர்கள் பசுமைமிக்க இலைபோன்ற ஆமையின் முதுகினை உடைத்து உண்பர் என்பது பாடலடிகளின் பொருள். தரையில் வாழும் ஆமையை 'வயல்ஆமை' என்றும், 'பழன ஆமை' என்றும் அழைப்பர். இது*

வெயில் நேரத்தில் நீரில் நீந்தும், குளிர்காலத்தில் கால்களை உள்ளிழுத்துக்கொள்ளும். இதன் கால் நகங்கள் கூர்மையானவை. இதன் மேலோடு கருமையாகவும், அடிஓடு சிறிது வெண்மையாகவும் இருக்கும் என ஆமை பற்றிய செய்திகளை எடுத்துக்காட்ட இப்பாடலடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

### சங்க இலக்கியங்கள் காட்டும் யாழ்

*இக்கட்டுரை மார்கரெட் பாஸ்டின் என்பவரால் (1994 மே-ஆகஸ்டு) எழுதப்பெற்றதாகும். சங்க நூல்களில் காணப்படும் யாழ்க் கருவியின் பெயர்கள், அதன் தோற்றம், அதனை வைத்து வாசித்த விதம், தூக்கிச் செல்லும் விதம், அதன் உறுப்புகள், வடிவமைப்பு, இக்கருவி வாசிக்கப்பட்ட சூழ்நிலைகள் ஆகியவற்றை அந்நூல்களின் வழிநின்றும், அவற்றின் உரைகளின் வழிநின்றும் ஆராய்ந்து யாழ்க்கருவியினது வடிவ அமைப்பைச் சித்தரிக்க முயல்வது இக்கட்டுரையின் நோக்கமாகும்.*

*“பாணன் கையது பண்புடைச் சீறியாழ்” (30)*

*பாணன் கையில் உள்ள பண்பமைந்த சிறிய யாழ் என்பது இப்பாடலடியின் பொருளாகும்.*

*“பொன்புனை நரம்பின் இன்குரல் சீறியாழ்” (380)*

*பொன்னைக் கொண்டு புனைந்தாற் போன்ற நரம்பை உடைய இனிய குரல் எழுப்பும் சிறிய யாழ் என்பது பாடலடியின் பொருளாகும். சீறியாழ் என்ற யாழ்ப்பெயரை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.*

### 2.1.4 நெய்தல்

*செந்தமிழ்ச்செல்வி இதழில் 19 ஆய்வுக்கட்டுரைகளில் இடம்பெற்றுள்ள நற்றிணைக்குரிய நெய்தல் திணைப்பாடல்களின் எண்ணிக்கை - 59 ஆகும்.*

### சங்க நூல்களில் ஞாழல்

*இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும். இதில் நற்றிணை 31, 54, 74, 96, 106, 167, 191, 267, 311, 315 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.*

ஞாழல் மரமானது, பனிக்கழித்துறையிலும், கடற்கரைத் தெண்டிரையிலும், பெருங்கடல் அருகிலும், புதுவது புணர்ந்த பொழிலிலும், மணங்கமழ் கானலிலும், இன்னமர் கானலிலும், கடல் துறைக்கானலிலும் காணப்படும். மேலும் இம்மரம் கொத்தாகப் பூக்கும் தன்மையுடையது. இப்பூக்கள் செம்மஞ்சள் நிறமும் மஞ்சள் நிறமும் கலந்து காணப்படும் என ஞாழல் மரம் வளரும் இடத்தினை எடுத்துக்காட்டவும், அதன் பூவின் நிறம், இலையின் தன்மை ஆகியவற்றை விளக்கவும் மேலே இடம்பெற்றுள்ள பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்ககாலத்துக் காவிரிப்பூம்பட்டினம்

இக்கட்டுரை மயிலை சீனிவேங்கடசாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1951 மே). கடைச்சங்க காலத்தில் சோழநாட்டின் துறைமுகப்பட்டினமாகவும், தலைநகராகவும் இருந்த காவிரிப் பூம்பட்டினம் புகார்ப்பட்டினம் என்றும், புகார் என்றும், பூம்புகார் என்றும் பெயர் பெற்றிருந்தது. இத்தகைய சிறப்புடைய காவிரிப் பூம்பட்டினத்தின் பண்டைய சிறப்பை ஆராய்வது இக்கட்டுரையின் நோக்கமாகும். இதில் நற்றிணை 258 ஆம் பாடலின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

'பகற்பொழுதில் விருந்தினரை வரவேற்றுப் போற்றுவதற்காக உணவு சமைப்பர். இவ்வுணவைக் காக்கைக்கும் பலிச்சோறாய் இடுவர். இப்பலிச்சோற்றை உண்ட காக்கை, அங்காடி சென்று இறால் மீனைக் கவர்ந்து உண்டு பின்னர் கடலில் செல்லாது தங்கிய கப்பலில் உள்ள பாய்மரத்தில் சென்று தங்கும் இயல்புடைய மருங்கூர்ப்பட்டினம் என்பது பாடலடிகளின் பொருளாகும்.

காவிரியாறு கடலுடன் கலக்கின்ற புகார் முகத்தின் வடகரையில் காவிரிப்பூம்பட்டினம் அமைந்துள்ளது. இது கிழக்கு மேற்காக நீண்ட சதுர அமைப்புடையது. இதில் கடற்கரையைச் சார்ந்த மணல் பரந்த இடம் நெய்தலங்கானல், இந்நெய்தலங்கானலுக்கு மேற்கே மருவூர்ப்பாக்கம் அமைந்துள்ளது. இம்மருவூர்ப்பாக்கமே இப்பாடலில் இடம்பெற்றுள்ளது' என மருவூர்ப்பாக்கத்தை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் கடல்வாழ் விலங்குகள்

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1968 ஆகஸ்ட்). சங்க இலக்கியத்தில் காணப்படும் கடல்வாழ் விலங்கான பெருமீன் என அழைக்கப்படும் திமிங்கிலம், குட்டிபோட்டுப் பால்கொடுக்கும் விலங்கேயாகும். இதைப் பற்றிய கருத்துகளை எடுத்து விளக்குவது கட்டுரையின் நோக்கம். இதில் நற்றிணையின் 388 ஆம் பாடல் அடிகள் இடம்பெற்றுள்ளன.

வன்மைமிக்க புரிகளால் முறுக்குண்ட கயிற்றின் முனையிலே எறிகின்ற ஈட்டியையுடையவரும் தண்ணிய படகிலே செல்கின்றவருமாகிய பரதவர், ஒளிபொருந்திய விளக்குகளைக் கொளுத்திக்கொண்டு நடுயாமத்தில் வேட்டைக்குச் செல்வர் என்பது பாடலடிகளின் பொருளாகும். கயிற்றில் கட்டப்பட்ட எறியுளியைக்கொண்டு பரதவர்கள் திமிங்கிலம் பிடித்திருப்பர் என விளக்கவும், எறியுளி அமைக்கப்பட்ட முறையை விளக்கவும் இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் கருங்கால் வெண்குருகும் வெள்ளாங்குருகும் சிறுவெள்ளாங்குருகும்

பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்ற இக்கட்டுரையில் நற்றிணையின் 54, 4, 67, 211, 167, 183 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

கரிய நிறமுடைய காலினையுடைய நாரை, தூய சிறகுகளையும், மிகுதியான புலாலையும் தின்னக்கூடிய தன் சுற்றத்தாருடன் சூழ்ந்த நீர்ப்பரப்பிலுள்ள இரையை அருந்தித் தாவிப் பறத்தலை விரும்பும் தன்மையுடையது என்பது 54 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். 'வண்டுகள் மணல்பரப்பில் மடுத்து முழங்கும் ஓசையைக் கேட்டு வயல்களில் உள்ள கருங்கால் வெண்குருகுகள் அஞ்சுகின்ற கரிய உப்பங்கழி சூழ்ந்த நெய்தல்நிலம் உள்ள ஊர்' என்பது 04 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். இறால்மீனைத் தின்ற கரிய காலையுடைய வெண்மையான நாரை உப்புக்குவட்டின் மேலாகத் தன் சிறகை வீசிப் பறந்து, கரையில் உள்ள கருமையான கிளையை உடைய புன்னை மரத்தில் தங்கும் என்பது

67 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். உப்புப்படுதலையுடைய சேற்றுடன் விளங்கும் கழியிலே, கரிய காலுடன் விளங்கும் குருகு இறால்மீனை உண்ண எண்ணிப் பாயும்போது இறால்மீன் தப்பிச்செல்லும், தப்பிய இறால்மீன் கரையில் உள்ள தாழம்பூவைக் குருகு என எண்ணி அஞ்சும், இத்தகைய துறைக்குத் தலைவன் சிறைப்புறமாக வந்ததை அறிந்த தோழி தலைவியின் துயரை எடுத்துக்கூறுவது 211 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். கருங்கால் வெண்குருகு தனியாகக் குளத்திலும், கழிகளிலும், உப்புடைப்பாத்திகளிலும் காணப்படும். இது சில சமயங்களில் கூட்டமாகவும் காணப்படும். இக்குருகைத் தற்காலத்தில் பெரிய வெள்ளாங்கொக்கு என்றும் கூறுவர். வெங்குருகினத்தில் மிக நெடியதை கருங்கால் வெண்குருகு என்றும், நடுத்தரமான உயரமுடையதை வெள்ளாங்குருகு என்றும், சிறியதைச் சிறு வெள்ளாங்குருகு என்றும் அழைப்பர் எனக் குருகுகள் இரைதேடும் இடத்தையும் அவற்றின் வகைகளையும் எடுத்துக்காட்ட மேலே இடம்பெற்றுள்ள பாடல்களை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

“கருங்கோட்டுப் புன்னைக் குடக்குவாங்கு பெருஞ்சினை
விருந்தின் வெண்குருகு ஆர்ப்பின் ஆஅய்” (167)

புன்னை மரத்தின் வளைந்த கரிய அடித்தண்டினையுடைய பெரிய கிளையிடத்து வெண்மை நிறமுடைய நாரை தங்கும் என்பது பாடலடிகளின் பொருளாகும். மீனினத்தை மிகுதியாகத் தின்ற நாரை மிதித்த நீர் வற்றிய குளத்தில் நெய்தல் மலர்பூத்துக் காணப்படும் என்பது 183 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். வெண்குருகு மீனையும், இறாலையும், நண்டையும் உண்ணும் தன்மையுடையது என விளக்கவும், குருகு சாம்பல் நிறமுடையது, ஆனால் வெள்ளாங்குருகும், வெண்குருகும் வெண்மைநிறமுடையது எனக் குருகில் இருந்து வெள்ளாங்குருகினை வேறுபடுத்திக் காட்டவும் இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் நாரையும் கொக்கும்

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும். இதில் நற்றிணை 127, 263, 178, 258 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

கரிய கழியில் இரைதேடித் துழாவும் நாரை, ஈரமான புறத்தையுடைய இறால்மீன்களை உதறுதலால் சிதறும் நீர்த்துளி பாக்கத்தை நடுங்கச்செய்யும் என்பது 127 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். வளைந்த வாயை உடைய பெடைநாரை, நிறைந்த கருப்பத்தால் இயங்காது நெய்தல் நிலத்தை விட்டு மருதநிலத்தில் தங்கியிருக்கும். அதற்கு ஆண்நாரை கடல்மீன் கொண்டு விரையும் என்பது 263 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும்.

நாரை கடற்கரைக்கழிகளிலும், பொய்கைக் கழிகளிலும், மருதநிலத்துக் கழனிகளிலும், பழனங்களிலும் வாழும் தன்மையுடையது. இது அயிரை, கயல், வாளை போன்ற மீன்களையும் உண்ணும் என்ற செய்திகளை எடுத்துக்காட்ட மேலே இடம்பெற்றுள்ள இரண்டு பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

'அசைகின்ற மூங்கிலின் உட்பகுதியில் உரிக்கப்பெறும் உரியை மென்மையாகப் பிசைந்தது போன்ற சிறகுகளையும், நீண்ட கால்களையும் கொண்ட நாரையில் நலன் உண்ணப்பட்ட பெடை, உப்பங்கழிக் கரையில் உள்ள சிறிய மீன்களை உண்ணாது தாழை மரத்தின் பெரிய கிளையின் கண் வருத்தத்தோடு தங்கும்' என்பது 178 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். 'நாரைக்கும் அதன் இனமான பறவைகளுக்கும், மார்புப்பக்கத்திலும், பின்பக்கத்திலும் இறகுகளில் மிகச் சிறிய நுண்ணிய தூவிகள் உண்டு. இத்தூவிகளில் இருந்து மென்மையான பொடி அல்லது தூள் வெளியாகின்றது. இந்தத் துய்ப்பொடிகளைத் (Powder - down) தெளித்து நாரை தனது கலைந்த, நனைந்த இறகுகளைக் கோதி உலர்த்திக்கொள்ளும்' என்ற பறவை நூலார் கருத்தை எடுத்துக்காட்டி விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

"பொற்றொடி மகளிர் புறங்கடை உகுத்த
கொக்குகிர் நிமிரல் மாந்தி எற்பட" (258)

பொன்னாலாகிய தொடியுடை மகளிர் விருந்தினருக்கு உணவு சமைப்பர் அவ்வுணவைப் பலிச்சோறாகக் காக்கைக்கும் இடுவர். இச்சோறானது, கொக்கின் நகம் போலக் காணப்படும் என்பது பாடல் அடிகளின் பொருளாகும். கொக்கின் நகங்கள் நீண்டு மெல்லியதாய்க் (long and thin claws)

காணப்படும் என்ற கருத்தை விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் மயில்

பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்ற இக்கட்டுரையில் நற்றிணை 288 ஆம் பாடலின்,

"அருவி யார்க்கும் அணங்குடை நெடுங்கோட்டு
ஞாங்கர் இளவெயில் உணீஇய ஓங்குசினைப்
பீலி மஞ்ஞை பெடையோ டாடுங்"

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன. அருவி ஆரவாரிக்கும் நெடிய கொடுமுடியின் பக்கத்தில், இளவெயில் காய்தற்காக உயர்ந்த மரக்கிளையில் பீலியை உடைய மயில் தன்பெடையோடு விளையாடும் என்பது பாடலின் பொருளாகும். மயில்கள் பாறையில் வெயில்காயும் குணமுடையன என்ற கருத்தை விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் குருகு

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1971 ஆகஸ்ட்). குருகு என்ற சங்ககாலப் பறவை தற்காலத்தில் கூழைக்கடா என அழைக்கப்படுகின்றது. இப்பறவையின் அலகு நீண்டு பெரிதாகக் காணப்படும். இது தண்ணீரில் நீந்தும் தன்மையுடையது. இது மிக உயரத்தில் பறந்து செல்லும் பண்புடையது எனக் குருகு பற்றிய செயல்பாடுகளையும் அதன் அமைப்பையும் விளக்குவது இக்கட்டுரையின் நோக்கமாகும். இதில் 159, 369, 27 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

கடற்கரையில் மணல்குவிந்து இடிந்த பகுதியில் குருகுகள் தொகையாக அமர்ந்திருக்கும். இது சங்குகளைக் குலையாகத் தொடுத்தது போலக் காணப்படும் என்பது 159 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். ஞாயிறு தான்கொண்ட சினம் குறைந்து குன்றைச் சார்ந்து மறைந்து, நிறைந்த சிறகுகளைக் கொண்ட நாரையின் கூட்டம் வான்வெளியில் விரும்பிப் பறக்கப் பகற்பொழுது மெல்ல மெல்ல நீங்கும் என்பது 369 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். குருகுகள் வரிசையாகப் பறந்து செல்லும்

தன்மையுடையன. இது பருமனான பறவையாக இருந்தாலும் ஆகாயத்தில் மிக உயரத்தில் வட்டமடித்துப் பறக்கக்கூடியது என்ற கருத்தை விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

பொய்கையில் இறால்மீனைத் தின்னும் குருகினம் காணப்படும். சுறாக்கள் அதிகமாக உள்ள உப்பங்கழிகளில் நெய்தல் பூக்கள் காணப்படும் என்பது 27 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். குருகுகள் கடற்கழிகளிலும் கயங்களிலும் மீன்பிடிக்கும். இது புன்னை மரத்தில் கூடுகட்டி வாழும் தன்மையுடையது. குருகினம், குருகுக்கிளை, இனக் குருகு என இதன் கூட்டத்தை அழைப்பர் எனக் குருகு பற்றிய செய்திகளை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் நீர்நாய்

பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்ற இக்கட்டுரையில் நற்றிணை 195 ஆம் பாடலின்,

“அருளா யாகலோ கொடிதே இருங்கழிக்
குருளை நீர்நாய் கொழுமீன் மாந்தி
தில்லையம் பொதும்பிற் பள்ளி கொள்ளும்”

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன. கருமை பொருந்திய உப்பங்கழியில் நீர்நாயின் இளங்குட்டி கொழுமையான மீன்களை நிரம்பத்தின்று, தில்லை மரப்பொந்துகளில் படுத்துக்கிடக்கும் என்பது பாடலடிகளின் பொருளாகும். நீர்நாய் இரவுக்காலத்தில் மீன்களை வேட்டையாடும். ஆனால் பகற்பொழுதில் நன்றாகத் தூங்கும் என நீர்நாய் வேட்டையாடும் காலத்தை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்கஇலக்கியத்தில் முதலையும் இடங்கரும் கராமும்

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும். இதில் சங்க நூல்களில் முதலை, இடங்கர், கராம் என்ற மூன்றுவகை முதலை இனங்கள் காணப்படுகின்றன. இவை அறிவியற்படி எவை என்பதைக் கண்டறிந்து விளக்குவது இக்கட்டுரையின் நோக்கமாகும். இதில் நற்றிணை 287 ஆம் பாடலின்,

“கொடுங்கழிப்

பாசடை நெய்தல் பனிநீர்ச் சேர்ப்பன்

நாம முதலை நடுங்குபகை அஞ்சான்”

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன. விளைந்த உப்பங்கழியிடத்துப் பசிய இலையை உடைய நெய்தல் மிகுந்திருக்கும். அவ்விடத்தில் அச்சமூட்டும் முதலைகள் காணப்படும். அம்முதலைக்கு அஞ்சாது தலைவன் தலைவியைக் காணவருவான் என்பது பாடல் அடிகளின் பொருளாகும். முதலை கழிகளிலும், கடற்கரைச் சூழலிலும் ஆற்றுத்துறைகளிலும் வாழும் தன்மையுடையது. இதற்கு வளைந்த கால்கள் உண்டு. இதன் முக்கிய உணவு மீன். இது ஆடு, மாடு மனிதர்களையும் வேட்டையாடுவதால் ‘நாம முதலை’ என அழைப்பர். இவ்வாறு முதலை பற்றிய செய்திகளை எடுத்துவிளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க நூல்களில் கண்டல்

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1987 ஜனவரி). சங்க நூல்களில் இடம்பெறும் கண்டல் என்ற நெய்தல் திணைக்குரிய மரம் வளரும் சூழல், அதன்தன்மை ஆகியவற்றை விளக்குவது இக்கட்டுரையின் நோக்கமாகும். இதில் நற்றிணை 54, 74, 123, 191, 207, 345, 363, 372 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

‘கண்டல்’ என்ற மரம் கடற்கரையிலும், கழிகளிலும், கடலோரச் சதுப்புநிலக்காடுகளிலும் காணப்படும். இதை வேலியாக அக்கால மக்கள் வளர்த்திருக்கின்றனர். ‘கானல்கண்டல்,’ ‘கழன்றுகுபைங்காய்’ போன்றவை கண்டல் மரத்தின் காயாக இருந்திருக்கலாம். கண்டல் என்பதற்குப் பிற்காலத்து உரையாசிரியர்கள் ‘தாழை’ என்று பொருள் கூறியுள்ளனர்; அது தவறு. ஏனெனில், யாப்பருங்கல விருத்தியின் மேற்கொள் பாடலில் (20, 90)தாழையும், கண்டலும் வேறு வேறு என்பது எடுத்துக் கூறப்பட்டுள்ளது. சங்க நூல்களில் கண்டல் என்ற பெயர் பொதுவாக ஒருசில தனித்த மரங்களுக்குக் கூறினாலும் சிறப்பாக Rhizhophora Mucronata என்ற மரத்திற்குத்தான் வழங்கப்பட்டுள்ளது எனக் கண்டல்மரச் சிறப்பையும், அதன் பயன்பாட்டையும், தாழையிலிருந்து கண்டல் வேறுபட்டு நிற்கும்

*தன்மையையும் விளக்கிக்காட்ட மேலே இடம்பெற்றுள்ள 8 பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.*

## தமிழிலக்கியத்தில் தாவரநூலின் நுட்பங்கள்

*லூர்துசாமி என்பவரால் எழுதப்பெற்ற இக்கட்டுரையில் நற்றிணை 78, 235, 19, 131, 35, 278 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.*

*"வீழ்தாள் தாழைப் பூக்கமழ் கானல்" (78)*

*விழுதுதாழ்ந்து விளங்கும் தாழைப் பூ மணம் நிறைந்து காணப்படும் என்பது 78 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். தாழஞ்செடியின் தண்டின் கீழ்நுனியான ஆணிவேர் எளிதாகத் தரையில் சேர்ந்திருப்பதால் தாழஞ்செடி கவிழ்ந்துவிடும். எனவே செடி கீழே விழாதிருக்கப் பக்கவேர்கள் பக்கத்தில் எழுந்து ஊன்றுகின்றன என விழுதுவேர்களின் பயன்பாட்டை எடுத்துக்கூற இப்பாடல் அடி ஆசிரியரால் எடுத்தாளப்பெற்றுள்ளது. வலிமையான அலையால் மோதப்படும் சருச்சரை பொருந்திய வளைந்த அடிமரத்தையுடைய வாளரம் போன்ற முட்களைக் கொண்ட இலைகளையுடையது தாழை என்பது 235 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும்.*

*இறால்மீனின் புறம்போன்ற சருச்சரை பொருந்திய பெரிய அடியையுடைய சுறாமீன் என்பது 19 ஆம் பாடல் அடியின் பொருளாகும். தாழையின் வட்டவட்டமாகச் சொரசொரப்பாயிருக்கும் பாகத்தையுடைய தண்டு, சுறாமீனின் முதுகிற்கு ஒப்பிடப்படும் என்ற தாழைத் தண்டின் உருவ அமைப்பை எடுத்துக்காட்ட இப்பாடல்அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.*

*சுறாவின் முகத்தில் உள்ள கொம்பு போன்று, முட்களை உடையதாய்த் தாழையின் இலை காணப்படும் என்பது 19 ஆம் பாடல்அடியின் பொருளாகும்.*

*"அரவுவாள் வாய முள்ளிலைத் தாழை" (235)*

*வாளரம் போன்ற முட்களைக்கொண்ட இலைகளையுடைய தாழை என்பது பாடலடியின் பொருளாகும்.*

"சுறவுமருப்பு அன்ன முட்தோடு ஒசிய" (131)

சுறாவின் கொம்பினை ஒத்த இருபுறமும் முள்கொண்டு விளங்கும் தாழைஇலை என்பது பாடலடியின் பொருளாகும். தாழஞ்செடியின் இலைகள் வாள்போன்ற உருவமுடையது. ஆனால் ஓரம் பற்கள்போன்று காணப்படும். இது சுறாமீனின் கொம்பிற்கு உவமிக்கப்படும். தாழை இலையின் வடிவம் அதன் ஓர அமைப்பு ஆகியவற்றை எடுத்துக்காட்ட இப்பாடல்களின் அடிகளை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

"பொன்னின் அன்ன தாதுபடு பல்மலர்" (278)

பொன்போன்ற மகரந்தம் உடைய புன்னை மலர்கள் என்பது பாடலடியின் பொருளாகும். புன்னையின் தாது பொன்னிறமுடையதாகக் காணப்படும் என்ற புன்னைத் தாதுவின் நிறத்தினை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

"புன்கால் நாவல் பொதிப்புற இருங்கனி" (35)

புல்லிய காம்பையுடைய நாவற்கனி என்பது இப்பாடலடியின் பொருளாகும். நாவல் கனியினைப் பற்றி எடுத்துக்காட்ட இப்பாடல் அடியை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க நூல்களில் மஞ்சளும் இஞ்சியும்

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1987 ஜூலை). இஞ்சி, மஞ்சள் பயிரிடும் முறை, மஞ்சளின் அமைப்பு, இஞ்சி, மஞ்சளின் பயன்பாடு போன்ற பல கருத்துகளை எடுத்து விளக்குவது இக்கட்டுரையின் நோக்கமாகும். இதில் நற்றிணை 101 ஆம் பாடலின்,

"முற்றா மஞ்சள் பசும்புறங் கடுப்பச்
சுற்றிய பிணர சூழ்கழி இறவின்"

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன. முற்றாத மஞ்சள் கிழங்கின் பசுமையான மேற்பகுதி போலச்சுற்றிலும் சருச்சரை அமையச் சூழ்ந்த உப்பங்கழியிடத்தில் இறால்மீன் குவியல் காணப்படும் என்பது பாடலடிகளின் பொருளாகும். முற்றாத மஞ்சளைப்போல இறால்மீன் காணப்படும் என்ற உவமையை எடுத்துக்காட்டவும், மஞ்சளின் சிறப்பை விளக்கவும் இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## குறிஞ்சிப்பாட்டில் வரும் செடிகொடி மரப் பெயர்கள்

பி.எல்.சாமி எழுதிய இக்கட்டுரையில் நற்றிணை **215** ஆம் பாடலின் எண் இடம்பெற்றுள்ளது. 'சங்க இலக்கியத்தில் 'சுள்ளி' என்ற செடியின் பெயர் காணப்படுகின்றது. இச்செடி பெரியாற்றின் ஓரம் மிகுதியாகக் காணப்பட்டிருக்கலாம் ஏனெனில் சுள்ளியம் பேரியாறு என்ற பெயர் சங்க நூல்களில் காணப்படுகின்றது. மேலும் நற்றிணையில் 'சுள்ளம்போதனார்' எனும் புலவர் ஒருவர் காணப்படுகின்றார். இவர் சுள்ளிப்பூவைப் பற்றிப் பாடியிருக்கலாம்' எனச் சுள்ளிச்செடிக்கு அப்பெயர் காணப்பட்டதற்கான காரணத்தை ஆராய்வதற்காக இப்பாடல் எண்ணை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க நூல்களில் முண்டகமும் முள்ளியும்

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் **(1986** மார்ச்). முண்டகம், முள்ளி என்ற முள்ளுடைய செடிகளின் வாழிடம், பூ அமைப்பு ஆகியவற்றை எடுத்து விளக்குவது இக்கட்டுரையின் நோக்கமாகும். இதில் நற்றிணை **191, 207, 311, 245** ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

> "முண்டகம் மணற்கானத்திலும், கழிசூழ்படப்பையிலும் உப்பு விளையும் இருங்கழிச் செறுவிலும், கடற்கரையிலும் இருப்பதாகக் கூறப்பட்டுள்ளது. ஆனால் முள்ளி மருதநிலத்தில் தண்டுறை உடைய ஊரில் முதுநீர் அடைகரையிலும் இலஞ்சியான ஏரிக்கரையிலும், அள்ளல் ஆகிய சேற்றிலும் கூறப்பட்டள்ளதை கவனிக்கவேண்டும். முண்டகத்திற்கும், முள்ளிக்கும் நீலமலர் உண்டு. ஆனால் அதிலும் வேற்றுமை உண்டு. முண்டகத்தின் மலர் நல்ல நீலநிறமாகக் காணப்படும். ஆனால் முள்ளியில் மலர் வெண்ணிற நீலமும், ஊதாவும் கலந்த நிறமாகக் காணப்படும்."

என முண்டகம், முள்ளிச்செடி வளரும் சூழல், அதன் மலர் அமைப்பு, அச்செடிகளில் காணப்படும் முள் போன்ற பல செய்திகளை எடுத்துக்காட்டி விளக்க மேலே இடம்பெற்றுள்ள பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் வள்ளியும் கவலையும்

*பி.எல்.சாமி எழுதிய இக்கட்டுரையில் நற்றிணை 295 ஆம் பாடலின்,*

*"முரிந்த சிலம்பி னெரிந்த வள்ளியின்"*

*சரிந்திருக்கும் மலைப்பக்கத்தே கிழங்கோடு கருகிக் காணப்படும் வள்ளிக்கொடி என்பது பாடல் அடியின் பொருளாகும். வள்ளிக்கொடி கிழங்கை உடையது. இது மரத்தை நாடிவளரும் தன்மையுடையது என்ற செய்தியை எடுத்துக்காட்ட இப்பாடல் அடியை ஆசிரியர் கையாண்டுள்ளார்.*

## சங்க இலக்கியத்தில் மணிகள்

*பி.எல்.சாமி எழுதிய இக்கட்டுரையில் நற்றிணை 239 ஆம் பாடலின்,*

*"ஆய்மணி பொதியவிழ்ந் தாங்கு நெய்தற்*
*புல்லிதழ் பொதிந்த பூத்தப மிதிக்கும்"*

*நீலமணிகளின் குவியலை விரித்துப் பரப்பியது போன்று நெய்தலின் புறவிதழ் மூடிய மலர்கள் காணப்படும் என்பது பாடலடிகளின் பொருளாகும். சங்கஇலக்கியத்தில் மணி என்ற சொல் பெரும்பாலும் நீலத்தையே குறித்து வந்துள்ளது. நீலமணியை (Supphire) மிகவும் போற்றினர் என மணியின் நிறம் பற்றிய கருத்தினை எடுத்துக்கூறவும், மணியின் மீது மக்கள் கொண்ட விருப்பினை எடுத்துக்காட்டவும் இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.*

## சங்க இலக்கியத்தில் ஆடை அணிகலன்கள்

*இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1976-77 செப்டம்பர்-ஜூலை), (1977-78 செப்டம்பர்-நவம்பர், ஜனவரி-மார்ச், ஜூன், ஆகஸ்ட்). பழந்தமிழர் சங்ககாலத்திலேயே ஆடை, அணிகலன்கள் அணிந்து சிறப்புற்று விளங்கினர். இதற்குச் சங்கச் சான்றுகள் பல உண்டு இச்சங்கச் சான்றுகளை மேலைநாட்டு வரலாற்றுச் சான்றுகளோடும் வடநூற் சான்றுகளோடும் ஒப்பிட்டு ஆராய முயல்வது இக்கட்டுரையின் நோக்கமாகும். இதில் நற்றிணை 15 ஆம் பாடலின்,*

*"முழங்குதிரை கொழீஇய மூரி யெக்கர்*
*நுணங்குதுகில் நுடக்கம் போலக் கணங்கொள*
*ஊதை தூற்றும் உரவுநீர்ச் சேர்ப்ப!"*

முழங்குகின்ற அலைகொண்டு வந்து சேர்த்த பெரிய எக்கர் மணலை மென்மையான துகிலின் அசைவுபோல, காற்று ஒருசேரத் தூற்றும் என்பது பாடலடிகளின் பொருளாகும். சங்ககால மக்கள் துகிலாடையைப் பயன்படுத்தினர். இவ்வாடை மிகவும் மென்மையான துணியால் செய்யப்பட்டிருக்கும் என்ற கருத்தை எடுத்துக்காட்ட மேலே இடம்பெற்ற பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க நூல்களில் ஆமை

பி.எல்.சாமி எழுதிய இக்கட்டுரையில் நற்றிணை 385 ஆம் பாடலின்,

"புலவிநீர் அடைகரை யாமை பார்ப்போ

டலவனும் அளைவயிற் செறிந்தன கொடுங்கழி"

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன. புலால் நாற்றம் வீசும் கடற்கரையிடத்தே ஆமையின் குஞ்சோடு நண்டுகளும் வளையிடத்தே சென்று அடங்கும் என்பது பாடல் அடிகளின் பொருளாகும். சங்க நூல்களில் இருபாடல்களில் கடலாமை பற்றிய செய்தி உண்டு. அதில் ஒன்று இந்த நற்றிணை பாடல் என்ற கருத்தை விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் சங்குகள்

பி.எல்.சாமி எழுதிய இக்கட்டுரையில் நற்றிணை 331, 172 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

"வளைநீர் வேட்டம் போகிய கிளைஞர்" (331)

வளைந்த கடல்நீர்ப்பரப்பில் வேட்டைக்குச் சென்ற படகுகளைத் தோழியர் எண்ணுவர் என்பது பாடலடியின் பொருளாகும். 'வளை' என்று சங்கினை அழைப்பர் என விளக்கவும், இவ்வளையை வேட்டையாட நெய்தல்நில மக்கள் கடலுக்குள் செல்வர் என்கின்ற கருத்தினை எடுத்துரைக்கவும் இப்பாடல் அடியை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

"விருந்திற் பாணர் விளரிசை கடுப்ப

வலம்புரி வான்கோடு நரலும்" (172)

புதியவர்களாகிய பாணரின் மெல்லிய இசைப்பாட்டைப்போல வெண்மையான வலம்புரிச்சங்கு ஒலிக்கும் என்பது பாடலடிகளின்

பொருளாகும். சங்கில் வலம்புரிச்சங்கு, இடம்புரிச்சங்கு என இருவகை உண்டு எனச் சங்கின் வகையை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க நூல்களில் மீன்கள்

பி.எல்.சாமி எழுதிய இக்கட்டுரையில் நற்றிணை 272, 127, 159, 195, 207, 311, 175, 291, 45, 27, 67, 78, 199, 207, 215, 303, 392, 223, 132, 49, 31, 278, 358, 19, 101, 49, 111, 131, 211, 67, 91, 239, 19, 131, 111 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன. இப்பாடல்களைக் கட்டுரையில் குறிக்கப்படும் மீன்கள் அடிப்படையில் கீழ்வருமாறு வகைப்பாடு செய்யலாம்.

அயிரைமீன் - 272
கொழுமீன் - 127, 159, 195, 207, 311, 175, 291
கோட்டுமீன் - 49
சுறாமீன் - 27, 45, 67, 78, 199, 207, 215, 303, 392, 223, 132
வாள்சுறாமீன் - 19, 131, 111
இறால்மீன் - 31, 278, 358, 19, 101, 49, 111, 131, 211, 67
சிறுமீன் - 91, 239

“கடுஞ்சூல் வதிந்த காமர் பேடைக்கு
இருஞ்சேற்று அயிரை தேரிய தெண்கழிப்
பூவுடைக் குட்டந் துழவுந் துறைவன்” (272)

சூலொடு தங்கியிருக்கும் பெண் நீர்க்காக்கைக்கு, ஆண் நீர்க்காக்கை தெளிந்த கழியிடத்தில் அயிரை மீனைத் துழாவும் இத்தகைய துறைக்குத் தலைவன் நம் தலைவன் எனத் தோழி கூறுவது பாடல் அடிகளின் பொருளாகும்.

அயிரை என்ற பெயர் ‘அயிர்’ என்ற சொல்லில் இருந்து வந்திருக்கும் ‘அயிர்’ என்றால் நுண்ணியது என்பது பொருள் (திவாகரம்). எனவே, இம்மீன் நுண்ணியதாக இருப்பதால் அயிரை எனப்படுகின்றது. இம்மீன் ஆறு, குளம், குட்டை, வயல், கழி என நன்னீர் காணப்படும் இடங்களில்

வாழும். இம்மீனை ஆங்கிலத்தில் லோச் (Loach) என்றும், அறிவியலில் கோபிற்றோ (cobito) என்றும் கூறுவர். அயிரைமீனை கொக்கு, நாரை, கடற்காக்கை, காட்டுவாத்து போன்றவை விரும்பி உண்ணும் என அயிரை பெயர்க்காரணத்தை விளக்கவும், அம்மீன் வாழும் இடங்களைச் சுட்டவும் அயிரை மீனின் ஆங்கில, அறிவியல் பெயரை எடுத்துக்காட்டவும், இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

கொழுமீன் என்ற மீன் நெய்த்தலைக்கொழுமீன் எனவும் அழைக்கப்பட்டுள்ளது. இந்த மீனின் தலையில் நெய் இருப்பதாகக் கொண்டு ‘நெய்த்தலை’ என அழைத்தனர். நெய்த்தலை என்பதே மக்கள் வாயில் (tolketymalogy) நெத்திலி (நெய்த்தொலி) என்று வழங்கியது. இம்மீனையும் இம்மீனின் கருவாட்டையும் எளிய மக்கள் விரும்பி உண்ணுவர். இம்மீனின் திமிலைப் பிடித்துத்தான் பரதவர்கள் கொண்டுவருவர். இது கடலிலிருந்து அலைஏறும்போது, ஆற்றுக்குச் செல்லும். இம்மீனை அறிவியலில் Ingraulis Indicus என்று அழைப்பர் எனக் கொழுமீனின் பெயர் மாற்றம், அதன் பயன்பாடு அம்மீனின் அமைப்பு, அது வாழும் இடம், கொழுமீனின் அறிவியல் பெயர் எனக் கொழுமீன் பற்றிய பல கருத்துகளை எடுத்துக்காட்ட 127, 159, 195, 207, 175, 291 ஆகிய பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

‘உடம்பில் எலும்பில்லா மீன் சுறாவாகும். இது மிகவும் வலிமையுடையது. ஆனால் கொடுமை நிறைந்தது. கோட்டுச்சுறா, கடுஞ்சுறா, கடுமுரண் எறிசுறா எனக் கொல்லும்தன்மையுடைய ஆட்கொல்லிச் சுறாவை அழைப்பர். சுறாவை வலைகொண்டும், சாட்டுளிவீசியும் (எறிஈட்டி) தூண்டில்கொண்டும் வேட்டையாடுவர். இது காலையிலும், மாலையிலும் நீர்ப்பரப்பில் உலாவும் தன்மையுடையது. சுறாவிற்கு வாய் அடியில் காணப்படும். நுட்பமான மோப்ப சக்தி இதற்கு உண்டு. இதன் ஈரலில் உள்ள கொழுப்பில் சத்துமிக்க மீன் எண்ணெய் எடுப்பர். மேலும் இதைக் கருவாடாகவும் பயன்படுத்துவர். சுறா 7 முதல் 20 அடி வளரும். ஆனால் திமிங்கலச்சுறா எனும் ஓங்கில்சுறா 70 அடி வளரும் தன்மையுடையது. சுறாமீன் ஆற்றுச்சுறா, பிள்ளைச்சுறா (பால்சுறா),

குண்டன் சுறா, நீலச்சுறா, கூரசுறா என வகை செய்யப்பட்டுள்ளது. திமிங்கலச்சுறா கடலில் மீன்களைப் பிடித்து உண்ணாது; கண்ணுக்குத் தெரியாத நுண்ணியிர்களை விழுங்கி வாழும். இது ஆள்களைக் கொல்லாது' எனச் சுறாமீன் உடலமைப்பு, அது வாழும் இடம், அம்மீனை வேட்டையாட மக்கள் கொண்ட வேட்டைப்பொருள், அதன் பயன்பாடு, சுறாவகை ஆகிய பல கருத்துகளைத் தெரிந்துகொள்ள 27, 45, 67, 78, 199, 207, 215, 303, 392, 223, 132 ஆகிய பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

"கோட்டுமீன் எறிந்த உவகையர் வேட்ட மடிந்து
எமரும் அல்கினர் ஏமார்ந்தனம் என" (49)

கோடுகளை உடைய சுறாமீனினை வேட்டையாடிய மகிழ்வில், வேட்டைக்குச் செல்லாது தம் இல்லத்திலே பரதவர் தங்குவர் என்பது பாடல் அடிகளின் பொருளாகும்.

'கோட்டுமீன் என்பதற்குச் 'சுறா' என்றும், 'வாள்சுறா' என்றும் பொருள்கூறுவர். ஆனால் கோட்டுமீன் சுறா அல்ல, கோட்டுமீன் என்ற சங்கப் பெயர் தற்காலத்தில் கொம்பன்சுறா என அழைக்கப்படுகின்றது. இதன் தலை இருபக்கங்களிலும் கொம்புபோல நீட்டிக்கொண்டு இருக்கும். இதன் தலையில் கண்களும், காதுகளும் காணப்படும். இது ஆறு முதல் பன்னிரண்டு அடிவரை வளரும் தன்மையுடையது. இச்சுறா ஆட்களைக் கொல்லும். இக்கோட்டுமீனினை நெட்டைக்கொம்பன் சுறா, குட்டைக்கொம்பன் சுறா, கட்டைக்கொம்பன் சுறா என மீனவர்கள் அழைப்பர்' எனக் கோட்டுமீன் என்ற மீனைப் பிற மீன்வகையில் இருந்து பிரித்துக்காட்டவும், அதன் உடலமைப்பை எடுத்துக்காட்டவும், இம்மீனின் வகையைத் தெளிவுபடுத்தவும் இப்பாடலின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

'இறால்' மீன் இனத்தைச் சார்ந்தது அன்று, இருப்பினும் இதை மீன் என்று வழங்குவது தமிழ்மரபு. சேயிறால், பெருஞ்சேயிறால், வெள்ளிறால், பச்சிறால் எனப் பலவகைப் பெயர்கள் இறாலிற்கு உண்டு. இறால் கடலிலும், கழியிலும் ஆற்றுத்துறைகளிலும் வாழும் தன்மையுடையது,

நன்னீரில் மட்டும் வாழும் இறாலும் உண்டு. இதை மோட்டிறால் என அழைப்பர். இது பழனப்பொய்கையிலும் நெல்வயலிலும் காணப்படும். இறால் தாழைமரத்தின் அடிமரம் போன்றும், முற்றாத மஞ்சளின் பசியபுறம் போன்றும், பறவையின் அழகுபோன்றும் காணப்படும். இறாலினை கடற்காக்கை, கருங்கால்குருகு, கடல்நண்டு, நாரை போன்ற பறவைகள் உண்ணும். மேலும் இறாலின் கூட்டத்தை 'இறவின்குப்பை' இறவின் கணங்கொள் குப்பை, முடங்குபுறப் பெருங்கிளை என்றும் குறிப்பிடுவர். இறாலை மக்கள் விரும்பி உண்ணுவர்.

இறாலின் பலவகைப் பெயர்களை எடுத்துக்கூறவும், நன்னீர் இறால் பற்றிய செய்திகளை விளக்கவும், இறால் பற்றிய உவமைகளைத் தெளிவுபடுத்தவும், இறாலை உண்ணும் பறவை பற்றிய செய்திகளைப் புலப்படுத்தவும் இறாலின் கூட்ட அமைப்பை அறியவும் 31, 278, 358, 19, 101, 49, 111, 131, 211, 67 ஆகிய பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

சுறாமீன் 'வாள்சுறா' என்றும் 'வாள் வாய்ச்சுறா' என்றும் சங்க நூல்களில் அழைக்கப்படுகின்றது. இச்சுறாவின் வாயில் 'ஈர்வாள்' போன்ற ஓர் உறுப்பு இருந்ததால் வாள்சுறா என இது அழைக்கப்பட்டது. இச்சுறாவில் காணப்படும் வாள்போன்ற உறுப்பின் இருமருங்கிலும் கூரிய முட்கள் காணப்படும். இதன் வாய் ஆறுஅடி வரை வளரும் தன்மையுடையது. வாள்சுறா இவ்வாளால் பக்கவாட்டில் உள்ள மீன்களைத் துண்டாக்கி விழுங்கும் தன்மையுடையது. இதன் உடலில் உள்ள ஈரலில் இருந்து நிறைய எண்ணெய் எடுக்கலாம். வாள்சுறா பிற்காலத்தில் மகரம் எனவும் அழைக்கப்பட்டது. இச்சுறாவின் கோட்டைப் பழங்குடி மக்கள் வணங்குவர்.

வாள்சுறாவின் வேறுபெயர்கள், அதன் அமைப்பு, அச்சுறா வேட்டையாடும் தன்மை, வாள்சுறாவின் பயன்பாடு, அதன் கொம்பை மக்கள் வழிபடும் முறை ஆகிய வாள்சுறா பற்றிய கருத்துகளை எடுத்துக்காட்ட 19, 131, 111 ஆகிய பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

"ஐய சிறுகண் செங்கடைச் சிறுமீன்
மேக்குயர் சினையின் மீமிசைக் குடம்பைத்
தாய்ப்பயிர் பிள்ளை வாய்ப்படச் சொரியும்
கானலம் படப்பை ஆனா வண்மகிழ்ப்" (91)

நாரை மெல்லிதான சிவந்த சிறிய மீன்களைப் பிடித்து, மரத்தின் கிளைமேல் உள்ள கூட்டிலிருந்து கூவியழைக்கும் தன் பிள்ளைகளின் வாயில் படுமாறு கொடுக்கும் என்பது பாடலடிகளின் பொருளாகும். 'சிறுமீன்' என்ற மீன் கடற்கரையிலும், ஆற்றுக்கழிமுகத்திலும் காணப்படும். இது ஒன்றரை அங்குலத்தில் இருந்து மூன்றரை அங்குலம் வரை வளரும். இம்மீன் சிறிய கண்களையும் செம்புள்ளிகளையும் உடைய மீன். இம்மீனை நீரில் வளர்த்தால் கொசுவின் புழுக்களைத் தின்று கொசுத்தொல்லையை நீக்கும். இம்மீனை ஆங்கிலத்தில் Minnow என்று அழைப்பர்' எனச் சிறுமீன் வாழும் இடம், அதன் கண் மற்றும் உடல் அமைப்பு, அதன் நீளம், அம்மீனால் மக்களுக்குக் கிடைக்கும் பயன் ஆகிய கருத்துகளை விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

'மான்ற மாலை மகிழ்ந்த பரதவர்
இனிதுபெறு பெருமீன் எளிதினின் மாறி
அலவன் ஆடிய புலவுமணல் முன்றில்' (239)

இரவும் பகலும் மயங்கும் மாலைக்காலத்தில் பரதவர் கள்குடித்து மகிழ்ந்தவராய், தாம் வருந்தாது இனிதாய்ப் பெற்ற பெரிய மீனை எளிதாக விற்பர் என்பது 239 ஆம் பாடலடிகளின் பொருள். 'பெருமீன் என்றமீன் திமிங்கிலமாகும். இதை யானைமீன், பனைமீன், திமிலம் என்றும் அழைப்பர். இச்சிறப்புமிக்க திமிங்கிலம் கரையில் ஒதுங்கும் இதை 'Beached whale' என்று அழைப்பர்' எனப் பெருமீன் பற்றிய கருத்துகளை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

### 2.1.5 பாலை

செந்தமிழ்ச்செல்வி இதழில் இடம்பெற்றுள்ள 25 சங்க இலக்கிய ஆய்வுக்கட்டுரைகளில், நற்றிணைக்குரிய பாலைத்திணைப் பாடல்களின் எண்ணிக்கை 45 ஆகும்.

## சங்க இலக்கியத்தில் பல்லி

*இக்கட்டுரையில் நற்றிணை 246 ஆம் பாடலின்,*

*“இடூஉ ஊங்கண் இனிய படூஉம்*

*நெடுஞ்சுவர்ப் பல்லியும் பாங்கின் தேற்றம்*

*மனைமர நொச்சி மீமிசை மாச்சினை*

*வினைமாண் இருங்குயில் பயிற்றலும் பயிற்றும்”*

*எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன. தலைவன் பொருள் கருதிப் பிரிந்தனன். இதனால் தலைவி வருந்துகின்றாள். இதை அறிந்த தோழி, தலைவனை நாம் நினைக்கும்போது சுவரில் உள்ள பல்லியும், நொச்சிமரத்தில் உள்ள குயிலும் குரல் எழுப்பவும், கூவவும் செய்கின்றன. எனவே தலைவன் விரைவில் வருவான் எனக் கூறுவது பாடலடிகளின் பொருளாகும். ‘பல்லியின் ஒலியை, அக்கால மக்கள் முதல் இக்காலமக்கள் வரை சகுனம் பார்ப்பதற்காகப் பயன்படுத்தினர். பல்லி சுவரில் தலைகீழாக நடப்பதற்கோ, நிற்பதற்கோ காரணம், பல்லி சுவரில் காலை வைத்தவுடன், சுவருக்கும் கால்விரல்களுக்கும் இடையே உள்ள காற்றை உறிஞ்சி வெளியேற்றிவிடும் பின்னர் வெளிக்காற்று அழுத்தத்தால் (*Atmospheric pressure*) பல்லியின் காலடிகள் ஒட்டிக்கொள்ளும். இதனால் பல்லி கீழே விழுவதில்லை, மேலும் பல்லி சூழ்நிலைக்கேற்ப உடல் நிறத்தையும், உறுப்புக்களின் நிறத்தையும் மாற்றும் தன்மையுடையது’ எனப் பல்லியின் ஒலியை மக்கள் சகுனம் பார்த்தலுக்குப் பயன்படுத்திய முறை, பல்லி சுவரில் தலைகீழாகச் செல்லக் காரணம், அதன் நிறவேறுபாடு போன்ற பல்லி பற்றிய செய்திகளைத் தெரிந்துகொள்ள மேலே இடம்பெற்றுள்ள பாடலின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.*

## சங்க நூல்களில் உகாய்

*இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1980 ஏப்ரல்). உகாய் மரத்தின் வளரிடம், காய், கனி, பூ அமைப்பு, அதன் சுவை, உகாயின் ஆங்கில அறிவியல் பெயர் போன்றவற்றை விளக்குவது இக்கட்டுரையின் நோக்கமாகும். இதில் நற்றிணை 66 ஆம் பாடலின்,*

"மிளகுபெய் தனைய சுவைய புன்காய்
உலறுதலை உகாஅய்ச் சிதர் சிதர்ந்து உண்ட
புலம்புகொள் நெடுஞ்சினை ஏறி, நினைந்துதன்
பொறிகிளர் எருத்தம் வெறிபட மறுகிப்
புன்புறா உயவும் வெந்துகள் இயவின்"

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன. மிளகினை உள்ளே இட்டுவைத்தாற்போன்ற சுவையை உடையது உகாய்மரத்தின் காய். இப்புள்ளியையுடைய காயை வண்டுகள் நெருங்காதவாறு புறா போக்கும். பின்னர் அக்காயை உகாய்மரத்தின் கிளையில் ஏறிப் புறா தின்று வருந்தும் என்பது பாடலடிகளின் பொருளாகும். 'உகாய்மரம்' வறண்ட பகுதிகளிலும், உப்பங்கழிகளிலும், உப்புமிக்க நிலத்திலும் வளரும். இது சாம்பல் நிறப்புறத்துடன் புல்லிய காய்களையுடைய மரமாகும். இம்மரத்தின் பழம் நல்ல சிவப்பாகவும், உருண்டு திரண்டும் காணப்படும். மேலும் இது மிளகுபோலச் சுவையுடையதாகவும் காணப்படும். இக்கனியைக் கொண்டலாத்திப் பறவைகள் தின்னும். இதன் கனி காற்றில் உகுந்து விழுந்துவிடும் தன்மையுடையதால் உகாய் எனப்பட்டது. இந்த மரத்தை ஆங்கிலத்தில் 'The Mustard tree' என்றும், அறிவியலில் Salvadora persica என்றும் அழைப்பர்.' உகாய் மரம் வளரும் சூழல் அம்மரத்தின் நிறம், சுவை, உகாய் மரக்கனியை உண்ணும் பறவைகள், உகாய்மரத்தின் பெயர்க்காரணம், அதன் ஆங்கில, அறிவியல் பெயர்கள் என உகாய்மரத்தின் சிறப்புகளை எடுத்து விளக்குவதற்காக இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க நூல்களில் சிள்வீடு

இக்கட்டுரையில் நற்றிணை **252** ஆம் பாடலின்,

"உலவை ஓமை ஒல்குநிலை ஒடுங்கிச்
சிள்வீடு கறங்குஞ் சேய்நாட்டு அத்தம்"

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன. உலர்ந்த கிளையையுடைய ஓமை மரத்தில் மறைந்து தங்கிச் சிள்வீடு என்னும் பூச்சி ஒலிக்கும் என்பது பாடல் அடிகளின் பொருளாகும். 'சங்க நூல்களில் அரிதாகக் கூறப்பட்டுள்ள ஒரு பூச்சி சிள்வீடாகும். இது பூச்சியினத்தில் சிறப்பாகப் பாடும்

தன்மையுடையது. இது பகற்காலத்தில் அதுவும் கடும் வெயில்சுடும் வேளையில் கூட்டமாக உரத்த குரலில் ஓசையிடும். இப்பூச்சி சிள்ளென்று ஓசையிட்டு விட்டுவிட்டு ஒலிப்பதால் 'சிள்வீடு' என அழைக்கப்படுகின்றது. இது தமிழ்நாட்டிலும் கேரளாவிலும் உள்ள காடுகளில் காணப்படுகின்றது. சிள்வீடு வறண்ட மரத்தில் பொருந்தி ஓசையிடும் தன்மையுடையது' எனச் சிள்வீடு பாடும் தன்மை, பாடும் காலம், அதன் பெயர்க்காரணம், அது வாழும் இடம் போன்றவற்றை எடுத்துக்காட்டுவதற்காக இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க நூல்களில் ஓமை

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1984 மே). 'ஓமை' மரத்தின் வளர்நிலை, அதன் பயன் ஆகியவற்றை விளக்குவது இக்கட்டுரையின் நோக்கம். இதில் நற்றிணை 84, 137, 198, 252, 279, 318, 107 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

'ஓமைமரம் நெடிய தன்மையுடையது, இத்தன்மையை நீடிய ஓமை, ஓங்குநிலை ஓமை, நெடுஞ்சினை ஓமை என்றும் கூறுவர். இது 100 அடி உயரம் வரை வளரும் தன்மையுடையது. இம்மரம் புலி காணப்படும் சூழ்நிலையான அடர்ந்த காடுகளில் காணப்படும். இது கருஞ்சிவப்பாகவும், இதில் ஒருவகைத் தைலம் இருப்பதாகவும் வனத்துறை அறிஞர்கள் கூறுவர். இம்மரம் யானைகளுக்கு உணவாகப் பயன்படும். ஓமை மரத்தின் அடிமரத்துப் பட்டை முதலையின் தோல் போன்றும் கரியதாகவும் காணப்படும்.'

ஓமையின் தன்மை, அதன் உயரம், அதன் நிறம் ஓமையின் அடிமரப் பட்டை அமைப்பு, ஓமைமரம் காணப்படும் காடு ஆகிய பல கருத்துகளை எடுத்துக்காட்ட இப்பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க நூல்களில் ஆலம்

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1983 செப்டம்பர்). சங்க நூல்களில் காணப்படும் மரங்களில் மிகப்பெரிய மரம் ஆலமரமாகும். இந்த மரம் விழுதுகளை விட்டு அகலமாக வளரும்

தன்மையுடையது. இது வெகுகாலம் வாழ்வதால் 'தொன்முதாலம்' என்றும் அழைப்பர் என ஆலமரம் சார்ந்த கருத்துகளை எடுத்து விளக்குவது இக்கட்டுரையின் நோக்கமாகும். இதில் நற்றிணை *343, 76* ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

"தாதெரு மறுகின் ஆபுறந் தீண்டும்
நெடுவீழ்இட்ட கடவுள் ஆலத்து
உகுபலி அருந்திய தொகுவிரற் காக்கை"

நெடிய விழுதுகளையுடைய ஆலமரத்தில் உறையும் கடவுளுக்குப் படைத்த பலியுணவைச் சேர்ந்த விரல்களையுடைய காக்கைகள் உண்ணும் என்பது பாடலடிகளின் பொருளாகும். ஆலமரத்தின் நடுமரம் சிதைந்தபோதும், அதன் விழுதுகள் மரத்தைத்தாங்கும் என்ற கருத்தை எடுத்துரைக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

உடன்போக்கு மேற்கொண்ட நிலையில் தலைவன் தலைவியிடம் உன்அடிகள் வருந்தாது இருத்தல் பொருட்டு, ஆலமரத்தின் நிழலிலே தங்கி இளைப்பாறி அஞ்சாது செல்வோம் எனக்கூறுவது *76* ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். விழுதுடன் கூடிய ஆலமரம் கிளைகளைப் பரப்பி வளர்வதால் அதன் நிழலில் போர்ப்படைகளும் உடன்போக்குச் செல்பவர்களும் தங்கிச்செல்வது வழக்கம் என ஆலமரத்தின் சிறப்பையும் அம்மரம் மக்களுக்குப் பயன்படும் தன்மையையும் எடுத்து விளக்குவதற்காக இப்பாடலை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

### சங்க நூல்களில் ஓந்தி

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் *(1981* செப்டம்பர்). சங்க நூல்களில் கூறப்பட்டுள்ள ஊர்வனவற்றில் ஓந்தி எனப்படும் ஓணானும் ஒன்று. இந்த ஓந்தியைப் பற்றிய செய்திகளை விளக்குவது இக்கட்டுரையின் நோக்கமாகும். இதில் நற்றிணை *186, 92* ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

மிகுந்த வறட்சியையுடைய சுரத்தில் வேனிற்காலங்களில் நிறம் வேறுபாடு செய்யும் ஓந்திப்போத்து யாமரத்தின் மீது ஏற இயலாது வருந்தும்.

ஆனால் அவ்வழியில் செல்லும், பாணர் வருத்தம் தீர யாழ் இசைப்பர். அவ்விசையைக்கேட்ட ஓந்தி யாமரத்தில் ஏறும் என்பது 186 ஆம் பாடலடிகளின் பொருளாகும்.

வருந்திய நடையை உடைய ஓந்தியாகிய வழலை தன் துணையோடு இளமடல்போல வாட்டம் அடையும். அவ்விடத்தில் உள்ள வேட்டுவச் சீறூரை அடுத்த கிணற்றினுள் ஆநிரைகளுக்காக எடுத்துவைக்கப்பட்ட நீர்ப்பந்தல் இருக்கும் என்பது 92 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும்.

‘ஓந்தி’ என்பது ஓதி என இடைக்குறைந்து வந்தது என நச்சினார்க்கினியரும், மயிலைநாதரும், பின்னத்தூராரும் கூறுவர். ஓந்திக்குக் கழுத்திலும் முதுகிலும் செதில்கள் உண்டு. ஓந்திக்குக் கறுத்த மேல்தாடியும், அதில் மஞ்சள் முதலிய நிறங்களும் இருக்கும். ஓந்தியின் நிறம் கறும்பழுப்பு. இதன் உடலில் கோடுகள் காணப்படும். ஓந்தியின் நிறம் அடிக்கடி மாறும் தன்மையுடையது. நற்றிணையில் “வேனில் ஓதிப்பாடுநடை வழலை” (92), என்ற பாடலுக்கு ஓந்தியாகிய வழலை தன்துணையோடு செல்லும் எனப் பின்னத்தூரார் உரைகூறுவார். ஆனால் வேனில் ஓதி வேறு, பாடுநடை வழலைவேறு, வேனில்ஓதி ஓந்தியைக் குறிக்கும், பாடுநடைவழலை உரத்த ஒலியை எழுப்பும் நடையை உடைய வழலைப்பாம்புவைக் குறிக்கும். இது இக்காலத்தில் சுருட்டைப்பாம்பு, சுருட்டை விரியன் என அழைக்கப்படுகின்றது.

ஓந்தியை இக்காலத்தில் ஓணான் என்றும், உடக்கான் என்றும் கொங்குநாட்டில் அழைப்பர். இதை ஆங்கிலத்தில் Blood-Sucker என்றும், அறிவியலில் Colotes versicolour என்றும் கூறுவர்.

ஓந்தியின் பெயர் மாற்றம் குறித்தும், அதன் உடல் அமைப்பு நிறமாற்றம் பற்றியும், ஓந்தி பற்றிப் பின்னத்தூரார் உரையில் காணப்படும் வேறுபாடு குறித்தும், ஓந்தியைக் கொங்குநாட்டு மக்கள் அழைக்கும் பெயர் குறித்தும், ஓந்தியின் ஆங்கில, அறிவியல் பெயர்கள் குறித்தும் தெளிவுபடுத்துவதற்காக மேலே இடம்பெற்றுள்ள பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

**சங்க நூல்களில் மூதாய்**

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1981 நவம்பர்). சங்க நூல்களில் காணப்படும் 'மூதாய்' என்ற பூச்சியைப் பற்றி விளக்குவது இக்கட்டுரையின் நோக்கம். இதில் நற்றிணை 362 ஆம் பாடலின்,

"தலைநாட் கெதிரிய தண்பெயல் எழிலி
அணிமிகு கானத்து அகன்புறம் பரந்த
கடுஞ்செம் மூதாய் கண்டுங் கொண்டும்
நீவிளை ஆடுக சிறிதே யானே"




எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன.

உடன்போக்கை மேற்கொண்ட தலைவி வருந்துவதை அறிந்த தலைவன், குளிர்ச்சியையுடைய மழைபொழியும் மேகம், முதல் மழையைப் பெய்ததால் இக்காட்டில் தம்பலப்பூச்சிகள் காணப்படுகின்றன. அவற்றைப் பிடித்து விளையாடு எனக் கூறுவது பாடல் அடிகளின் பொருளாகும்.

'தமிழ்நாட்டுப் பூச்சிகளில் மிகவும் அழகான பூச்சிகளில் ஒன்று 'மூதாய்.' இது மழைக்காலம் துவங்கியவுடன் தோன்றும். வெயில்காலத்தில் மறைந்துவிடும். இப்பூச்சி கருஞ்சிவப்பான அழகிய நிறமுடையது. இப்பூச்சி புல்வெளியிலும், முல்லை நிலத்திலும் தோன்றும் தன்மையுடையது.' 'மூதாய்ப் பூச்சி' தோன்றும் காலம், அதன் நிறம், இப்பூச்சி காணப்படும் இடம் ஆகிய பல கருத்துகளை தெளிவுபடுத்துவதற்காக இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

**சங்க நூல்களில் களா**

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1987 மார்ச்). சங்க நூல்களில் இடம்பெறும் 'களா' என்ற செடியைப் பற்றி விளக்குவது இக்கட்டுரையின் நோக்கம். இதில் நற்றிணை 256 ஆம் பாடலின்,

"இந்நிலை தவிர்ந்தனம் செலவே வைந்நுதிக்
களவுடன் கமழப் பிடவுத்தளை அவிழக்"

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன. கூரிய நுனியையுடைய களாவின்

பூக்கள் மலர்ந்து மணம் செய்தும், பிடவமலர்கள் பிணிப்பு அவிழ்ந்து மலர்ந்தும் காணப்படும் என்பது பாடலடிகளின் பொருளாகும்.

'களா'க்கனி பளபளவென்று கருமையாகக் காணப்படும். இக்கனியின் கருமையைச் சீறியாழ்க்கோட்டுக்கும், பேரியாழ்க் கோட்டுக்கும் காட்டுப்பன்றிக்கும் ஒப்பிடுவர். இக்கனி இனிப்பும், புளிப்பும் கலந்த சுவையையுடையது. களாவை Carissa carandar என்று அழைப்பர்' எனக் களாவின் நிறம், களாக்கனிக்குப் பயன்பட்ட உவமை, களாவின் சுவை, அதன் அறிவியல் பெயர் போன்றவற்றை எடுத்துவிளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க நூல்களில் வள்ளியும் கவலையும்

இக்கட்டுரையில் நற்றிணை 269 ஆம் பாடலின்,

"பெருமர வள்ளியிற் பிணிக்கும் என்னார்"

எனும் பாடலடி இடம்பெற்றுள்ளது. தலைவியின் கண்கள் வள்ளிக்கொடியினால் பிணித்துக்கட்டியது போல நம்மைக் கட்டிப்போடும் என்று கருதாது குன்று கடந்து செல்லக்கூடியவராய்த் தலைவன் இருப்பான் என்று தோழி கூறுவது பாடலின் பொருள்.

வள்ளிக்கொடி கிழங்கையுடையதாகும். இது மரத்தைத் தழுவி வளரும் தன்மையுடையது. வள்ளியின் கிழங்கை எடுத்தால் வள்ளிக்கொடி இறந்துவிடும். இது இக்காலத்தில் ஆள்வள்ளிக்கிழங்கு என அழைக்கப்படுகின்றது. இக்கொடியை வேலியில் பயிரிடுவர். இதன் இலை சிறியதாக இருக்கும். வள்ளிக்கிழங்கை வேகவைத்தும் பொரித்தும் உண்பர். வள்ளிக்கிழங்கு சங்ககாலப் பழங்குடி மக்களின் சிறந்த உணவாகும். சங்க இலக்கியத்தில் கூறப்பட்ட வள்ளி Dioscorea pentaphylla ஆகும். இது இப்பொழுது சிறுகொடி, வள்ளிக்கொடி, காட்டுவள்ளி என்று அழைக்கப்படுகிறது. வள்ளியின் வளர்தன்மை, அதன் கிழங்கு அமைப்பு, வள்ளி தற்காலத்தில் அழைக்கப்பெறும் பெயர் அமைப்புமுறை, இதன் பயன்பாடு ஆகிய வள்ளிக்கொடி பற்றிய பல செய்திகளை எடுத்துக்காட்ட மேலே இடம்பெற்றுள்ள பாடலின் அடியை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் அன்னம்

இக்கட்டுரையில் நற்றிணை 73 ஆம் பாடலின்,

"செல்ப என்ப தாமே செவ்வரி

மயிர்நிரைத் தன்ன வார்கோல் வாங்குகதிர்ச்

செந்நெல்அம் செறுவின் அன்னந் துஞ்சும்

பூக்கெழு படப்பைச் சாய்க்காட்டு அன்னஎன்"

எனும் பாடலடிகள் இடம்பெற்றுள்ளன. தலைவன் என்னைத் தனியே விட்டுச் சென்றால், செந்நெல் வயல்களில் அன்னப்பறவை துஞ்சாமல் நிற்கும் திருவாய்க் கானத்தைப் போன்று என் அழகிய நெற்றியில் பசலை பாயும் எனத் தலைவி கூறுவது பாடலடிகளின் பொருளாகும்.

தமிழ்நாட்டுக் கடற்கரைக் கழியில் காணப்படும் அன்னம், 'கழியன்' என அழைக்கப்படும் தாராவினப் பறவையாகும். இத்தாராவினப் பறவைகளை மார்கழியன், செங்கழியன், குறுங்கழியன், வெள்ளைக்கழியன் எனவும் அழைப்பர். அன்னத்திற்குக் குறுகிய கால்கள் உண்டு. இக்கால்களில் உள்ள விரல்களிடையே மடிப்புடைய சவ்வுத்தோல் உண்டு. அன்னம் கூட்டமாக 'V' வரிசையில் விரைவாக வானில் பறக்கும் தன்மையுடையது என 'அன்னம்' என்ற பறவையை இனம் காணவும் அதன் கால்அமைப்பு, அது பறக்கும் தன்மை முதலிய பல கருத்துகளை எடுத்துக்காட்டவும் இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் முயல்

இக்கட்டுரையில் நற்றிணை 252 ஆம் பாடலின்,

"மலர்பிணைத் தன்ன மாயிதழ் மழைக்கண்

முயல்வேட்டு எழுந்த முடுகுவிசைக் கதநாய்"

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன. தலைவி நீலமலரைப் பிணைத்து வைத்த கரிய இமையும், குளிர்ந்த கண்ணும், முயல்வேட்டை கொள்ளும் சினமுடைய நாயின் நல்ல நாவைப் போன்ற அடிகளையும் உடையவள் என்பது பாடலடிகளின் பொருளாகும். சங்ககாலத்தில் காட்டுமுயலை மக்கள் விரும்பி உண்டனர். இம்முயலை நாய்கொண்டும், அம்பெய்தும் வலையில் பிடித்தும், வளைதடி எறிந்தும் வேட்டையாடினர் எனச் சங்ககால

மக்கள் முயலை வேட்டையாடிய முறையினை எடுத்துக்காட்டுவதற்காக மேலே இடம்பெற்றுள்ள பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் புலி

இக்கட்டுரையில் நற்றிணை 333, 29, 2, 148, 391 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன. பரற்கற்கள் நிரம்பிக் காணப்படும் பள்ளத்தில் மிகக் குறைந்த அளவு நீர் ஊறும். இந்நீரைப் பொலிவுடைய நெற்றியுடன் விளங்கும் யானையோடு புலி போர்செய்து உண்ணும் என்பது 333 ஆம் பாடலடிகளின் பொருளாகும். புலி தனக்கு உணவாகும் விலங்குகள் நீரைத்தேடிச் செல்லும்போது பின்தொடர்ந்து பதுங்கித் தாக்கும் என்று புலியின் வேட்டையாடும் தன்மையினை எடுத்துக்காட்ட இப்பாடலடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

குட்டிகளை ஈன்று காட்டில் காவல்செய்யும் பெண் புலியின் பசியைப்போக்க, மாலைப்பொழுதில் வழியினிடையில் செல்வோரைக் கொல்லும் பொருட்டு ஆண்புலி நிற்கும் என்பது 29 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். ஈச்சமரங்கள் தழைத்து இருக்கின்ற காட்டுவழியில் செல்லும் மக்களின் தலையைப் புலிக்குட்டி உண்டதால், அதன் வாயில் குருதி படிந்தும், தலையில் சிவப்புக்கறை படிந்தும் காணப்படும் என்பது 2 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். புலி காட்டு விலங்குகளை வேட்டையாடுவதுபோல மனிதர்களையும் வேட்டையாடி உண்ணும் தன்மையுடையது என்ற கருத்தை எடுத்துக்காட்ட மேலே இடம்பெற்றுள்ள பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார். புலி காட்டுவிலங்குகளை வேட்டையாடுவதுபோல மனிதர்களையும் வேட்டையாடி உண்ணும் தன்மையுடையது என்ற கருத்தை எடுத்துக்காட்ட மேலே இடம்பெற்றுள்ள பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

“கல்லளைச் செறிந்த வள்ளுகிர்ப் பிணவின்
இன்புனிற் றிடும்பை தீரச் சினஞ்சிறந்து” (148)

மலைக்குகையில் பெரிய நகமுடைய பெண்புலி குட்டிகளை ஈன்றது. இதன் காரணமாகப் பெண்புலிக்கு உண்டான நோயையும், பசியையும் தீர்க்க ஆண்புலி ஆண்யானையினை வேட்டையாடும் என்பது பாடலடிகளின்

பொருளாகும். புலி புதர்நிறைந்த குகையில் மறைவான இடத்தில் குட்டிபோடும். புலிகள் இரண்டு அல்லது மூன்று குட்டிகளை ஈனும் தன்மையுடையது என்ற கருத்துகளை எடுத்து விளக்க மேலே இடம்பெற்றுள்ள பாடலின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

"புலிப்பொறி அன்ன புள்ளியம் பொதும்பின்" (391)

புலியின் மேனியில் படர்ந்த புள்ளியாக நிழல் விழும் மரச்செறிவில் உள்ள கொடியை எருமை மேயும் என்பது பாடல் அடிகளின் பொருளாகும். புலியின் உடம்பில் வரிகள் காணப்படும். இது வாள்வரி என்றும், கொடுவரி என்றும் அழைக்கப்படுகின்றது என விளக்க இப்பாடல் அடியை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் காக்கை

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1968 மார்ச்). சங்க இலக்கியங்களில் காணப்படும் காக்கை வகைகள், அதன் உருவ நிற அமைப்பு எனக் காக்கை பற்றிய பல செய்திகளை எடுத்து விளக்குவது இக்கட்டுரையின் நோக்கமாகும். இதில் நற்றிணை 281, 343 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

வெற்றியை உடைய சோழரது கழார் என்னும் ஊரில் சோற்றோடு கலந்த ஊன் துண்டங்களைக் கொண்ட பலிச்சோற்றைப் பெற காக்கை நெடிய மரக்கிளையில் காத்திருக்கும் என்பது 281 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். விழுதுகளையுடைய கடவுளுறையும் ஆலமரத்தில், கடவுளுக்குப் படைத்து வைக்கப்படும் பலி உணவை உண்ணும் காக்கைகள் துன்பம் செய்யும் மாலைப்பொழுதில் தம் இனம் சேரும் என்பது 343 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். சங்கப்பாடல்களில் காக்கை பலியருந்துவதை எடுத்துக்காட்ட மேலே இடம்பெற்றுள்ள பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் நரி

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1966-67, டிசம்பர்). சங்க இலக்கியத்தில் குறுநரி, கணநரி என இருவகை நரிகள்

காணப்படுகின்றன. இந்த நரிகளின் குணம், வேட்டையாடும் தன்மை, உணவுமுறை, வாழும் இடம் என நரி பற்றிய பல செய்திகளை எடுத்து விளக்குவது கட்டுரையின் நோக்கம். இதில் நற்றிணையின் 352 ஆம் பாடலின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

மறவர்களால் கொல்லப்பட்ட பிணங்களைத் தின்னவரும் சேவல் கழுகை விரட்டிய நரி, பிணங்களைத் தின்னும். இதனால் உண்டான நீர்வேட்கையைத் தணிக்க இயலாது வருந்தியும், வெயிலுக்கு ஒதுங்கியிருக்க நிழலில்லாமல் வருத்தமுற்றும் அலையும் கடுமையான சுரம் என்பது பாடலடிகளின் பொருளாகும். கணநரி காடுகளிலும், பாலைவனங்களிலும், தோட்டங்களிலும், வீட்டருகிலும் கூடி வாழும். இந்நரி இரவுக்காலத்தில் காடுகளில் அலையும். இதனைப் பகலில் காண இயலாது. இது ஊலையிடும் தன்மை உடையது. இந்நரி பிணங்களையும், கழிவுகளையும் விரும்பி உண்ணும் என நரியின் வாழிடம், நடமாடும் காலம், ஊளையிடும் தன்மை, அதன் உணவுமுறை போன்ற பல செய்திகளை எடுத்துக்காட்டுவதற்காக மேலே இடம்பெற்றுள்ள பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் பாம்பு

இக்கட்டுரையில், நற்றிணை 325, 366, 92, 14 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

“அரவாழ் புற்றம் ஒழிய ஒய்யென
முரவாய் வள்ளுகிர் இடப்ப வாங்கும்” (325)

பாம்பு வாழும் புற்றை ஆண்கரடியானது தன் நகங்களால் பறித்து உள்ளமைந்த புற்றாஞ்சோற்றை உறிஞ்சி இழுக்கும் என்பது பாடலின் பொருளாகும். நல்ல பாம்பு வாழும் புற்றை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகள் ஆசிரியரால் கையாளப்பட்டுள்ளது.

“அரவுக்கிளர்ந் தன்ன விரவுறு பல்காழ்
வீடுறு நுண்துகில் ஊடுவந்து இமைக்கும்” (366)

பாம்பு படம்எடுத்தாற்போன்ற பலவாகிய மணிகள் கோர்க்கப்பெற்ற மேகலையும், நுண்ணிய துகில் ஒதுங்குவதால் வெளித்தோன்றும் திருந்திய

இழைகள் அணிந்த அல்குலையும் உடைய இளமடந்தையர் என்பது பாடல் அடிகளின் பொருளாகும். பாம்பு வறட்சிக்காலத்தில் தோலுரிக்கும். இதன் தோல் மூங்கில் உள்ளிருக்கும் 'தொலி' போலவும், நீர்வீழ்ச்சிபோலவும், கடும் வெயிலின்போது நிலத்தின்மேல் ஆவிபரப்பது போலவும் இருக்கும் எனப் பாம்பு தோலுரிக்கும் காலத்தையும், தோளின் மென்மையையும் எடுத்துக்காட்ட மேலே இடம்பெற்றுள்ள பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

ஓந்தியாகிய 'வழலை' தன் துணையோடு இளமடல் போல வாட்டம் அடையும் இடத்தில் உள்ள, வேட்டுவச்சீறூரை அடுத்த கிணற்றினுள் ஆநிரைகளுக்காக அமைக்கப்பட்ட நீர்ப்பந்தல் இருக்கும் என்பது 92 ஆம் பாடலடிகளின் பொருளாகும். வழலை என்ற பாம்பு வேனிற் காலத்தில் குன்றில் வறண்ட மரத்தில் காணப்படும். இது சுருட்டை விரியன் எனவும் அழைக்கப்பெறும். இப்பாம்பு பல்லி, ஓணான்களைப் பிடித்து உண்ணும். 'வழலை' என்ற பெயர் தற்காலத்தில் நஞ்சற்ற வெள்ளிக்கோல் விரியன் என்ற பாம்பின் பெயராக வழங்கப்படுகின்றது. ஓலைப்பாம்பைச் செவ்வழலை என்றும் அழலைப்பாம்பை கருவழலை என்றும் அழைப்பர். கருவழலை என்பதற்கு ராசமாநாகம் என்றும் பொருள் கூறுவர் என வழலைப்பாம்பு காணப்படும் இடம், அதன் பிறபெயர்கள், அது உண்ணும் உணவு என வழலைப்பாம்பு பற்றிய பல கருத்துகளை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

> "ஞால்வாய்க் களிறு பாந்தள் பட்டெனத்
> துஞ்சாத் துயரத்து அஞ்சுபிடிப் பூசல்
> நெடுவரை விடரகத்தியம்பும்" (14)

ஆண்யானை பெரிய பாம்பின் வாய்ப்பட்டது. அதனால் அடங்காத துயரத்தோடு அச்சம் கொண்ட பெண்யானை பேரொலி உண்டாகப் பிளிறும் என்பது பாடல் அடிகளின் பொருளாகும். மலைப்பாம்பை மாசுணம், பாந்தள் எனச் சங்க இலக்கியத்தில் அழைப்பர் என விளக்கவும், மலைப்பாம்பு பற்றிய செய்திகளை எடுத்துக்கூறவும் இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் இரம் என்ற மரம்

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1974 ஜுலை). ‘இரம்’ என்ற மரத்தின் காய் அமைப்பையும், அதனை மக்கள் பயன்படுத்திய முறையையும் தெறுழ், பெருவாய், ஏழில் போன்ற செடிகளின் சிறப்பையும், வளர்நிலையையும் விளக்குவது இக்கட்டுரையின் நோக்கமாகும். இதில் நற்றிணை 302 ஆம் பாடலின்,

“வருமழைக் கெதிரிய மணிநிற இரும்புதல்
நரைநிறம் படுத்த நல்லிணர்த் தெறுழ்வீ
தாஅந் தேரலர் கொல்லோ சேய்நாட்டுக்”

பெரிதாகப் பெய்யும் மழையை நோக்கிப் பூத்திருக்கின்ற எறுழ மலர்கள் நீலமணிபோன்ற நிறமுடையவை. இவை மழைக்காலம் நீங்கியதால் இயல்பான நீலநிறப் பூக்கள், நீலநிறத்திலிருந்து வெண்மை நிறமாக மாறும் என்பது பாடலடிகளின் பொருளாகும். தெறுழ் என்ற கொடி மழைக்காலத்தில் பூக்கும் தன்மையுடையது. இதன் பூ யானையின் முகத்தில் காணப்படும் சிவந்த புள்ளியைப் போலக் காணப்படும். இதைத் தெருளன்கொடி என்றும் அழைப்பர். ‘தெறுழ்’ கொடி பூக்கும் காலம், அதன் நிறம், அதன் வேறுபெயர்கள் எனத் தெறுழ்கொடியினைப் பற்றிய கருத்துகளை எடுத்துக்காட்ட மேலே இடம்பெற்றுள்ள பாடலடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க காலத்தில் காசு

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1992 மார்ச்). சங்ககாலத்தில் சங்க மக்களால் பயன்படுத்தப்பட்ட காசுகள் சில மரத்தின் பழங்களுக்கும், பூக்களுக்கும் ஒப்பிட்டுக் கூறப்பட்டுள்ளன. இதைக் கொண்டு பழங்கால மக்கள் பயன்படுத்திய காசுகளின் வடிவமைப்பை விளக்குவது இக்கட்டுரையின் நோக்கம். இதில் நற்றிணை 274 ஆம் பாடலின்,

“உழைமான் அம்பிணை தீண்டலின் இழைமகள்
பொன்செய் காசின் ஒண்பழந் தாஅங்
குமிழ்தலை மயங்கிய குறும்பல் அத்தம்”

உழைமானின் அழகிய பிணை உராய்வதால், அழகிய அணிகள் புனைந்த பெண், தன்னுடைய கலன்களை விரவியிருத்தியது போல ஒளியுடன் கூடிய பழங்களைக் குமிழமரம் உதிர்க்கும் என்பது பாடல் அடிகளின் பொருளாகும். குமிழம்பழம் உருண்டையானது; பொன்னிறமுடையது. இப்பழம் போல அக்காலத்தில் காசுகள் காணப்பட்டன என அக்கால மக்கள் பயன்படுத்திய காசின் அமைப்பை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

**சங்க இலக்கியத்தில் மயில்**

இக்கட்டுரையில் நற்றிணை 305, 262, 264 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

"மயிலடி அன்ன மாக்குரல் நொச்சியும்" (305)

மயிலின் அடிபோன்ற நொச்சிஇலை என்பது பாடலடியின் பொருளாகும். மயிலின் காலில் காணப்படும் ஐந்து வகையான விரல் அமைப்புகளை எடுத்துக்காட்ட மேலே இடம்பெற்றுள்ள பாடலடியினை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

"தண்புனக் கருவிளைக் கண்போன் மாமலர்
ஆடுமயில் பீலியின் வாடையொடு துயல்வர" (262)

கருவிளையின் கண்போன்று மலரும் கரியமலர் வாடைக்காற்று வீசுவதால் ஆடுகின்ற மயிலின் தோகை அசைவதுபோல அசைந்து விளங்கும் என்பது பாடலடிகளின் பொருளாகும். மயில் தோகையின் அழகினை எடுத்துக்காட்டுவதற்காக மேலே இடம்பெற்றுள்ள பாடலடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

மேகம் மழையைப் பொழியும் பொழுதில் நீலமணிபோன்ற கழுத்தினையும், அழகுற விளங்கும் தோகையையும் உடைய மயில் ஆடும். அம்மயிலின் தோகையைப் போன்ற கூந்தலை உடையவள் தலைவி என்பது 264 ஆம் பாடலடிகளின் பொருளாகும். மயில் தோகையை விரித்து ஆடுவதையும், குவித்துச் செல்வதையும் எடுத்துக்காட்ட மேலே இடம்பெற்றுள்ள பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

### சங்க நூல்களில் கூதளமும், குளவியும், குல்லையும்

*இக்கட்டுரையில் நற்றிணை 346 ஆம் பாடலின்,*

*"பெருந்தண் கொல்லிச் சிறுபசுங் குளவிக்*

*கடிபதங் கமழுங் கூந்தல்"*

*குளிர்ச்சியுடைய கொல்லி மலையில் உள்ள, சிறிய பசுமையான மலையில் காணப்படும் மல்லிகையைச் சூடுவதால் மணம் மிகுந்த கூந்தலை உடையவள் தலைவி என்பது பாடலடிகளின் பொருளாகும். கூதளச்செடியில் காணப்படும் பூக்களின் மணத்தை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.*

### சங்க இலக்கியத்தில் மணிகள்

*இக்கட்டுரையில் நற்றிணை 3, 110 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.*

*"கட்டளை அன்ன வட்டரங் கிழைத்துக்*

*கல்லாச் சிறாஅர் நெல்லிவட் டாடும்" (3)*

*வேப்பமர நிழலில், கல்லாச்சிறுவர்கள் பொன்னை உரைத்து மாற்றுப்பார்க்கும் கல்லைப் போன்ற ஆடுகளத்தைக் கீறிக்கொண்டு நெல்லிக்காய்களை வட்டாகக் கொண்டு ஆடுவர் என்பது பாடல் அடிகளின் பொருளாகும். கட்டளைக்கல் மிகக் கருமையாகக் காணப்படும். இது விலைகுறைந்த மணிக்கல்லாகும். பொன்னின் மாற்றத்தை உணர இக்கல் பெரிதும் பயன்படுகின்றது. தமிழர்களாலும், கிரேக்கர்களாலும் இது பயன்படுத்தப்பெற்றுள்ளது எனக் கட்டளைக்கல்லின் நிறம், அதன் பயன்பாடு, அதைப் பயன்படுத்திய மக்கள் ஆகிய செய்திகளை எடுத்துக்காட்ட இப்பாடலை ஆசிரியர் கையாண்டுள்ளார்.*

*"...தெண்ணீர்*

*முத்தரிப் பொன்சிலம்பு ஒலிப்பத் தத்துற்று" (110)*

*தெளிந்த நீரின் முகிழ்ந்த முத்துக்கள் பரலாக இடப்பட்ட பொற்சிலம்பு ஒலிக்குமாறு, தாவியோடும் தலைவி என்பது பாடல் அடிகளின் பொருளாகும். அக்கால மக்கள் முத்தைச் சிலம்பில் பரலாக வைத்துப் பயன்படுத்தினர் என்ற கருத்தை எடுத்துக்காட்டுவதற்காக மேலே இடம்பெற்றுள்ள பாடல் அடிகளை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.*

## சங்க இலக்கியத்தில் ஆடை, அணிகலன்கள்

*இக்கட்டுரையில் நற்றிணை 43, 366 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.*

*"துகில் விரித்தன்ன வெயிலவிர் உருப்பின்*

*என்றூழ் நீடிய குன்றத்துக் கவாஅன்" (43)*

*வெள்ளிய ஆடை விரித்தாற் போன்ற வெயில் விளங்கிய வெப்பம் மிக்க கோடை நீரிய மலைப்பக்கம் என்பது பாடல் அடிகளின் பொருளாகும்.*

*"அரவுக்கிளர்ந் தன்ன விரவுறு பல்காழ்*

*வீடுறு நுண்துகில் ஊடுவந்து இமைக்கும்" (366)*

*பாம்பு படம் எடுத்தாற் போன்ற பலவாகிய மணிகள் கோக்கப் பெற்ற மேகலையையும், நுண்ணிய துகில் ஒதுங்குவதால் வெளித்தோன்றும் திருந்திய இழைகளை அணிந்த அல்குலையும் உடைய தலைவி என்பது பாடலடிகளின் பொருளாகும். துகில் ஆடையின் மென்மையையும், சிறப்பையும் எடுத்துக்கூறுவதற்காக மேலே இடம்பெற்றுள்ள பாடல்களை ஆசிரியர் கையாண்டுள்ளார்.*

## நற்றிணை

*இக்கட்டுரை 'பொற்கோ' என்பவரால் எழுதப்பெற்றதாகும் (2007 அக்டோபர்). நற்றிணை 110 ஆம் பாடலுக்கு உரையும் விளக்கமும் எடுத்துக்கூறுவது இக்கட்டுரையின் நோக்கம். இதில் நற்றிணை 110 ஆம் பாடல் இடம்பெற்றுள்ளது. தலைவியின் நிலையை எண்ணி, தாய் வியப்படைவதும் வருந்துவதும் பாடலின் கருத்தாகும். இப்பாடலுக்கு உரையும் விளக்கமும் எழுதுவதற்காக மேலே இடம்பெற்றுள்ள பாடலை ஆசிரியர் கையாண்டுள்ளார்.*

## சங்க இலக்கியங்கள் காட்டும் யாழ்

*மார்கரெட் பாஸ்டின் என்பவரால் எழுதப்பெற்ற இக்கட்டுரையில் நற்றிணை 189 ஆம் பாடலின்,*

*"தெறலருங் கடவுண் முன்னர்ச் சீறியாழ்"*

*எனும் அடி இடம்பெற்றுள்ளது. தெய்வத்தின் சினம் தணிப்பதற்குப் பாணர்*

சிறிய யாழின் நரம்பை இசைப்பர் என்பது பாடலடியின் பொருளாகும். எட்டுத்தொகையில் ஒன்றான நற்றிணையில் இடம்பெற்றுள்ள யாழின் பெயரை எடுத்துக்காட்ட இப்பாடல் அடியை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

## தமிழிலக்கியத்தில் தாவரநூலின் நுட்பங்கள்

லூர்துசாமி என்பவரால் எழுதப்பெற்ற இக்கட்டுரையில் நற்றிணை 162, 113, 337, 09, 279, 296, 86 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

"வேனிலிற்றித் தோயா நெடுவீழ்
வழிநா ளூசலின் கோடை தூக்குதொறும்" (162)

வேனிற் காலத்தில் இத்திமரத்தின் விழுது காற்றில் அசையும், அவ்வாறு அசையும் விழுது அம்மரத்தின் கீழே துயிலும் பெண் யானை மீது வருடும் என்பது பாடலடிகளின் பொருளாகும். இத்தி மரத்தின் விழுது பற்றிய செய்திகளை எடுத்துக்காட்ட இப்பாடலை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

"புல்லரை இரத்திப் பொழிப்புறப் பசுங்காய்" (113)

புல்லிய அடியை உடைய இலந்தை மரங்களின் மேலே பசியகாய் காணப்படும் என்பது பாடலடிகளின் பொருளாகும்.

"பராரைப் பாதிரிக் குறுமயிர் மாமலர்" (337)

பருத்த அடிமரத்தையும், நுண்ணிய மயிரையும், சிறந்த மலரையும் கொண்ட பாதிரிமரம் என்பது பாடலடிகளின் பொருள். இலந்தை பருமனற்ற அடிமரத்தையும், 'பராரை' பருமனுடைய அடிமரத்தையும் உடையது என்ற கருத்தை எடுத்துக்காட்ட மேலே இடம்பெற்றுள்ள பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

"பொரிப்பூம் புன்கி னெழில்தகை யொண்முறி" (09)

பொரியைப் போன்ற பூக்களையுடைய புன்கினது அழகுமிக்க ஒளி பொருந்திய தளிர் என்பது பாடலடியின் பொருளாகும். புன்னை மர இலைகளின் உருவம், மென்மை ஆகியவற்றை எடுத்துக்காட்ட மேலே இடம்பெற்றுள்ள பாடல் அடியை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

“வேனில் இற்றித் தோயா நெடுவீழ்

வழிநார் ஊசலின் கோடை தூக்குதொறும்” (162)

வேனிற் காலத்தில் இத்திமரத்தின் நெடிய விழுது காற்றில் ஊசலைப் போல ஆடும் என்பது பாடலடிகளின் பொருளாகும். இத்தியின் இலை வேலாயுதத்தைப் போலக் காணப்படும் என இத்தியின் இலை அமைப்பை எடுத்துக்காட்ட மேலே இடம்பெற்றுள்ள பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

“கொடிறுபோல் காய வாலிணர் பாலை” (86)

வெண்மையான கிளைகளும், பற்றுக்குறடுபோல் காய்களும், வெள்ளிய பூங்கொத்துகளும் உடைய வெண்பாலை மரம் என்பது பாடல் அடியின் பொருளாகும். மலர்கள் தனித்தும், கொத்துக் கொத்தாகவும் வளரும் தன்மையுடையவை. கொத்தாக வளரும் பூ வகையில் வெண்பாலை மரம் காணப்படும் என விளக்கவும், கொத்தாக வளரும் தன்மையுடைய பூ வகைக்கு ‘இணர்’ என்ற பெயர் இலக்கியத்தில் உண்டு எனத் தெளிவுபடுத்தவும், மேலே இடம்பெற்றுள்ள பாடல் அடியை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

“வேம்பின் ஒண்பழம் முணைஇ இருப்பைத்

தேம்பால் செற்ற தீம்பழம் நசைஇ” (279)

வேம்பின் ஒள்ளிய பழத்தை வெறுத்து, இருப்பை மரத்தின் தேன்போன்ற பால்வற்றிய இனிய பழத்தை வௌவால் விரும்பி உண்ணும் என்பது பாடலடிகளின் பொருளாகும்.

“புழற்காய்க் கொன்றைக் கோடணி கொடியிணர்” (296)

உட்கூடு போன்ற காய்களைக் கொண்ட சரக்கொன்றையின் கிளையில் கொடிபடர்ந்தாற் போன்ற பூங்கொத்துகள் காணப்படும் என்பது பாடலடிகளின் பொருளாகும். வேம்பு, இருப்பை, சரக்கொன்றை, இற்றி போன்ற மரங்களில் காணப்படும் பழங்களின் நிறம், உருவம், சுவைபற்றிய செய்திகளை எடுத்துக்காட்ட மேலே இடம்பெற்றுள்ள பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

### நற்றிணையிலே நம் வள்ளுவர்

*மது.ச.விமலானந்தம் என்பவரால் எழுதப்பெற்ற இக்கட்டுரையில் நற்றிணையின் 308 ஆம் பாடல் இடம்பெற்றுள்ளது.*

*பொருள்வயிற் பிரியக் கருதிய தலைவன், தன் பிரிவு நிலையைத் தலைவியிடம் கூற நினைக்கும்போது, அதைக் குறிப்பால் உணர்ந்த தலைவி வருந்தித் தலைவன் தோள் சாய்கின்றாள். இந்நிலையில் தலைவன் மழைநீரைப் பிடிக்க வைக்கப்பட்ட ஈரம் காயாத மட்பாண்டம் மழையோடு கரைவதுபோலத் தலைவியுடன் ஒன்றுபட்டுக் கலந்து பிரிவைத் தவிர்க்கின்றான் என்பது பாடலின் பொருள். திருக்குறள் 900 ஆம் பாடலில் திருவள்ளுவர் தவறான வழிச்சென்று பொருள் தேடுவது, பச்சை மண்கலத்தில் நீரைவிட்டுக் காத்தல் போன்றது என்கிறார். இதே கருத்து நற்றிணையில் இளங்கீரனாரால் தலைவன், தலைவி அன்பு வாழ்விற்கு எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. நற்றிணையில் காணப்படும் குறள்மணிகளின் சிறப்பை எடுத்துக்காட்ட மேலே இடம்பெற்றுள்ள பாடலை ஆசிரியர் கையாண்டுள்ளார்.*

**பகுதி இரண்டு**

## 2.2 தமிழ்ப்பொழில்

*தமிழ்ப்பொழில் இதழில் இடம்பெற்றுள்ள சங்க இலக்கியம் தொடர்பான கட்டுரைகளில் பயன்படுத்தப்பட்டுள்ள நற்றிணைப் பாடல்களின் எண்ணிக்கை 119 ஆகும். இவை குறிஞ்சிக்குரியவை - 28, முல்லைக்குரியவை - 10, மருதத்திற்குரியவை - 18, நெய்தலுக்குரியவை-20, பாலைக்குரியவை - 43 என அமைந்துள்ளன (விரிவு : பின்னிணைப்பு - 8). இப்பாடல்கள் ஒருமுறையும், ஒன்றுக்கு மேற்பட்ட முறையும் கட்டுரையாளர்களால் எடுத்தாளப்பெற்றுள்ளன. அவை தொடர்பான விபரம் வருமாறு.*

| திணை | ஒருமுறை | இருமுறை | மும்முறை |
|---|---|---|---|
| 1. குறிஞ்சி | 257, 383, 112, 313, 6, 268, 116, 34, 85, 133, 140, 363, 359, 379, 176, 222, 309, 251, 292, 77, 1 | 151, 168, 301, 225, 5, 64 | 232 |
| 2. முல்லை | 97, 115, 81, 266, 181, 69, 21 | 142, 242 | 99 |
| 3. மருதம் | 290, 120, 280, 80, 100, 170, 250, 90, 230, 330, 210, 50, 216, 320, 390, 40, 300 | 400 | --- |
| 4. நெய்தல் | 178, 372, 117, 15, 249, 278, 28, 388, 303, 311, 63, 145, 275 | 283, 96, 382, 78, 363, 54 | 354 |
| 5. பாலை | 313, 28, 13, 243, 113, 246, 141, 46, 9, 262, 298, 86, 786, 198, 274, 110, 252, 71, 162, 84, 73, 171, 9, 105, 256, 174, 56, 224, 52, 16, 279, 18, 343, 333, 305 | 118, 308, 337, 126, 14, 3 | 296, 302 |

### 2.2.1 குறிஞ்சி

தமிழ்ப்பொழில் இதழில் 8 ஆய்வுக்கட்டுரைகளில் இடம்பெற்றுள்ள நற்றிணைக்குரிய குறிஞ்சித் திணைப் பாடல்களின் எண்ணிக்கை - 28 ஆகும்.

### தமிழில் தாவரங்கள்

இக்கட்டுரை கு.சீனிவாசன் என்பவரால் எழுதப்பட்டது (1959-60 சித்திரை, ஆனி-ஐப்பசி), (1975 வைகாசி). தமிழ் இலக்கியத்தில் காணப்படும்

வேங்கை, ஆம்பல், பிண்டி, தேமா, புளிமா, மாதவி, கொன்றை, குறிஞ்சி முதலான பல தாவரங்களின் சிறப்பைக் காண்பதும், அவற்றை அறிவியல் கண்கொண்டு பார்ப்பதும் இக்கட்டுரையின் நோக்கம். இக்கட்டுரையில் *151, 257, 383, 168, 112, 313, 6, 268, 301, 116, 34* ஆகிய குறிஞ்சித்திணைக்குரிய நற்றிணைப் பாடல்கள் இடம்பெற்றுள்ளன. இப்பாடல்களைத் தாவரங்கள் அடிப்படையில் பகுத்துக் கீழ்வருமாறு அட்டவணைப்படுத்தலாம்.

| | | |
|---|---|---|
| *1.* | வேங்கை | *151, 257, 383, 168, 112, 313,* |
| *2.* | ஆம்பல் | *6* |
| *3.* | குறிஞ்சி | *268, 301, 116* |
| *4.* | குவளை | *34* |

கரிய அடிமரத்தையும், பொன் போன்ற பூங்கொத்தினையும் உடையது வேங்கை மரம் என்பது 151 ஆம் பாடல் அடியின் பொருளாகும். பொன்போன்ற நிறமுடைய மணமிக்க மலர்கள் பாறை மேலுதிர்ந்து பரவிக் கிடக்கும் என்பது 257 ஆம் பாடல் அடியின் விளக்கமாகும்.

"கல்லயற் கலித்த கருங்கால் வேங்கை
அலங்கலம் தொடலை யன்ன குருளை" *(383)*

'மலையின் அருகே தழைத்த கரிய அடிப்பகுதியை உடைய வேங்கை மலரால் தொகுக்கப்பட்ட அசையும் அழகுடையதாகிய மாலையைப் போன்ற புலிக்குட்டி' என்பது இப்பாடல் அடிகளின் கருத்தாகும். இப் பாடலடிகள் அனைத்தும் வேங்கைமரத்தின் சிறப்பைக் கூறவும், வேங்கைமரப் பூவின் அழகை எடுத்துரைக்கவும் ஆசிரியரால் கையாளப்பெற்றுள்ளன.

"கருங்கோல் வேங்கை" *(168)*
"கருங்கோல் வேங்கை" *(112)*
"கருங்கோல் வேங்கை" *(313)*

கருங்கோல் என்ற வேங்கை மரத்தை இப்பாடல் அடிகள் குறிக்கின்றன. 'இவ்வேங்கை சற்றேறக்குறைய ஆயிரத்து ஐந்நூறு அடி உயரத்துக்குமேல், நாலாயிரத்து ஐந்நூறு அடிக்குட்பட்ட மலைச்சரிவுகளில் நல்ல வெப்பமும்,

மிகுந்த மழையும் ஒருங்கமைந்த காடுகளில் ஐம்பது முதல் நூறடி வரை நீண்டு செழித்து வளரும் என்றும், இதன் அடிமரம் ஆறடி முதல் எட்டடி வரை அகன்று பருத்து வலிமையுடையதாக இருக்கும்' என்றும் விளக்கம் தருவதற்காகவும் இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

"நீர்வளம் ஆம்பல் தூம்புடைத் திரள்கால்
நாருரித் தன்ன மதனின் மாமை" *(6)*

நீரில் வளர்கின்ற அல்லியின் தண்டினை நாருரித்தாற்போன்று பசலை படர்ந்த மாநிறம் உடையவள் தலைவி என்பது பாடலடிகளின் பொருளாகும். நாருரித்த ஆம்பல் காம்புகளின் புறத்துள்ள சில உயிரணுக்களில் 'ஆந்தோசையனின்' என்ற வேதிப்பொருள் உயிரணுச்சாற்றில் கரைந்திருத்தலினால் மிகுந்த அழகுடையதாகக் காணப்படும்' என்ற அறிவியல் பூர்வமான உண்மையை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

"நெடுங்குன்றத்துக்,
கருங்கால் குறிஞ்சி மதனில வான்பூ,
ஓவுக் கண்டன்ன இல்வரை இழைத்த
நாறுகொள் பிரசம் ஊறு நாடற்குக்" *(268)*

தலைவன் குன்றில், கரிய காம்புடைய வன்மையில்லாத மெல்லிய குறிஞ்சிப் பூ மலர்ந்து விளங்கும். இக்குன்றில் உள்ள வேட்டுவரில்லங்கள், மலையிடத்தில் ஓவியன் எழுதிவைத்தது போல விளங்கும். இவ்வில்லங்களில் தேனீக்களால் உண்டாக்கப்பட்ட தேனடைக்கு வேண்டிய தேன் குறிஞ்சிப் பூக்களில் ஊறி நிற்கும் என்பது பாடலடிகளின் பொருளாகும்.

"நீண்மலைக் கலித்த பெருங்கோல் குறிஞ்சி
நாள் மலர் புரையும் மேனி" *(301)*

நீண்ட மலையிலே செழித்த பெரிய தண்டினை உடைய குறிஞ்சிப் பூவைப் போன்ற உடலை உடையவள் தலைவி என்பதை இப்பாடல் அடிகள் விளக்கி நிற்கின்றன.

"ஏகல் அடுக்கத்து இருண்முகை யிருந்த
குறிஞ்சி நல்லூரர்ப் பெண்டிர்" (116)

பெரிய மலையகத்து இருள் செறிந்த குன்றுகள் காணப்படுகின்றன. அக்குன்றில் குறிஞ்சி நிலம் உண்டு. அக்குறிஞ்சி நிலத்தில் உள்ள நல்ல ஊரில் வாழும் பெண்டிர் தலைவியை அலர் தூற்றி வருத்துகின்றனர் என்பது இப்பாடல் அடிகளின் கருத்தாகும். குறிஞ்சி பூக்கும் கார்காலத்தையும், குறிஞ்சித்தண்டின் கருமையையும், குறிஞ்சியின் நறுமணத்தையும் இக்குறிஞ்சிப் பூக்களில் இருந்து தேனீக்கள் பெருந்தேன் எடுப்பதையும் விளக்க மேலே இடம்பெற்றுள்ள பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

"கடவுட் கற்சுனை அடையிறந் தவிழ்ந்த
பறியாக் குவளை மலரொடு" (34)

தெய்வத் தன்மை பொருந்திய மலையில் உள்ள சுனையில் இலைகளை விலக்கிக் கொண்டும், மேலே எழுந்தும் குவளை மலர் காணப்படும். இம்மலர் பறிக்காமல் விடப்பட்டிருக்கும் என்பது இப்பாடலடிகளின் கருத்தாகும். குவளை மலரின் சிறப்பை எடுத்துக்காட்டுவதற்காக இப்பாடலடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## தமிழ்நாட்டுப் பெண்களின் பண்பாடு

சாமி.சிதம்பரனார் என்பவர் எழுதிய இக்கட்டுரை (1959-60 ஆடி). தமிழர்களின் பண்டைக்காலப் பண்பாட்டினை அறிந்து கொள்ள உதவுகின்றது. மேலும் குடும்பப் பெண்கள் கணவன் ஈட்டிய வருவாயை எவ்வாறு தம் குடும்பத்திற்கு ஏற்றவாறு செலவு செய்கின்றனர் என்பதை அறிவதும், கணவன் வாழ்வே தம் வாழ்வு என வாழ்ந்த மனைவிமார்களின் செயல்பாடுகளை விளக்குவதும் இக்கட்டுரையின் நோக்கமாகின்றது. இதில் நற்றிணை 85 ஆம் பாடலின்,

"கானவன் எய்த முளவுமான் கொழுங்குறை,
தேம்கமழ் கதுப்பின் கொடிச்சி, மகிழ்ந்துகொடு
காந்தள் அம்சிறு குடிப்பகுக்கும்"

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன. கானவனால் வீழ்த்தப்பட்ட முள்ளம்பன்றியின் இறைச்சியை, அவன் மனைவி கொடிச்சி எடுத்து அவ்வூரில் உள்ள பலருக்குக் கொடுத்துத் தானும் உண்ணும் சிறப்பை இப்பாடல் அடிகள் விளக்குகின்றன. இல்லறம் நடத்தும் மனைவியின் செயல்பாடுகளைத் தம் மனதில் கொண்ட ஆசிரியர் இப்பாடல் அடிகளை இக்கட்டுரையில் கையாண்டுள்ளார்.

## நற்றிணையில் ஒப்பனைக்கலை

வித்துவான் சொ.சிங்காரவேலனார் அவர்கள் எழுதிய இக்கட்டுரையில் (1960 மார்கழி) வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ்கூறும் நல்லுலகத்தில் வாழ்ந்த தமிழ்ப்பெருமக்கள் தம்மை எவ்வாறு ஒப்பனை செய்து, ஒப்பின்றி விளங்கினர் என்பதை நற்றிணை கொண்டு விளக்கப்பெற்றுள்ளது. இக்கட்டுரையில் 133, 140, 301 ஆகிய நற்றிணைப் பாடல்கள் இடம்பெற்றுள்ளன.

"மணியேர் ஐம்பால்" (133)

நீலமணிபோல் தலைவியின் கூந்தல் காணப்படும் என்பது பாடலடியின் பொருளாகும். பெண்மக்கள் கூந்தல் முடிப்பு முறைகளில் ஐந்து முறைகளைக் கையாண்டுள்ளனர் என்றும் இதனை ஐம்பால் என வழங்குவர் என்றும் விளக்குவதற்காக ஆசிரியர் இப்பாடல் அடியைப் பயன்படுத்தியுள்ளார். இக்கட்டுரையின் மூலம் அக்காலப் பெண்மக்களின் கூந்தல் ஒப்பனை முறையை அறியமுடிகின்றது.

"சிறுகோல் இணர பெருந்தண் சாந்தம்
வகைசேர் ஐம்பால் தகைபெற வாரிப்,
புலர்விடத்து உதிர்த்த துகள்படு கூழைப்
பெருங்கண் ஆயம்" (140)

'நல்ல மலைச்சாரலில் வளர்ந்த சந்தன மரத்தின் மணமிக்க துகளோடு, வேறுசில காட்டுமரங்களின் நறுமணத்துகள்களையும் சேர்த்துச் செய்யப்பட்ட குழம்பின் கலவையை மகளிர் கூந்தலில் தடவ, அது துகளாகிக் கூந்தலோடு கலந்து நறுமணத்தை வீசும்' என்பது பாடலடிகளின்

பொருளாகும். அக்காலப் பெண்கள் கூந்தலில் மணம்வீசப் பலவகையான நறுமணப் பொருள்களைப் பயன்படுத்தினர் என்பதை விளக்கவும், பெண்கள் கூந்தலில் பூசி ஒப்பனை செய்துகொள்ளும் கலவையைச் "சாந்து" என்று அழைப்பர் எனத் தெளிவுபடுத்தவும் இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

"தேமறப் பறியாக் கமழ் கூந்தலளே" (301)

தலைவி எப்பொழுதும் மணம் நீங்காத கூந்தலிலே நறுமணம் வீசுகின்ற நெய்யினை மறவாமல் தடவிக்கொள்வாள் என்பது பாடல் அடியின் பொருள். 'தேம்' என்பது அகிலின் நெய், இதை மறப்பு அறியாமல் தலைவி தன் கூந்தலில் பூசிக்கொள்வாள் என்ற கருத்தை விளக்க இப்பாடல் அடியை ஆசிரியர் கையாண்டுள்ளார். அக்காலப் பெண்கள் கூந்தலில் மணம்வீசப் பலவகையான பொருள்களைப் பயன்படுத்தினர் என்பதை அறியமுடிகின்றது.

## நயந்தரும் நற்றிணை

இக்கட்டுரை ஆ.பாலன் என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1969 மார்கழி, தை). நற்றிணையில் உரிப்பொருளாய்க் களவு, கற்பு சொல்லப்பட்டிருந்தாலும், கருப்பொருள் பலவும் சிறப்படைந்த முறையில் விளக்கம் பெற்றுள்ளன. ஐவகைத் திணையின் இயல்பும், அங்கு வாழ்வோர் செயலும், விலங்கின் வன்மையும் தன்மையும் நன்முறையில் நயம்பட விரித்துச் சொல்லப்பெற்றுள்ளன. அவைகளைத் திணைக்கொன்றாக எடுத்துக்காட்டி விளக்குவது இக்கட்டுரையின் நோக்கம். இதில் 168 ஆம் பாடலின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

'மலைமேல் உள்ள வேங்கை மரத்தின் கிளையில் உள்ள தேனடையில் இருக்கும் தேன், ஈக்கள் மொய்த்தலால் கசிந்து, பாறைக் குழிகளில் நிறையும். இத்தேனைக் குறிஞ்சி நிலச்சிறார்கள் தம் கையால் வலித்து உண்டு எஞ்சியதைக் குரங்கின் குட்டிகள் உண்ணும் மலை நாட்டையுடைய தலைவன்' என்பது 168 ஆம் பாடலடிகளின் பொருளாகும். குறிஞ்சித் திணையில், மிகுதியாய்க் காணப்படும் தேனின் வளப்பத்தையும்,

குறிஞ்சிவாழ் விலங்காகிய குரங்கின் செயலையும், குறிப்பிட இப்பாடல் அடிகளை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

### சங்க இலக்கியங்களில் பேய்

இக்கட்டுரை வி.சா.பாலசுப்பிரமணியன் என்பவரால் எழுதப்பெற்றது (1993 ஆகஸ்ட், செப்டம்பர்). சங்க இலக்கியங்கள் பலவும் பேய்கள் பற்றிய சுவையான குறிப்புகளைத் தருகின்றன. பேய்களின் உறுப்பு பற்றிய அடையாளங்களைச் சங்கப்புலவர்கள் பாடியுள்ளதையும், பேய்கள் உறையும் இடங்கள், அவற்றின் உணவு, அவை ஆடும் கூத்து மற்றும் பேய்கூத்தாடும் நேரம் போன்றவற்றையும் விளக்குவது இக்கட்டுரையின் நோக்கம். இதில் நற்றிணை 225 ஆம் பாடலின்,

"கழுதுகால் கிளற ஊர் மடிந்தன்றே" (225)

எனும் அடி இடம்பெற்றுள்ளது.

பேயினங்கள் காற்றைப் போல இயங்கும் இரவுப் பொழுதில் ஊரினர் யாவரும் துயில்கொண்டனர் என்பது இப்பாடல் அடியின் பொருள். பேய்களைப் பற்றிக் குறிப்பிடவும், பேய்கள் நடுநிசியில் உலவும் என்பதை விளக்கவும் ஆசிரியர் இப்பாடல் அடியினைத் தன்வயம் கொண்டு பயன்படுத்தியுள்ளார்.

### சங்ககாலத்தில் தழையுடை

இக்கட்டுரை அ.ஜெயக்குமார் என்பவரால் எழுதப்பெற்றது (2007 ஐப்பசி). சங்ககால மக்களின் ஆடைமுறையினை விளக்குவது இக்கட்டுரையின் நோக்கம். இதில் 363, 359 ஆகிய நற்றிணைப் பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

"உடுக்கும் தழை தந்தனனே" (359)

தலைவன் தலைவிக்கு அணிவதற்காகத் தழையாடை கொடுத்தான் என்பது பாடலின் பொருளாகும்.

"பைந்தழை சிதையக் கோதைவாட" (363)

தலைவி, தலைவனோடு ஆடியதால் தழையாடை சிதைந்து, சிலம்பு உடைந்தது. இதனால் தலைவி வருந்துகின்றாள் என்பது இப்பாடல்

அடியின் பொருள். அக்கால மக்களின் ஆடைமுறையைத் தெரிந்துகொள்ள இப்பாடலடிகள் பெரிதும் உதவுகின்றன.

## நற்றிணையில் தாவரங்கள்

சொ.சிங்காரவேலன் என்பவர் எழுதிய இக்கட்டுரையில் (1956-57 தை-பங்குனி, சித்திரை, வைகாசி, ஆடி). புன்னை, வேம்பு, ஈந்து, நெல்லி, குராமரம், பலா, சந்தனம், பாதிரி, குமிழ், புன்கு, விளா, கொன்றை, இரும்பை, ஓமை, வாழை போன்ற மரங்களின் சிறப்பை விளக்குவது இக்கட்டுரையின் நோக்கம். இக்கட்டுரையில் 151, 232, 379, 176, 222, 225, 232, 309, 77, 232, 64, 5, 259, 292 ஆகிய நற்றிணைப் பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன. இப்பாடல்களைத் தாவரங்களின் அடிப்படையில் கீழ்வருமாறு அட்டவணைப்படுத்தலாம்.

| வ.எண். | தாவரங்களின் பெயர்கள் | பாடல் எண் |
|---|---|---|
| 1. | வேங்கை | 151, 232, 379 |
| 2. | வாழை | 176, 222, 225, 232, 309 |
| 3. | பலா | 77, 232 |
| 4. | சந்தனம் | 292, 259, 1, 5 |

‘கரிய அடிமரத்தையும், பொன் போன்ற பூங்கொத்தினையும் உடையது வேங்கை மரம். இவ்வேங்கையின் கிளையில் ஏறி நின்று சினைநீரை நோக்கித் தலைகவிழ்ந்து கடுவனோடு புணர்ச்சியில் குழைந்த உச்சி மயிரைத் திருத்தும் மந்தி’ என்பது 151 ஆம் பாடலடிகளின் பொருள்.

“வேங்கை
வீயுக விரிந்த முன்றில்
கல்கெழு பாக்கத்து அல்கினை செலினே” (232)

வேங்கை மலர் உதிருமாறு வரிந்து கட்டப்பட்ட வேலியையுடைய முன்றிலுடன் விளங்கும் என் தந்தைக்குரிய பாக்கத்தில் தங்கிச்செல் என்று தோழி, தலைவனிடம் கூறுவது பாடலடிகளின் பொருளாகும்.

"சோலை வாழை முணைஇ" (232)
யானைகள் மலைவாழையை விரும்பித்தின்னும் என்பது இப்பாடலடியின் பொருளாகும்.

"எரியகைந் தன்ன வீததை இணர
வேங்கையம் படுசினைப் பொருந்தி" (379)

நெருப்பு கொழுந்து விட்டது போன்ற மலர்கள் நெருங்கிய பூங்கொத்துகளை உடைய வேங்கை என்பது பாடல் அடிகளின் கருத்தாகும். 151, 232, 379 ஆகிய பாடல்கள் வேங்கை மரத்தின் சிறப்பைக் கூறவும், வேங்கைப் பூவின் அழகை எடுத்துக்காட்டவும் ஆசிரியரால் கையாளப்பெற்றுள்ளது. 232 ஆம் பாடல் மட்டும் வேங்கையின் சிறப்புக் கூற ஓரிடத்திலும், பலாவின் சிறப்புக் கூற மற்றோர் இடத்திலும், இருமுறை பயன்படுத்தப்பெற்றுள்ளது.

"வாழையஞ் சிலம்பின் வம்புபடக் குவைஇ" (176)
மலைச்சாரலில் காணப்படும் வாழை என்பது இப்பாடல் அடியின் பொருளாகும்.

"வாழை ஓங்கிய வழையமை சிலம்பில்" (222)
இப்பாடல் அடி ஓங்கிய வாழையைக் குறிப்பிடுகின்றது.

"பொருத யானை வெண்கோடு கடுப்ப
வாழையீன்ற வையேந்து கொழுமுகை
மெல்லியல் மகளிர் ஓதியன்ன
பூவொடு, துயல்வரும் மால்வரை நாடனை" (225)

'யானையின் தந்தம் போன்ற வாழைத்தாரும், மகளிரின் கூந்தல் முடிச்சுப் போன்ற வாழைப்பூவும் உடைய மலைநாட்டுத் தலைவன்' என்பது இப்பாடல் அடிகளின் பொருளாகும்.

"ஆழல் வாழி தோழி வாழைக்
கொழுமடல் அகல்இலைத் தளிதலைக் கலாவும்" (309)

வாழையின் செழித்த, அகன்ற ஈற்றிலையின் செழிப்பில் இனிய நீர் கலந்து தங்கியிருக்கும் என்பது பாடலடிகளின் பொருளாகும். மலை வாழை, பூவன் வாழை, பேயன் வாழை, செவ்வாழை, சிறுமலை வாழை என்ற பலவகையான வாழையை எடுத்துக்காட்டவும், வாழையின் இயல்பினை விளக்கவும் ஆசிரியர் மேலே இடம்பெற்றுள்ள பாடல்களைக் கையாண்டுள்ளார்.

"செவ்வேர்ச்

சினைதொறுந் தூங்கும் பயங்கெழு பலவின்" (77)

சிவந்த வேர்களை உடைய கிளைகள் தோறும் தொங்குகின்ற பலாப்பழம் என்பது இப்பாடல் அடிகளின் பொருளாகும்.

"செங்கால் பலவின் தீம்பழ மிசையும்

மாமலை நாட! தாமம் நல்கென" (232)

'யானையினம் குடிசையிருப்புகளில் புகுந்து சிவந்த அடிமரப் பகுதியையுடைய பலாமரத்தின் இனிய பழத்தை உண்டு மகிழும். இத்தகைய யானைக் கூட்டங்கள் இயங்கும் மலைக்குரிய நாடனே!' என்பது பாடலடிகளின் விளக்கமாகும். பலாமரத்தின் சிறப்பையும், பலாமரத்தின் வகையையும் (கிளைப் பலா, வேர்ப்பலா) பலாப்பழத்தின் இனிமையையும் எடுத்துக்கூறுவதைத் தன் நோக்கமாகக் கொண்ட ஆசிரியர் இப்பாடல்களின் அடிகளைப் பயன்படுத்தியுள்ளார்.

"மீ மிசைச்

சாந்தின் தொடுத்த தீந்தேன் போல" (1)

சந்தன மரத்தின் தாதினை ஊதி, சந்தன மரத்தின் உச்சியில் கொண்டு சென்று வைத்த தேனைப்போல, உறுதியாக உயர்ந்தது தலைவனின் நட்பு என்பது இப்பாடலடியின் பொருள். இக்கட்டுரையாசிரியர் சந்தனமரத்தின் சிறப்பை விளக்கும்பொருட்டு இப்பாடல் அடியைக் கையாளுகின்றார்.

மலையில் வாழும் குறவர்கள் சிறிய இலைகளை உடைய சந்தனமரத்தின் மேற்பட்டையை அறியாமல் வெட்டுகின்றனர். இதனால்

சந்தனமரத்தில் இருந்து நீர் வெளியேறி அம்மரம் வாடத் தொடங்கியது. இதுபோலத் தலைவன் பிரிவால் தலைவி வருந்துகின்றாள் என்பது 64 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். சந்தன மரம் சிறிய இலைகளை உடையது என்ற கருத்தை விளக்குவதற்காக ஆசிரியர் இப்பாடலடிகளை எடுத்துக் காட்டுகின்றார்.

"குறவர் கொன்றை குறைக்கொடி நறைப்பவர்
நறுங்காழ் ஆரஞ் சுற்றுவன அகைப்ப" (5)

குறவர் வெட்டி அழித்த நறைக்கொடி மழைக்காலத்தினால் சந்தனமரத்தின் மீது மீண்டும் படரும் என்பது இப்பாடல் அடிகளின் பொருளாகும். சந்தனமரத்தின் முற்றிய மரம் வயிரம் (காழ்) வாய்ந்து இருக்கும் என்ற கருத்தை உணர்த்த இப்பாடல் அடிகளை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

"சாரல் ஆரம் வண்டுபட நீவி" (259)

மலைச்சாரலில் விளைந்த சந்தனத்தின் குழம்பினை வண்டுகள் மொய்க்குமாறு பூசி மகிழ்ந்து பெரிதும் விரும்பிப் பொருந்தி நட்புக்கொண்டனர் தலைவனும், தலைவியும் என்பது இப்பாடல் அடியின் பொருளாகும். சந்தன மரத்துக்குரிய விளைநிலம் மலைச்சாரலேயாகும் என்ற கருத்தை விளக்க இப்பாடல் அடியை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

"நெடுங்கண் ஆரத்து அலங்குசினை வலந்த
பசுங்கேழ் இலைய நறுங்கொடித் தமாலந்
தீந்தேன் கொள்பவர் வாங்குபு பரியும்
யாணர் வைப்பிற் கானம்" (292)

'நீண்ட கணுக்களைக் கொண்ட சந்தனமரத்தின் கிளைகளில் பசுமையான நிறம் உடைய தமலாக்கொடி சுற்றியிருக்கும். இக்கொடியின் சுவை நிரம்பிய தேனை எடுக்கும் வேடர் வளைத்து அறுத்துக்கொண்டு செல்லும், புதிய வருவாய் மிக்க கானம்' என்பது பாடலடிகளின் பொருள். சந்தனமரம் நீண்ட கணுக்களை உடையது என்ற கருத்தை விளக்க

இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார். சந்தனமரம் தொடர்பாக மேற்கூறிய பாடல்கள் அனைத்தும் சந்தனமரத்தின் சிறப்பை அறியவும், சந்தனமரத்தின் சிறிய இலைகளைப் பற்றித் தெரிந்துகொள்ளவும், சந்தன மரம் வளர்வதற்கான மலைச்சாரல் பகுதியினைப் புரிந்துகொள்ளவும் பயன்படுகின்றன.

**நற்றிணை**

இக்கட்டுரை ச.தண்டபாணி தேசிகர் என்பவரால் எழுதப்பெற்றுள்ளது (1934-35 ஆடி), (1936-37 தை). நற்றிணை பெயர்க்காரணம், நூலமைப்பு, மக்களியல்பு, இருப்பிடங்கள், பழக்கவழக்கங்கள், கடவுள் வழிபாட்டுமுறை, விளையாட்டு, நில இயற்கை போன்றவற்றைத் தெளிவுபடுத்துவது இக்கட்டுரையின் நோக்கம். இதில் 64, 5 ஆகிய நற்றிணைப் பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

"உடுக்கை மலையுறை குறவர்" (64)

மரல் நாரினாலே பின்னிய உடையினை உடையவராகிய மலையில் வாழும் குறவர் என்பது பாடல் அடியின் பொருள். இக்கட்டுரை ஆசிரியர் அக்காலத் தமிழ்மக்களின் உடைமுறையை வெளிப்படுத்த இப்பாடலடியைப் பயன்படுத்தியுள்ளார்.

"மின்னுநிமிர்ந் தன்ன வேலன் வந்தெனப்
பின்னுவிடு முச்சி அளிப்பா னாதே" (51)

மின்னல் ஒளி பொருந்திய வேலைக் கையில் எடுத்து வேலன் வெறியாடுகின்றபோது, தலைவியை முன்னிறுத்தி அவள் தலையிற் சூடியுள்ள பூவை எடுத்து எறிந்துவிடுவான் என்பது இப்பாடல் அடியின் பொருளாகும். இக்கட்டுரை ஆசிரியர் அக்கால மக்களின் வழிபாட்டு முறையை விளக்குவதைத் தன் நோக்கமாகக் கொண்டு இப்பாடல் அடியைக் கையாண்டுள்ளார்.

### 2.2.2 முல்லை

தமிழ்ப்பொழில் இதழில் 07 ஆய்வுக்கட்டுரைகளில் எடுத்தாளப்பெற்றுள்ள நற்றிணைக்குரிய முல்லைத்திணைப் பாடல்களின் எண்ணிக்கை 10 ஆகும்.

## தமிழில் தாவரங்கள்

கு.சீனிவாசன் எழுதிய தமிழில் தாவரங்கள் எனும் கட்டுரையில் 99 ஆம் பாடலின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

கரிய மேகங்கள் கடல்நீரை உண்டதால், நீர்ப்பாரம் தாங்காமல் மழையைப் பொழிந்தன. இதைக் கார்காலம் என எண்ணிப் பிடவம், கொன்றை, காந்தள் ஆகிய மரங்கள் பூத்தன என்று தலைவனைப் பிரிந்து வாழும் தலைவியின் துன்பத்தைப் போக்கத் தோழி கூறுவது 99 ஆம் பாடலடிகளின் பொருளாகும். இக்கட்டுரை ஆசிரியர் கொன்றை மலரின் சிறப்பை எடுத்துக் கூறவும், கொன்றைமரம் கார்காலத்தில் மலரும் தன்மையுடையது என்பதை விளக்கவும், இப்பாடல் அடிகளைப் பயன்படுத்தியுள்ளார்.

## நற்றிணையில் தாவரங்கள்

வித்துவான் சொ.சிங்காரவேலனார் எழுதிய இக்கட்டுரையில் 266, 99, 242, 99, 242 ஆகிய நற்றிணைப் பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

"கொல்லைக் கோவலர் குறும்புனஞ் சேர்ந்த
குறுங்காற் குரவின் குவியிணர் வான்பூ" (266)

'ஆநிரை மேய்க்கும் கோவலர், கொல்லை சார்ந்த புனத்தில் உள்ள, குறுகிய காலையுடையதுமான குராமரத்தின் குவிந்த கொத்தில் உள்ள வெள்ளிய பூவை அணிவர்' என்பது பாடலடிகளின் பொருள். முன்பனிக்காலத்தில் குரவமரம் அரும்பும் என்றும், கொல்லை சார்ந்த புனங்களில் இது வாழும் என்றும், இம்மரத்தின் பூ வெண்மையுடையது என்றும், இக்குரவமரம் கொத்தாகப் பூக்கும் தன்மையுடையது என்றும் விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

"காரென்று அயர்ந்த உள்ளமொடு, தேர்வில்
பிடவுங் கொன்றையங் கோடலும்
மடவ வாகலின், மலர்ந்தன பலவே" (99)

‘கார்காலம் என்று உள்ளத்தில் நினைத்து பிடவும், கொன்றையும் காந்தளும், பிற மலர்களும் அறிவற்று மிகுதியாக மலர்ந்துவிட்டன. இதைக் கண்டு கார்காலமென்று நினைக்காதே எனத் தலைவியைத் தோழி தேற்றுவது’ இப்பாடல் அடிகளின் கருத்தாகும்.

பிடவம், முல்லை, கொன்றை, காயா ஆகிய செடிகொடிகளின் மலர்கள் மலரும் கார்காலம் தொடங்கியது எனப் பாகனிடம் தலைவன் கூறுவது 242 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும்.

இப்பாடல்களின் அடிகள் கார்காலத்தில் மலரும் பிடவம், முல்லை, கொன்றை போன்ற பல மலர்களை விளக்குவதாக அமைந்துள்ளன.

“இலையில் பிடவம் ஈர்மலர் அரும்பப்
புதலிவர் தளவம் பூங்கொடி அவிழப்” (242)

‘பழுத்த இலைகளை உதிர்த்த பிடவமர மலர்கள் அரும்பிவிட்டன. புதர்மேல் பற்றிப்படரும் முல்லைக் கொடிகள் யாவும் மலர்ந்தன’ என்பதை இப்பாடல் அடிகள் விளக்குகின்றன. கொன்றை, பிடவம் பூக்கும் கார்காலத்தையும், அம்மலர்களின் சிறப்பையும் எடுத்துரைக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## நற்றிணையில் ஒப்பனைக்கலை

சொ.சிங்காரவேலனார் எழுதிய இக்கட்டுரையில் 97, 115, 81 ஆகிய நற்றிணைப் பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

“துய்த்தலை இதழ பைங்குருக் கத்தியொடு
பித்திகை வரவுமலர் கொள்ளீரோ” (97)

‘அழகுகொண்ட பஞ்சுபோன்ற வெளிய இதழையுடைய பசிய குருக்கத்தி மலருடனே சிறு செண்பக மலரையும் விரவி அணிந்திருந்தாள் உழவனின் சிறப்புமிக்க இளமகள்’ என்பது இப்பாடல் அடிகளின் கருத்தாகும். அக்கால மக்கள் ஒரு சாதிப் பூக்களை மட்டும் அணியவில்லை, பல வண்ண மலர்களையும் ஒருங்கு மாறி மாறித் தொடுத்து அணிந்தனர் என்பதை விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

அக்கால மக்களின் ஒப்பனை முறையினைத் தெரிந்துக்கொள்ள இக்கட்டுரை பெரிதும் உதவுகின்றது.

“மனைநடு மௌவலொடு ஊழ்முகை அவிழ” (115)

மனையின் நடுவில் முளைத்த முல்லைச்செடி, நொச்சி வேலியிடத்துச் சென்று படரும் என்பதை இப்பாடல் அடி விளக்குகின்றது. வீட்டின் முற்றத்து நடுவில், முல்லைச்செடி முளைத்துப் பூத்துக் குலுங்கும். இவ்வாறு வளர்க்கப்படும் முல்லையின் சிறப்பு அக்கால மகளிரின் கற்பு மேம்பாட்டை உணர்த்தும் என்பதை விளக்கவும், அக்காலத் தமிழகத்து மனைகளெல்லாம் இவ்வண்ணம் ஒப்பனை செய்யப்பட்டு விளங்கின என்பதை எடுத்துக்கூறவும் ஆசிரியர் இப்பாடல் அடியைக் கையாண்டுள்ளார்.

“நோன்தாள்
மன்னர் மதிக்கும் மாண்வினைப் புரவி
கொய்ம்மயிர் எருத்தின் பெய்ம்மணி ஆர்ப்பப்” (81)

அரசரால் மதித்தற்குரிய மாட்சிமை மிக்க நடையையுடைய குதிரைகளின் பிடரிமயிர் கத்திரித்து அழகாக ஒழுங்கு செய்யப்பட்டிருந்தது. மேலும் அக்குதிரைகளின் கழுத்தில் சலங்கை மணிகள் கட்டப்பட்டிருந்தன என்ற கருத்தையும் இப்பாடல் அடிகள் விளக்குகின்றன. அக்கால மக்கள் தம்மையும், தாம் வாழும் சுற்றுப்புறத்தையும் அழகுபடுத்திக் கொண்டதோடு மட்டுமல்லாமல், தம்மைச் சார்ந்து பிழைக்கும் வீட்டு விலங்குகளையும் ஒப்பனை செய்தனர் என்பதை விளக்க இக்கட்டுரை ஆசிரியர் இப்பாடல் அடிகளைப் பயன்படுத்தியுள்ளார்.

## சங்க இலக்கியங்களில் மிளிரும் விலங்கினப் பண்புகள்

இக்கட்டுரை துரை.பிச்சை என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1969 கார்த்திகை). சங்க இலக்கியங்களில் காணப்படும் விலங்குகளின் பண்புகளை எடுத்துவிளக்குவது இக்கட்டுரையின் நோக்கமாகும். இதில் நற்றிணை 181 ஆம் பாடலின் கீழ்வரும் அடிகள் எடுத்தாளப்பெற்றுள்ளன.

“உள்ளிறைக் குரீஇக் காரணல் சேவல்
.......”

உள்ளிறைக்... எனும் அடி முதலாக 9 அடிகள் இப்பாடலில் இடம்பெற்றுள்ளன.

'குருவிச் சேவல், பிற பெடையோடு கூடி மகிழ்ந்து வந்ததை அறிந்த பெடை, குருவிச் சேவலைத் தன் கூட்டின் உள்ளே விடாமல் மறுத்தது. பின்னர், கருமைவான் பெருமழை பெய்தது. இதனால் குருவிச்சேவல் நனைந்து நடுங்கி மன்னிப்புக் கேட்பது போல நின்றது. இதைக்கண்ட பெடை குருவிச்சேவலை மீண்டும் தன்பால் அழைத்தது' என்பது 181 ஆம் பாடல் அடிகளின் பொருள். தலைவியைப் பிரிந்து பரத்தையிடம் செல்லும் மரபு மக்களிடம் இருந்தது. இப்புற ஒழுக்கம் மக்களிடம் மட்டுமின்றி குருவியிடத்தும் நிகழ்ந்தது என்பதை விளக்கவும், ஆறறிவு பெற்ற மக்களின் பண்பாட்டிற்கேற்ற வாழ்வியல்கள் திறனுடைய கற்புடைப் பெண்டிரின் ஒழுகலாற்றிற்கேற்ப அமைந்துள்ளது என்பதைத் தெளிவுபடுத்தவும், இக்கட்டுரையாசிரியர் இப்பாடல் அடிகளைப் பயன்படுத்தியுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் பொதுச் சொல்லும் ஒரு பொருட் பல சொல் குறித்த சிறப்புச் சொல்லும்

இக்கட்டுரை க.அன்பழகன் என்பவரால் எழுதப்பெற்றது (2000 மாசி). சங்க இலக்கியத்தில் கையாளப்பெற்றுள்ள சொற்களில் சொற்பொருள் உறவுகளின் அடிப்படையில், ஒரு பொருட் பல சொல், பல பொருள் ஒருசொல், எதிர்ச் சொற்கள், உருவொப்புமைச் சொற்கள், மீச்சொல், உட்பொருட்சொல் எனப் பல கூறுகளாகப் பிரிகின்றன. இவற்றுள் ஒரு பொருட் பல சொற்களின் ஆக்கத்தில் பொதுச்சொற்களாக அமைந்தவை சிறப்புச் சொல் சேருகையில், குறிப்பிட்ட பொருள் தரும் சொல்லாக அமைவதை விளக்குவது இக்கட்டுரையின் நோக்கம். இதில் 69 ஆம் நற்றிணைப் பாடலின் 'மண்டிலம்' எனும் அடி இடம்பெற்றுள்ளது. இவ்வடி 'ஞாயிறு' (சூரியன்) என்ற ஒரு பொருளைக் குறிப்பதற்காகப் பயன்படுத்தப்பட்ட சொல்லாகும். 'மண்டிலம்' போன்ற பல சொற்கள் (அலரி, எல், கதிர், காலை) ஞாயிறு என்ற ஒரு பொருளைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டுள்ளன என 'ஒரு பொருள் குறித்த பல சொல்' முறையை விளக்குவதற்காக ஆசிரியர் இப்பாடல் அடியைப் பயன்படுத்தியுள்ளார்.

## நயந்தரும் நற்றிணை

ஆ.பாலன் எழுதிய இக்கட்டுரையில் 142 ஆம் நற்றிணைப் பாடலின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

'பெருமழை பெய்கின்ற நாளில் உறியினைக் கையிற் கொண்டும், தீக்கடைக்கோல் முதலிய கருவிகள் கொண்ட தோற்பையைப் பனையோலைப் பாயோடு சேர்த்து முதுகில் கட்டிக்கொண்டும், பால் விலை கூறிச் செல்லும் இடையன், கைக்கோலை ஊன்றி, 'வீளை' என ஒலி எழுப்ப அதைக் கேட்ட ஆட்டின் கூட்டம் வேறிடம் செல்லா அவ்விடத்திலேயே தங்கும்' என்பது 142 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். இப்பாடலில் முல்லை நிலத்தில் நடைபெறும் செயல்கள் நன்கு விளக்கப்பெற்றுள்ளன என்பதை எடுத்துக்காட்டுவதற்காக ஆசிரியர் இப்பாடல் அடிகளைக் கையாண்டுள்ளார்.

## மருதனிளநாகனார் பாடல்களில் காணலாகும் உள்ளுறையும் இறைச்சியும்

சோ.முத்தமிழ்ச்செல்வன் என்பவரால் இக்கட்டுரை எழுதப்பட்டுள்ளது (2001 பங்குனி, 2002 சித்திரை). மருதனிளநாகனார் தம் பாடல்களில் எவ்வாறு உள்ளுறைப் பொருளையும் இறைச்சிப் பொருளையும் சுட்டியுள்ளார் என்பதை விளக்குவது இக்கட்டுரையின் நோக்கம். இதில் நற்றிணை 21 ஆம் பாடலின்,

"... கான வாரணம்
பெயல்நீர் போகிய வியல்நெடும் புறவில்
புலரா வீர்மணன் மலிரக் கெண்டி,
நாளிரை கவர மாட்டித்தன்
பேடை நோக்கிய பெருந்தகு நிலையே!"

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன.

'காட்டுக்கோழி நீர் வடிந்த அகன்ற காட்டில் ஈரம் காயாத மணலை நன்கு பறித்து நாங்கூழ் புழுவைக் கவர்ந்து தன் பெடைக்கு ஊட்ட அன்புடன் நோக்கி நிற்கும்' என்பது பாடல் அடிகளின் பொருள். காட்டுக்கோழி நாங்கூழ்ப்புழுவைப் பெடைக்கு ஊட்ட நிற்பது போலத்

தலைவனும் ஈட்டிய பொருளைத் தலைவியிடம் செலுத்தி இன்புற வேண்டும் என்ற இறைச்சிப் பொருளை எடுத்துக் கூறுவதற்காக ஆசிரியர் இப்பாடல் அடிகளைக் கையாண்டுள்ளார்.

### நற்றிணை

ச.தண்டபாணி தேசிகர் எழுதிய இக்கட்டுரையில் 142 ஆம் நற்றிணைப் பாடலின்

"பறிப்புறத்து இட்ட பால்நொடை இடையன்"

எனும் அடி இடம்பெற்றுள்ளது.

'இடையன் கையில் பலவாகிய காலிட்டுப் பின்னிய உறியுடன், தீக்கடைக்கோல் முதலான கருவி பலவற்றைத் தோல்பையின் உள்ளே சுருக்கிக் கட்டி, அவற்றைப் பனைஓலைப் பாயோடு சேர்த்து முதுகில் கட்டிச் சென்றான்' என்பது பாடல் அடியின் பொருள். இடையர்கள் படுக்கவும், போர்க்கவும் பனை ஓலையால் முடைந்த பாயை முதுகில் கட்டியிருந்தனர் என்பதை விளக்க ஆசிரியர் இப்பாடல் அடியைக் கையாண்டுள்ளார். இக்கட்டுரை சங்க கால மக்கள் படுக்கவும், போர்த்துக் கொள்ளவும் எவ்வகையான பொருள்களைப் பயன்படுத்தினார் என்பதை அறிய உதவுகின்றது.

## 2.2.3 மருதம்

தமிழ்ப்பொழில் இதழில் 08 ஆய்வுக்கட்டுரைகளில் இடம்பெற்றுள்ள நற்றிணைக்குரிய மருதத்திணைப் பாடல்களின் எண்ணிக்கை 18 ஆகும்.

### தமிழில் தாவரங்கள்

கு.சீனிவாசன் எழுதிய "தமிழில் தாவரங்கள்" எனும் கட்டுரையில் 290 ஆம் நற்றிணைப்பாடலின் கருத்து காணப்படுகின்றது. 'ஆம்பலில் இருவகையுண்டு - ஒன்று வெள்ளாம்பல், மற்றொன்று செவ்வாம்பல். இது அரக்காம்பல் எனவும் அழைக்கப்படும். ஆம்பலின் வகைகளில் ஒன்றான "வெள்ளாம்பலைக்" குறிக்கவே இப்பாடல் ஆசிரியரால் பயன்படுத்தப் பட்டுள்ளது.

## தமிழ்நாட்டுப் பெண்களின் பண்பாடு

*சாமி.சிதம்பரனார் எழுதிய இக்கட்டுரையில் 120, 280 ஆகிய நற்றிணைப் பாடல்களின் கருத்துகள் காணப்படுகின்றன.*

*‘காதலனுடன் ஊடல் கொண்டிருக்கும் மனைவி, விருந்தினர் வந்தால் ஊடலை விட்டுவிடுவாள். விருந்தினரைப் போற்றுவதிலேயும், அவர்களுக்கு வேண்டிய உணவுப் பண்டங்களை ஆக்குவதிலேயும் பொழுது போக்குவாள். ஊடல் கொண்டிருந்த அவளுடைய முகத்தில் மகிழ்ச்சி தவழும் என்பது 120 ஆம் பாடலின் பொருள். தமிழ்நாட்டுப் பெண்கள் விருந்தினரை எவ்வாறு இன்முகத்துடன் போற்றி உணவு வழங்கினர் என்பதை இப்பாடல் மூலம் நன்கு அறியலாம்.*

*காதலன், பரத்தையர் நட்பை நாடித் திரிந்துவிட்டு மனைக்கு வருகின்றான். அவன் செயலைக் கண்டிப்பதற்கு மனைவிக்கு நேரமில்லை. அவன் செய்கைக்காக அவனுடன் ஊடல் கொள்ளுவதற்கு வாய்ப்பே கிடைக்கவில்லை. காரணம் ஓயாமல் விருந்தினர் வந்து கொண்டேயிருக்கின்றனர். அவர்களை வரவேற்று உபசரிப்பதிலேயே அவளுடைய நேரம் போய்க்கொண்டிருக்கின்றது என்பது 280 ஆம் பாடலின் பொருள். தமிழ்ப் பெண்கள் தம் வீட்டில் உள்ள பிரச்சினையைப் பொருட்படுத்தாது விருந்தினரையே பெரிதும் பொருட்படுத்தினர் என்பதை விளக்கவும், எவ்வளவு விருந்தினர் வந்தாலும் மனங்கோணாது உணவு படைத்தனர் என்பதை எடுத்துக்காட்டவும் இப்பாடலை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.*

## பழந்தமிழர் நம்பிக்கை

*இக்கட்டுரை சாமி.சிதம்பரனார் என்பவரால் எழுதப்பெற்றது (1959 ஆடி). ஆயிரக்கணக்கான ஆண்டுகளாகச் சில நம்பிக்கைகளும், பழக்க வழக்கங்களும் தமிழர் சமுதாயத்தில் கலந்து ஒன்றுபட்டுக் கிடக்கின்றன. அவைகளில் சிலவற்றை விளக்குவது இக்கட்டுரையின் நோக்கம். இதில் நற்றிணை 80 ஆம் பாடலின்,*

*“தைஇத் திங்கள் தண்கயம் படியும்*
*பெருந்தோள் குறுமகள்”*

*எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன.*

தை மாதத்தின் முதல் நாளில் குளிர்ந்த நீர் நிறைந்த குளத்திலே, நோன்புடன் நீராடும் பெரிய தோள்களையுடைய மகளிர் என்பது பாடலடிகளின் பொருள். 'தைநீராடுதல் என்னும் பண்டிகையைப் பண்டைத் தமிழ் மக்கள் கொண்டாடி வந்தனர். பெண்கள் நோன்பிருந்து, தை மாத முதலில் நீராடுவர். இதற்குத் தைந்நீராடுதல் என்று பெயர். பெண்கள் தாம் விரும்பும் நல்ல கணவனைப் பெறுவதற்காக மன்மதனை வேண்டிக்கொள்வது தை மாத நோன்பாகும் என்று திவ்யப் பிரபந்தம் நாச்சியார் திருமொழியில் காணப்படுகின்றது' என்ற கருத்தை விளக்க ஆசிரியர் இப்பாடலடிகளைப் பயன்படுத்தியுள்ளார். அக்கால மக்களிடம் காணப்பட்ட பழக்கவழக்கங்களையும், நம்பிக்கை முறைகளையும் இக்கட்டுரை சிறப்பாக எடுத்துக்காட்டுகின்றது.

## நற்றிணையில் ஒப்பனைக் கலை

வித்துவான் சொ.சிங்காரவேலனார் எழுதிய கட்டுரையில் 100, 170, 250, 90 ஆகிய நற்றிணைப் பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

"தேய்கமழ் ஐம்பால்" (100)

நெய்மணம் கமழும் தலைவியின் கூந்தல் சிறப்பை விளக்குவது இப்பாடலடியின் பொருளாகும். பெண்களின் கூந்தல் முடிப்பு முறைகளில் ஐந்து முறைகள் உள்ளன என்றும், இதனை 'ஐம்பால்' என வழங்குவர் என்றும் எடுத்துக் கூறுவதற்காக ஆசிரியர் இப்பாடல் அடியைப் பயன்படுத்தியுள்ளார். அக்கால மக்களின் கூந்தல் ஒப்பனையையும் கூந்தல் முறையையும் அறிந்துகொள்ள இப்பாடலடிகள் பெரிதும் பயனுள்ளதாய் அமைந்துள்ளன.

"மடக்கண் தகரக் கூந்தல்" (170)

மடப்பத்தை உடைய கண்களையும், மயிர்ச்சந்தனம் அணிந்த கூந்தலையும் உடையவள் தலைவி என்பது இப்பாடல் அடியின் பொருள்.

பெண்கள் தம் கூந்தலில் பூசி ஒப்பனை செய்துகொள்ளும் கலவைச் சாந்து 'தகரம்' எனக் கூறப்பட்டது என்பதை விளக்க இவ்வடியை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார். பெண்கள் கூந்தல் அழகைப் பராமரிக்க

எவ்வகையான சாந்துகளைப் பயன்படுத்தினர் என்பதை அறிய இப்பாடல் உதவுகின்றது.

“அரிபெய் கிண்கிணி ஆர்ப்ப” (250)

சிறிய தேரைப்பற்றி, இனிய மொழியை உடைய புதல்வன் கிண்கிணி ஒழிக்குமாறு நடைபயின்றனன் என்பது பாடலடியின் பொருளாகும். சிறிய புதல்வர்கள் கால்களில் அணியும் அணிவகையாக “கிண்கிணி” காணப்பட்டது என்பதை விளக்க இப்பாடல் அடி ஆசிரியரால் பயன்படுத்தப்பட்டுள்ளது. இப்பாடலின் மூலம் அக்கால மக்களின் குழந்தைகள் அணியும் அணிகலன்களை அறியமுடிகின்றது.

“புகாப்புகர் கொண்ட புன்பூங் கலிங்கமொடு” (90)

மகளிர் அணிந்திருந்த உடைகளிலும் எழில் நிரம்பிக் காணப்பட்டது. மேலும் பூக்கள் வேலைப்பாடும் அமைந்து விளங்கின என்பது பாடலடியின் பொருள். அக்கால மக்களின் ஆடைமுறைகளையும் ஆடைகளின் வேலைப்பாடுகளையும் எடுத்துக் கூறுவதற்காக இப்பாடல் அடியைத் தன்வசம் கொண்டு பயன்படுத்தியுள்ளார் ஆசிரியர்.

## சங்க அகத்துறைப் பாடல்களில் பாத்திரப் பண்போவியம்

இக்கட்டுரை சாலினி இளந்திரையன் என்பவரால் எழுதப்பெற்றது (1969 ஐப்பசி). ‘வாழ்வின் முக்கியமான சிக்கல் வாய்ந்த சூழலில் ஒருவர் செயற்படும் முறைதான் அவருடைய பண்பைத் தெளிவாக உணர்த்தவல்லதாக அமையும். எனவே அக்காலச் சமுதாயத்தில் மிகுதியாக நிலவிய பரத்தமையைப் பொறுத்தவரையில் தலைவன், தலைவி முதலியோர் நடந்துகொண்ட முறையே அவர்களுடைய வாழ்க்கையின் தனித்தன்மையைக் காட்டும் என்ற கருத்தில் அந்த நிகழ்ச்சியோடு தொடர்புடைய மருதத்திணையில் கணிசமான அளவு பாடல்கள் பாடியுள்ள அள்ளூர் நன்முல்லையார், ஆலங்குடி வங்கனார், ஓரம்போகியார், அவ்வையார், நக்கீரனார், பரணர்’ ஆகிய புலவர் பெருமக்களைப் பற்றிய இக்கட்டுரை எழுதப்பெற்றுள்ளது. இக்கட்டுரையில் 230, 330, 400, ஆகிய நற்றிணைப் பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

*ஆலங்குடி வங்கனார் மருதத்திணையில் பாடிய பாடல்கள் பரத்தை கூற்று, தோழிகூற்று என்னும் இரண்டு நிலைகளில் அடங்கும் என்ற செய்தியைக் கூற **230, 330, 400** ஆகிய பாடல் எண்களை ஆசிரியர் சுட்டிக்காட்டியுள்ளார்.*

*"மறங்கெழு சோழர் உறந்தை அவையத்து,*
*அறங்கெடல் அறியாது ஆங்கு சிறந்த*
*கேண்மையொடு அளைஇ நீயே*
*கெடுவறி யாய்என் நெஞ்சத்தானே" **(400)***

*'வீரம் பொருந்திய சோழரின் உறையூர் அவைக்களத்தே அறம் நீங்குதலை அறியாதவாறு சிறந்த நட்புடன் இருந்த தலைவன், தலைவியை நாடிச் சென்றானாம். தன்னுடைய நெஞ்சிடமிருந்து நீங்கான், ஆகையாலே அவன் பிரிவு தன்னை வருத்தாது என்று பரத்தை கூறுவது' இப்பாடல் அடிகளின் விளக்கமாகும். பரத்தை தலைவனுடன் எவ்வாறு ஈடுபட்டு இருந்தாள் என்ற பரத்தையின் பாத்திரப் பண்போவியத்தை விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.*

## நயந்தரும் நற்றிணை

*ஆ.பாலன் எழுதிய இக்கட்டுரையில் **210** ஆம் பாடலின்,*

*"அரிகால் மாறிய அங்கண் அகல்வயல்*
*மறுகால் உழுத ஈரச் செறுவின்,*
*வித்தொடு சென்ற வட்டி பற்பல*
*மீனொடு பெயரும் யாணர் ஊர!" **(210)***

*எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன. 'உழுதுண்டு வாழும் உழவர்கள் வயலில் விளைந்த நெல்லினையறுத்து, மீண்டும் தாளடிப் பயிர்க்காக விதையைக் கொண்டு சென்ற வட்டிலில், நிறைய மீன்களைக் கொண்டு வருகின்ற புது வருவாயையுடைய ஊரனே!' என்பது பாடல் அடிகளின் பொருள். மருதத்தின் இலச்சினையாய் விளங்கும் வயலின் வளப்பத்தையும், அங்கு வாழ்வோர் செய்யும் தொழிலைப் பற்றியும் எடுத்துரைக்க ஆசிரியர் இப்பாடல் அடிகளைக் கையாண்டுள்ளார்.*

## சங்க இலக்கியங்களில் துணங்கைக் கூத்து

*இக்கட்டுரை பழ.முத்தப்பன் என்பவரால் எழுதப்பெற்றது (1991 ஆனி). சங்க இலக்கியங்களில் கூத்து பற்றிய பல செய்திகள் இடம்பெற்றுள்ளன. சிலப்பதிகார உரையாசிரியர் அடியார்க்குநல்லார் உரையில் நாட்டிய நாடகமாகிய கூத்து வகைகளைப் பற்றிய ஒரு பட்டியலைப் பெறமுடிகிறது. தனிக்கூத்து நிலையில் குரவைக்கூத்தும் துணங்கைக்கூத்தும் பழைய அக இலக்கியங்களிலும், புற இலக்கியங்களிலும் இடம்பெற்றுள்ளன. இவ்விரு கூத்துகளில் துணங்கைக் கூத்து பற்றிய சங்க இலக்கியச் செய்திகளைத் தொகுத்து விளக்குவது இக்கட்டுரையின் நோக்கம். இதில் 50 ஆம் பாடலின்,*

*“விழவயர் துணங்கை”*

*எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன.*

*‘தலைவன் பரத்தையோடு விழாக்காலங்களில் துணங்கை ஆடினான் என்பது பாடலடியின் பொருள். துணங்கைக்கூத்து வெற்றியை வெளிப்படுத்தும் விழாவிலேயே ஆடப்பெறும். அத்தகைய துணங்கையின் சிறப்பை எடுத்துக்கூற ஆசிரியர் இப்பாடல் அடியைப் பயன்படுத்தியுள்ளார்.*

## சங்கத் தமிழரின் வாழ்வியல் கூறுகள்

*சு.கு.பன்னீர்ச்செல்வம் என்பவரால் இக்கட்டுரை எழுதப்பெற்றுள்ளது (2001 தை). சங்கத்தமிழரின் வாழ்வியல் கூறுகளான அகம், கற்புவாழ்வு உணவு, உடை, அணிகலன்கள், உறையுள், தொழில், கலைகள், கல்வி, குலம், சமயம், அரசியல் போன்ற பலவற்றை விளக்குவது இக்கட்டுரையின் நோக்கம். இக்கட்டுரையில் 320 ஆம் பாடலின் கருத்து இடம்பெற்றுள்ளது. பண்டைத் தமிழகத்தில் வாழ்ந்த மக்கள் பூவையும் தழையையும் கோர்த்து ஆடையாக அணிவது வழக்கம் என்ற கருத்தை மட்டும் எடுத்து விளக்குவதற்காக இப்பாடலை ஆசிரியர் கையாண்டுள்ளார். சங்கத்தமிழரின் வாழ்வியல் கூறுகளில் ஒன்றான ஆடைமுறையை அறிந்துகொள்ள இப்பாடல் உதவுகின்றது.*

## மருதனிளநாகனார் பாடல்களில் காணப்படும் உள்ளுறையும் இறைச்சியும்

சோ.முத்தமிழ்ச்செல்வன் என்பவர் எழுதிய இக்கட்டுரையில் 216 ஆம் பாடலின்,

"கண்ணுறு விழுமம் கைபோல் உதவி
நம்முறு துயரம் களையார் ஆயினும்"

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன.

'கண்ணில் விழும் நுண்ணிய துகளைக் கை விலக்குவது போல, தலைவி கொண்ட துன்பத்தைத் தலைவர் நீக்காமல் போனாலும், தலைவர் இல்லாத ஊர் பெரும் துன்பத்தைத் தருகின்றது' என்பது பாடலடிகளின் பொருளாகும். கண் - பரத்தை என்றும் விழுமம் - அவள்பெற்ற காமம் என்றும் கை தலைவன் என்றும் உள்ளுறை கூற இப்பாடலின் அடிகளைக் கட்டுரை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

## சங்க காலத்தில் தழையுடை

அ.ஜெயக்குமார் என்பவரால் இக்கட்டுரை எழுதப்பெற்றுள்ளது. இதில் 390 ஆம் பாடலின்,

"வயல்வெள் ஆம்பல் உருவ நெறித்தழை
ஐதகல் அல்குல் அணிபெறத் தைஇ"

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன.

வயலில் வெண்மையாய் விளங்கும் அழகிய நெறிப்புடைய ஆம்பலின் தழையை, மென்மையாய் அகன்ற அல்குலிடத்தே அழகுறப் பெண்கள் உடுத்துவர் என்பது பாடலடியின் பொருள். அக்கால மக்கள் ஆம்பலின் தழையை அல்குலில் உடுத்தி விழாவிற்குச் செல்வர் என்பதை விளக்க இப்பாடல் அடியை ஆசிரியர் கையாண்டுள்ளார். பழங்கால மக்களின் ஆடை முறையை அறிந்துகொள்ள இப்பாடல் பெரிதும் உதவுகின்றது.

## நற்றிணை

ச.தண்டபாணி தேசிகர் எழுதிய இக்கட்டுரையில் 40, 300 ஆகிய நற்றிணைப் பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

"குரைஇலைப் போகிய விரவுமணற் பந்தர்" (40)
ஒலிக்கின்ற தென்னங்கீற்றுப் புனைவு செய்த மணல் பரப்பிய பந்தல் என்பது இப்பாடலடியின் பொருளாகும்.

"அட்டில் ஓலை தொட்டனை நின்மே" (300)

சமையற்கூடக் கூரையின் பனையோலையைத் தொட்டு நிற்கும் தலைவன் என்பது இப்பாடல் அடியின் பொருள். பனை ஓலைகளாலும் தென்னங்கீற்றுகளாலும் எளிய மக்கள் தங்கள் இருப்பிடத்தை அமைத்துக்கொண்டனர் என்பதை எடுத்துக்காட்ட இப்பாடல்களின் அடிகளை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார். இப்பாடல்கள் இரண்டும் அக்கால எளிய மக்களின் இருப்பிடங்களை அறிந்துகொள்ளப் பெரிதும் பயன்படுகின்றன. மேலும், எளிய மக்கள் தங்கள் இருப்பிடங்களை எவ்வகையான பொருள்களைக் கொண்டு அமைத்தனர் என்பதைத் தெரிந்துகொள்ளவும் உதவுகின்றன.

### 2.2.4 நெய்தல்

தமிழ்ப்பொழில் இதழில் எடுத்தாளப்பெற்றுள்ள நற்றிணைக்குரிய நெய்தல் திணைப் பாடல்களின் எண்ணிக்கை 20 ஆகும்.

### தமிழில் தாவரங்கள்

கு.சீனிவாசன் எழுதிய "தமிழில் தாவரங்கள்" எனும் கட்டுரையில் 178, 283, 96, 382, 78, 372, 117, 382 ஆகிய நற்றிணைப் பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன. இவற்றில் 178 ஆம் பாடல் வேங்கைச் சிறப்பை எடுத்துக்கூறப் பயன்பட்டுள்ளது. மற்ற பாடல்கள் அனைத்தும் நெய்தலின் சிறப்பை விளக்கக் கையாளப்பட்டுள்ளன.

"சுரும்புண விரிந்த கருங்கோல் வேங்கை"

இப்பாடல் 178 என்று குறிக்கப்பெற்று தமிழ்ப்பொழில் இதழில் (1959-60 ஏப்ரல், மே பக்கம் -26) இடம்பெற்றுள்ளது. ஆனால் நியூசெஞ்சுரி பதிப்பில் 178 ஆம் பாடலில் இவ்அடி இடம்பெறவில்லை.

“ஒண்ணுதல் மகளிர் ஓங்குகழிக் குற்ற
கண்ணேர் ஒப்பின் கமழ்நறு நெய்தல்” *(283)*

‘கண்களை ஒப்புக் கூறுதற்குரியனவான, மனங்கமழும் நெய்தல் பூவை, ஒளிபொருந்திய நெற்றியை உடைய பரதவ மகளிர், உப்பங்கழியிடத்தே பார்த்து வருவர்’ என்பது இப்பாடல் அடிகளின் பொருள்,

“கொடுங்கழை நிவந்த நெடுங்கால் நெய்தல்
அம்பகை நெறித்தழை அணிபெறத் தைஇத்” *(96)*

‘வளர்ந்த தண்டை உடையதும், நீண்ட கால்களையுடையதுமான அழகிய நெய்தலை ஒன்றொடொன்று மாறுபடத்தொகுத்துத் தொடுத்த அத்தழையை அழகு எனத் தலைவன் தலைவிக்கு அணிந்து விடுவான்’ என்ற கருத்தை இப்பாடல் அடிகள் விளக்குகின்றன.

“நீல்நிற நெய்தல்” *(382)*
நீல நிற நெய்தல் என்பது இப்பாடல் அடியின் பொருளாகும்.

“நீல்நிற நெய்தல் நிரையிதழ் பொருந்த” *(382)*

நீலநிறத்தைக் கொண்ட நெய்தல் மலரின் வரிசையுற மலர்ந்த இதழ்கள், ஒரு படித்தாக அமைந்திராமல், அலைகள் வீசும் என்பது இப்பாடல் அடியின் பொருளாகும். நெய்தல் பூ மனங்கமழும் தன்மையுடையது. இதன் பூ கண் போன்ற தோற்றத்தில் காணப்படும். உப்பங்கழியில் வளரும் தன்மையுடையதான, இதன் தண்டு நீண்டது. நெய்தல் பூவை ஒன்றொடொன்று தொகுத்து அதனால் உருவான தழையை மகளிர் அணிவர். நெய்தல் பூ நீலநிறமுடையது போன்ற நெய்தல் பற்றிய பல செய்திகளை விளக்கவும் நெய்தல் செடியின் சிறப்பை எடுத்துக்கூறவும் ஆசிரியர் இப்பாடல் அடிகளைப் பயன்படுத்தியுள்ளார்.

“கோட்சுறா வழங்கும் வாட்கேழ் இருங்கழி
மணியேர் நெய்தல் மாமலர் நிறையப்
பொன்நேர் துண்தாது புன்னை தாஅம்
வீழ்தாள் தாழைப் பூக்கமழ், கானல்” *(78)*

‘உப்பங்கழியில் நீர் தேங்கி நிற்கிறது. அதில் சுறா மீன்கள் திரிகின்றன. நெய்தல் பூ வளர்ந்து பூத்துள்ளது. மலர்கள் நீலமணி போன்று விரிந்துள்ளன. உப்பங்கழியின் கரையோரத்திலே புன்னை மரமும் பூத்திருக்கிறது. புன்னையின் பூக்கள் தமது பொன் நிறமான தாதுக்களை நெய்தல் மலர்மேல் நிறையும்படியாகத் தூவுகின்றன. அக்கானலிடத்தே வீழ் ஊன்றிய அடியையுடைய தாழையின் மலர் மணங்கமழும்’ என்பது பாடலின் பொருள். ‘இருங்கழியின் நெய்தல் மலர் நிறையுமாறு புன்னை நுண்ணிய தாதினை உதிர்க்கும் என்றது, சேரியிடத்துத் தலைவியின் கைகளில் நிறைந்த பொற்குவியலைத் தலைவன் மணம்புரி கொடையாக வழங்குவான் என்பதை விளக்கும். மேலும், தாழம்பூவின் மணம் கடற்கரைச் சோலையெங்கும் வீசும் என்றது தலைவிக்கு நிகழும் திருமணம் நாடெங்கும் மாட்சிமைப்பட்டு விளங்கும்’ என்பதாகும். மேற்கூறப்பட்ட இரண்டு இறைச்சிப் பொருள்களை விளக்க ஆசிரியர் இப்பாடல் அடிகளைக் கையாண்டுள்ளார்.

“கானல் பெண்ணைத் தேனுடை அழிபழம்,
...” (372)

கானல்... எனும் அடிமுதலாக 12 அடிகள் இப்பாடலில் இடம்பெற்றுள்ளன. ‘தலைவி, காதலனது நீர்த்துறையில் நெய்தல் பூத்துள்ளது. கரை ஓரமாகப் பனைமரம் பழுத்திருக்கிறது. தேன் போன்று இனிக்கும் பனையின் பழம் நெய்தற்பூவின் மேலே விழுகிறது. நெய்தல் பூவும் மொட்டுகளும் சிதைந்து போகின்றன. விழுந்த வேகத்தில் பனம்பழம் சேற்றில் ஆழ்கின்றது. இவ்வோசைக்கு அஞ்சிக் குருகினம் ஓடுகின்றது. இத்தகைய துறைக்குரிய தலைவனுடன் நினது களவு ஒழுக்கத்தையறியாத இவ்வூர் நீ ஏதோ அன்னை தந்த கோல் ஒடிந்ததற்கு வருந்துகிறாய் என்று பிறழ உணர்ந்துள்ளது. ஆதலின் உன்னை இச்செறிக்கமாட்டார்கள். மனம் அழியாதே’ என்பது பாடலடியின் பொருளாகும்.

பனம்பழம் நெய்தல் வருந்த சேற்றில் விழக்கண்டு குருகினம் அஞ்சி ஓடும் என்பது தலைவன் களவொழுக்கம் கெட நின்னை மணப்பின் அலர் கூறும் பெண்டீர் இழிந்தொழிவர் என்பதை விளக்கும் என இப்பாடலில்

வரும் உள்ளுறை உவமத்தை எடுத்துரைப்பதற்காகவே ஆசிரியர் இப்பாடல் அடியைக் கையாண்டுள்ளார்.

"வள்ளிதழ் நெய்தல் கூம்பப் புள்ளுடன்
கமழ்பூம் பொதும்பர்க் கட்சிச் சேர
செல்சுடர் மழுங்க" (117)

மாலைப் பொழுதின் நிகழ்வுகளையும் மாலைப் பொழுதில் தலைவிக்கு ஏற்படும் தலைவனின் பிரிவுத் துயரையும் இப்பாடல் அடிகள் விளக்குகின்றன. 'நெய்தல் பூ நறுமணமும் தேனும் உடையது. வண்டுகளில் ஒருவகையான சுரும்பு தேன் உண்ணும் பொருட்டுப் பெரியதும் தண்ணியதுமான நெய்தற்பூ மலரும்,' என்ற கருத்தைக் கூறுவதற்காக இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## நற்றிணையில் தாவரங்கள்

வித்துவான் சொ.சிங்காரவேலனார் எழுதிய இக்கட்டுரையில் 249, 278 ஆகிய நற்றிணைப் பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

"இரும்பின் அன்ன கருங்கோட்டுப் புன்னை
நீலத்து அன்ன பாசிலை அகந்தொறும்;
வெள்ளி அன்ன விளங்குஇணர் நாப்பண்
பொன்னின் அன்ன நறுந்தா துதிர" (249)

'புன்னை மரம் இரும்பைப் போன்ற நிறமுடைய கரிய கிளைகளை உடையது. நீலமணி போன்ற பசிய இலைகளையுடையது. அவ்விலைகளில் வெள்ளிபோன்று மலர்ந்து விளங்கும் பூங்கொத்துகளின் நடுவிலிருந்து பொன்துகளை ஒத்துத் தோன்றும் மணமுடைய மகரந்தம் உதிரும்' என்பது இப்பாடல் அடிகளின் விளக்கம்.

புன்னையின் எழில்நலத்தை விளக்கவந்த உலோச்சனார் உலோகங்களோடு இணைத்து உரைத்துள்ள திறம் உள்ளந்தொறும் உவகை பயப்பதாகும் என்ற கருத்தைக் கூற இப்பாடல் அடிகளைக் கையாண்டுள்ளார்.

*“சூடுநர் தொடுத்த மிச்சில் கோடுதொறும்*

*நெய்கனி பசுங்காய் தூங்குந் துறைவனை” (278)*

*‘புன்னை மரத்தின் அரும்புகள் மலரும், அம்மலர்களைச் சூடிக்கொள்பவர் பறித்துக்கொண்டது போக எஞ்சியவை கிளைகளில் எல்லாம் நெய்ப்புமிக்க பசிய காய்களாகத் தொங்கும் கடற்கரைக்குத் தலைவன் என்பது பாடலடிகளின் பொருளாகும். புன்னை மலர்களை மாலைக்காகப் பறிக்கும் வழக்கம் இருந்ததென்றும் புன்னைக்காயிலிருந்து நெய் எடுக்கும் வழக்கம் அன்றும் இருந்தது என்ற குறிப்பையும் உணர்த்துவதற்காக இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.*

## நற்றிணையில் ஒப்பனைக்கலை

*வித்துவான் சொ.சிங்காரவேலனார் எழுதிய இக்கட்டுரையில் 283, 354, 78 ஆகிய நற்றிணைப் பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.*

*“அகல்வரிச் சிறுமனை அணியுந் துறைவ!” (283)*

*நல்ல நெய்தல் மலர்களால் சிறிய இல்லத்தை அழகு செய்வர். அத்தகைய இல்லத்தையுடைய துறைவனே என்பது இப்பாடல் அடியின் பொருளாகும். மகளிர் தம் இல்லங்களில் அன்றன்று கொய்து வந்த மலர்களை அழகுபெற வைத்து அணிசெய்வர் என்பதை விளக்கவும் அக்கால மக்கள் எவ்வாறு தம் இல்லங்களை ஒப்பனை செய்து அழகுபடுத்தினர் என்பதை எடுத்துரைக்கவும் ஆசிரியர் இப்பாடல் அடியைக் கையாண்டுள்ளார்.*

*“...பெண்ணை*

*வீழ்கா வோலைச் சூல்சிறை யாத்த” (354)*

*பனைமரங்களில் இருந்து வீழும் ஓலைகளைக் காவிக் கொணர்ந்து சூழ்கின்ற வேலியில் மறைவு உண்டாகும் வண்ணம் கட்டுவர் என்பது பாடல் அடியின் பொருளாகும். ‘வீட்டைச்சுற்றி வேலிகள் அக்காலத்தில் அமைக்கப்பட்டிருந்தன. அவை இரண்டு வகைப்படும். ஒன்றுபட்டுப் போனமுள்ளால் செய்யப்பட்ட வேலி, இது ‘இருமுள்வேலி’ என அழைக்கப்பட்டது. மற்றொன்று, உயிருடைய முள் செடிகளால் நிறைந்த*

வேலி இது 'வாழ்முன்வேலி' இதோடு மட்டுமல்லாமல் பனைமட்டைகளாகிய ஓலைகளாலும் வேலி அமைத்தனர் என்ற கருத்தை விளக்க ஆசிரியர் இப்பாடல் அடியைக் கையாண்டுள்ளார். இதன் மூலம் அக்கால மக்கள் வீட்டைப் பாதுகாக்கப் பலவேலி முறைகளைப் பின்பற்றினர் என்பதை அறிய முடிகின்றது.

"புள்ளுநிமிர்ந் தன்ன பொலம்படைக் கலிமா" (78)

பொன்னால் செய்த அணிகள் நிரம்பிய, பறப்பது போன்று விரையும் குதிரைகள் பொருந்திய தேரை உடையவன் தலைவன் என்பது பாடல் அடியின் பொருள். அக்கால மக்கள் வீட்டிலே வாழ்ந்து, தேர் இழுக்க உதவும் குதிரைகளுக்குப் பொன்னால் செய்யப்பெற்ற 'சேணம்' அணிவித்தனர் என்பதை விளக்க இப்பாடல் அடியினை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

## சங்க இலக்கியங்களில் பேய்

வி.சா.பாலசுப்பிரமணியன் எழுதிய இக்கட்டுரையில் நற்றிணை 15 ஆம் பாடலின்,

"மாசில் கற்பின் மடவோள் குழவி
ஒய்ய வாங்கக் கைவிட் டாங்கு"

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன. குற்றமற்ற கற்பினையுடைய அழிவற்ற ஒருத்தி தன் குழந்தையைப் பேய் வாங்கிக்கொள்ளக் கைவிட்டாள். அது போலத் தலைவி நாணத்தைக் கைவிட்டாள் என்பது பாடல் அடிகளின் பொருள். உயிருள்ளவர்களைப் பேய்கள் உண்பதில்லை. எனவே, ஒரு பெண் தன் குழந்தையைப் பேய்க்குப் பலியிட முயல்கின்றாள் என்பதை விளக்கவும், உயிர்ப்பலியே அன்றி நரபலி இடும் வழக்கமும் பழங்காலத்தில் இருந்தமையைத் தெளிவுபடுத்தவும் இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியம் கூறும் அறம்

இக்கட்டுரை க.அமுதா என்பவரால் எழுதப்பெற்றது (2001 மாசி). அக்காலங்களில் தோன்றிய நூல்களில் பெரும்பங்கினை அற இலக்கியங்கள்

பெற்றுள்ளன. அறவாழ்வு எச்சமுதாயத்தில் எந்தக் காலத்தில் நிலைத்திருந்ததோ, அக்காலம் என்றும் மக்களால் பேணப்படும் என்பதற்குச் சங்ககாலம் சான்றாகும். பொற்காலமாகப் போற்றப்படும் சங்ககாலத்தில் அறம் அகவாழ்விலும் புறவாழ்விலும் வெளிப்படும் சில இடங்களை ஆராய்வது இக்கட்டுரையின் நோக்கம். இதில் 63, 145, 275 ஆகிய நற்றிணைப் பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

"அறன்இல் அன்னை" (63)

அறமற்ற அன்னை என்பது இப்பாடல் அடியின் பொருளாகும்.

"தான்யாங் கென்னும் அறனில் அன்னை" (145)

அறனில்லாத அன்னை என்பது இப்பாடல் அடியின் பொருள்.

களவுக் காலத்தில் அலர் ஏற்படுவது இயற்கை. அதனை அறிந்த தாய் தலைவியை வெளியில் விடாது இற்செறிப்பாள். தாயின் அச்செயலைக் கண்ட தோழி தாய் அறமற்றவள் என்று கூறுவாள். காரணம் சங்ககாலத்தில் தலைவன், தலைவி இருவரும் ஒன்றுபட்டுவிட்டாலே கற்பாகக் கருதப்படுவதோடு ஊழ் வழியினால் சந்தித்தவர்கள் அவர்கள் நன்மைகருதி அவர்களைத் தாய் பிரித்தாலும் அச்செயல் அறமற்றதுதான் என்பதைப் புலவர் உலகம் ஏற்றதைத் தோழிகூற்று வாயிலாக வெளிப்படுகின்றன. சங்ககாலத்தில் அறம், அகவாழ்வில், குறிப்பாகத் தோழி கூற்றில் எவ்வாறு காணப்பட்டது என்பதை விளக்க ஆசிரியர் இப்பாடல் அடியைப் பயன்படுத்தியுள்ளார்.

"அறனிலாளன்" (275)

அகத்தில் விரும்பிய தலைவியை உரிய கற்பினுக்கு அழைத்துச் செல்வது தலைவனுக்கு அறம். அவ்வாறு மணம் முடிக்காமல் காலதாமதம் ஏற்படுத்தும்போது 'அறனிலாளன்' என்று சிறைப்புறமாக நிற்கும் தலைவனின் காதுகளில் விழும்படித் தோழி கூறுகின்றாள். இது இப்பாடலடியின் பொருள். கூற்றில் வெளிப்படும் தலைவனின் அறத்தை எடுத்துக்கூறுவதற்காக ஆசிரியர் இப்பாடல் அடியைக் கையாண்டுள்ளார்.

## சங்ககாலத்தில் தழையுடை

*அ.ஜெயக்குமார் என்பவர் எழுதிய இக்கட்டுரையில் 363, 96, 54 ஆகிய நற்றிணைப் பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.*

*“பைந்தழை சிதையக் கோதை வாட” (363)*

*தழையுடை சிதையவும் தழைமாலை வாடவும் தலைவி விளையாடுவாள் என்பது இப்பாடல் அடியின் விளக்கம்.*

*“கொடுங்கழை நிவந்த நெடுங்கால் நெய்தல்*
*அம்பகை நெறித்தழை அணிபெறத் தைஇ” (96)*

*நீண்ட கால்களையுடைய நெய்தலின், அழகிய ஒன்றொடொன்று மாறுபடத்தொடுத்த தழையை, அழகுமிகத் தலைவன் அணிவித்துவிட்டுச் சென்ற இடம் இந்தக் கடற்கரைச்சோலை என்று தலைவி கூறுவது இப்பாடல் அடிகளின் பொருளாகும்.*

*“... தழையோர்*
*கொய்குழை அரும்பிய குமரி ஞாழல்” (54)*

*தழையாடை அணிபவர் கொய்தற்கு ஏற்ற வகையில் இலை தழைத்துத் தாழ்ந்து இளைய ஞாழல் மரம் நிற்கும் என்பதை இப்பாடல் அடிகள் விளக்குகின்றன. அக்கால மக்கள் தழையாடையை விரும்பி அணிந்தனர் என்பதை விளக்கவும், நெய்தல், ஞாழல் மரம் போன்றவற்றில் இருந்து தழையாடை செய்தனர் என்பதை எடுத்துக்காட்டவும் ஆசிரியர் இப்பாடல்களைப் பயன்படுத்தியுள்ளார்.*

## நற்றிணை

*ச.தண்டபாணி தேசிகர் எழுதிய இக்கட்டுரையில் 54, 354, 38, 388, 303, 363, 354, 311 ஆகிய நற்றிணைப் பாடல்கள் இடம்பெற்றுள்ளன. நெய்தல் நிலமக்கள் தழையை அணிந்தனர் என்பதை எடுத்துக்காட்டுவதற்காக 54 ஆம் பாடல் எண்ணை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.*

*அக்கால மக்கள் வீடுகளைச் சுற்றிப் பனைமட்டைகளாலும் முட்களாலும் வேலியிட்டு இருந்தனர் என்பதை விளக்க 354, 38 ஆகிய*

பாடல் எண்களை ஆசிரியர் கையாண்டுள்ளார். அக்கால மக்கள் வீட்டினைப் பாதுகாக்க எவ்வகையான முறையைக் கையாண்டனர் என்பதை அறிய இப்பாடல்கள் உதவுகின்றன.

"............நோன்புரிக்
கயிறுகடை யாத்த கடுநடை எறிஉளித்
திண்திமில் பரதவர்" (388)

வன்மை மிக்க புரிகளால், முறுக்குண்ட கயிற்றின் முனையிலே விரைந்து செல்லும் ஈட்டியுடன் திண்ணிய படகிலே பரதவர் வேட்டையாடச் செல்வர் என்பது இப்பாடல் அடிகளின் பொருளாகும். பரதவர்கள் நீண்ட கயிற்றின் நுனியில் எறிஉளிகளைக் கட்டி அதை மீனுடலிற் பதியுமாறு வீசி எறிந்து வேட்டையாடுவர் என்பதை விளக்க ஆசிரியர் இப்பாடல் அடிகளைக் கையாண்டுள்ளார். பரதவர்களின் வேட்டைமுறையை அறிந்துகொள்ள இப்பாடல் பெரிதும் பயன்படுகின்றது.

"தொன்றுஉறை கடவுள் சேர்ந்த பராரை
மன்றப் பெண்ணை" (303)

நெடுநாளாக வாழ்கின்ற தெய்வம் தங்கப்பெற்ற, பருத்த அடியை உடைய, ஊர்ப்பொதுவில் உள்ள பனை என்பது பாடலடிகளின் பொருளாகும். அக்கால மக்கள் கடவுளைப் பனைமரத்தில் வைத்து வணங்கினர் என்பதை விளக்க இப்பாடல் அடியை ஆசிரியர் கையாண்டுள்ளார். பழங்கால மக்களின் வழிபாட்டிற்குரிய தெய்வங்கள் இருக்கும் இடங்களை அறிய இப்பாடல் துணைசெய்கின்றது.

நெய்தல் நிலத்துச் சிறுவர்கள் நண்டை வளைத்துத் துரத்தியும், கடலலையைக் காலாலெற்றியும், அந்நிலத்து மக்கள் வண்டலாடியும் அடும்புக் கொடியின் மலர் கொய்தும் விளையாடினர் என்பதை விளக்க **363, 354** ஆகிய பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார். அக்கால நெய்தல் நிலச் சிறார்களின் விளையாட்டுமுறையை இப்பாடல் மூலம் நன்கு அறியலாம்.

"பெயினே, விடுமான் உளையினம் வெறுப்பத் தோன்றி
இருங்கதிர் நெல்லின் யாணர் அஃதே
வறப்பின், மாநீர் முண்டகந் தாஅய்ச் சேறுபுலந்து,
இருங்கழிச் செறுவின் வெள்ளுப்பு விளையும்" (311)

மழை பெய்வதால் கலைமான் கூட்டமும் உண்டு தெவிட்டக்கூடிய நெல் விளையும். மழைபெய்யாவிட்டால் உப்பங்கழிகளில் நீர்வற்றி அறுசுவையுள் சிறந்த உப்பு விளையும் என்பது பாடல் அடிகளின் பொருளாகும். மழை பெய்தாலும் பெய்யாவிட்டாலும் நெய்தல் நிலம் சிறப்பாக, வளம் நிறைந்ததாகக் காணப்படும் என்பதை விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

### 2.2.5 பாலை

தமிழ்ப் பொழில் இதழில் 09 ஆய்வுக்கட்டுரைகளில் எடுத்தாளப்பெற்றுள்ள நற்றிணைக்குரிய பாலைத்திணைப் பாடல்களின் எண்ணிக்கை 43 ஆகும்.

### தமிழில் தாவரங்கள்

கு.சீனிவாசன் எழுதிய இக்கட்டுரையில் 313, 28, 13, 118, 243, 113, 302, 246, 296, 141, 46 ஆகிய நற்றிணைக்குரிய பாலைத்திணைப் பாடல்களில் அடிகள் இடம்பெற்றுள்ளன. இப்பாடல்களைத் தாவரங்கள் அடிப்படையில் பகுத்துக் கீழ்வருமாறு அட்டவணைப்படுத்தலாம்.

| வ.எண். | தாவரங்கள் | பாடல் எண்கள் |
|---|---|---|
| 1. | வேங்கை | 313, 28, 13 |
| 2. | மாமரம் | 118, 243 |
| 3. | ஆம்பல் | 113 |
| 4. | கொன்றை | 302, 246, 296, 141, 46 |

"கருங்கால் வேங்கை நாளுறு புதுப்பூப்
பொன்செய் கம்மியன் கைவினை கடுப்பத்
தகைவனப்புஉற" (313)

'கரிய கிளைகளை உடைய வேங்கை மரத்தில் தினமும் காலையில் மலரும் புதிய பூ, பொன்வேலை செய்யும் பொற்கொல்லனுடைய

கைவினை வண்ணம் போல மிக அழகானதாக இருக்கும்' என்பது பாடல் அடிகளின் பொருளாகும். 'வேங்கையினம் கணுக்குருத்தாகவும், நுனிக்குருத்தாகவும் வளர்ந்து கொத்தாகப் பூக்கும். இப்பூ மஞ்சள் நிறமானது, ஐந்து புறவிதழ்களும் கருமை கலந்த பழுப்பு நிறமுடையனவாகவும், ஐந்து அகவிதழ்களும் புறவிதழ்களைக் காட்டிலும் இருமடங்கு பெரியவையாகவும், பொன்மஞ்சள் நிறமுடையனவாகவும், இதழ்களின் விளிம்புகள் அமைந்தும் இப்பூ கண்கவர் வனப்புடையதாகவும் இருக்கும்' என்ற கருத்தை விளக்க ஆசிரியர் இப்பாடல் அடிகளைக் கையாண்டுள்ளார்.

"பொன்னென
வேங்கை தாய ஓங்குமலை அடுக்கத்து" (28)

பொன்போன்ற வேங்கை மலர் உதிரும் மலைப்பக்கம் என்பது இப்பாடலடிகளின் பொருள். வேங்கை மலரின் அழகை விளக்கவும், நல்ல மஞ்சள் நிறமுள்ள வேங்கைப் பூவைப் பொன்வண்ணத்திற்கு உவமிக்கும் தமிழரின் திறனை எடுத்துக்காட்டவும் இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

"கொல்லன்
எறிபொன் பிதிரிற் சிறுபல் காய
வேங்கை வீயுகு மோங்குமலைக் கட்சி" (13)

'கொல்லன் உலைக்களத்தில் அடிக்கும் இரும்பின் பொறி சிதறுவதுபோல, சிறிய பல காயையுடைய வேங்கை மரத்தின் மலர்கள் உதிரும்' என்பது இப்பாடலடிகளின் பொருளாகும். வேங்கைமரப் பூவின் சிறப்பைக் கூறவும், பூத்த வேங்கையின் பூ உதிர்தலை விளக்கவும் ஆசிரியர் இப்பாடல் அடிகளைப் பயன்படுத்தியுள்ளார்.

"அடைகரை மாஅத்து அல்குசினை ஒலியத்
தளிர்கவின் எய்திய தண்ணறும் பொதும்பின்" (118)

ஆற்றை அடுத்து அமைந்துள்ள கரையில் மாமரங்களின் நெருங்கிய கிளைகள் தளிர்த்தும், குளிர்ச்சியுடையதாகவும், மணம் வீசுவதாகவும் அமைந்திருக்கும் என்பது இப்பாடல் அடிகளின் கருத்தாகும்.

"அலங்குசினை பொதுளிய நறுவடி மாஅத்துப்
பொதும்புதோ றல்கும் பூங்கண் இருங்குயில்" (243)

மாமரங்கள் தோறும் மாவடுக்கள் நிரம்பி நிற்கும் சோலையிலே, பூப்போன்ற கண்களையுடைய குயில்கள் தங்கியிருக்கும் என்பதை இப்பாடல் அடிகள் விளக்குகின்றன. வேனிற்காலத்தில் மாந்தளிர்கள் தழைக்கும் என்ற கருத்தை விளக்கவும், மாமரத்தின் சிறப்புகளை எடுத்துக்கூறவும் ஆசிரியர் மேற்கண்ட பாடல்களின் அடிகளைக் கையாண்டுள்ளார்.

"ஆம்பலங் குழலின் ஏங்கி" (113)

ஆம்பலென்னும் பண்ணை உடைய குழல் என்பது பாடல் அடியின் பொருளாகும். ஆம்பலெனுஞ் சொல் ஆம்பற் பூவினையன்றி, ஆம்பற்பண்ணையும் ஒருவகைக் குழலையும் பேரெண்ணையும் குறிக்கும் என்பதை விளக்க நச்சினார்க்கினியர், அரும்பத உரையாசிரியர், அடியார்க்குநல்லார், பின்னத்தூரரார் போன்றோரின் கருத்துகளை இக்கட்டுரை ஆசிரியர் விளக்குகின்றார்.

'நச்சினார்க்கினியர் (சீவக.1314) ஆம்பற் பண்ணையுடைய குழல் என்றும், ஆம்பல் (சீவக.1662) ஆம்பலென்னும் பண் என்றும் கூறுகிறார். அரும்பதஉரையாசிரியர் (சிலப்.17) ஆம்பல் முதலானவை சில கருவி என்றும், ஆம்பல் பண்ணை மொழியாம்பல், வாயாம்பல், முத்தாம்பல் என்றும் கூறுகிறார். அடியார்க்குநல்லார் ஆம்பற் பண்ணென்பதை மறுத்து வெண்கலத்தால் குழல் வடிவாக அணைசு பண்ணிச் செறித்த குழல் என்று கூறுவார். பின்னத்தூரர் அடியார்க்குநல்லாரைப் பின்பற்றி (நற்.113) வெண்கலத்தால் ஆம்பற் பூ வடிவாக அணைசு பண்ணி நுனியில் வைக்கப்பட்ட புல்லாங்குழல் என உரை கூறுகின்றார்.' இவ்வாறாக 'ஆம்பல்' என்ற சொல்லுக்கு விளக்கம் அளிக்க இக்கட்டுரை ஆசிரியர் இப்பாடல் அடியைக் கையாண்டுள்ளார்.

“நீடுசுரி இரண சுடர்வீக் கொன்றை” (302)

நீண்ட அரிந்த பூங்கொத்திலுள்ள ஒளிவீசக்கூடிய கொன்றைப் பூக்கள் என்பது பாடல் அடியின் கருத்தாகும்.

கொன்றை கார்காலந் தொடங்குவதற்கு முன் வைகாசி, ஆனி மாதங்களிலேயே மலர்கின்றது. இதன் பூக்கள் மஞ்சள் நிறமுடையதாக இருக்கும். இது கொத்துக்கொத்தாகப் பூக்கும் இயல்புடையது என்ற கொன்றை மலர் பற்றிய கருத்தை விளக்க இப்பாடல் அடியை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

“... புறவின்
பொன்வீக் கொன்றையொடு பிடவுத்தளை அவிழ
இன்னிசை வானம் இரங்குமவர்
வருது மென்ற பருவமோ இதுவே” (246)

தலைவன் வருவதாகக் குறித்த பருவத்தில் பொன்போன்ற மலருடைய கொன்றையும், பிடவமும் மலரும் இனிய குரலை உடைய மேகம் முழங்கும் என்பது பாடல் அடிகளின் பொருள். கொன்றை கார்காலத்தில் பூக்கும் என்பதை விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

“புழற்காய்க் கொன்றைக் கோடணி கொடியிணர்” (296)

உட்கூடு அமைந்த காய்களைக் கொண்ட சரக்கொன்றையின் கிளைகளில் அழகிய கொடி படர்வது போன்று உயர்ந்த மலையின் உச்சியில் பூங்கொத்துகள் அமைந்திருக்கும் என்பது பாடல் அடியின் கருத்தாகும்.

“... பாணர்
அயிர்ப்புக் கொண்டன்ன கொன்றையந் தீங்கனி” (46)

கொன்றைக்காயை, பாணர் பெருமுழவடித்தற்குப் பயன்படுத்தும் கோல் போன்றதெனக் கூறுவர் என்பது இப்பாடல் அடிகளின் கருத்தாகும்.

"பொரியரை ஞெமிர்ந்த புழற்காய்க் கொன்றை
நீடிய சடையோடு ஆடா மேனிக்
குன்றுறை தவசியர் போலப் பலவுடன்" *(141)*

'பொரிந்தமை போன்று காட்சிதரும் அடிமரத்தையும் உள்ளே துளையமைந்த காய்களையும் கொண்ட கொன்றைமரம், தவம் புரியும் முனிவர் போலத் திகழும்' என்பது பாடலடிகளின் பொருளாகும். மேலே இடம்பெற்றுள்ள பாடல்களில் பாடலடிகள் அனைத்தும் கொன்றைக்காய் உள்ளீடு உடையது என்பதை விளக்கவும் கொன்றைக்காய் முற்றியவுடன் ஓரடி, ஒன்றரையடி நீண்டு கருநிறமுடையதாக விளங்கும் என்பதைத் தெளிவுபடுத்தவும் ஆசிரியரால் கையாளப்பட்டுள்ளது. கொன்றைக்காயின் சிறப்புகளை எடுத்துக் கூறுவதற்காக ஆசிரியர் மேலே உள்ள இப்பாடல் அடிகளைப் பயன்படுத்தியுள்ளார்.

## நற்றிணையில் தாவரங்கள்

வித்துவான் சொ.சிங்காரவேலன் எழுதிய கட்டுரையில் 105, 296, 302, 256, 126, 174, 56, 224, 52, 118, 337, 3, 279, 3 ஆகிய நற்றிணைப் பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன. இப்பாடல்களைத் தாவரங்கள் அடிப்படையில் பகுத்துக் கீழ்வருமாறு அட்டவணைப்படுத்தலாம்.

| வ.எண். | தாவரங்கள் | பாடல்கள் |
|---|---|---|
| 1. | இலவம் | 105 |
| 2. | கொன்றை | 302, 296 |
| 3. | பிடவு | 256 |
| 4. | ஈந்து | 126, 174 |
| 5. | குராமரம் | 56, 224 |
| 6. | வேம்பு | 3, 279 |
| 7. | நெல்லி | 3 |
| 8. | பாதிரி (மாவகை) | 52, 118, 337 |

"முளிகொடி வலந்த முள்ளரை இலவத்து
ஒளிர்சினை அதிர வீசி விளிபட
வெவ்வளி வழங்கும் வேய்பயில் மருங்கின்" (105)

காய்ந்த கொடிகள் சுற்றிய முட்கள் பொருந்திய அடியை உடைய இலவமரத்தின் கிளையை, கொடிய காற்று முறிக்கும் என்பது இப்பாடல் அடிகளின் கருத்தாகும். முள்ளிலவ மரத்தினை முடத்திருமாறன் என்ற கவியரங்கேறிய காவலனே முதலில் காட்டுகின்றனன் என்பதை விளக்கவும், முள்ளிலவ மரத்தைப் பற்றிய செய்தியைக் கூறவும் ஆசிரியர் இப்பாடல் அடிகளைக் கையாண்டுள்ளார்.

"புழற்காய்க் கொன்றைக் கோடணி கொடியிணர்" (296)

கொன்றையின் காய் உள்ளே (புழல்) உட்கூடு அமைந்திருக்கும் என்பது பாடல் அடியின் பொருளாகும். கொன்றைக்காயின் சிறப்பை எடுத்துக்கூற இப்பாடல் அடியை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

"இழையணி மகளிரின் விழைதகப் பூத்த
நீடுசுரி இணர சுடர்வீக் கொன்றை" (302)

'பொன்னால் ஆன அணிகலன்களை அணிந்த பெண்களைப் போல, ஒளிவீசக்கூடிய கொன்றைப் பூக்களைக் கொண்டிருக்கும் அழகு பொருந்திய கொன்றைக் காடு' என்பது இப்பாடல் அடிகளின் பொருளாகும். இப்பாடலில் இடம்பெற்றுள்ள உவமையை எடுத்துக்காட்டுவதற்காக இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

"களவுடன் கமழ, பிடவுத் தளையவிழக்
கார்செயல் செய்த காமர் காலை" (256)

'களாவின் பூக்கள் மலர்ந்து மணம் செய்வதும், பிடவு மலர்கள் மலர்ந்து விளங்குவதும், மேகம் மழையைப் பொழிந்து கார்ப்பருவத்தைத் தொடங்கும் கார்காலம்' என்பதும் இப்பாடல் அடிகளின் கருத்தாகும். கார்காலத்தில் பிடவு மலரும் தன்மையுடையது என்ற கருத்தை விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

"பைங்காய் நல்லிடம் ஒரீஇய செங்காய்க்
கருங்களி ஈந்தின் வெண்புறக் களரி" (126)

பசுங்காய் செங்காயாய் முதிர்ந்து, பின் கருங்கனியாய் உதிரும் ஈந்து மரங்கள் மிகுந்து விளங்கும் வெண்ணிறமான மேற்பரப்பை உடைய களர்நிலம் என்பது இப்பாடல் அடிகளின் கருத்தாகும்.

"கற்றை ஈந்தின் முற்றுக் குலைஅன்ன
ஆள்இல் அத்தத் தாள்அம் போந்தை" (174)

ஈந்து மரத்தின் முற்றிய காயின் குலை, தாளிப்பனை மரத்தின் காய்க்குலை போன்றிருக்கும் என்பதை இப்பாடல் அடிகள் விளக்குகின்றன. ஈந்து மரக் காயின் சிறப்பை எடுத்துக்கூறவும், ஈந்துமரம் வளரும் வெண்ணிறமான மேற்பரப்பை உடைய களர்நிலத்தைப் பற்றி அறியவும் இப்பாடல்களின் அடிகள் ஆசிரியரால் கையாளப்பெற்றுள்ளன.

"ஈன்பருந் துயவும் வான்பொரு நெடுஞ்சினைப்
பொரியரை வேம்பின் புள்ளி நீழல்" (3)

ஈனுதலை உடைய பருந்து வருந்தி உறைகின்ற, வானத்தை மோதும் பெரிய கிளைகளையும் பொரிந்த அடியினையும் உடைய வேப்பமரம் என்ற கருத்தை இப்பாடல் அடிகள் விளக்குகின்றன.

"வேம்பின் ஒண்பழம் முணைஇ இரும்பைத்
தேம்பால் செற்ற தீம்பழம் நசைஇ
வைகுபனி உழந்த வாவல்" (279)

'வேம்பின் ஒள்ளிய பழத்தை உண்ணுதலை வெறுத்து இருப்பை மரத்தினது இனிய பழத்தை விரும்பி வைகுப பனியில் வருந்திய வௌவால் கிளைதோறும் செல்லும்' என்பது இப்பாடல் அடிகளின் பொருளாகும். வேம்பு பெரிய கிளைகளையும், பருத்த அடியினையும் உடையது. இதில் பருந்து, வௌவால் வாழும், வேம்பின் பழம் இனிமையுடையது என்ற கருத்தை விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

"கட்டளை அன்ன வட்டுஅரங்கு இழைத்துக்
கல்லாச் சிறாஅர் நெல்லிவட்டு ஆடும்" (3)

காட்டில் மேய்க்கும் தொழிலையன்றிக் கல்லாச் சிறுவர்கள் நெல்லிக்காய்களைக் கூட்டாக அமைத்துக்கொண்டு ஆடுவர் என்பது இப்பாடல் அடிகளின் பொருள் ஆகும். அக்காலத்துக் காட்டு வழிகளில் நெல்லிமரங்கள் காணப்படும். தண்ணீர் வேட்கையால் தவித்து வரும் மக்களும், கானகத்திற்குப் புதியவர்களும், நெல்லிக்கனியைத் தின்று தங்கள் நீர் வேட்கையைப் போக்கிக் கொள்வர் என்ற கருத்தைக் கூறவும், நெல்லிக்கனியின் சுவையை விளக்கவும் இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

"குறுநிலைக் குரவின் சிறுநனை நறுவீ
வண்டுதரு நாற்றம் வளிகலந் தீய" (56)

குறுகிய உயரத்துடன் நிற்கும் குராமரத்தில் சிறிய அரும்புகளுடன் மலர்களும் நன்கு மலர்ந்து நிற்கும், மலர்களின் மணத்துடன் தென்றல் காற்று கலந்து வீசும் என்பது இப்பாடல் அடிகளின் விளக்கம்.

"பின்பனி அமையம் வருமென முன்பனிக்
கொழுந்து முந்துறீஇக் குரவுஅரும் பினவே" (224)

பின்பனிப்பருவம் வரும் என்பதை, முன்பனியில் கொழுந்துவிட்ட குராமரம் அடையாளம் காட்டும் என்பது இப்பாடல் அடிகளின் பொருளாகும். குராமரம் சிறிய மரம். இதன் அரும்பு மலரும் என்ற கருத்தை விளக்க ஆசிரியர் இப்பாடல் அடிகளைக் கையாண்டுள்ளார்.

"தூத்தகட்டு எதிர்மலர் பாதிரி" (52)

கரிய கொடியான காட்டு மல்லிகையின் மலருடன், தூயதும், பொற்றகடு போன்றதுமான பாதிரி மலரையும் எதிர்எதிரே வைத்துக் கட்டிய மாலை என்பது இப்பாடல் அடியின் பொருளாகும்.

"ஓவ மாக்கள் ஒள்ளரக்கு ஊட்டிய
துகிலிகை அன்ன துய்த்தலைப் பாதிரி" (118)

திறமிக்க ஓவியர் வரைதற்குப் பயன்படுத்தும் எழுதுகோல் நுனித் தலையின்கண் உள்ள அரக்கு இம்மலரின் எழில்மிக்க மகரந்தக் கோசத்திற்கு உவமையாக இப்பாடலில் கூறப்படுகிறது.

"முதிரா வேனில் எதிரிய அதிரல்
பராரைப் பாதிரிக் குறுமயிர் மாமலர்" (337)

பாதிரிமரம் பருத்த அடியை உடையது. மேலும் இதன் மலரில் "குறுமயிர்" காணப்படும் என்பது இப்பாடல் அடிகளின் பொருளாகும். பாதிரி மரத்தையும் பாதிரி மலரையும் விளக்க இப்பாடல்களின் அடிகளை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

## நற்றிணையில் ஒப்பனைக்கலை

சொ.சிங்காரவேலனார் எழுதிய இக்கட்டுரையில் 9, 262, 298, 308, 337, 308, 86, 286, 296, 198, 274, 110, 252, 71, 162 ஆகிய பாடல்கள் இடம்பெற்றுள்ளன. இப்பாடல்களை ஒப்பனை அடிப்படையில் கீழ்வருமாறு பகுக்கலாம்.

| வ.எண். | ஒப்பனை | பாடல் எண் |
|---|---|---|
| 1. | கூந்தல் ஒப்பனை | 9, 262, 298, 308, 337, 308 |
| 2. | அணிகலன் ஒப்பனை | |
| | 1) சுரிதகம் | 86 |
| | 2) குழை | 286 |
| | 3) கிண்கிணி | 269 |
| | 4) வளையல் | 198, 3, 4 |
| 3. | இல்ல ஒப்பனை | 252 |
| 4. | வீட்டு விலங்கு ஒப்பனை | 71, 162 |

மகளிர் தம் கூந்தலில் பல வண்ண மலர்களைச் சூடி அழகுக்கு அழகு செய்துகொண்டனர் என்பதை விளக்க 9, 262, 298, 308 ஆகிய பாடல்களின் எண்களை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

"செப்பிடந் தன்ன நாற்றம் தொக்குடன்
அணிநிறங் கொண்ட மணிமருள் ஐம்பால்
தாழ்நறுங் கதுப்பால்" *(337)*

'பூஞ்செப்பைத் திறந்தது போன்ற நறுமணம் செறிந்த, அழகிய நல்ல நிறம் பொருந்திய, மணமுடைய தாழ்ந்த கூந்தலில் மகளிர் மலர்களை ஒருசேரச் செறித்தனர்' என்பது இப்பாடல் அடிகளின் கருத்தாகும். பெண்கள் கூந்தலை அழகுபடுத்துவதற்காக நல்ல மலர்களை அணிந்து ஒப்பனை செய்வர் என்பதை விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

"வெறிகமழ் துறுமுடி தயங்க" *(308)*

நறுமணம் வீசுகின்ற நெருங்கிய குழல் முடித்த கொண்டை என்பது இப்பாடல் அடியின் பொருளாகும். அக்காலப் பெண்கள் கூந்தலை அள்ளிச் செருகாது தாழவிட்டு அழகுசெய்து கொள்ளும் முறை மட்டுமின்றிக் கொண்டையிட்டுச் செறித்து முடிக்கும் முடிப்பு முறையையும் விளக்க இப்பாடல் அடியை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

"கைவல் வினைவன் தையுபு சொரிந்த
சுரிதக உருவின வாகிப் பெரிய
கோங்கக் குவிமுகை அவிழ" *(86)*

அழகு பொருந்துமாறு விளங்கும் கைவினையில் வல்ல கம்மியன் பல வண்ணக்கற்களை இட்டு இழைத்த பொன்னாலாகிய 'சுரிதகம்' என்னும் அணி போன்ற கோங்க மரத்தின் அரும்புகள் மலர்ந்து இருக்கும் என்பது பாடல் அடிகளின் பொருளாகும். அக்கால மக்கள் 'சுரிதகம்' எனும் அணியைத் தங்கள் ஒப்பனைக்காகப் பயன்படுத்தினர் என்பதை விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

"ஊசல் ஒண்குழை உடைவியத்து அன்ன
அத்தக் குமிழின் ஆயிதழ் அலரி" *(286)*

சுரத்தில் உள்ள உடை மரங்களின் மீது குமிழ மலர்கள் உதிர்ந்து விளங்குவது அம்மரம் குழைகளை அணிந்தாற் போன்ற தோற்றம் நல்கும் என்பது இப்பாடல் அடிகளின் பொருளாகும். அக்கால மகளிர் செவிகளிற் குழைகளை அணிந்திருந்தனர் என்ற கருத்தை விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்."

"குரும்பை மணிப்பூண் பெருஞ்செங் கிண்கிணி" (269)

குரும்பை போன்ற மணியையுடைய பூணாகிய பெரிதும் செம்மையுடையதுமான கிண்கிணியை உடைய புதல்வன் என்பது பாடல் அடியின் கருத்தாகும். சிறிய புதல்வர்கள் கால்களில் அணியும் அணி வகையாகக் கிண்கிணி கூறப்படுகின்றது. மேலும் இவ்வணியின் உள்ளீட்டில் பரல்கள் இடப்பட்டிருந்தன என்ற கருத்தை விளக்க இப்பாடல் அடி ஆசிரியரால் எடுத்தாளப்பெற்றுள்ளது.

"சில்வளைப் பல்கூந்தலளே, அவளே" (198)

சிலவாகிய வளையலும், பலவாகிய கூந்தலும் உடையவள் தலைவி என்பது இப்பாடல் அடியின் விளக்கமாகும்.

"இழைமகள்,
பொன்செய் காசின், ஒண்பழந் தாஅங்" (274)

அணிகள் புனைந்த பெண்ணொருத்தியின் பொன்னாலாகிய கலன்களை விரவியிருந்தியது போல, ஒளியுடன் கூடிய பழங்களைக் குமிழமரங்கள் உதிர்க்கும் என்பது இப்பாடல் அடியின் கருத்தாகும்.

"தெண்ணீர்,
முத்திரிப் பொன்சிலம்பு ஒலிப்ப" (110)

தெளிந்த நீரின் முகிழ்ந்த முத்துகள் பரலாக இடப்பட்ட பொற்சிலம்பு ஒலிக்குமாறு தாவி ஓடும் தலைவி என்பது இப்பாடல் அடியின் பொருள். அக்காலப் பெண்களுக்கு வயது வரையறைக்கேற்ப வளையல்கள் சிலவும், அக்காலப் பெண்கள் அணியும் வளையல்கள் நன்கு

புனையப்பட்டு ஒளிவீசித் திரண்டு இருந்தன என்பதை விளக்கவும், காசுமாலை, சிலம்பு போன்ற அணிகலன்களையும் மகளிர் அணிந்தனர் என்பதை எடுத்துக்காட்டவும் மேலே இடம்பெற்றுள்ள பாடல்களின் அடிகளை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

"புனைசுவர்ப்
பாவையன்ன பழிதீர் காட்சி" (252)

தலைவி சுவரிலே புனைந்து எழுதப்பட்ட படிமத்தைப் போன்ற குற்றமற்ற அழகிய தோற்றமுடையவள் என்பது இப்பாடல் அடியின் பொருள் ஆகும்.

"... செல்வர்
வகைஅமர் நல்இல் அகஇறை உறையும்
வண்ணப் புறவின் செங்காற் சேவல்" (71)

'செல்வர்களின் பற்பல பிரிவுகளாய் உள்ள இல்லத்தில் தாழ்வாரத்தில் இருக்கும் சிவந்த கால்களையுடைய சேவல்புறா, தான் விரும்பிய பெண்புறாவைப் புணர்ச்சிக்கு அழைக்கும்' என்பது இப்பாடலடிகளின் பொருளாகும்.

"மனையுறை புறவின் செங்கால் பேடை" (162)

மனையில் உள்ள சிவந்த கால்களையுடைய அழகிய சேவல்புறா, பெடையோடு கூடி மகிழும் என்பது இப்பாடலடியின் விளக்கமாகும். அக்கால மக்கள் வீடுகளை ஒப்பனை செய்ய வீட்டுச் சுவர்களில் நல்ல அழகுமிக்க ஓவியங்கள் வரைதலையும் வீட்டில் புறாக்களை வளர்த்தலையும் செய்தனர் என்ற கருத்தை விளக்க ஆசிரியர் மேற்கண்ட பாடல் அடிகளைப் பயன்படுத்தியுள்ளார்.

## நயந்தரும் நற்றிணை

ஆ.பாலன் என்பவர் எழுதிய இக்கட்டுரையில் நற்றிணை 84 ஆம் பாடலின்,

“சுடுமண் தசும்பின் மத்தந்தின்ற

பிறவா வெண்ணெய் உருப்பிடத்தன்ன

உவரெழு களரி ஓமையங் காட்டு

வெயில் வீற்றிருந்த வெம்பல் அருஞ்சுரம்”

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன.

‘வெப்பந்தரும் வெயில் நிறையப் பெற்ற பாலை நிலத்தில் உப்புப் பூத்த களர்நிலம் வெப்பத்தாற் வெண்ணெய் கைகூடாது, சிதறிக் கிடந்தது போன்ற தோற்றமுடையது’ என்பது இப்பாடலடிகளின் கருத்தாகும். பாலைத் திணையில் வெப்பம் மிகுதியாய் இருக்கும் தன்மையினையும், பாலை நிலத்தின் இயல்பினையும் தெளிவுபடுத்த இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

**கஜபாகுவின் கால அடிப்படையில் சங்ககாலம்**
**கால ஆராய்ச்சி ஒரு மறு ஆய்வு**

பூரண சந்திர ஜீவா என்பவரால் இக்கட்டுரை எழுதப்பெற்றது (1989 வைகாசி, ஆனி). ‘சங்ககாலத்தை நிறுவும் சான்றுகளை இந்நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்த அறிஞர் வீ.கனகசபையார் காலம் முதல் பல்வேறு அறிஞர்களும் ஆராய்ந்துள்ளனர். அவற்றுள் ஒன்று இலங்கை மன்னன் கஜபாகு சேரமன்னன் செங்குட்டுவன் எடுத்த பத்தினி விழாவிற்கு வந்திருந்தான் என்ற சிலப்பதிகார மரபின் அடிப்படையில் பெறப்பட்டதாகும். இதன் உண்மையினைச் சில வரலாற்று ஆதாரங்களின் அடிப்படையில் மறு ஆய்வு செய்வது’ இக்கட்டுரையின் நோக்கம். இதில் நற்றிணை 14 ஆம் பாடலின்,

“... குட்டுவன்

அகப்பா அழிய நூறிச் செம்பியன்

பகல்தீ வேட்ட ஞாட்பினும்”

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன.

“குட்டுவனது அகப்பா என்ற அரணைச் சோழவேந்தன் ஒரு பகலில் அழித்துத் தீப்படுத்தினான் என்பது இப்பாடல் அடிகளின் பொருளாகும். சேர மன்னருள் அகப்பா என்ற அரணை வென்றவன் பல்யானைச்

செல்கெழு குட்டுவனே" ஆவான் என்பதை விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் பேய்

*வி.சா.பாலசுப்பிரமணியன் எழுதிய இக்கட்டுரையில் 73, 171 ஆகிய நற்றிணைக்குரிய பாலைத்திணைப் பாடல்கள் இடம்பெற்றுள்ளன.*

*"வல்வாய்ப் பேய்" (73)*

*பேயின் வாய் வலிமை கொண்டது என்பது இப்பாடல் அடியின் விளக்கமாகும்.*

*"வேனில் முருக்கின் விளைதுணர் அன்ன*
*மாண விரல வல்வாள்வாய்ப் பேஎய்" (73)*

*'வேனிற் காலத்தில் மலர்வது காலியான முருங்கை மரம். இதில் கொத்துக் கொத்தாகச் சிவந்த பூக்கள் தோன்றும். பின்னர் அதில் நெற்றுகள் உண்டாகும். இந்நெற்று கூரியமுனை உடையதாகவும் விதையில்லாப் பகுதி பருத்தும், இடையிடையே சிறுத்தும், நீளமாக இருக்கும். இந்நெற்றுகள் போன்றவை பேயின் கைவிரல்' என்பது இப்பாடல் அடிகளின் பொருளாகும்.*

*"மல்லன் மூதூர் மலர்ப்பலி உணீஇய*
*மன்றம் போழும் புன்கண் மாலை" (73)*

*மாலைப் பொழுதில் பேய், தெய்வத்திற்கு இடப்பட்ட ஊனை உண்ண, பாழ் மண்டபத்திலிருந்து அடித்துப் பிடித்துக் கொண்டு வரும் என்பது இப்பாடல் அடிகளின் பொருளாகும்.*

*"கழுதுகால் கொள்ளும் பொழுதுகொள் பானாள்" (171)*

*பேய்கள் நிலைகொண்டு உலவுகின்ற நடுயாமம் என்பது இப்பாடலின் பொருளாகும். இப்பாடல் அடிகள் அனைத்தும், பேயின் வாய், பேயின் கை, பேய் உணவு உண்ணும் மாலை நேரம், பேய் நடமாடும் யாமம் போன்றவற்றை விளக்க ஆசிரியரால் கையாளப்பெற்றுள்ளன.*

## சங்க இலக்கியத்தில் பொதுச் சொல்லும் ஒரு பொருட் பல சொல் குறித்த சிறப்புச் சொல்லும்

க.அன்பழகன் எழுதிய இக்கட்டுரையில் 305 ஆம் பாடலில் ‘எரி’ என்ற அடி இடம்பெற்றுள்ளது. ‘ஞாயிறு’ என்பது இப்பாடல் அடியின் பொருள். ‘ஞாயிறு’ என்ற ஒரு பொருளைக் குறிக்கப் பல சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. அவற்றில் ஒன்று இந்த ‘எரி’ என்ற கருத்தை எடுத்துக்காட்டுவதற்காக ஆசிரியரால் இப்பாடல் அடி பயன்படுத்தப்பட்டுள்ளது.

## மருதனிளநாகனார் பாடல்களில் காணலாகும் உள்ளுறையும் இறைச்சியும்

சோ.முத்தமிழ்ச்செல்வன் என்பவரால் எழுதப்பெற்ற இக்கட்டுரையில் 302 ஆம் பாடல் இடம்பெற்றுள்ளது.

வினைவயிற் பிரிந்த தலைவன், கூறிச்சென்ற கார்காலத்தில் வரவில்லை. இதனால் வருந்திய தலைவி, கொன்றை பூக்கும் கார்காலத்தைத் தலைவன் அறியாது சென்றாலும், புதர்கள்தோறும் மலர்ந்திருக்கும் எறுழமலர்களின் வெண்ணிறத்தைக் கண்டு கூதிர்க்காலம் வந்துவிட்டமையைக் கூட அறியாது இருக்கிறார் போலும் என்கிறாள் என்பது 302 ஆம் பாடலடிகளின் பொருளாகும்.

கொன்றையின் மலர்ச்சி, காதலொடு கூடியிருக்கும் தலைவியின் மேனி எய்தும் பெருநலத்துக்கும், தெறுழம் பூவின் செயல் தலைவன் பிரிவால் தலைவி மேனி பசந்து இருப்பதற்கும் கூறப்பட்டுள்ளது. இந்த இறைச்சிப் பொருளை விளக்கவே ஆசிரியர் மேற்கூறிய பாடல் அடிகளைக் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கிய ஒருபொருட் பல சொற்களின் சொல்லிணைவு

இக்கட்டுரை க.அன்பழகன் என்பவரால் எழுதப்பெற்றதாகும் (2007, ஐப்பசி). ‘சங்க இலக்கியத்தை ஆராய்ந்து பார்த்தால் எண்ணற்ற சொற்கள் அமிழ்ந்து கிடக்கின்றன. தமிழர் தம் முன்னோர்களின் அறிவு வெளிச்சம் பன்முக ஆற்றலோடு விரவிக்கிடப்பதைச் சொற்களின் ஆய்வு உண்மைகள் புலப்படுத்துகின்றன. ஒரு பொருட் பல சொற்கள், பல்

பொருண்மைச் சொற்கள், மீச்சொற்கள், ஒப்புருச்சொற்கள், எதிர்சொற்கள் எனக் கிடைக்கின்றன. இவற்றிலும் சில வரையறுத்த பண்புகளைக் கொண்டே இச்சொற்களின் உருவாக்கம் அமைகின்றது.' ஒரு பொருட் பல சொற்களின் சொல்லிணைவு குறித்து விளக்குவது மட்டுமே இக்கட்டுரையின் நோக்கம்.

இக்கட்டுரையில் நற்றிணை 16 ஆம் பாடலின்,

"கனங்குழைக் கமர்ந்த சேயரி மழைக்கண்"

எனும் அடி இடம்பெற்றுள்ளது. கனமான காதணிகளை அணிந்த தலைவி, ஒன்றுக்கொன்று எதிர்ப்பட அமைந்த செவ்வரியுடைய குளிர்ச்சி பொருந்திய கண்களை உடையவள் என்பது இப்பாடல் அடியின் கருத்தாகும். 'மலைக்கண்' என்ற சொல்லை ஒரு பொருள் பல சொற்களின் சொல்லிணைவு முறையில் விளக்க இப்பாடல் அடியை ஆசிரியர் கையாண்டுள்ளார். 'மழை' எனும் சொல் 'கண்' எனும் சொல்லுடன் இணைவுபெற்று 'மழைக்கண்' என அமைகின்றது. குறிப்பிட்ட சொற்களுடன் மட்டுமே இணைந்து வரும் வரையறுத்த சொல்லிணைவு முறைக்கு 'மழைக்கண்' சிறந்த எடுத்துக்காட்டாகும்.

## சங்க இலக்கியத்தில் தழையுடை

அ.ஜெயக்குமார் என்பவர் எழுதிய இக்கட்டுரையில் நற்றிணை 9 ஆம் பாடலின்,

"பொரிப்பூம் புன்கி னெழில்தகை யொண்முறி
சுணங்குஅணி வனமுலை அணங்குகொளத் திமிரி"

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன.

பொரியைப் போன்ற பூக்களையுடைய புன்கினது அழகுமிக்க ஒளிபொருந்திய தளிரை மார்பில் அணிந்துகொள்க என்று தலைவன் தலைவியிடம் கூறுவது இப்பாடலடிகளின் பொருளாகும். அக்கால மக்களின் ஆடைமுறையை விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## நற்றிணை

ச.தண்டபாணி தேசிகர் என்பவரால் இக்கட்டுரை எழுதப்பெற்றுள்ளது. இதில் 126, 14, 18, 343, 333 ஆகிய நற்றிணைப் பாடல்கள் இடம்பெற்றுள்ளன.

"... கடுநடை ஒருத்தல்
ஆட்பெறல் நசைஇ நாட்சுரம் விலங்கித்
துணைதரும் வம்பலர்க் காணாது, அச்சினம்
பனைக்கான்று ஆறும்" (126)

ஆண் யானை வழியிடைச் செல்வாரைக் கொல்ல விரும்பித் திரியும் பாலை நில வழியில், செல்வார் இன்மையால் மரங்களில் மோதித் தன் சினத்தை அடக்கும் என்பது பாடல் அடிகளின் விளக்கமாகும்.

களிறும், பிடியும் ஒன்றை ஒன்று பிரியுமானால் மிக வருந்திப் பிளிறும் என்ற கருத்தை மட்டும் 14 ஆம் பாடல் விளக்குகின்றது.

"... கதன்அடங்கு யானைத்
தடவுநிலை யொருகோட் டன்ன" (18)

யானையின் ஒற்றைத் தந்தம் என்பது இப்பாடலடிகளின் கருத்தாகும். யானையின் சினம், களிறு, பிடியின் காதல் வாழ்வு, யானைகளுக்கு ஒற்றைக் கொம்பு உண்டு என யானை பற்றிய கருத்துகளை விளக்குவதற்காக ஆசிரியர் இப்பாடல்களின் அடிகளைக் கையாண்டுள்ளார்.

"நெடுவீ ழிட்ட கடவு ளாலத்து" (343)

நெடிய விழுதுகளிறங்கிய கடவுளுறையும் ஆலமரம் என்பது இப்பாடல் அடியின் விளக்கமாகும். அக்கால மக்கள் பொது மன்றங்களில் கடவுளை நிலைபெற வைத்து வழிபட்டனர் என்பதைக் கூற ஆசிரியர் இப்பாடல் அடியைக் கையாண்டுள்ளார்.

"மழைதொழி லுலந்து" (333)

மேகம் பெய்தல் தொழிலை விட்டு உயர்ந்த ஆகாயத்தை அடைந்தது என்பது இப்பாடல் அடியின் பொருளாகும்.

*மழை தன் பெய்தல் தொழிலை விட்டுவிட்டால் மூங்கில்கள் வாடிவிடும். நீர்வேட்கை மிகுதியால் யானையும் புலியும் பருக்கைக் கற்கள் நிரம்பிய பள்ளத்தாக்குகளில் கிடக்கும் சிறிய நீரைக் கூறிட்டுக்கொண்டு உண்ணும் என்பது 333 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். மழையின் சிறப்பை விளக்கவும், இயற்கையின் அழகை எடுத்துக்கூறவும் இப்பாடல் அடியினை ஆசிரியர் கையாண்டுள்ளார்.*

**பகுதி மூன்று**

## 2.3 தொகுப்புரை

*செந்தமிழ்ச்செல்வி இலக்கிய இதழில் நற்றிணைப் பாடல்கள் 52 கட்டுரைகளில் இடம்பெற்றுள்ளன. இக்கட்டுரைகளில் இடம்பெற்றுள்ள நற்றிணைப்பாடல்களின் எண்ணிக்கை - 178 ஆகும். இவை குறிஞ்சிக்குரியவை - 51, முல்லைக்குரியவை - 09, மருதத்திற்குரியவை- 14, நெய்தலுக்குரியவை - 59, பாலைக்குரியவை - 45 என அமைந்துள்ளன. இப்பாடல்கள் பி.எல்.சாமி எழுதிய 47 கட்டுரைகளிலும், அ.குமாரஸ்வாமி, மது.ச.விமலானந்தம், மயிலை சீனி.வேங்கடசாமி, மார்கரெட் பாஸ்டின், பொற்கோ ஆகியோர் எழுதிய 5 கட்டுரைகளிலும் காணப்படுகின்றன.*

*தமிழ்ப்பொழில் இலக்கிய இதழில் நற்றிணைப்பாடல்கள் 18 கட்டுரைகளில் இடம்பெற்றுள்ளன. இக்கட்டுரையில் இடம்பெற்றுள்ள நற்றிணைப் பாடல்களின் எண்ணிக்கை - 119, இவை குறிஞ்சிக்குரியவை-28, முல்லைக்குரியவை - 10, மருதத்திற்குரியவை - 18, நெய்தலுக்குரியவை-20, பாலைக்குரியவை - 43 என அமைந்துள்ளன. இப்பாடல்கள் சொ.சிங்காரவேலனார், க.அன்பழகன் ஆகியோர் எழுதிய இரண்டு கட்டுரைகளிலும், கு.சீனிவாசன், ஆ.பாலன், வி.சா.பாலசுப்பிரமணியன், அ.ஜெயக்குமார், ச.தண்டபாணி தேசிகர், துரை.பிச்சை, சாமி.சிதம்பரனார், சோ.முத்தமிழ்ச்செல்வன், சாலினிஇளந்திரையன், பழ.முத்தப்பன், சு.கு.பன்னீர்செல்வம், க.அமுதா, பூரணசந்திரஜீவா ஆகியோர் எழுதிய 14 கட்டுரைகளிலும் காணப்படுகின்றன.*

மேலே இடம்பெற்றுள்ள இரு இலக்கிய இதழ்களிலும் இடம்பெற்றுள்ள நற்றிணைப் பாடல்களைக் கட்டுரையாசிரியர்கள் எடுத்தாளுவதற்கான காரணங்களாகக் கீழ்வருவனவற்றைக் குறிக்கலாம்.

1. பண்டைய இலக்கியத்தில் காணப்படும் ஊர்வன, நடப்பன, பறப்பன, நீந்துவன, தாவுவன என அமையும் உயிரினங்களின் உடல்அமைப்பு, பண்பு, வேட்டைத்தன்மை, செயல்பாடு ஆகிய தன்மைகளை விளக்கும் நோக்கில் பல பாடல்கள் எடுத்தாளப்பெற்றுள்ளன. அவை தொடர்பான விபரம் வருமாறு :
    - பல்லி - 98, 196, 246, பாம்பு - 14, 72, 92, 125, 168, 261, 285, 325, 366, ஆமை - 280, 385, ஓந்தி - 92, 186.
    - குரங்கு - 95, 151, 334, கேழல் - 82, 98, 119, 336, 386, புலி - 02, 29, 148, 158, 322, 332, 333, 383, 391, முயல் - 59, 251, நரி - 352, நீர்நாய் - 195, 390, யானை - 14, 18, 125, 126.
    - அன்னம் - 73, 356, கொக்கு - 100, 258, 280, 326, மயில் - 13, 115, 248, 262, 264, 276, 288, 305, 357, 396, மின்மினிப்பூச்சி - 44, வெள்ளாங்குருகு - 70, வெண்குருகு - 4, 54, 67, 167, 183, 211, நாரை- 127, 178, 180, 263, குருகு - 27, 159, 369, சிள்வீடு - 252, மூதாய் - 52, காக்கை - 281, 343, யானை - 14, 18, 126.
    - கயல்மீன் - 220, 230, முதலை - 287, 297, கெடிறு - 70, வாளை - 310, 340, 390, 400, திமிங்கிலம் - 388, அயிரை - 272, கொழுமீன் - 127, 159, 175, 195, 207, 291, 311, கோட்டுமீன் - 49, சுறா - 27, 45, 67, 78, 132, 199, 207, 215, 223, 303, 392, இறால் - 19, 31, 49, 67, 101, 111, 131, 211, 278, 358, சிறுமீன் - 91, 239, வாளை - 111, 131, 191.
    - தவளை - 347, நுணல் - 59.

2. சங்ககாலத்தில் காணப்பெற்ற செடி, கொடி, மரம், புல், பயிர் எனும் தாவரங்களின் வடிவம், நிறம், பயன்பாடு, வாழும் காலம், இலை, காய், வேர், பூ, அமைப்பு ஆகியவற்றை விளக்கும் நோக்கில் சில பாடல்கள் கையாளப்பெற்றுள்ளன. அவற்றின் விபரம் வருமாறு:

- *குவளை - 34, ஆம்பல் - 60, 230, 290, செங்காந்தள் - 34, 294, 379, குறிஞ்சிச்செடி - 116, 176, 268, 301, தாமரை - 301, கூதளம் - 119, 244, 313, 346, 376, உழுந்து - 89, தாழம் - 19, 78, 131, 235, சுள்ளி - 215, முண்டகம் - 191, 207, 311, 345, களா - 256, நெய்தல் - 78, 96, 117, 283, 332, 372, 382, குளவி - 51, 232.*
- *வள்ளி - 82, 269, 295, 328.*
- *ஞாழல் - 31, 54, 74, 82, 96, 106, 167, 191, 267, 291, 311, 315, 321, நாகம்- 82, கடம்பு - 34, குமிழம் - 6, வேங்கை - 13, 28, 112, 151, 168, 178, 232, 257, 313, 379, 383, கொன்றை - 07, 46, 99, 141, 221, 242, 246, 269, 296, 302, மயிலை - 115, கண்டல் - 54, 74, 191, 123, 207, 345, 363, 372, புன்னை- 09, 249, 278, நாவல் - 35, ஓமை- 84, 107, 137, 198, 252, 279, 318, ஆலம்- 76, 343, பலா - 77, 232, இரம் - 302, இத்தி - 162, இலந்தை-113, சந்தனம்- 1, 5, 259, 292, குரவம் - 266, மா - 118, 243, இலவம் - 105, பிடவம் - 256, ஈந்து - 126, 174, குரா - 56, 224, நெல்லி - 03, வேம்பு - 3, 279, பாதிரி - 52, 118, 337, வெண்பாலை - 86, வாழை - 176, 222, 225, 232, 309.*
- *பைஞ்சாய் - 60, எருவை - 156, 261, 294.*
- *வரகு - 121.*

3. பண்டைத்தமிழகத்தில் வழக்கில் இருந்த காசுமுறையையும், மக்கள் பயன்பாட்டில் இருந்த மணிகளையும் விளக்கச் சில பாடல்கள் எடுத்து விளக்கப்பெற்றுள்ளன. விபரம் வருமாறு.
    - *நீலமணி - 8, 239, பளிங்கு - 292, சங்கு - 25, 77, 172, 331, கட்டளைக்கல் - 03, முத்து - 110, காசு - 274.*

4. *சங்கத் தமிழர்கள் தங்களையும், தங்கள் இருப்பிடத்தையும், தன்னைச் சார்ந்து வாழும் விலங்குகளையும் ஒப்பனை செய்யப் பயன்படுத்திய* பொருள்களைப் பற்றியும், அக்கால மக்களின் ஆடை முறையைப் பற்றியும் விளக்கும் நோக்கில் சில பாடல்கள் எடுத்து விளக்கப்பெற்றுள்ளன. விபரம் வருமாறு :

- ♦ மகளிர் ஒப்பனை - 3, 4, 9, 86, 97, 100, 133, 140, 170, 198, 262, 298, 301, 308, 337, மனை ஒப்பனை 115, 252, 283, 354, குழந்தை ஒப்பனை - 250, 268, வீட்டுவிலங்கு - 71, 78, 81, 162.
- ♦ துகில் - 15, 43, 59, 99, 366, கலிங்கம் - 90, 380, தழையாடை - 09, 54, 96, 359, 363, 390, உடை - 64, 216.

5. சங்க மக்களின் வாழ்வியல் கூறுகள் பற்றிய கருத்துகளை விளக்கும் நோக்கில் சில பாடல்கள் எடுத்தாளப்பெற்றுள்ளன. விபரம் வருமாறு:
   - ♦ விருந்தோம்பல் - 120, 180, நம்பிக்கை - 80, துணங்கை - 50, வழிபாடு- 51, 303, 343, பேய் - 15, 73, 171, 225, பெண்களின் பண்பாடு - 85, வேட்டைக்கருவி - 265, வீட்டைப் பாதுகாத்தல் - 38, 354, வேட்டைமுறை- 388, சிறார் விளையாட்டு - 354, 363, இருப்பிடமுறை - 40, 300.

6. சங்கத்தமிழர் வாழ்ந்த நிலங்களின் இயல்பு பற்றிய கருத்துகளை விளக்கும் வண்ணம் சில பாடல்கள் எடுத்தாளப்பெற்றுள்ளன. விபரம் வருமாறு:
   - ♦ குறிஞ்சிநிலச் சிறப்புகள் - 168, முல்லைநிலச் செயல்பாடுகள் - 142, மருதநிலச் செய்திகள் - 210, நெய்தல்நிலம் - 311, பாலைநில இயல்பு - 84.

7. சங்க இலக்கியச் சொற்களின் சிறப்பியல்புகள் பற்றி விளக்கச் சில பாடல்கள் எடுத்து விளக்கப்பெற்றுள்ளன. அவற்றின் விபரம் வருமாறு:
   - ♦ பொதுச்சொல்லும் ஒரு பொருள் பலசொல் குறித்த சிறப்புச் சொல்லும் - 69.
   - ♦ ஒருபொருள் பல சொற்களின் சொல்லிணைவு - 16.

8. நற்றிணைப் பாடல்களில் காணப்படும் வள்ளுவத்தின் சிறப்பியல்புகளை எடுத்துக்காட்டச் சில பாடல்கள் விளக்கப்பெற்றுள்ளன. விபரம் வருமாறு:
   - ♦ 1, 32, 308, 335.

*9. சங்க இலக்கியப் பாடல்களில் காணக்கிடக்கின்ற உத்தி முறைகளை விளக்கும் நோக்கில் சில பாடல்கள் எடுத்தாளப்பெற்றுள்ளன. விபரம் வருமாறு:*

- *இறைச்சி - **21, 302***
- *உள்ளுறை - **216.***

*10. பழந்தமிழர்கள் தங்கள் பயன்பாட்டில் வைத்துப் பயன்படுத்திய இசைக்கருவிகளின் தன்மைகளை விளக்கும் நோக்கில் சில பாடல்கள் எடுத்தாளப்பெற்றுள்ளன. விபரம் வருமாறு:*

- *யாழ் - **30, 189, 280.***

*11. சங்ககாலத்தில் காணப்பட்ட துறைமுகம் பற்றி விளக்க ஒரு பாடல் எடுத்தாளப்பெற்றுள்ளது. அது தொடர்பான விபரம் வருமாறு:*

- *காவிரிப்பூம்பட்டினம் - **258.***

*12. சங்ககாலத்தில் அகம், புறம் என்ற இரு பிரிவுகள் காணப்பட்டாலும் இரு பிரிவுகளிலும் அறம் பற்றிய கருத்தை விளக்கும் நோக்கில் சில பாடல்கள் எடுத்தாளப்பெற்றுள்ளன. இவை தொடர்பான விபரம் வருமாறு:*

- *அறம் - **32, 63, 145, 151, 275.***

*13. சங்கநூல்களில் இடம்பெறும் விலங்கினப் பண்புகளை விளக்கும் நோக்கில் ஒரு பாடல் எடுத்தாளப்பெற்றுள்ளது. அது தொடர்பான விபரம் வருமாறு:*

- ***181.***

*14. சங்கப்பாடல்களில் இடம்பெறும் தலைவன், தலைவி கூற்று பற்றிய கருத்துகளை விளக்கும் நோக்கில் சில பாடல்கள் எடுத்தாளப்பெற்றுள்ளன. அவை தொடர்பான விபரம் வருமாறு.*

- ***230, 330, 400.***

15. மன்னனின் கால அடிப்படையினை வைத்துச் சங்க காலத்தினை ஆராயும் நோக்கில் சில பாடல்கள் எடுத்தாளப்பெற்றுள்ளன. அவை தொடர்பான விபரம் வருமாறு:

- 73, 171.

16. சங்கப்பாடலுக்கு உரை எழுதும் நோக்கில் ஒரு பாடல் கட்டுரை ஆசிரியரால் எடுத்தாளப்பட்டுள்ளது. அது தொடர்பான விபரம் வருமாறு:

- 110.

17. பரத்தையின் பாத்திரப் பண்பு பற்றிக் குறிப்பிட ஒரு பாடல் எடுத்தாளப்பட்டுள்ளது. அதன் விபரம் வருமாறு:

- 400.

18. மழையின் சிறப்புப் பற்றியும், சங்ககாலத் தாவரங்களின் வேர்ப் பயன்பாடு பற்றியும் விளக்கச் சில பாடல்கள் எடுத்து விளக்கப்பெற்றுள்ளன. அவற்றின் விபரம் வருமாறு:

- மழை - 333
- தாவரவேர் - 328.

## 2.4.முடிவுரை

மேலே தொகுப்புரையில் குறிப்பிடப்பட்டுள்ள 18 கருத்துகளின் வழிச் செந்தமிழ்ச்செல்வி, தமிழ்ப்பொழில் ஆகிய இதழ்களில் இடம்பெற்றுள்ள கட்டுரைகளில் நற்றிணைப் பாடல்கள் எடுத்தாளப்பெற்றமைக்கான காரணங்களைக் கீழ்வருமாறு வரையறுக்கலாம்.

1. மக்களின் வாழ்வியல் கூறுகளை எடுத்துரைக்கும் நோக்கில் வாசிக்கப்பெற்றுள்ளன.
2. தாவரங்கள், விலங்குகள் தொடர்பான இயற்கைக் கருத்தாக்கங்களை எடுத்தியம்பும் எண்ணத்தில் வாசிக்கப்பெற்றுள்ளன.
3. சங்கப் பாடல்களில் இடம்பெறும் சொற்களின் சிறப்பியல்புகளை வெளிப்படுத்தும் நோக்கில் வாசிக்கப்பெற்றுள்ளன.
4. பிற்கால நூல்களோடு நற்றிணைப் பாடல்களை ஒப்பிட்டுக் காட்டும் நோக்கோடு வாசிக்கப்பெற்றுள்ளன.

5. பாடல்களின் காலவரையறையைத் தெளிவுபடுத்தும் தன்மையோடு வாசிக்கப்பெற்றுள்ளன.

6. பாடல்களுக்கு உரைஎழுதும் சிந்தனைப் போக்கோடு வாசிக்கப்பெற்றுள்ளன.

7. சங்கப் பாடல்களின் தனிச்சிறப்பியல்புகளை எடுத்துக்காட்டும் நோக்கோடு வாசிக்கப்பெற்றுள்ளன.

இந்த ஏழு வகைப்பட்ட நோக்கங்களில் முதல் இரண்டு வகைக்குரிய நோக்கங்களே நற்றிணை வாசிப்பு நிலையில் மிகுந்து வெளிப்பட்டுள்ளன. அடுத்து அமையும் ஐந்து வகை நோக்கங்களுக்குரிய வாசிப்பு முறைகள் மிக அரியநிலைக்குரியனவாக உள்ளன.

# குறுந்தொகை ஆய்வுகள்

## 3.0 முன்னுரை

சங்ககாலத்தில் தோன்றிய தொகைநூல்களில் ஒன்று குறுந்தொகை. இது நானூறு அகவற்பாக்களால் அமைந்த ஓர் அகப்பொருள் நூலாகும். இந்நூல் தொகை நூல்களில் முதலாவதாகத் தொகுக்கப்பெற்றதாகக் கருதுவர். இது நான்கடிச் சிற்றெல்லையும், எட்டடிப் பேரெல்லையும் உடையது. இத்தொகைநூலைத் தொகுத்தவர் பூரிக்கோ, பாடிய புலவர்களின் எண்ணிக்கை - 205 ஆகும். இக்குறுந்தொகைப் பாடல்கள் 'செந்தமிழ்ச்செல்வி,' 'தமிழ்ப்பொழில்' முதலான இலக்கிய இதழ்களில் காணப்படும் சங்க இலக்கியம் தொடர்பான பல ஆய்வுக்கட்டுரைகளில் எடுத்தாளப்பெற்றுள்ளன. இவ்வாறு எடுத்தாளப்பெற்றுள்ள பாடல்களைக் கட்டுரையாளர்கள் எவ்வடிப்படையில் பயன்படுத்தியுள்ளனர் என்பதனை விளக்குவது இவ்வியலின் நோக்கம்.

பகுதி ஒன்று

## 3.1 செந்தமிழ்ச் செல்வி

'செந்தமிழ்ச்செல்வி' இதழில் இடம்பெற்றுள்ள சங்க இலக்கியம் தொடர்பான கட்டுரைகளில் பயன்படுத்தப்பட்டுள்ள, குறுந்தொகைப் பாடல்களின் எண்ணிக்கை - 102 ஆகும். இவை குறிஞ்சிக்குரியவை - 27, முல்லைக்குரியவை - 11, மருதத்திற்குரியவை - 12, நெய்தலுக்குரியவை - 26, பாலைக்குரியவை - 26 என அமைந்துள்ளன (விரிவு : பின்னிணைப்பு-6). இப்பாடல்களில் சில ஒருமுறையும், சில ஒன்றுக்கு மேற்பட்டமுறையும் கட்டுரையாளர்களால் எடுத்தாளப்பெற்றுள்ளன. அவை தொடர்பான விபரம் வருமாறு.

| வ. எண். | திணை | ஒருமுறை | இருமுறை | மும்முறை | நான்குமுறை |
|---|---|---|---|---|---|
| *1.* | குறிஞ்சி | *81, 249, 38, 185, 119, 268, 170, 3, 239, 156, 222, 68, 152, 60, 25, 201, 256, 375, 394, 225, 292, 106* | *264, 138, 321, 100, 379* | | |
| *2.* | முல்லை | *183, 110, 194, 391, 233, 191, 210, 220, 193, 167* | *148* | | |
| *3.* | மருதம் | *50, 253, 35, 10, 178, 127, 8, 164, 293, 138* | *91, 364* | | |
| *4.* | நெய்தல் | *310, 243, 230, 269, 326, 381, 205, 303, 325, 349, 236, 122, 324, 340, 49, 51* | *313, 328, 397, 318, 128, 166, 228, 117, 114* | *304* | |
| *5.* | பாலை | *347, 43, 235, 338, 56, 59, 11, 250, 192, 352, 16, 79, 124, 207, 396, 140, 7, 34, 39, 135* | *282, 274, 369, 67, 15* | *260* | |

## 3.1.1 குறிஞ்சி

*செந்தமிழ்ச்செல்வி இதழில் 15 ஆய்வுக்கட்டுரைகளில் இடம்பெற்றுள்ள குறுந்தொகைக்குரிய குறிஞ்சித்திணைப் பாடல்களின் எண்ணிக்கை - 27 ஆகும்.*

## சங்க நூல்களில் ஞாழல்

*இக்கட்டுரையில் குறுந்தொகையின் 81 ஆம் பாடலின் அடிகள் இடம்பெற்றுள்ளன.*

“இவளே, நின்சொற் கொண்ட என்சொற் தேறிப்

பசுநனை ஞாழற் பல்சினை யொருசிறைப்

புதுநலனிழந்த புலம்புமா குடையள்

உதுக்காண் தெய்ய வுள்ளல் வேண்டும்”

தலைவியிடம் அளவளாயிருந்து பிரியும் தலைவனை நோக்கித் தோழி, ‘உன்சொற்களை நான் ஏற்றுக்கொண்டேன். என் சொல்லைத் தலைவி நம்பி தெளிந்து, பசிய அரும்புகளையுடைய ஞாழல் மரத்தின் பக்கத்தில் தன் பெண்மை நலத்தை இழந்து தனிமைத்துயருடன் இருக்கின்றாள்’ என்று கூறுவது இப்பாடலடிகளின் பொருள்.

ஞாழல் மரத்தின் பசிய அரும்பு அமைப்பை எடுத்துக்காட்ட மேலே இடம்பெற்றுள்ள இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

### சங்க இலக்கியத்தில் மயில்

இக்கட்டுரையில் குறுந்தொகையின் 249, 264, 138, 264, 38 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

“இனமயி லகவு மரம்பயில் கானத்து

நரைமுக வூகம் பார்ப்பொடு பனிப்பப்

படுமழை பொழிந்த சாரலவர் நாட்டுக்” (249)

மயில்கள் வாழும் காட்டில் உள்ள, கருங்குரங்கு தன் குட்டியுடன் நடுங்கும்படி மழைபெய்யும் மலைச்சாரல் என்பது பாடலடிகளின் பொருளாகும்.

“கழிமழை கெழீஇய கான்யாற் றிகுகரை

ஒலிநெடும் பீலி துயல்வர இயலி

ஆடுமயில் அகவும் நாடன் நம்மொடு” (264)

‘பெருமழை பெய்வதால் உண்டான நீர் காட்டாற்றின் கரையை உடைக்கும். இக்காட்டாற்றின் கரையில் காணப்படும் ஆடும் தன்மையை உடைய மயில் தன் இனத்தைக் கூவி அழைக்கும். இத்தகைய நாட்டிற்குத் தலைவன், நம் தலைவன்’ எனத் தோழி கூறுவது பாடல் அடிகளின் பொருளாகும்.

காட்டுமயில்கள் காடுகளிலும், மலைச்சாரலிலும், காட்டாற்றின் கரையிலும் வாழும் என்ற கருத்தை எடுத்துக்காட்டுவதற்காக 249, 264 ஆம்

பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார். மயில்கள் வாழும் இடங்களைத் தெரிந்துகொள்ள இப்பாடல்கள் பெரிதும் உதவுகின்றன.

மயிலடி போன்ற இலைகளை உடைய நொச்சி என்பது,

"மயிலடி யிலைய மாக்குர நொச்சி"

எனும் இப்பாடலடியின் (138) பொருளாகும். மயிலின் காலில் உள்ள விரல்களின் அமைப்பைத் தெளிவுபடுத்துவதற்காக இப்பாடல் அடியை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

"ஒலிநெடும் பீலி துயல்வர இயலி
ஆடுமயி லகவும் நாடன் நம்மொடு"

'ஒலிக்கின்ற நீலமான தோகை அசையும்படி ஆடுகின்ற மயில்கள் அகவும் மலைநாடன்' என்பது இப்பாடல் அடிகளின் (264) பொருள். மயில்கள் தோகையை விரித்தாடுவதையும் குவித்துச்செல்வதையும் எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

"கான மஞ்ஞை யறையீன் முட்டை
வெயிலாடு முசுவின் குருளை உருட்டும்
குன்றநாடன் கேண்மை என்றும்"

காட்டுமயில் கற்பாறைகளில் ஈன்ற முட்டையை, குரங்கின் குட்டிகள் உருட்டி விளையாடும் மலைநாட்டுத்தலைவன் என்பது இப்பாடலடிகளின் (38) பொருளாகும். மயில்கள் தனது முட்டைகளைத் தரையைக் கிளறியும், சில சுள்ளிகளைத் தரையில் வைத்தும், பாறைகள் மீதும் இடும் தன்மையுடையன. ஆதலால் மயில்களுக்குக் கூடுகள் இருப்பதாகக் கூறுவதோ, அதில் அவை தங்குவதாகக் கூறுவதோ தவறாகும் என மயில்கள் முட்டையிடும் தன்மையையும் மயில்களுக்குக் கூடு இல்லாத் தன்மையையும் எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் புலி

இக்கட்டுரையில், குறுந்தொகையின் 321 ஆம் பாடலின் அடிகள் இருமுறை இடம்பெற்றுள்ளன.

காட்டுமான் பயந்து ஓடும்படி, அதன் ஆண்மானைக்கொன்ற, சிவந்த கண்களையுடைய பெரிய புலி முழக்கமிடும் என்பது அப்பாடலடிகளின் பொருளாகும்.

புலி, மானினத்தைச் சேர்ந்த மரையாவை வேட்டையாடும் தன்மையை எடுத்துக்காட்ட ஓர் இடத்திலும் புலியின் சிவந்த கண் அமைப்பை எடுத்துக்காட்ட மற்றோர் இடத்திலும் இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் பாம்பு

இக்கட்டுரையில் குறுந்தொகையின் 185, 119, 268 ஆகிய பாடல்கள் இடம்பெற்றுள்ளன.

"..................பல்வரிப்

பாம்புடை யவிழ்ந்தது போலக் கூம்பிக்"

பலவரிகளையுடைய, பாம்பினது படம் ஒடுங்கியதுபோல, சிவந்த காந்தள் மலர்கள் காணப்படும் என்பது இப்பாடல் அடிகளின் (185) பொருளாகும்.

இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டதற்கான நோக்கம் நற்றிணை - குறிஞ்சித்திணை ஆய்வுப் பகுதியில் இடம்பெற்றுள்ளது (2.1.1).

"சிறுவெள் ளரவின் அவ்வரிக்குருளை

கான யானை அணங்கி யாஅங்கு"

சிறிய வெண்ணிறப் பாம்பின், அழகிய கோடுகளையுடைய குட்டியானது, காட்டுயானையை வருத்தும் என்பது இப்பாடல் அடிகளின் (119) பொருள்.

நல்லபாம்பின் நஞ்சு பல்லில் மறைந்திருக்கும் என விளக்கவும் நஞ்சின் கொடுந்தன்மையினை எடுத்துக்காட்டவும் இப்பாடல்அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

"...பாம்பின்

பையுடை யிருந்தலை துமிக்கும் ஏற்றொடு

நடுநாள் என்னார்..."

பாம்பின் தலை துண்டித்து எழும்படி இடியும் மழையும் நிறைந்த நள்ளிரவு என்பது இப்பாடல் அடிகளின் (268) பொருளாகும். நல்லபாம்பு இடிக்கு

அஞ்சவும், நடுங்கவும் செய்யும் என்ற கருத்தை எடுத்துக்காட்ட மேலே இடம்பெற்றுள்ள பாடலடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்கநூல்களில் எருவையும் நாணலும்

இக்கட்டுரையில், குறுந்தொகையின் 170 ஆம் பாடலின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

அருவி ஓடும்காலத்தில், பூங்கதிர்களுடன் விளங்கும் கொறுக்கான் தட்டையை, கோடைக்காலத்தில் ஆழமான நீர்நிலையைக் கண்டறிய விரும்பிச் சென்றயானை கவளமாக உண்ணும் என்பது அப்பாடல் அடிகளின் பொருளாகும். இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டதற்கான நோக்கம் நற்றிணை - குறிஞ்சித்திணை ஆய்வுப் பகுதியில் இடம்பெற்றுள்ளது (2.1.1).

## குறிஞ்சிப்பாட்டில் வரும் செடிகொடி மரப்பெயர்கள்

இக்கட்டுரையில் குறுந்தொகையின் 100, 3, 239, 156, 222 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

'குளவி' என்ற செடி சங்கநூல்களில் கூறப்பட்டுள்ளது. நச்சினார்க்கினியர் இதைக் 'காட்டுமல்லிகை' என்றும் பிற உரையாசிரியர்கள் 'மலைப்பச்சை' என்றும் கூறுகின்றனர். இதில் பிற உரையாசிரியர்கள் கூறும் 'மலைப்பச்சை' என்ற பெயரே சரியானது. ஏனெனில் இச்செடி மலைவீழ்அருவிகள் அருகில் காணப்படுகின்றது. இதற்குக் குறுந்தொகை 100 ஆம் பாடல் சான்று என விளக்க 100 ஆம் பாடலை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

குறிஞ்சிச் செடியானது 12 ஆண்டுகளுக்கு ஒருமுறை பூக்கும் என்ற கருத்தை விளக்கவும் அதன் நறுந்தேனின் தன்மையை எடுத்துக்காட்டவும் 3 ஆம் பாடலை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

'உந்தூழ்' என்ற செடியின் பெயர் சங்கநூல்களில் 'முந்தூழ்' என அழைக்கப்படுகின்றது என விளக்க 239 ஆம் பாடலை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

‘பலாசம்’ என்ற செடி வடமொழியில் கூறப்பட்டுள்ளது. ‘முருக்கு’ என்ற தமிழ்ப்பெயருக்கு வடமொழியில் வழங்கிய பெயர் ‘பலாசம்’ ஆகும். இந்த முருக்குச் செடியின் பூவின் அழகை எடுத்துக்காட்ட 156 ஆம் பாடலை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

‘பித்திகம்’ என்பது ஒருவகை முல்லையாகும். இதன் பூ செவ்வரி கொண்டது. இது கார்காலத்தில் பூக்கும் என்ற கருத்தை எடுத்துக்காட்ட 222 ஆம் பாடலை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க நூல்களில் பயறும் உழுந்தும்

இக்கட்டுரையில் குறுந்தொகையின் 68 ஆம் பாடல் அடிகள் இடம்பெற்றுள்ளன.

‘குறும்பூழ்’ என்ற காடைப் பறவையின் கால்போன்று, உழுந்தின் செடி காணப்படும். இச்செடியில் உள்ள காய்களை மான்கூட்டம் தின்னவரும் சிறப்புமிக்க பனிக்காலம் என்பது பாடலடிகளின் பொருளாகும்.

இப்பாடலை ஆசிரியர் எடுத்தாளுவதற்கான காரணம் நற்றிணை-முல்லைத்திணை ஆய்வுப் பகுதியில் குறிப்பிடப்பெற்றுள்ளது (2.1.2).

## சங்கநூல்களில் ஆமை

இக்கட்டுரையில் குறுந்தொகையின் 152 ஆம் பாடலின் அடிகள் இடம்பெற்றுள்ளன. தாய்முகம் பார்த்து வளருகின்ற ஆமைப்பார்ப்பைப் போல, தலைவனைக் காணுதலால் காமமானது வளரும், தலைவன் தன்னை விட்டுப் பிரிந்துவிடுவானானால், தாயைவிட்டுப் பிரிந்த முட்டைபோல காமமும் உள்ளத்துள்ளே கிடக்கும் எனத் தலைவி கூறுவது அப்பாடலடிகளின் பொருளாகும். அப்பாடலை ஆசிரியர் எடுத்தாளுவதற்கான காரணம் நற்றிணை-மருதத்திணை ஆய்வுப் பகுதியில் குறிப்பிடப்பெற்றுள்ளது (2.1.3).

## சங்கநூல்களில் கூதளமும் குளவியும் குல்லையும்

இக்கட்டுரையில் குறுந்தொகையின் 60, 100 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

“குறுந்தாட் கூதளி யாடிய நெடுவரை”

‘குறுகிய அடிகளையுடைய கூதளஞ்செடி காற்றில் அசைந்து கொண்டிருக்கின்ற உயர்ந்த மலைஉச்சி’ என்பது 60 ஆம் பாடலடியின் பொருளாகும்.

‘மலையருவியின் நீர்பாயும் பெரிய நிலப்பரப்பிலே, மலை நெல்லை விதைத்து, அவற்றின் இடையில் முளைத்த காட்டு மல்லிகையையும் கற்றாழையையும் களைந்து எறிவர், நான்விரும்பும் காதலி வாழும் சிற்றூரில் உள்ள மக்கள்’ எனத் தலைவன் கூறுவது 100 ஆம் பாடலின் பொருளாகும்.

இப்பாடல்களை ஆசிரியர் எடுத்தாளுவதற்கான காரணம் நற்றிணை- குறிஞ்சித்திணை ஆய்வுப் பகுதியில் குறிப்பிடப்பெற்றுள்ளது (2.1.1).

## சங்க நூல்களில் மயிலை

இக்கட்டுரையில் குறுந்தொகையின் 138 ஆம் பாடல் அடி இடம்பெற்றுள்ளது. மயிலின் அடியைப் போன்ற இலையையும் கரிய பூங்கொத்துகளையும் உடைய நொச்சி என்பது அப்பாடல் அடிகளின் பொருளாகும். இப்பாடலை ஆசிரியர் கையாண்டதற்கான நோக்கம் நற்றிணை - முல்லைத்திணை ஆய்வுப்பகுதியில் இடம்பெற்றுள்ளது (2.1.2).

## சங்க நூல்களில் மீன்கள்

இக்கட்டுரையில் குறுந்தொகையின் 25 ஆம் பாடலின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

நாரை, நீரோடையின் கரையில் உட்கார்ந்து கொண்டு, தன் உணவுக்காக ஆரல்மீனின் வரவை எதிர்பார்த்துக்கொண்டிருக்கும் என்பது அப்பாடல் அடிகளின் பொருளாகும்.

‘ஆரல் மீனை இக்காலத்தில் ஆராமீன் என அழைப்பர். இது நன்னீர் மீன்வகையாகும். இந்த மீனின் மூக்கு நீளமாகவும், கூர்மையாகவும் இருக்கும். நாரை, கொக்கு, குருகு போன்றவை இம்மீனை விரும்பி உண்ணும். ஆரல் மீனை மக்கள் விரும்பி உண்ணுவர். இதன் கருவாடு மிகவும் சுவையுடையதாக இருக்கும். ஆரல்மீனை ஆங்கிலத்தில் (Sand eel)

எனவும், அறிவியலில் ரைஞ்சோடெல்லா அக்குலீட்டா (Rhynchobdella aculeate) என்றும் அழைப்பர்' என ஆரல் மீனின் வடிவமைப்பு, அதனை உண்ணும் பறவைகள், அதன் கருவாட்டின் சுவை, ஆரல்மீனின் அறிவியல் பெயர் முதலான செய்திகளை விளக்கும் நிலையில் இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் மணிகள்

இக்கட்டுரையில் குறுந்தொகையின் 379 ஆம் பாடல் அடிகள் இடம்பெற்றுள்ளன.

'மலையில் பழங்குழியைத் தோண்டிய குறவன், தான் எதிர்பார்த்த கிழங்கினொடு, இடமகன்ற பெரிய மாணிக்கத்தையும் பெறுகின்ற சிறந்த நாட்டையுடைய தலைவன்' என்பது அப்பாடலடிகளின் பொருளாகும். 'மணிகளில் குற்றமற்றவையைத் 'தூமணி' என்றும், 'ஆய்மணி' என்றும் பழந்தமிழர்கள் அழைத்தனர். இத்தூமணி மலைக்குன்றின் பழங்குழியில் அகழ்ந்து எடுக்கப்பட்டது. இம்மணியின் கதிர்கள் கண்ணைக் கவரும்படி பொரும்படி ஒளி வீசும் தன்மையுடையன. இது சில குறிப்பிட்ட நிறங்களுடன் மாறுபட்டும் தோன்றும்' என மணி பற்றிய செய்திகளை எடுத்துக்காட்ட இப்பாடலுக்குரிய அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் பெயர்களைத் தேடும் பாடல்கள்

இக்கட்டுரை இரா.இராசகோபாலன் என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1988 ஜனவரி-ஆகஸ்ட்). 'சங்க இலக்கியத்தில் புலவர்பெயர் இல்லாத 102 பாடல்கள் காணப்படுகின்றன. இதில் பதிற்றுப்பத்தில் உள்ள 6 பாடல்களுக்கு வ.சுப.மாணிக்கனாரும் நற்றிணையில் 56 பாடல்களுக்கு ஔவை சு.துரைசாமிபிள்ளையும் பெயர் சூட்டியுள்ளனர் மீதம் 40 (பரிபாடலில் - 2) 42 பாடல்களுக்குப் பாடிய புலவர்களின் பெயர் தெரியவில்லை.' எனவே இப்பாடல்களுக்குச் சங்கமரபை ஒட்டியும், வ.சுப.மாணிக்கனாரின் பெயர்ப்பட்டியலை ஒட்டியும் முரண்பட்டும் இக்கட்டுரை ஆசிரியர் பெயர்சூட்ட முயல்வது கட்டுரையின் நோக்கமாகும். இதில் குறுந்தொகையின் 201, 256, 321, 375, 379 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

'வள்உகிர்ப்பறவை' என்ற சொல் மூலம் தலைவனின் நிலையை இறைச்சிப்பொருளாகக் குறுந்.201 ஆம் பாடல் விளக்குவதால் இப்பாடல் பாடிய புலவரை வள்உகிர்ப்பறவையார் என்கின்றார் இக்கட்டுரையாசிரியர்.

256 ஆம் பாடலின் மையப்பொருள், தலைவன் பொருள்தேடும் முயற்சியாகிய வினைநலமே ஆதலால் இப்பாடலின் ஆசிரியரை வினைநலத்தார் என விளக்குகின்றார் இக்கட்டுரையாசிரியர்.

321 ஆம் பாடல் களவுப்புணர்ச்சி வெளிப்படவேண்டிய சூழ்நிலையை வெளிப்படுத்துகின்றது. அதற்குக் காரணம் 'செங்கண் இரும்புலியாகும்.' ஆதலின் இப்பாடல் ஆசிரியரை அத்தொடரால் 'செங்கண் இரும்புலியார்' என்று குறித்துள்ளார் கட்டுரையாளர்.

"அம்ம வாழி தோழி இன்றுஅவர்
வாரார் ஆயினோ நன்றே சாரல்
சிறுதிணை விளைந்த வியன்கண் இரும்புனத்து
இரவுஅரி வாரின் தொண்டகச் சிறுபறை
பானாள் யாமத்துங் கறங்கும்
யாமம் காவலர் அவியா மாறே" (375)

தலைவன் இரவில் வராமல் இருப்பது நல்லது. ஏனெனில் திணைப்புனத்தில் இரவு பகலாக அறுவடை நடக்கின்றது. எனவே அங்குவரும் விலங்குகளை விரட்டப் பறையடிப்பார்கள். மேலும், இராக்காவலர்களும் கண்ணுறங்குவதில்லை, எனச் சிறைப்புறமாக நிற்கும் தலைவனுக்குக் கேட்கும் வண்ணமாகத் தோழி தலைவிக்குக் கூறுவது பாடலின் பொருளாகும்.

இப்பாடல் தலைவன் வராதிருத்தல் நன்றெனக் கூறப்படுவதற்கு, நடுயாமத்து ஒலிக்கும் 'சிறுபறையே' காரணமாகும். ஆதலின் 375 ஆம் பாடலின் புலவர் 'சிறுபறையார்' என்று குறிக்கப்பெற்றுள்ளார்.

379 ஆம் பாடலில் தலைவன் தலைவிபால் கொண்ட ஈடுபாட்டிற்கு அடையாளமாக அவளின் நெருக்கமான தலைமுடியைத் தடவினான் என்பதான 'பொம்மல் ஓதி நீவியோனே' என்ற அத்தொடரால் 'பொம்மல்ஓதி' ஆகின்றார்.

## சங்ககாலத்தில் யானைகள்

இக்கட்டுரை 'வாணி அறிவாளன்' என்பவரால் எழுதப்பெற்றதாகும். சங்க இலக்கியங்களில் யானை பற்றிய செய்திகள் மிகுதியாகக் காணப்படுகின்றன. இத்தகைய சிறப்புமிக்க யானைகளின் பயன்பாடு பற்றிய செய்திகளைத் தருவது இக்கட்டுரையின் நோக்கமாகும். இக்கட்டுரையில் குறுந்தொகையின் 394, 225, 292 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

குறிஞ்சிநில விலங்கினங்களில் யானையே மக்களிடம் மிகுதியாகவும் நெருக்கமாகவும் தொடர்புடையதாகக் காணப்படுகிறது. யானையைக் குறிஞ்சிநில மக்கள் வளர்த்தனர். குறிஞ்சிநில மக்களிடமிருந்து செல்வந்தர்களுக்கும், மன்னர்களுக்கும், வள்ளல்களுக்கும் யானை விற்கப்பட்டிருக்கலாம் என யானை பற்றிய செய்திகளை எடுத்துக்கூறவும், யானைகளைப் பரிசாக அளிக்கும் வழக்கம் அக்காலத்தில் இருந்தது என்ற கருத்தை எடுத்துக்காட்டவும், குறிஞ்சிநில மக்களால் யானை வளர்க்கப்பட்ட முறைகளைத் தெளிவுபடுத்தவும் இப்பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## தமிழிலக்கியத்தில் தாவரநூலின் நுட்பங்கள்

இக்கட்டுரை லூர்துசாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும். இதில் குறுந்தொகையின் 106 ஆம் பாடலின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

"புல்வீழ் இற்றிக் கல்லிவர் வெள்வேர்
வரையிழி யருவியிற் றோன்றும் நாடன்"

சிறிய விழுதுகளையுடைய இற்றிமரத்தின் மலைப்பாறைகளில் படர்ந்திருக்கின்ற வெண்மையான வேர், மலையின் பக்கத்தில் வழிந்து விழுகின்ற அருவி நீரைப்போலக் காணப்படும் என்பது பாடலடிகளின் பொருளாகும்.

இப்பாடலை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம் நற்றிணை - பாலைத்திணை ஆய்வுப்பகுதியில் காணப்படுகின்றது (2.1.5).

### 3.1.2 முல்லை

செந்தமிழ்ச்செல்வி இதழில் 8 ஆய்வுக்கட்டுரைகளில் இடம்பெற்றுள்ள குறுந்தொகைக்குரிய முல்லைத்திணைப்பாடல்களின் எண்ணிக்கை 11 ஆகும்.

### சங்க இலக்கியத்தில் காக்கை

இக்கட்டுரையில் குறுந்தொகை 210 ஆம் பாடலின் அடிகள் இடம்பெற்றுள்ளன. 'வெண்நெய் கலந்த சோற்றை ஏழு பாண்டங்களில் ஏந்தினாலும், காக்கை உணவாகக் கொள்வது சிறிதளவுதான். ஆதலால் தலைவியின் பெரிய தோளை இளைக்கச் செய்த துன்பம் நீங்கும்படி காக்கை கரைவதற்காக, நான் சிறுசோற்றைத்தான் அவற்றிற்குக் கொடுத்துவந்தேன்' எனத் தோழி தலைவனிடம் கூறுவது பாடலடிகளின் பொருளாகும். இப்பாடலை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம் நற்றிணை-பாலைத்திணை ஆய்வுப்பகுதியில் குறிப்பிடப்பெற்றுள்ளது (2.1.5).

### சங்க இலக்கியத்தில் மயில்

இக்கட்டுரையில் குறுந்தொகையின் 183, 110, 194, 391 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

மழைபெய்வதற்கு முன்பு ஒளியில்லாமலிருந்த காயாவின் பூ மழைபெய்தபின் மலர்கள் நிறைந்து செழிப்புறக் காணப்படும். இது மயிலின் மெல்லிய கழுத்தைப் போல் தோன்றும் என்பது 183 ஆம் பாடலடிகளின் பொருள். மயிலின் கழுத்து ஒளிவிடும் நீலநிறமாகக் காணப்படும் என்ற கருத்தை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

வாடைக்காற்று அடிக்கும்போது, நீரில் உள்ள நீலத்தின் மொட்டு மலர்கின்றது. புதரிலே, உள்ள மயிற்பீலியின் கண்களைப் போல உள்ள கருவிளை மலர்கள் தாமாகவே மலர்ந்து, ஒருநிலையில் நிற்காமல் ஆடி அசைகின்றன எனப் பருவம் கண்ட தலைமகள் தோழிக்குக் கூறுவது 110 ஆம் பாடலடிகளின் பொருளாகும். மயிலின் பொறிகளைக் கண் என்று கூறும் வழக்கம் அக்காலத்தில் இருந்தது என விளக்கவும் மயிலின் பீலிக்குக்

கருவிளை மலர்களை எடுத்துக்காட்டவும் இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

மேகம் வானத்தில் எழுந்து முழங்கும், அந்த முழக்கத்திற்கு எதிராகக் காட்டில் உள்ள மயில்கள் எல்லாம் விரைந்து கூடி ஆரவாரிக்கும். இந்த இரண்டுக்கும் எதிர்நிற்க முடியாமல் என் மனம் கலக்கம் அடையும் எனத் தலைவி தோழியிடம் கூறுவது 194 ஆம் பாடலடிகளின் பொருளாகும். வானம் இடிஇடிக்கும் போது, அவ்வொளியைக் கேட்ட மயில்கள் கூட்டமாகக் கூவும் என்ற கருத்தை எடுத்துக்காட்ட மேலே இடம்பெற்றுள்ள பாடலடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

காதலரைப் பிரிந்தோர் வருந்தும் மாலைக்காலத்தில், பூத்த கிளையில் அமர்ந்த, பிளந்த கண்களையுடைய மயில்கள் மழைநீர் பாய்ந்தோடும் அகன்ற இடம் தனித்து இருக்கும்படிக் கூவும் என்பது 391 ஆம் பாடலடிகளின் பொருளாகும். மயிலுக்குப் 'போழ்கண்' உண்டு. அதாவது மயிலிற்குக் காட்டு விலங்குகளை ஊடுருவிப் பார்ப்பது போல, உற்றுப் பார்க்கும் குணம் உண்டு. எனவே காட்டு விலங்குகள் மயிலின் கூர்மையான பார்வையில் இருந்து தப்பமுடியாது.

## சங்கநூல்களில் வரகு

இக்கட்டுரையில் குறுந்தொகையின் 220 ஆம் பாடலின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

"பழமழைக் கலித்த புதுப்புன வரகின்
இரலை மேய்ந்த குறைத்தலைப் பாவை"

முன்பு பெய்த மழையால் செழித்து வளர்ந்த வரகின் கதிர்களை மக்கள் கொய்வர். இவ்வாறு கதிர்களைக் கொய்வதால் தட்டை மட்டும் காணப்படும். இத்தட்டையில் உள்ள இலைகளை மான்கள் உண்ணும் என்பது இப்பாடல் அடிகளின் பொருளாகும். 'வரகு' முல்லைநிலத்திலும், புன்புலவைப்பிலும், வன்பாலிலும், புன்புலத்திலும், செந்நிலத்திலும் காணப்படும். இது வானம் பார்த்த பயிர். இதன் இலை கரும் பச்சையாகக் காணப்படும். கவைக்கதிர் என வரகின் கதிர் அழைக்கப்படுகின்றது. புறாவின் முட்டைபோன்று வரகின் அரிசி காணப்படும். வரகை

அறிவியலில் Pasapalum Scrobiculatum என அழைப்பர் என வரகு பற்றிய கருத்துகளை எடுத்துக்காட்ட மேலே இடம்பெற்றுள்ள பாடல்அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## குறிஞ்சிப்பாட்டில் வரும் செடிகொடி மரப்பெயர்கள்

இக்கட்டுரையில் குறுந்தொகையின் 233 ஆம் பாடல் இடம்பெற்றுள்ளது. 'செயலை' என்ற அசோகமரம் சங்கநூல்களில் காணப்படுகின்றது என்ற கருத்தை விளக்க இப்பாடலை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

## சங்க காலத்தில் காசு

இக்கட்டுரையில் குறுந்தொகை 148 ஆம் பாடலின் அடிகள் இடம்பெற்றுள்ளன. தவளையின் வாய்போன்ற வாயினையுடைய சிறு சதங்கையில் அமைந்துள்ள காசுகளைப் போல, கொன்றை மரம் மொட்டுகளை ஈனும் என்பது 148 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும்.

அக்காலத்தில் மக்கள் பயன்படுத்திய காசு, வேப்பம்பழம் போலவும் கொன்றையின் பூப்போலவும் காணப்பட்டது என்பதனை விளக்க மேலே இடம்பெற்றுள்ள பாடல்அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார். அக்கால மக்கள் பயன்படுத்திய காசின் அமைப்பு முறையினைத் தெரிந்துகொள்ள இப்பாடல்கள் பெரிதும் உதவுகின்றன.

## சங்கநூல்களில் தவளையும் தேரையும் நுணலும்

இக்கட்டுரையில் குறுந்தொகை 148, 193 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன. தவளையின் வாய்போன்ற வாயினையுடைய சிறுசதங்கை என்பது 148 ஆம் பாடல் அடியின் பொருள்.

சிறிய வாய்ப்பகுதியையுடைய சுனையின்கண் உளவாகிய பிளந்த வாயினையுடைய தேரைகள், கரடிகை எனும் பறையைப் போல ஒலிக்கும் நாட்டின் தலைவன் என்பது 193 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும்.

தவளையும் தேரையும், நீரையும் நிலத்தையும் உறைவிடமாகக் கொண்டவை. தவளை பெரும்பாலும் நீரில் காணப்படும். தேரை,

பெரும்பாலும் தரையிலேயே காணப்படும். தவளை தாவிச்செல்லும். தேரைகள் தரையில் ஊர்ந்து செல்லும். தவளையின் உடல் வழவழப்பாகவும் தேரையின் உடல் சொரசொரப்பாகவும் இருக்கும். தேரையின் தோலில் ஒருவகை நஞ்சு சுரக்கும். இவை இரண்டும் அடிக்கடி ஒலி எழுப்பும் தவளைக்கு வாயில் மேலண்ணத்தில் பற்கள் உண்டு, தேரைக்கு வாயில் பற்கள் இல்லை. தேரைகள் தவளையைவிட உருவில் பெரியவை எனத் தவளை, தேரை பற்றிய செய்திகளை எடுத்துக்காட்ட மேலே இடம்பெற்றுள்ள பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் பெயர்களைத் தேடும் பாடல்கள்

இக்கட்டுரையில் குறுந்தொகையின் 191 ஆம் பாடல் இடம்பெற்றுள்ளது.

"உதுக்காண் அதுவே, இது என மொழிகோ
நோன்சினை இருந்த இருந்தோட்டுப் புள்ளினம்
தாம் புணர்ந்தமையிற் பிரிந்தோர் உள்ளத்
தீம்குரல் அகவல் கேட்டு, நீங்கிய
ஏதிலாளர் இவண்வரிற், போதிற்
பொம்மல் ஓதியும் புனையல் ;
எம்முற் தொடாஅ லென்குவெ மன்னே"

இப்பாடலில், துணைப்புணர்ந்து அழைக்கும் பறவைகளின் இனியகுரல் கேட்கும் தலைவன், தன்னை நினைந்து வாராது ஏதிலானாகச் சென்றான் என்பதே தலைவியின் வருத்தத்திற்குக் காரணமாகும். அந்தப் பறவைகளின் இனிய குரல் இப்பாடலில் 'தீம் குரல் அகவல்' எனக் குறிக்கப்படுகின்றது. ஆதலின் அத்தொடரால் இப்பாடலாசிரியர் 'தீம்குரல் அகவலார்' ஆகின்றார். என ஆசிரியர்பெயரில்லா இப்பாடலுக்குப் பெயர்தரும் முகமாக இப்பாடலை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்ககாலச் செய்யுள்நடை

இக்கட்டுரை ச.கணபதி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1962 பிப்ரவரி-ஜூலை) சங்கச் செய்யுள் நடையின் சிறப்பியல்புகளை எடுத்துக்கூறுவது இக்கட்டுரையின் நோக்கமாகும். இக்கட்டுரையில் குறுந்தொகையின் 167 ஆம் பாடல் இடம்பெற்றுள்ளது.

'தலைவி நன்றாகக் காய்ச்சிய பாலில், உறை ஊற்றிப் பெற்ற தயிரைப் பிசைந்து, தலைவனுக்காகப் புளிப்புச் சுவையுடைய குழம்பினை வைக்கின்றாள். இக்குழம்பை உண்ட தலைவன் 'இனிது' எனப் புகழ்கின்றான். இச்சொல் கேட்ட தலைவி பிறர் அறியாவண்ணம் நுண்ணிதாக மகிழ்கின்றாள்' என்பது பாடலின் பொருளாகும். பண்டைத்தமிழர்களின் இல்லற வாழ்க்கையினை, சங்ககாலச் செய்யுள்கொண்டு விளக்குவதற்காக இப்பாடலை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

### 3.1.3 மருதம்

செந்தமிழ்ச்செல்வி இதழில் 08 ஆய்வுக்கட்டுரைகளில் இடம்பெற்றுள்ள குறுந்தொகைக்குரிய மருதத்திணைப் பாடல்களின் எண்ணிக்கை 12 ஆகும்.

### சங்கநூல்களில் ஞாழல்

இக்கட்டுரையில் குறுந்தொகையின் 50 ஆம் பாடல் இடம்பெற்றுள்ளது. 'வெண்சிறுகடுகு போன்ற ஞாழல்பூக்கள் மருதமரத்தின் சிவந்த பழம்பூக்களுடன் கலந்து காணப்படும் நீர்த்துறைக்குரிய தலைவன் என்னைப் பிரிந்ததால் என்தோள் மெலிந்து, என் தோள் வளையல்கள் மூட்டுவாயை விட்டு நழுவின' எனத் தலைவி தன் துன்ப நிலையைத் தலைவனின் தூதுவர்களிடம் கூறுவது பாடலின் பொருளாகும். இப்பாடலை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம் நற்றிணை - நெய்தல் திணை ஆய்வுப் பகுதியில் இடம்பெற்றுள்ளது (2.1.4).

### சங்க இலக்கியத்தில் புலி

இக்கட்டுரையில் குறுந்தொகையின் 253 ஆம் பாடலின் அடிகள் இடம்பெற்றுள்ளன. உயர்ந்த மூங்கில்கள் காணப்படும் மலைச்சாரல் பகுதியில், புலியானது தனக்குத் தேவைப்படும் புலால் உணவைக் குகையிலே திணித்து வைக்கும் என்பது இப்பாடல் அடிகளின் பொருளாகும். புலி தனது இரையைக் கற்குகைகளில் மறைத்துவைக்கும் தன்மை உடையது. மேலும் அந்த இரை அழுகிப் புழுத்துப்போனாலும் அதை உண்ணும் தன்மையுடையது என்ற கருத்தை விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் நீர்நாய்

இக்கட்டுரையில் குறுந்தொகை 364 ஆம் பாடலின்,

"அரிற்பவர்ப் பிரம்பின் வரிப்புற நீர்நாய்

வாளை நாளிரை பெறூஉம் ஊரன்"

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன. 'பின்னிக் கொண்டிருக்கின்ற கொடிப் பிரம்புபோன்ற கோடுகள் பொருந்திய முதுகையுடைய நீர்நாய்கள், வாளைமீனை நாள்தோறும் உணவாகப்பெறும். இத்தகைய சிறப்புமிக்க மருதநிலத்தலைவன்' என்பது பாடல் அடிகளின் பொருளாகும்.

'இந்தியாவில் மூன்று வகையான நீர்நாய்கள் உண்டு. 1.The common otter, 2.The Smooth Indian otter, 3.The clawless otter, இதில் இரண்டாவது வகையான The Smooth Indian other என்ற நீர்நாய்தான் சங்க இலக்கியத்தில் காணப்படும் நீர்நாய். இது நீர்நிறைந்த வயல், ஆறு, கால்வாய், பெரிய ஏரி, குளங்களின் கரை, கடற்குழி போன்ற இடங்களில் வாழும் தன்மையுடையது. மேலும் இந்நீர்நாய் பிரம்பு, நாணல், தாமரைக்கொடி, வள்ளிக்கொடி, சேம்பின் அகலிலை அமைந்த பாசிப்பரப்பு, செங்குரலிக்கொடி, தில்லையம்பொதும்பி போன்ற நீர்ச்செடிகளில் தங்கும். இது வழவழப்பான, கருமையாய் (Darkish) கருமை கலந்த செம்பழுப்பாய் இருக்கும். இது மீன்களை வேட்டையாடும். நீர்நாயின் ஆணை 'இருப்போத்து' என்றும், பெண்ணைப் 'பிணவு' என்றும் குட்டிகளைப் 'பிறழ்' எனவும் அழைப்பர்.' என நீர்நாயின் வகை, அது வாழும் இடம், தங்கும் செடிகொடி, நீர் நாயின் உடலமைப்பு, நிறம், வேட்டையாடும் தன்மை, நீர்நாயின் ஆண், பெண் பெயர்கள் போன்ற நீர்நாய் பற்றிய செய்திகளை எடுத்துக்காட்ட மேலே இடம்பெற்றுள்ள பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் இரம் என்ற மரம்

இக்கட்டுரையில் குறுந்தொகை 138 ஆம் பாடல் இடம்பெற்றுள்ளது.

'எமது இல்லத்திற்குப் பக்கத்தில் உள்ள எழிலைப் பாலை மரத்திற்கு அப்பால் மயிலின் அடியைப் போன்ற இலைகளையும், கரிய பூங்கொத்துகளையும் உடைய நொச்சியின் கிளைகளிலிருந்து

நீலமணிபோன்ற மலர்கள் உதிரும். இச்சிறப்புமிக்க ஊரில் உள்ளவர்கள் உறங்கினாலும் நாங்கள் உறங்கவில்லை’ எனத் தலைவன் கேட்குமாறு தோழி கூறுவது பாடலின் பொருள்.

‘எழிலைப்பாலை என்ற மரம் எழில்மலையில் காணப்படுகின்றது. இம்மரத்தின் இலையை மலையாள மக்கள் காளிவணக்கத்திற்குப் பயன்படுத்துவர். மேலும் காளிகோயில் துவக்கவிழாவே இம்மரத்தின் அடியில்தான் நடக்கும். மராத்தி மொழியில் இம்மரத்தை ‘சைத்தான்’ என அழைப்பர். இம்மரத்தில் பேய்கள் வாழ்வதாக இம்மக்கள் நம்புவர். எழிலைப்பாலை வளரும் எழில்மலையைப் பற்றிய பெயர்க்காரணம் தெரியாமல் இடைக்காலத்தில் ‘எழுமலை’ என்றும், பிற்காலத்தில் ‘எலிமலை’ என்றும் கூறுவர்’ என எழில்மலையைப் பற்றி விளக்கவும், எழிலைப்பாலை மரத்தின் சிறப்பை எடுத்துக்காட்டவும் மேலே இடம்பெற்றுள்ள பாடலை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க நூல்களில் பயறும் உழுந்தும்

இக்கட்டுரையில் குறுந்தொகை 10 ஆம் பாடலின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

‘பயறு போன்ற பூக்கொத்துகளில் உள்ள பசுமையான மகரந்தங்கள் உடம்பிலே படியும்படி உழவர்கள் வளைத்த, மலர்கள் நிறைந்த மெல்லிய கிளைகளையுடைய, காஞ்சிமரங்கள் நிறைந்த ஊரை உடைய தலைவன்’ என்பது பாடல் அடிகளின் பொருளாகும்.

‘பயறு’ காஞ்சிமரத்தின் பூவிணர்போலவும், பயற்றின்காய் முற்றும் பனிக்காலத்தில் விரைத்த விரல்போலவும், பயறின் நெற்று இருகொம்பு போலவும் காணப்படும் என விளக்கவும் ‘பயறு’ என்பது பொதுவாகப் பயற்று வகைகளைக் குறித்தாலும், இது குறிப்பாகப் பெரும்பயற்றைத்தான் குறிக்கும்; பெரும்பயறு என்பது பயற்றாங்காயைக் குறிக்கும்; இது இன்று ‘காராமணி’ என அழைக்கப்படும் செடியைக் குறிக்கின்றது என எடுத்துரைக்கவும் இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார். பயற்றின் அமைப்புமுறையினைத் தெரிந்துகொள்ளவும் ‘பயறு’ என்ற

*சொல்குறிக்கும் செடியின் பெயரை அறிந்துகொள்ளவும் இக்கட்டுரை பெரிதும் பயன்படுகின்றது.*

## சங்கநூல்களில் மீன்கள்

*இக்கட்டுரையில் குறுந்தொகை 178, 91, 127, 08, 164, 364 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.*

*"அயிரை பரந்த அந்தண் பழனத்*

*தேந்தெழின் மலர தூம்புடைத் திரள்கால்*

*ஆம்பல் குறுநர் நீர்வேட் டாங்கிவள்" (178)*

*'அயிரைமீன் மேய்வதற்குப் பரவியுள்ள, அழகிய தண்ணிய நீர் அறாத வயல்களில், அழகு மிகுந்த மலர்களையும் திரண்ட தண்டினையும் உடைய, களையாக வளர்ந்துள்ள ஆம்பல் மலர்களைக் கிள்ளிப்பறிப்பர்' என்பது பாடல் அடிகளின் பொருளாகும். இப்பாடலின் அடிகளை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம் நற்றிணை - நெய்தல்திணை ஆய்வுப் பகுதியில் குறிப்பிடப்பெற்றுள்ளது (2.1.4).*

*பிரப்பங்கொடியின் கோடுகளைப் புறத்தில் கொண்ட முதிர்ந்த கனி காணப்படும். அக்கனியை ஆழமான குளத்தில் உள்ள கெண்டைமீன் எளிதில் கவ்வும் என்பது 91 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும்.*

*குருகு தனது மூக்கினால் கவர்ந்த கெண்டைமீன், குருகிடம் இருந்து தப்பி நீருக்குள் விழும். பின் நீரில் உள்ள வெண்மையான தாமரைமொட்டைக் கண்டு இது குருகே! என அஞ்சும். இத்தகைய சிறப்பும், காஞ்சிமரங்களும் நிறைந்த ஊரையுடைய தலைவன் என்பது 127 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும்.*

*'கெண்டைமீன்' எனச் சங்கநூல்களில் கூறப்பட்ட மீன் 'வெண்கெண்டை' மீனாகவே இருக்கும். இக்கெண்டைக்கு வயிறு உருண்டு, திரண்டு காணப்படும். இது, ஆறுகளிலும் குளங்களிலும் மிகுதியாகக் காணப்படும். இக்கெண்டைமீன் வெள்ளிய நிறத்துடன் செதில்களைப் பெற்றது. இருப்பினும் ஒவ்வொரு செதில்களுக்கு நடுவிலும் செம்மைநிறம் காணப்படும்' எனக் கெண்டைமீனின் உடல்அமைப்பு, அது வாழும் இடம், செதில்களின் நிறம் போன்ற கெண்டைமீன் பற்றிய செய்திகளை*

எடுத்துக்காட்ட மேலே இடம்பெற்றுள்ள பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

"கழனிமாத்து விளைந்துகு தீம்பழம்
பழனவாளை கதூஉ மூரன்" (8)

வயல்பக்கத்தில் உள்ள மாமரத்திலிருந்து விழும் இனிமையான பழங்களை வயலில் உள்ள வாளைமீன் கவ்வும் ஊரன் என்பது பாடலடிகளின் பொருளாகும்.

திரண்ட கொம்பையுடைய வாளைமீனின் நிறைந்த கருவைக் கொண்ட அழகிய பெண்மீன், கொத்தாக இருக்கின்ற இனிய மாவின் சுவையான பழத்தைக் கவ்வும் என்பது **164** அம் பாடல் அடிகளின் பொருள்.

பிரப்பங்கொடி போன்ற கோடுகள் பொருந்திய நீர்நாய் வாளை மீனை நாள்தோறும் இரையாகப் பெறும் என்பது **364** ஆம் பாடலின் பொருளாகும். இப்பாடல்களை ஆசிரியர் கையாண்டதற்கான நோக்கம் நற்றிணை - மருதத்திணை ஆய்வுப் பகுதியில் இடம்பெற்றுள்ளது **(2.1.3).**

## சங்க இலக்கியத்தில் பாம்பு

இக்கட்டுரையில் குறுந்தொகை 35 ஆம் பாடலின்,

"சினைப்பசும் பாம்பின் சூன்முதிர்ப்பன்ன
கனைத்த கரும்பின் கூம்புபொதி யவிழ"

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன.

கருக்கொண்ட பச்சைப்பாம்பின் கர்ப்பத்தின் நிறைவைப் போலத் திரண்ட கரும்பினது குவிந்திருக்கின்ற அரும்புகள் காணப்படும் என்பது பாடலடியின் பொருளாகும்.

பச்சைப்பாம்பின் வயிற்றில் காணப்படும் குட்டிகள் மெல்லிய கொடியைப் போல இருக்கும். பச்சைப்பாம்பைத் தற்காலத்தில் 'கண்குத்திப்பாம்பு' என அழைப்பர். பச்சைப்பாம்பின் குட்டி அமைந்திருக்கும் முறையையும் அப்பாம்பைத் தற்கால மக்கள் அழைக்கும் முறையையும் எடுத்துக்காட்ட மேலே இடம்பெற்றுள்ள பாடல்அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

### தமிழிலக்கியத்தில் தாவரநூலின் நுட்பங்கள்

இக்கட்டுரையில் குறுந்தொகை 293, 91 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

நீர்நிலையில் உண்டாகிய வெள்ளிய ஆம்பலின் அழகிய மாறுபட்ட நெறித்தலையுடைய தழையால் ஆன ஆடை என்பது 293 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும்.

'ஆம்பல்' இலையின் ஓரத்தை Dentate and sinuate எனத் தாவரநூலில் அழைப்பர். இதைப் 'பகைநெறித்தழை' என்னும் வார்த்தையால் இலக்கியத்தில் குறிப்பர். ஆம்பல் இலையின் ஓர அமைப்பை, தாவரநூல் எவ்வாறு அழைக்கின்றது என்பதை எடுத்துக்காட்டி, தாவரங்களின் தமிழ்ப்பெயர்களைத் தாவரநூல்களின் பெயரோடு ஒப்பிட்டு விளக்குவதற்காக இப்பாடல்அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

பிரப்பங்கொடியில், கோடுகளைப்புறத்தில் கொண்ட முதிர்ந்த கனி காணப்படும். அக்கனியை ஆழமான குளத்தில் உள்ள கெண்டைமீன் எளிதில் கவ்வும் என்பது 91 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். பிரப்பங்கொடியின் கனி அமைப்பை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

### 3.1.4 நெய்தல்

செந்தமிழ்ச்செல்வி இதழில் 13 ஆய்வுக்கட்டுரைகளில் இடம்பெற்றுள்ள குறுந்தொகைக்குரிய நெய்தல் திணைப் பாடல்களின் எண்ணிக்கை 26 ஆகும்.

### சங்க இலக்கியத்தில் கடல்வாழ் விலங்குகள்

இக்கட்டுரையில் குறுந்தொகை 304 ஆம் பாடலின்,

"கொல்வினைப் பொலிந்த கூர்வா யெறியுளி
முகம்பட மடுத்த முளிவெதிர் நோன்காழ்
தாங்கரு நீர்ச்சுரத் தெறிந்து வாங்குவிசைக்
கொடுந்திமிற் பரதவர் கோட்டுமீ னெறிய"

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன.

வளைந்த திமிலையுடைய மீன்பிடிக்கும் படகில் வேட்டைக்குச் செல்லும் பரதவர்கள், கொல்லுந்தொழிலையுடைய கூர்மையான எறி உளியைக் காய்ந்த மூங்கிலின் முனையிலே பொருத்தி, நிறைந்த நீர்வழியே ஓடிக்கொண்டிருக்கும் சுறாமீன்மேல் வீசிஎறிவர் என்பது பாடலடிகளின் பொருளாகும். பெரிய கொம்பன் சுறாமீன் 30 அடிவரை நீண்டு வளரும் என்ற கருத்தை எடுத்துக்கூறவும் இவ்வலிமை மிக்க சுறாவை மக்கள் வேட்டையாடும் முறையையும் வேட்டையாடப் பயன்படுத்திய கருவியை எடுத்துக்காட்டவும் இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்கஇலக்கியத்தில் அன்னம்

இக்கட்டுரையில் குறுந்தொகை 304, 205 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

'பரதவர்கள் சுறாமீன்மீது உளிபொருந்திய மூங்கிலை விசையுடன் வீசுவதால் கரையில் இருக்கும் குறுகிய கால்களையுடைய அன்னப் பறவைகள் பயந்து அவ்விடத்தைவிட்டு நீங்கும். இத்தகைய கடற்கரைச் சோலையையும் தாழையையும் உடைய கடற்றுறையின் தலைவன்' என்பது 304 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும்.

'மின்னலைச் செய்கின்ற, மழையைப் பெய்யும் மேகமானது மழைபெய்ய, வானத்தில் பறக்கின்ற அன்னப்பறவை உயர்ந்து பறப்பதைப்போலப் பொன்னால் செய்த வெண்மையான தேரில் தலைவன் ஏறிப்போவான்' என்பது 205 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். இப்பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம் நற்றிணை - பாலைத்திணை ஆய்வுப் பகுதியில் இடம்பெற்றுள்ளது (2.1.5).

## சங்க நூல்களில் ஞாழல்

இக்கட்டுரையில் குறுந்தொகையின் 310, 313, 328, 397, 318, 328, 397 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

'குளிர்ச்சியுடன் மணம் வீசுகின்ற ஞாழல்பூக்கள் நிறைந்த, குளிர்ந்த கடல் துறையையுடைய தலைவனிடம் என் நிலைமையை எடுத்துச் சொல்வாரைப் பெற்றேனாயின், இன்னும் நான் உயிர் வாழ்வேன்.

இல்லையென்றால் உயிர் துறப்பேன்' எனத் தோழியிடம் தலைவி கூறுவது 310 ஆம் பாடல் அடிகளின் பொருள். 'தன்னை எதிர்ப்பவர்களைக் கொம்பால் கொல்லும் சுறாமீன் காணப்படும் கடற்கரையில் கொன்றைமலர்களும் புன்னை மரங்களும் பரவிக்கிடக்கும். இந்நிகழ்வு வெறியாடுகின்ற இடத்தைப்போலத் தோன்றும். இச்சிறப்புமிக்க கடற்கரைத் தலைவன் என் துயரை உணராதவன். நான் உணர்த்தியும் உணராதவன் பிறிதொன்றாகிய வரைதலும் அறியாதவன் அவனுக்கு நான் எவ்வாறு என்நிலையைக் கூறுவேன்' எனத் தலைவி கூறுவது 313 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும்.

'சிறிய மலர்களை உடைய புலிநகக்கொன்றையின் அடியில் நண்டுகள் வளை அமைத்திருக்கும். அவ்வளையைக் கடல் அலைமோதி அழிக்கும். இவ்வாறு அலைவீசும் கடல் குறுந்தடியால் அடிக்கப்படும் முரசைப்போல் முழங்கும். இச்சிறப்புமிக்க நாட்டின் தலைவன் நம்மிடம் இரக்கங்காட்டிக் கூடியது சிலநாள்தான்' எனத் தோழி கூறுவது 328 ஆம் பாடல்அடிகளின் பொருளாகும். அரும்புகள் நிறைந்த ஞாழல்மரத்தின் மீன்முட்டைகளைப் போன்ற உருண்டையான மலர்கள், நெய்தலின் கரிய மலரில் வீழ்வதுபோல, ஊதைக்காற்று நீர்த்துளிகளைச் சிந்தும் வலிமைபொருந்திய கடற்கரைத்தலைவன் என்பது 397 ஆம் பாடலின் பொருளாகும். மேலே இடம்பெற்றுள்ள பாடல்களை ஆசிரியர் கையாண்டதற்கான நோக்கம் நற்றிணை - நெய்தல்திணை ஆய்வுப்பகுதியில் இடம்பெற்றுள்ளது (2.1.4).

'ஞாழல்' தண்ணந்துறையிலும், நீர்ப்பரப்பிலும், கடற்கரைத் துறையிலும், ஊதை தூற்றும் வரவுநீரிலும் காணப்படும் என எடுத்துக்காட்ட 318, 328, 397 ஆம் பாடல்களின் எண்களை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

## சங்கஇலக்கியத்தில் கருங்கால்வெண்குருகும் வெள்ளாங்குருகும் சிறுவெள்ளாங்குருகும்

இக்கட்டுரையில் குறுந்தொகை 303, 325 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

*'கழியிலே உள்ள மீன் உணவை ஆராய்ந்து உண்ணும் வெண்குருகு, கடற்கரையில் உள்ள தாழை மரங்களில் கூடி, கடலில் காற்றால் உண்டாகும் அலை ஓசையைக் கேட்டுத் துஞ்சும். இத்தகைய துறைக்குரிய தலைவன்' என்பது 303 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும்.*

*'கருமையான கால்களையுடைய வெண்மையான நாரை இரைதேடும் பெரியகுளம்' என்பது 325 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும்.*

*மேலே இடம்பெற்றுள்ள பாடலை ஆசிரியர் கையாண்டதற்கான நோக்கம் நற்றிணை - நெய்தல் திணை ஆய்வுப்பகுதியில் இடம்பெற்றுள்ளது (2.1.4).*

## சங்க இலக்கியத்தில் நாரையும் கொக்கும்

*இக்கட்டுரையில் குறுந்தொகை 349, 114, 128, 166, 236, 117, 122 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.*

*'அரும்புக் கொடியிலே மலர்ந்த அழகிய மலர்களைச் சிதைத்து மீனைக் கொத்தித்தின்னும் நீண்ட கால்களையுடைய நாரை தங்கியிருக்கும் மணல் மேடுகளையும் குளிர்ந்த நீரையும் உடைய தலைவன்' என்பது 349 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும்.*

*நாரை நீர்நிலைகளில் முக்கியமாகக் கடற்கரைக் கழிகளில் காணப்படும். இது நெட்டையான சாம்பல் நிறமான பறவை. இதன் தலையும் கழுத்தும் வெண்மையாகவும், உடல் சாம்பல் நிறமாகவும் காணப்படும். இதற்கு நீண்ட கழுத்தும் கால்களும் உண்டு. 'தடந்தாள்நாரை' என இப்பறவையை அழைப்பர் என நாரை பற்றிய செய்திகளை எடுத்துக்காட்ட மேலே இடம்பெற்றுள்ள பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.*

*ஆரல்மீனினை உண்டு நிறைந்த வயிற்றையுடைய நாரைகள் குனியமுடியாமல் நிமிர்ந்து நடக்கும் என்பது 114 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும்.*

‘கிழக்குக் கடலின் அலையோரத்தில் அமர்ந்திருக்கும் சிறகையிழந்த கிழநாரை ஒன்று சேரனது தொண்டிப்பட்டினத்தில் கடல்துறையில் உள்ள அயிரை மீனை உண்ணத் தலையை மேலே தூக்கிப் பார்க்கும்’ என்பது 128 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். ‘குளிர்ந்த கடலிலே தோன்றும் அலைகள் அயிரை மீன்களைக் கரையிலே கொண்டுவந்து குவிக்கும். அதைக்கண்ட நாரைக் கூட்டங்கள் அவ்வயிரை மீன்களைத் தின்னும்’ என்பது 166 ஆம் பாடல் அடிகளின் பொருள். இப்பாடல்களை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம் நற்றிணை - நெய்தல்திணை ஆய்வுப்பகுதியில் குறிப்பிடப்பெற்றுள்ளது (2.1.4).

‘சிறுகுன்றைப்போலக் குவிந்துகிடக்கின்ற மணல்களையுடைய அடர்ந்த கடற்கரையில் காணப்படும் தாழைமரத்தின் தாழ்ந்த கிளையில் புதியநாரை வந்து தங்கியிருக்கின்ற குளிர்ந்த கடற்கரையை உடைய தலைவன்’ என்பது 236 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும்.

நாரை புன்னைமரத்திலும், பனைமரத்திலும், ஞாழல் மரத்திலும் கடற்கரையோரத்திலும் தங்கும். இது மருதநிலத்தில் மருதமரத்திலும் பலாமரத்திலும் கூடுகட்டும் என நாரை கூடுகட்டும் இட அமைப்பை எடுத்துக்காட்ட மேலே இடம்பெற்றுள்ள பாடல்அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

‘மாரிக்காலத்து ஆம்பல் மலரைப்போன்ற தோற்றத்தையுடைய கொக்கின் பார்வையைக் கண்டு நண்டு அஞ்சும்’ என்பது 117 ஆம் பாடலடிகளின் பொருளாகும்.

ஆம்பல்பூவிதழ் மலைக்காலத்தில் வெண்மைநிறத்தை இழந்து பழுப்பாக மழுங்கித் தோன்றும். அதுபோலக் கொக்கின் நிறம் காணப்படும் என விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

‘பசுமையான கால்களையுடைய கொக்கினது மெல்லிய முதுகைப்போல் ஆழமான நீர்நிலையில் உள்ள ஆம்பலின் மலர்களும் குவிந்தன’ என்பது 122 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். இப்பாடலை

ஆசிரியர் கையாண்டதற்கான காரணம் நற்றிணை - மருதத்திணை ஆய்வுப்பகுதியில் குறிப்பிடப்பெற்றுள்ளது (2.1.3).

**சங்க இலக்கியத்தில் குருகு**

இக்கட்டுரையில் குறுந்தொகை 228 ஆம் பாடலின்

"வீழ்தாழ் தாழை யூழறு கொழுமுகை

குருகுளர் இறகின் விரிபுதோ டவிழும்

கானல் நண்ணிய சிறுமுடி முன்றில்"

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன.

விழுதுகளையுடைய தாழையின் முதிர்ந்த அரும்புகள், குருகுகள் கோதுகின்ற சிறகின் அடித்தூவிபோல இதழ்விரிந்து மலரும் என்பது பாடலடிகளின் பொருளாகும். குருகுகள் வேட்டையாடும் தன்மையையும் அது தன் இறகுகளை உலர்த்தும் தன்மையினையும் எடுத்துக்காட்ட மேலே இடம்பெற்றுள்ள பாடலடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

**சங்கஇலக்கியத்தில் முதலையும் இடங்கரும் கராமும்**

இக்கட்டுரையில் குறுந்தொகை 324 ஆம் பாடலின்

"கொடுங்கால் முதலைக் கோள்வ லேற்றை

வழிவழக் கறுக்குங் கானலம் பெருந்துறை"

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன. வளைந்த கால்களும் கொல்லுந்தன்மையும் அமைந்த ஆண்முதலைகள் வழிச் செல்வோரைத் தடுத்து ஒழிக்கும் என்பது பாடல் அடிகளின் பொருளாகும்.

"இந்தியாவில் உள்ள மூன்றுவகை முதலையில், ஆற்றிலும் ஆற்றுத்துறைகளிலும் வாழும் முதலை ஆள்களைக் கொன்றுதின்னும் கொடிய தன்மையுடையது. மற்ற இருவகை முதலையினங்கள் ஆள்களைக் கொல்லாது"

என, முதலையினத்தில் உள்ள ஆள்கொல்லி, ஆள்கொல்லி அல்லா முதலையினங்களை வேறுபடுத்திக்காட்ட மேலே இடம்பெற்றுள்ள பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## குறிஞ்சிப்பாட்டில் வரும் செடிகொடி மரப்பெயர்கள்

இக்கட்டுரையில் குறுந்தொகை 243 ஆம் பாடல் இடம்பெற்றுள்ளது. ‘அடும்பு’ என்ற செடியின் கவைத்த இலைகளையும் மணிபோன்ற பூக்களையும் எடுத்துக்காட்ட இப்பாடலை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்கநூல்களில் கண்டல்

இக்கட்டுரையில் குறுந்தொகை 117, 340 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

‘கொக்கினைக் கண்டு அஞ்சும், ஈரமான உடலையுடைய நண்டு தாழையின் வேரில் உள்ள தன்னுடைய வளைக்குள் செல்லும்’ என்பது 117 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும்.

‘கடற்கரையிலே வளர்ந்துநின்ற பூவையுடைய தாழை, நீர்க்கழியிலே வெள்ளம் குறையும்போது தளர்ந்தும் வெள்ளம் மிகும் போது தளர்ச்சி நீங்கியும் காணப்படும்’ என்பது 340 ஆம் பாடலடிகளின் பொருளாகும். இப்பாடலை ஆசிரியர் கையாண்டதற்கான நோக்கம் நற்றிணை-நெய்தல்திணை ஆய்வுப் பகுதியில் இடம்பெற்றுள்ளது (2.1.4).

## சங்க நூல்களில் முண்டகமும் முள்ளியும்

இக்கட்டுரையில் குறுந்தொகையின் 49, 51 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன. ‘அணிலின் பல்போன்ற முள்ளையுடைய, மகரந்தம் நிறைந்த முல்லைக்கொடியையும், நீலமணியின் நிறத்தைப் போன்ற நிறைந்த நீரையும் உடைய கடற்கரைத்தலைவன்’ என்பது 49 ஆம் பாடலடிகளின் பொருள். வளைந்த முள்ளையுடைய முண்டகத்தின் மிகுந்த குளிர்ச்சியுள்ள கரியமலர்கள், தொடுத்த நூல் அறுந்து சிந்தின முத்துகளைப்போல் காற்றால் சிதறித் துறைதோறும் பரவும். இத்தகைய சிறப்புமிக்க கடற்கரைத்தலைவன் என்பது 51 ஆம் பாடலடிகளின் பொருளாகும்.

இப்பாடலை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம் நற்றிணை - நெய்தல்திணை ஆய்வுப்பகுதியில் இடம்பெற்றுள்ளது (2.1.4).

## சங்கநூல்களில் மீன்கள்

*இக்கட்டுரையில் குறுந்தொகை 128, 166, 114, 230, 269, 318, 304 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.*

*'கிழக்குக் கடலின் அலையோரத்தில் அமர்ந்திருக்கும் சிறகையிழந்த கிழநாரை ஒன்று சேரனது தொண்டிப்பட்டினத்தின் கடல்துறையில் உள்ள அயிரைமீனை உண்ண நினைத்து தலையை மேலே தூக்கிப் பார்க்கும்' என்பது 128 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும்.*

*'குளிர்ந்த கடலிலே தோன்றும் அலைகள் அயிரை மீன்களைக் கரையிலே கொண்டுவந்து குவிக்கும். அதைக்கண்ட நாரைக் கூட்டம் அவ்வயிரை மீன்களைத் தின்னும்' என்பது 166 ஆம் பாடல்அடியின் பொருளாகும். இப்பாடலை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம் நற்றிணை-நெய்தல்திணை ஆய்வுப்பகுதியில் குறிப்பிடப்பெற்றுள்ளது (2.1.4).*

*ஆரல்மீனினை உண்டு நிறைந்த வயிற்றையுடைய நாரைகள் குனியமுடியாமல் நிமிர்ந்து நடக்கும் என்பது*

*"ஆரல் அருந்த வயிற்ற*

*நாரை மிதிக்கும் என்மகள் நுதலே"*

*எனும் 114 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும்.*

*இப்பாடலை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம் குறுந்தொகை-குறிஞ்சித்திணை ஆய்வுப்பகுதியில் இடம்பெற்றுள்ளது (2.1.1).*

*230, 269, 318 ஆகிய பாடல்களின் அடிகள் சுறாமீனின் சிறப்பை விளக்குகின்றன. அவற்றின் விபரம் வருமாறு.*

*"வயச்சுறா வழங்குநீர் அத்தம்" (230)*

*வலிமையுள்ள சுறாமீன்கள் திரியும், நீர்நிறைந்த வழி என்பது பாடலடியின் பொருளாகும்.*

*"வயச்சுறா வெறிந்த புண்தணிந் தெந்தையும்*

*நீனிறப் பெருங்கடல் புக்கனன் யாயும்" (269)*

*வலிமையுள்ள சுறாமீன் அடித்ததால் உண்டான புண்ஆறி எம் தந்தை*

கடலில் மீன்பிடிக்கச் சென்றுவிட்டார் எனத் தலைவி கூறுவது பாடலடிகளின் பொருளாகும்.

"எறிசுறாக் கலித்த இலங்குநீர்ப் பரப்பின்" (318)

'கொல்லும் தன்மையுடைய சுறாமீன்கள் நிறைந்திருக்கும் கடலின் கரை என்பது பாடலடியின் பொருளாகும். சுறாமீன் வலிமை மிக்கது. இதை எளிதில் பிடிக்கமுடியாது. இது மீன்களை மட்டுமல்லாது, மனிதர்களையும் கொல்லும் தன்மைமிக்க ஆட்கொல்லிச் சுறாவாகும்' எனச் சுறாவின் வலிமையையும் வேட்டைத்தன்மையையும் எடுத்துக்காட்ட மேலே இடம்பெற்றுள்ள பாடல்அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

வளைந்த திமிலையுடைய மீன்பிடிக்கும் படகில் வேட்டைக்குச் செல்லும் பரதவர்கள் கொல்லுந்தொழிலையுடைய கூர்மையான எறிஉளியைக் காய்ந்த மூங்கிலின் முனையிலே பொருத்தி, நிறைந்த நீர் வழியே ஓடிக்கொண்டிருக்கும் சுறாமீன் மேல் வீசி எறிவர் என்பது 304 ஆம் பாடலடிகளின் பொருளாகும். இப்பாடலை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம் நற்றிணை - நெய்தல்திணை ஆய்வுப்பகுதியில் குறிப்பிடப்பெற்றுள்ளது (2.1.4).

## தமிழிலக்கியத்தில் தாவரநூலின் நுட்பங்கள்

இக்கட்டுரையில் குறுந்தொகை 228 ஆம் பாடலடி இடம்பெற்றுள்ளது. விழுதுகளையுடைய தாழையின், முதிர்ந்த கொழுவிய அரும்புகள் என்பது இப்பாடலடியின் பொருளாகும். இப்பாடலை ஆசிரியர் கையாண்டதற்கான நோக்கம், நற்றிணை நெய்தல் திணை ஆய்வுப் பகுதியில் இடம்பெற்றுள்ளது (2.1.4).

## சங்க இலக்கியத்தில் பெயர்களைத் தேடும் பாடல்கள்

இக்கட்டுரையில் குறுந்தொகை 313, 326, 381 ஆகிய பாடல்கள் இடம்பெற்றுள்ளன. பெரிய கடற்கரையில் உள்ள காக்கை, தனக்கு வேண்டிய உணவைக் கழிகளில் இருந்து பெற்று உண்ணும், பின்னர் அக்காக்கை தான் உண்ட களைப்புத்தீர பூமணம் கமழும் சோலையில் தங்கும். இத்தகைய சிறப்புக்குரிய தலைவனோடு நான் கொண்ட நட்பு

சிறப்பானது எனத் தலைவி தோழியிடம் கூறுவது 313 ஆம் பாடலின் பொருளாகும்.

இப்பாடலில் இடம்பெறும் 'சிறுவெண்காக்கை' தலைவனின் நிலையை இறைச்சிப்பொருளாகக் கூறுவதால் இப்பாடல் ஆசிரியர் 'சிறுவெண்காக்கையார்' ஆகின்றார். கடலாடும் மகளிரோடு நான் விளையாடிக் கொண்டிருந்த போது அங்கு வந்த தலைவன் என்னை அணைத்தான். அன்று முதல் தலைவன் என்னை ஒருநாள் காணாமல் துறந்தாலும் என்னால் தாங்கமுடியவில்லை. பலநாள் பிரிவால் வருகின்ற துன்பத்தை அடைகின்றேன் எனத் தலைவி கூறுவது 326 ஆம் பாடலின் பொருளாகும்.

தலைவன் ஒருநாள் பிரியினும், தலைவி பலநாள் வருத்தம் பெறுவதற்குக் காரணம், தலைவி விளையாடிய காலத்தில் தலைவன் மீதுகொண்ட நட்பு அது 'சிறுமனைப் புணர்ந்த நட்பு' என்ற தொடரால் அழைக்கப்படுகின்றது. எனவே இப்பாடல் ஆசிரியர் 'சிறுமனைப் புணர்ந்தார்' ஆகின்றார்.

நாரைகள் ஒலிக்கும், புதியமலர்கள் கலங்கும்படி அலைகள் வந்து மோதும் தலைவனின் கடற்கரைச் சோலையிலே, தலைவனிடம் பற்கள் வெளிப்படச் சிரித்ததன் பயனால் தலைவியின் அழகு தொலைந்தது; தோள்கள் மெலிந்தது; நெஞ்சத்தில் துன்பம் நிறைந்தது; இரவு பகலாகத் தூக்கம் இல்லை; உடம்பு பசலைநிறம் பாய்ந்தது; இதைக்கண்ட தோழி, தலைவனிடம் நீ கொண்ட அன்புக்கு இதுதான் பரிசா? எனக் கேட்டதனை,

"தொல்கவின் தொலைந்து தோணலஞ் சாஅய்
அல்லல் நெஞ்சமொ டல்கலும் துஞ்சாது
பசலை ஆகி விளிவது கொல்லோ
வெண்குருகு நரலும் தண்கமழ் கானற்
பூமலி பொதும்பர் நாண்மலர் மயக்கி
விலங்குதிரை நடைதருந் துறைவனொடு
இலங்குஎயிறு தோன்ற நக்கதன் பயனே"

எனும், இப்பாடல் (381) அடிகள் விளக்குகின்றன.

இப்பாடலில் தலைவியின் சிரிப்பே நலமழியக் காரணமாவதால் இப்பாடல் ஆசிரியர் அப்பாடலில் பயிலும் 'நக்கதன்' என்ற தொடரால் 'நக்கதனார்' ஆகின்றார்.

### 3.1.5 பாலை

செந்தமிழ்ச்செல்வி இதழில் 19 ஆய்வுக்கட்டுரைகளில் இடம்பெற்றுள்ள, குறுந்தொகைப் பாலைத்திணைப்பாடல்களின் எண்ணிக்கை 26 ஆகும்.

### சங்க இலக்கியத்தில் பல்லி

இக்கட்டுரையில் குறுந்தொகையின் 16 ஆம் பாடல் இடம்பெற்றுள்ளது.

பாலைவனத்தில் உள்ள கள்வர்கள் இரும்பினால் செய்யப்பட்ட தம் அம்புகளைக் கூர்மையாக்க நகத்தினால் புரட்டுவர். இதனால் உண்டாகும் ஒலியைப் போன்று, ஆண்பல்லி, பெண்பல்லியை அழைக்கும் கள்ளிகள் நிறைந்த காட்டுநிலத்தினைக் கடக்கும் நம் தலைவன் நம்மை நினைப்பார் எனத் தலைவிக்குத் தோழி கூறுவது இப்பாடலின் பொருளாகும். இப்பாடலை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம் நற்றிணை - பாலைத்திணை ஆய்வுப் பகுதியில் குறிப்பிடப்பெற்றுள்ளது (2.1.5).

### சங்க இலக்கியத்தில் மயில்

இக்கட்டுரையில் குறுந்தொகை 347 ஆம் பாடலின் அடிகள் இடம்பெற்றுள்ளன. இளமையான வாகை மரத்தின் கிளையிலே உள்ள நல்லமலர்கள் அழகுள்ள கருமையான மயிலின் உச்சிக்கொண்டையைப் போலக் காணப்படும் என்பது இப்பாடலடிகளின் பொருளாகும். மயிலின் தோகை பற்றியும் மயிலின் தலையிலிருக்கும் குடுமியைப் பற்றியும் விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

### சங்கஇலக்கியத்தில் பாம்பு

இக்கட்டுரையில் குறுந்தொகை 43, 235 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

தலைவனைப் பிரிந்ததால் என் உள்ளம் நல்லபாம்பு கடித்தது போல துன்பம் நிறைந்து, நிலைகுலைந்து தடுமாறுகின்றது எனத் தலைவி கூறுவது 43 ஆம் பாடலடிகளின் பொருளாகும். 'நல்லபாம்பின் நஞ்சு அதன் பல்லில்

மறைந்திருக்கும். நல்ல பாம்பின் நஞ்சு நரம்புகளைத் தாக்கி மயக்கமூட்டும் தன்மையுடையது' எனப் பாம்பின் நஞ்சு பற்றிய செய்திகளை எடுத்துக்காட்ட மேலே இடம்பெற்றுள்ள பாடல்அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

பாம்பின் அசைகின்ற சட்டைபோல வெண்மையான அருவிநீர் வீழ்ந்து கொண்டிருக்கும் என்பது 235 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். இப்பாடலை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம் நற்றிணை - பாலைத்திணை ஆய்வுப் பகுதியில் குறிப்பிடப்பெற்றுள்ளது (2.1.5).

## சங்கஇலக்கியத்தில் குருகு

இக்கட்டுரையில் குறுந்தொகை 260 ஆம் பாடலின்

"குருகும் இருவிசும் பிவரும் புதலும்
வரிவண் டூத வாய்நெகிழ்ந் தனவே"

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன. குருகு பெரிய வானத்தில் உயரப் பறக்கும், கோடுகளை உடைய சிறகுகள் கொண்ட வரிவண்டுகள் தம் சிறகுக்காற்றை வீசுவதால் புதரில் உள்ள மொட்டுகள் விரிந்து மலரும் என்பது பாடலின் பொருளாகும். குருகுகள் பருமனான பறவையாயிருந்தாலும் ஆகாயத்தில் மிகவுயரத்தில் வட்டமடித்துப் பறக்கக்கூடியவை என்ற கருத்தை எடுத்துக்காட்ட இப்பாடலை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்கநூல்களில் வரகு

இக்கட்டுரையில் குறுந்தொகை 282 ஆம் பாடலின்

"செவ்விகொள் வரகின் செஞ்சுவற் கலித்த
கௌவை நாற்றின் காரிரு ளோரிலை"

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன. சிவந்த மேட்டுநிலத்தில் தழைத்த, பருவச்செவ்வியை உடைய வரகின் கரிய இருள் போன்ற ஓரிலை என்பது இப்பாடலடிகளின் பொருளாகும். இப்பாடலடிகளை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம் குறுந்தொகை - முல்லைத்திணை ஆய்வுப் பகுதியில் இடம்பெற்றுள்ளது (3.1.2).

## சங்கநூல்களில் பயறும் உழுந்தும்

இக்கட்டுரையில் குறுந்தொகை 338 ஆம் பாடலின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

'முறுக்கிய கொம்பை உடைய ஆண்மான் தன் பெண்மானுடன் நிழலிலே தங்கி, மலர்கள் நெருங்கியிருக்கும் பெரிய புதரிலே தூங்கி, பின்னர் பொழுது போனதைக் கண்டு, பயிற்றம் செடியைத் தின்னும்' என்பது பாடலடிகளின் பொருளாகும். இப்பாடலை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம் குறுந்தொகை - மருதத்திணை ஆய்வுப்பகுதியில் குறிப்பிடப்பெற்றுள்ளது (3.1.3).

## சங்கநூல்களில் உகாய்

இக்கட்டுரையில் குறுந்தொகை 67 ஆம் பாடல் எண் இடம்பெற்றுள்ளது. சங்ககாலத்தில் வேப்பம் பழம்போலக் 'காசு' இருந்தது என விளக்க இப்பாடல் எண்ணை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க நூல்களில் ஆலம்

இக்கட்டுரையில் குறுந்தொகை 15 ஆம் பாடல் அடிகள் இருமுறை எடுத்தாளப்பெற்றுள்ளன.

'பழமையான ஆலமரத்தின் அடியில் உள்ள பொதுச்சபையிலே, தங்கியிருக்கும் நான்கு பிரிவுகளைக் கொண்ட கோசர்களின் உண்மை மொழியைப்போல, பறைஒலிக்க, சங்குகள் ஆரவாரிக்கத் தலைவனுக்கும் தலைவிக்கும் திருமணம் நடைபெற்றிருக்கும். இதனால் அவள் தலைவன்மீது கொண்ட நட்பை உலகறியும்' என நற்றாய்க்குச் செவிலித்தாய் கூறுவது பாடலடிகளின் பொருளாகும்.

ஆலமரம் நீண்டகாலம் வாழும் தன்மையுடையது. எனவே இம்மரத்தைத் தொன்மூதாலம் என அழைப்பர் என்ற கருத்தைக் கூற இப்பாடல் அடிகளை ஓரிடத்திலும், ஆலமரம் நீண்ட விழுதுடன் கிளைகளைப் பரப்பி வளர்வதால் இம்மரநிழலில் போர்ப்படைகள் தங்கும் என்ற செய்தியை எடுத்துக்கூற இப்பாடல்அடிகளை மற்றோர் இடத்திலும் ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்கநூல்களில் ஓமை

இக்கட்டுரையில் குறுந்தொகை 79, 124, 207, 396, 260 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

காட்டுயானையால் உரித்து உண்ணப்பட்ட அடிப்பாகத்தையுடைய ஓமை மரத்தின் கிளைகள் காற்றால் அசையும். இக்கிளைகளின் காய்ந்த கொம்பிலே ஆண்புறாக்கள் ஏறி அமர்ந்திருக்கும் என்பது 79 ஆம் பாடலடிகளின் பொருளாகும்.

உப்புவணிகர்கள் பலர் சேர்ந்து கடந்து சென்ற இடத்தையும், பார்வைக்கு ஊர் பாழாகப்போய்விட்டது போன்ற தோற்றத்தையும், ஓமைமரங்களையும் உடைய பெரிய பாலைநிலம் என்பது 124ஆம் பாடலடிகளின் பொருளாகும்.

பாலைநிலத்தில் நடப்போருக்குப் பேச்சுத்துணையாக, ஓமைமரக்கிளையிலே தனித்து உட்கார்ந்து வருந்திக்கொண்டிருக்கும் பருந்தின் புலம்பல் இருக்கும் என்பது 207 ஆம் பாடலடிகளின் பொருளாகும்.

காய்ந்த கிளைகளையுடைய ஓமை மரத்தின் பட்டைகளைப் பெயர்ப்பதற்காக ஆண்யானை தன் தந்தத்தால் குத்தும். கோடைக் காலத்தில் தண்ணீர்வேண்டி இவ்வாறு செய்யும் யானை, மேகம் முழங்குகின்ற கருமையான ஓசையை உற்றுக்கேட்டுக்கொண்டு நிற்கும் என்பது 396 ஆம் பாடலடிகளின் பொருளாகும்.

யானைகளையும் தேரையும் உடைய தொண்டைநாட்டு மன்னனின் மலைச்சாரலில் சுரபுன்னை மரங்கள் நிறைந்திருக்கும், அங்கே காணப்படும் ஓமைமரங்கள், கன்றையிழந்த பசுவைத் தம் நிழலிலே தங்கவைத்துக் காப்பாற்றும், அவ்வழியில் பொருள்தேடச் சென்ற தலைவன் விரைவில் வருவான் எனத் தோழி கூறுவது 260 ஆம் பாடலடிகளின் பொருளாகும்.

மேலே இடம்பெற்றுள்ள பாடல்களை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம் நற்றிணை - பாலைத்திணை ஆய்வுப் பகுதியில் குறிப்பிடப்பெற்றுள்ளது (2.1.5).

## சங்கநூல்களில் நாகமும் வழையும்

இக்கட்டுரையில் குறுந்தொகை 260 ஆம் பாடலின்அடிகள் இடம்பெற்றுள்ளன. பகைவரை வென்று, அவர்தம் மண்ணைத் தமதாக்கி உண்ணும் யானையையும், தேர்ப்படையினையும் உடைய தொண்டை நாட்டு மன்னனின் மலைச்சாரலில் சுரபுன்னை மரங்கள் மலர்ந்திருக்கும் என்பது பாடலடிகளின் பொருளாகும். 'சங்கநூல்களில் 'வழை' என அழைக்கப்படும் மரம் உரையாசிரியர்களால் 'சுரபுன்னை' என அழைக்கப்படுகின்றது. இம்மரம் மலைச்சாரல்களிலும் மலையிலும் (பச்சிலைக்காடு) வளரும் தன்மையுடையது. இம்மரம் கடற்கரையில் வாழும் புன்னையினத்தைச் சார்ந்தது. எனவே இம்மரத்தைக் கடற்புன்னையில் இருந்து வேறுபடுத்த 'சுரபுன்னை' என அழைப்பர். இதன் அறிவியல் பெயர் Chrocarpus Longitalus ஆகும்' என 'வழை' மரத்தின் வளர் இடம், அம்மரத்தை உரையாசிரியர் அழைக்கும் பெயர், வழையின் அறிவியல் பெயர் போன்ற செய்திகளை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்கநூல்களில் கூதளமும் குளவியும் குல்லையும்

இக்கட்டுரையில் குறுந்தொகை 282, 56, 59, 11 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

அருவி நீர் விளங்கும் மலைப்பகுதியில், ஒருபடித்தாக மலர்ந்த வெள்ளிய கூதாளத்தின் உள்ளே துளையுடைய அழகிய புதியமலர்கள் கழன்று உதிரும் என்பது 282 ஆம் பாடலடிகளின் பொருளாகும். இப்பாடல்அடிகளை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம் நற்றிணை - குறிஞ்சித்திணைப்பகுதியில் குறிப்பிடப்பெற்றுள்ளது (2.1.1).

வேட்டையாட வந்த செந்நாய்கள் தோண்டி உண்ட, காட்டு மல்லிகைப் பூக்கள் விழுந்து மூடிய அழுகல் நாற்றம் வீசும் சிறிய நீர்க்குழி என்பது 56 ஆம் பாடலடிகளின் பொருளாகும். இப்பாடலை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம் நற்றிணை - குறிஞ்சித்திணை ஆய்வுப் பகுதியில் குறிப்பிடப்பெற்றுள்ளது (2.1.1).

அரலை என்னும் மலையிலே அகலமான வாயையும் ஆழத்தையும் உடைய சுனையிலே குவளை மலர்கள் பூத்துக்கிடக்கும். அதன் பக்கங்களிலே காட்டு மல்லிகைகள் பூத்து மணங்கமழ்ந்து கொண்டிருக்கும் என்பது 59 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும்.

மேலே இடம்பெற்றுள்ள பாடல்களை இக்கட்டுரை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம் நற்றிணை - பாலைத்திணை ஆய்வுப்பகுதியில் குறிப்பிடப்பெற்றுள்ளது (2.1.5).

கஞ்சங்குல்லை மலர்களால் தொடுத்த மாலையை அணிந்த வடுகர் நாட்டின் பக்கத்தே 'கட்டி' என்பவனுடைய நல்லநாடு இருக்கின்றது என்பது 11 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும்.

'குல்லை' என்பது கஞ்சாச்செடியாகும். இச்செடியை Cannabis sutive என்று அறிவியலில் அழைப்பர், என எடுத்துக்காட்ட இப்பாடல்அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்கநூல்களில் ஓந்தி

இக்கட்டுரையில் குறுந்தொகை 140 ஆம் பாடல் அடிகள் இடம்பெற்றுள்ளன. 'கருக்கரிவாளைப் போன்ற வயதுமுதிர்ந்த ஆண் ஓந்தி, வழிப்போக்கர் நல்லசகுனம் என நினைத்துக்கொள்ளும்படி பாலைநிலத்தில் தங்கியிருக்கும். அத்தகைய பாலைநிலத்தினைத் தலைவன் கடந்துசென்றான்' என்பது இப்பாடலடிகளின் பொருளாகும்.

இப்பாடலை ஆசிரியர் கையாண்டதற்கான நோக்கம் நற்றிணை-பாலைத்திணை ஆய்வுப் பகுதியில் குறிப்பிடப்பெற்றுள்ளது (2.1.5).

## சங்க நூல்களில் சங்குகள்

இக்கட்டுரையில் குறுந்தொகை 15 ஆம் பாடலின்

"பறைபடப் பணிலம் ஆர்ப்ப இறைகொள்பு"

எனும் அடி இடம்பெற்றுள்ளது. மணப்பறை முழங்க, சங்குகள் ஒலிக்க முறைப்படி தலைவன் தலைவி திருமணச்சடங்கு முற்றுப்பெறும் என்பது பாடலடியின் பொருளாகும்.

‘பணிலம்’ கோயில்களில் ஊதும் பெரிய சங்காகும் எனப் பணிலச்சங்கினை எடுத்துக்காட்ட மேலே இடம்பெற்றுள்ள பாடலை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்கநூல்களில் மீன்கள்

இக்கட்டுரையில் குறுந்தொகை 250 ஆம் பாடல் அடிகள் இடம்பெற்றுள்ளன. பெரிய நீர்நிலையிலே ஒன்றொடு ஒன்று எதிர்க்கின்ற கயல் மீன்களை ஒத்த மையுண்ட கண்கள் என்பது பாடலின் பொருளாகும். ‘கயல்மீன்களில், செங்கயல், வெண்கயல், கருங்கயல் என மூன்றுவகை உண்டு. இதில் மையுண்ட கண்களோடு ஒப்பிடும் கயல்மீனைப் பற்றிய பாடல்கள் மட்டும் சங்கப் பாடல்களில் இடம்பெற்றுள்ளன. கயல்மீனை இக்காலத்தில் வெண்கெண்டை என்றும் அழைப்பர். கயல்மீனின் உடல்வெண்மையாகவும், விளிம்பு கருமையாகவும் காணப்படும்’ எனக் கயல்மீன்பற்றிய பல செய்திகளை எடுத்துக்காட்ட மேலே இடம்பெற்றுள்ள பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் மணிகள்

இக்கட்டுரையில் குறுந்தொகை 192 ஆம் பாடலின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

கருங்குயில் மாமரத்தின் மகரந்தங்களைக் கோதுவதால், அதன் சிறகுகள் பொன்னினை உரைத்த உரைகல்லைப்போல் காணப்படும் என்பது பாடலடிகளின் பொருளாகும். இப்பாடலை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம் நற்றிணை - பாலைத்திணை ஆய்வுப்பகுதியில் குறிப்பிடப்பெற்றுள்ளது (2.1.5).

## சங்க காலத்தில் காசு

இக்கட்டுரையில் குறுந்தொகை 274, 67 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன. புறவின் முதுகுபோன்ற அடிப்பாகத்தையுடைய உகாய் மரத்தில் மணிக்காசுகள் போன்ற பழுத்தகனி உதிரும் என்பது 274 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும்.

*கிளியின் அழகில் உள்ள வேம்பினது ஒள்ளிய பழம், பொற்கொல்லன் புதிய பொற்கம்பியைப் புகுத்துவதற்காக, கூர்மையான நகமுள்ள விரல்களால் பொற்காசைப் பிடித்துக் கொண்டிருப்பதைப் போலக் காணப்படும் என்பது 67 ஆம் பாடலடிகளின் பொருளாகும்.*

*அக்கால மக்கள் பயன்படுத்திய காசானது உகாய் மரத்தின் காய்போலவும் வேம்பினது பழம்போலவும் (உருண்டையாகவும் மஞ்சளாகவும்) இருந்தது என விளக்க மேலே இடம்பெற்றுள்ள பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.*

## சங்கநூல்களில் வாகையும் உழிஞ்சிலும்

*இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1986 சூன்). வாகைமரத்தின் பூ, இலை, நெற்று மற்றும் அதன் அறிவியல் பெயர்கள் போன்ற செய்திகளையும் உழிஞ்சில்மரத்தின் இலை, நெற்று, அதன் பயன்பாடு, அறிவியல் பெயர் போன்ற செய்திகளையும் விளக்குவது இக்கட்டுரையின் நோக்கம். இக்கட்டுரையில் குறுந்தொகையின் 7, 34, 369, 39 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.*

*ஆரியக்கூத்தாடிகள் கயிற்றின்மேல் ஏறிநின்று ஆடும்போது அடிக்கின்ற பறை ஒலியைப்போல, காற்றுமோதுவதனால் வாகைமரத்தின் நெற்றுகள் ஒலிக்கும். இவ்வாறு ஒலிக்கும் வாகைமரங்களும் மூங்கில்களும் நிறைந்த இந்தப் பாலைவனத்தில் தனித்து நடந்து செல்கின்ற தலைவன், தலைவி இரங்கத்தக்கவர்கள் எனக் கண்டோர் கூறுவது 7 ஆம் பாடலடிகளின் பொருளாகும்.*

*முன்பு நீர் நிரம்பியிருந்த சுனைகள் வறண்டுபோன, வறுமையுற்ற பாலைவனத்தில் உள்ள இளமையான வாகைமரத்தின் கிளையில் உள்ள மலர்கள் அழகான மயிலின் உச்சிக்கொண்டைபோலக் காணப்படும் என்பது 34 ஆம் பாடலடிகளின் பொருளாகும்.*

*வாகைமரத்தின் வெண்மையான விதைகள் நிறைந்த நெற்று, பரல்கள் நிறைந்த சிலம்பின் ஓசையைப்போல், காற்று வீசுவதால் ஒலி எழுப்பும் என்பது 369 ஆம் பாடலடிகளின் பொருளாகும்.*

‘வாகைமரம் வறட்சியான இலையுதிர்க்காடுகளில் காணப்படும். இதன் காய் வெயில்காலத்தில் நெற்றாக மாறிவிடும். இந்நெற்று காற்றுவீசுவதால் ஒலிக்கும். இதன் பூ மயிலின் தலையில் உள்ள உச்சி இறகுமயிர்போலக் காணப்படும்’ என வாகைமரம் காணப்படும் இடம், அதன் நெற்று அமைப்பு, பூவின் தன்மை போன்ற செய்திகளை எடுத்துக்காட்ட மேலே இடம்பெற்றுள்ள பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

வெப்பமுடன் வலிமையாக விரைந்து வீசும் காற்று, உழிஞை மரத்தில் வீசுவதால் அதன் நெற்று ஒன்றொடு ஒன்று உரசி ஓசையை உண்டாக்கும். இவ்வோசை தனித்துச் செல்வோர் மனதில் துன்பத்தை ஏற்படுத்தும். இத்தகைய கொடுமையான மலைகள் நிறைந்த பாதையில் தலைவன் செல்வான் எனக்கேட்ட தலைவி, தலைவனின் வழிக்கொடுமையைத் தோழிக்குக் கூறுவது 39 ஆம் பாடலடிகளின் பொருளாகும்.

உழிஞ்சி மரத்தின் நெற்று ஆடுகளப்பறை போல ஒலிக்கும், இதன் இலை அரப்புக்குப் பெரிதும் பயன்படுகின்றது. இதை Albizzia Amara என அறிவியலில் அழைப்பர் என உழிஞ்சிமரத்தின் சிறப்பை எடுத்துக்காட்ட மேலே இடம்பெற்றுள்ள பாடலடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## தமிழிலக்கியத்தில் தாவரநூலின் நுட்பங்கள்

இக்கட்டுரையில் குறுந்தொகை 352, 274, 369 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

‘ஆழமான நீர்நிலையில் உள்ள ஆம்பல் இலையின் பின்புறத்தைப் போன்ற, சிறகின்கண்கொடி கூரிய நகங்களையுடைய வெளவால் பறவை’ என்பது 352 ஆம் பாடலடிகளின் பொருளாகும். ஆம்பல் இலையின் அடிப்புறத்தன்மையினை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

புறவின் முதுகுபோன்ற அடிப்பாகத்தையுடைய உகாய்மரத்தில் மணிக்காசுகள் போன்ற பழுத்தகனி உதிரும் என்பது 274 ஆம் பாடலடிகளின் பொருளாகும்.

வாகைமரத்தின் வெண்மையான விதைகள் நிறைந்த நெற்று, காற்றுவீசுவதால் பரல்கள் நிறைந்த சிலம்பின் ஓசையைப் போல் ஒலிஎழுப்பும் என்பது 369 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும்.

உகாய்மரத்தின் பழுத்த கனியின் அமைப்பையும் வாகைமர நெற்றின் சிறப்பையும் எடுத்துரைப்பதற்காக இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

**சங்க இலக்கியத்தில் பெண்ணியம்**

இக்கட்டுரை சிவ.மங்கையர்க்கரசி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (2007 ஏப்ரல்). தமிழ் இலக்கியங்களில் காணப்படும் பெண்ணியக் கருத்துகளை எடுத்து விளக்குவது இக்கட்டுரையின் நோக்கமாகும். இதில் குறுந்தொகை 135 ஆம் பாடலின்,

“வினையே ஆடவர்க்கு உயிரே ; வாள்நுதல்
மனையுறை மகளிர்க்கு ஆடவர் உயிர்”

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன. உழைப்பே ஆண் மக்களுக்கு உயிராகும். இல்லத்தில் வாழ்கின்ற ஒளிபொருந்திய நெற்றியையுடைய பெண்களுக்குக் கணவன்மார்களே உயிர் என்பது பாடலடிகளின் பொருளாகும்.

இல்லறம் பேணுதல் மகளிருக்குக் கடமை என்ற கருத்தை எடுத்து விளக்கவும், பெண்களின் செயல்பாடுகளைத் தமிழ் இலக்கியங்கள் கொண்டு தெளிவுபடுத்தவும் இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

**பகுதி இரண்டு**

## 3.2 தமிழ்ப் பொழில்

‘தமிழ்ப்பொழில்’ இதழில் இடம்பெற்றுள்ள சங்க இலக்கியம் தொடர்பான கட்டுரைகளில் பயன்படுத்தப்பெற்றுள்ள குறுந்தொகைப் பாடல்களின் எண்ணிக்கை 73 ஆகும். இவை, குறிஞ்சிக்குரியவை - 24, முல்லைக்குரியவை- 07, மருதத்திற்குரியவை- 15, நெய்தலுக்குரியவை-08, பாலைக்குரியவை - 19 என அமைந்துள்ளன (விரிவு பின்னிணைப்பு - 9). இப்பாடல்கள் ஒருமுறையும், ஒன்றுக்கு மேற்பட்ட முறையும்

கட்டுரையாளர்களால் எடுத்தாளப்பெற்றுள்ளன. அவை தொடர்பான விபரம் வருமாறு.

| வ. எண். | திணை | ஒருமுறை | இருமுறை |
|---|---|---|---|
| 1. | குறிஞ்சி | 208, 47, 26, 03, 70, 73, 87, 83, 101, 99, 161, 355, 13, 284, 223, 214, 112, 249, 375, 141, 41 | 300, 69, 160 |
| 2. | முல்லை | 208, 370, 148, 221, 110, 167 | 191 |
| 3. | மருதம் | 46, 178, 202, 93, 08, 45, 91, 80, 33, 330, 10, 75, 31 | 295, 89 |
| 4. | நெய்தல் | 122, 66, 306, 09, 200, 294, 6, 397 | |
| 5. | பாலை | 331, 27, 235, 140, 28, 130, 22, 224, 274, 363, 16, 37, 124, 135, 237, 209, 283, 398 | 262 |

### 3.2.1 குறிஞ்சி

தமிழ்ப்பொழில் இதழில் வெளிவந்துள்ள குறுந்தொகைக்குரிய குறிஞ்சித்திணைப் பாடல்களின் எண்ணிக்கை 24 ஆகும்.

### தமிழில் தாவரங்கள்

கு.சீனிவாசன் எழுதிய இக்கட்டுரையில் 208, 47, 26, 300, 3 ஆகிய குறுந்தொகைக் குறிஞ்சித்திணைப் பாடல்கள் இடம்பெற்றுள்ளன.

கரிய அடிப்பகுதியையுடைய வேங்கை மரத்தின் மலர்கள் உதிர்ந்து காணப்படும் பாறை, பெரிய புலியின் குட்டி போலக் காட்சியளிக்கும்

என்பது 47 ஆம் பாடலடிகளின் பொருளாகும். வேங்கை மலரின் சிறப்பை விளக்கவும் மலர்ந்த வேங்கைமரம் புலியை ஒத்திருக்கும் என்பதை எடுத்துக்காட்டவும் ஆசிரியர் இப்பாடல் அடிகளைக் கையாண்டுள்ளார்.

அரும்புகள் ஏதுமின்றி மலர்ந்த, கரிய அடிப்பகுதியை உடைய, வேங்கை மரத்தின் மேற்பகுதியில் வளர்ந்துள்ள, பெரிய கிளைகளில் தங்கியுள்ள மயிலானது மலர்களைக் கொய்யும் இளமகளிரைப் போலக் காட்சியளிக்கும் என்பது 26 ஆம் பாடலடிகளின் கருத்தாகும்.

நொதுமலர் வரைவொடு புகுந்தவழி, தலைவி தலைவன் செலவு நீட்டித்தலால் ஆற்றாளாயினாள். களிறுகள் தம்முள் மோதிக்கொண்டு மிதித்ததால் வேங்கைமரம் சாய்ந்தது. இதனால் மரத்தின் மேல் ஏறிப் பூப்பறிக்கும் மகளிர், மரத்தில் ஏறாமலே பூப்பறித்துத் தலையில் சூடினர் என்பது 208 ஆம் பாடலடிகளின் பொருளாகும். வேங்கையின் அழகிய மலரை அக்காலப் பெண்கள் சூடி மகிழ்ந்தனர் என்பதை விளக்க இப்பாடல்களின் அடிகளை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

குவளைமலரின் மணம்வீசுகின்ற, திரட்சியையுடைய கரிய கூந்தலையும் ஆம்பல் மலரின் மணம் வீசுகின்ற இனிமை பொருந்திய பவளம் போன்ற வாயையும் உடையவள் தலைவி.

“குவளை நாறுங் குவையிருங் கூந்தல்
ஆம்பல் நாறும் தேம்பொதி துவர்வாய்”

குவளை, ஆம்பல் மலர்களின் மணத்தை விளக்கவும், இம்மலர்களின் மணத்தைத் தலைவியின் கூந்தலுக்கும், வாய்க்கும் ஒப்பிடவும் இப்பாடலடிகளை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

கரிய கொம்புகளில் பூத்து விளங்கும் குறிஞ்சிப் பூக்களைக் கொண்டு, மலைப்பகுதியில் பெரிய தேனை வண்டுகள் தொகுத்தற்கு இடமாகிய நாட்டையுடைய தலைவன் என்பது 3 ஆம் பாடலடிகளின் பொருளாகும். ‘குறிஞ்சி கார் காலத்தில் பூக்கும். இதன் தண்டு கருமையானது. இதன் பூக்காம்பு வலிமையற்றது. பூ நறுமணமுடையது. குறிஞ்சிப்பூவில் இருந்து தேனீக்கள் பெருந்தேன் இழைக்கும்’ என்ற செய்திகளைக் கூற இப்பாடல் அடியை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

## சங்க இலக்கியங்களில் மிளிரும் விலங்கினப் பண்புகள்

*பிச்சை என்பவர் எழுதிய இக்கட்டுரையில் குறுந்தொகையின் 69 ஆம் பாடல் இடம்பெற்றுள்ளது. அப்பாடலின் கீழ்வரும் அடிகள் கட்டுரையில் எடுத்தாளப்பெற்றுள்ளன.*

*"கருங்கண் தாக்கலை பெரும்பிறிது உற்றெனக்*
*கைம்மை உய்யாக் காமர் மந்தி*
*கல்லா வன்பறழ் கிளைமுதல் சேர்த்தி*
*ஓங்குவரை அடுக்கத்துப் பாய்ந்துயிர் செகுக்கும்" (69)*

*ஆண் குரங்கின் சாவினைக் கண்ட பெண் குரங்கு, கணவன் இல்லாமல் வருந்தும் கைம்மை வாழ்வைப் பொறாமல், தன் குட்டியைச் சுற்றத்தாரிடம் ஒப்படைத்துவிட்டு, மலை உச்சியின் மேலே ஏறிக் கீழே விழுந்து இறந்துவிடும் என்பது இப்பாடலடிகளின் பொருளாகும்.*

*மக்கள் சமுதாயத்தில் கணவன் இறந்தால், அவன் உயிரினைத் தேடிச் செல்வது போல் எண்ணி மனைவிமார்களும் தன் உயிரைத் துறப்பர் என்று வரலாறு சான்று கூறுகின்றது. இதே பண்பு குரங்குகளிடமும் ஏற்றிக் கூறப்பெற்றுள்ளது என்பதை இப்பாடல் அடிகளின் மூலம் அறியலாம்.*

*மக்களினத்தின் தோற்றமே குரங்கிலிருந்து தான் என்ற டார்வின் கொள்கையை இங்கு ஒப்பு நோக்கி விளக்குகின்றார் இக்கட்டுரையாசிரியர். டார்வின் கொள்கையை மேலை நாட்டுப் பெரும் புலவன் சான்சனும் ஒப்புக்கொள்கின்றான் என்றும் கூறுகின்றார். டார்வின் கொள்கையை விளக்குவதற்காக இப்பாடலை ஆசிரியர் கையாண்டுள்ளார்.*

## சங்க அகப்பாடல்களில் பாத்திரப் பண்போவியம்

*சாலினி இளந்திரையன் என்பவர் எழுதிய இக்கட்டுரையில் 70, 73 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.*

*தலைவியைப் பிரிந்து பரத்தையிடம் சென்ற தலைவன் தலைவியைப் பிரிந்த காலத்தில் பொறுத்தற்கு அரிய வருத்தத்தைத் தருபவளாகத் தலைவி உள்ளாள் என்று கூறுகின்றான் என்பது,*

"இனையள் என்றுஅவட் புனைஅளவு அறியேன்"
எனும் இப்பாடல் அடியின் கருத்தாகும்.

ஓரம்போகியார் குறிப்பிடும் இத்தலைவனின் பரத்தமை ஒழுக்கத்தைத் தடுத்துவிடலாம். காரணம் அவன் தலைவி மீது அன்பு உடையவனாக இருப்பதால் என்ற கருத்தை விளக்க ஆசிரியர் இப்பாடலைக் கையாண்டுள்ளார்.

கோசர் செய்த சூழ்ச்சியைப் போலத் துணிவுடன் செய்யப்படும் ஆராய்ச்சியும் சிறிதளவு வேண்டற்பாலதேயாகும் என்பது 73 ஆம் பாடல் அடியின் பொருளாகும். பரணர் குறிப்பிடும் தலைவன் மிகுகாமம் உடையவனாக உள்ளான். காரணம் சூழ்ச்சி செய்யும் திறன் இல்லாதவள் தலைவி. எனவே தலைவன் தான் நினைத்தபடி செல்கிறான் என்ற கருத்தை விளக்க இப்பாடல் அடியை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியங்களில் பேய்

வி.சா.பாலசுப்பிரமணியன் என்பவரால் எழுதப்பெற்ற இக்கட்டுரையில் குறுந்தொகை 87 ஆம் பாடல் இடம்பெற்றுள்ளது. இப்பாடலில் கீழ்வரும் அடி கட்டுரையில் எடுத்தாளப்பெற்றுள்ளது.

"பேஎம்முதிர் கடவுள்"
அச்சம் செய்தலில் பழமை வாய்ந்த கடவுள் கொடுமையுடையாரைக் கொல்லும் என்பது பாடலடியின் பொருள் ஆகும். "பேய்" என்ற சொல்லுக்கு அச்சம் என்ற பொருள் இருந்திருக்குமோ என்று நினைக்கத் தோன்றுகின்றது என்று கூறுவதற்காக இப்பாடலின் அடியை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்கச் சமூகமும் உயர்நிலை உலகமும்

இக்கட்டுரை பெ.மாதையன் என்பவரால் எழுதப்பெற்றது (1994 ஐப்பசி). சங்ககாலம் நிலவுடைமையாக மாறுகின்ற காலக்கட்டம் ஆகும். சங்கப் பாடல்களில் இனக்குழுச் சமுதாயத்தின் எச்சங்களையும், நிலவுடைமைச் சமுதாயத்தின் புதிய உற்பத்தி உறவு முறைகளையும், அவ்வுறவு முறைகளைப் பாதுகாக்கும் அரசினையும், அந்தணரின்

மேலாண்மைகளையும், ஆரியமயமாகிப் போகும் தெய்வங்களையும் ஒருங்கே காணமுடிகின்றது. இச்சூழலில் நிலவுடைமை அமைப்பிற்கேற்ற சிந்தனையும் முன்வைக்கப்பெறுகின்றது. அவற்றுள் உயர்நிலையுலகமும் ஒன்று. இவ்வுயர்நிலை உலகச் சிந்தனை இடம்பெற்றமைக்கான சங்கச் சமூகச் சூழலையும் அது காலந்தோறும் பெற்ற மாற்றங்களையும் ஆராய்வது இக்கட்டுரையின் நோக்கம். இக்கட்டுரையில்,

"பெரும் பெயர் உலகம்" (83)

"புத்தேள் நாடும்" (101)

"மறுமை உலகம்" (99)

இம்மூன்று பாடல் அடிகளும் "உயர்ந்தோர் உலகம்" என்ற சொல்லைக் குறிக்கப் பயன்படுத்தப்பெற்றுள்ளன.

'பொதுவாகச் சமூக வரலாற்றில் எந்த ஒரு கருத்து அல்லது பண்பாடு மிகுதியும் வலியுறுத்தப்படுகின்றதோ, அல்லது மையப் படுத்தப்படுகின்றதோ அந்தக் கருத்து அல்லது பண்பாடு பற்றிய ஒரு பொருட் பலசொற்கள் மொழியில் பெருகும். அந்நிலையில் "உயர்ந்தோர் உலகம்" குறித்த இச்சொற்களின் எண்ணிக்கை மிகுதியே இச்சிந்தனை அப்பண்பாட்டில் எந்த அளவுக்கு ஆளுமை செலுத்தியது என்பதைக் காட்டுகின்றது. இவ்வுயர்நிலை உலகத்தை அடைதற்குரியவர் இவர் என்பதிலும் அடைவதற்கு உரிய வழிகள் இவை இவை என்பதிலும் நீண்டதோர் காலப்பகுதியில் பாடப்பட்ட சங்க இலக்கியங்களுள் மாற்றங்கள் இருப்பதை அறியமுடியும்' என்ற கருத்தை விளக்க இப்பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க காலத்தில் கைம்மை

இக்கட்டுரை வ.கிருஷ்ணன் என்பவரால் எழுதப்பெற்றது (1998 சித்திரை). சங்க இலக்கியத்தில் 'கைம்மை' எத்தகு நிலையில் இருந்தது என்பதை விளக்குவது இக்கட்டுரையின் நோக்கம். இக்கட்டுரையில் குறுந்தொகை 69 ஆம் பாடல் இடம்பெற்றுள்ளது.

'ஆண் குரங்கு இறந்துபட்டது. பெண் குரங்கு தன்னுடைய குட்டியினை உறவினரிடம் ஒப்படைத்துவிட்டுக் கைம்மை நோன்பின் துயர்

தாளமுடியாமல் மலையின் உச்சியில் இருந்து கீழே விழுந்து தன்னுயிரை மாய்த்துக்கொள்ளும்' என்பது 69 ஆம் பாடலடிகளின் பொருளாகும்.

ஐந்தறிவுடைய குரங்கின் செயல்மீது சங்ககால மகளிரின் நிலையை ஏற்றிக் கூறுகின்றது இவ்அகப்பாடல் என்பதை விளக்கவும் கைம்மை நோன்பு கொடுமையானது என்றும் இந்நோன்புக் கொடுமையினின்று மீள, உயிர்துறத்தலைத் தீர்வாகக் கொண்டனர் பெண்கள் என்பதை எடுத்துரைக்கவும் இப்பாடல் அடிகளை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் பொதுச்சொல்லும் ஒரு பொருட் பலசொல் குறித்த சிறப்புச் சொல்லும்

க.அன்பழகன் என்பவர் எழுதிய இக்கட்டுரையில் 161, 355, 13 ஆகிய குறுந்தொகைப் பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

'பொழுது' (161), 'எல்லை' (355) இந்த இரண்டு சொற்களும் ஞாயிறு (சூரியன்) என்ற சொல்லைக் குறிக்கப் பயன்படுகின்றன. ஒரு பொருட் பல சொல் என்பதை விளக்க இப்பாடல் சொற்களை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

'கல்' (13) கடினத் தன்மையுடைய பொருள் எனும் பொதுப்பொருளைக் கொண்டது 'கல்' எனும் சொல். இதனுடன் துறு எனும் சிறப்புச் சொல் சேர்ந்து துறு+கல்=துறுகல் (பாறை) என்று பொருள் மாற்றம் அடைகின்றது. பொதுச் சொல்லோடு சிறப்புச் சொல் சேர்ந்து பொருள் மாற்றம் அடைவதை விளக்க இப்பாடலடியை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்கத் தமிழரின் வாழ்வியல் கூறுகள்

சு.கு.பன்னீர்செல்வம் என்பவரால் இக்கட்டுரை எழுதப்பெற்றுள்ளது. இக்கட்டுரையில் 300 ஆம் பாடலின் கருத்து இடம்பெற்றுள்ளது. 'இந்த உலகத்தையே நான் உனக்கு ஈடாகப் பெற்றாலும், உனைக் கைவிடேன்' என்பது பாடலின் கருத்தாகும். சங்ககால அகவாழ்வில் தலைவியிடம் தலைவனின் அன்பைக் காட்ட இப்பாடல் கருத்தை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## மருதனிளநாகனாரின் படைப்பில் தலைவி

இக்கட்டுரை சோ.முத்தமிழ்ச்செல்வன் என்பவரால் எழுதப்பட்டது (2002 சித்திரை). சங்கப்பாடல்கள் அகம், புறம் என இருவகைப்படும். இவற்றுள் புறத்தைவிட அகமே சிறப்புடையது. இவ்வகப்பாடல்களைப் பாடியோர் பலர். அவர்களுள் மருதனிளநாகனார் குறிப்பிடத்தக்கவர். இவர் ஐந்திணையிலும் எழுபத்துநான்கு பாடல்களைப் பாடியுள்ளார். இப்பாடல்கள் தலைவன், தலைவி, புதல்வன், காமக்கிழத்தி, தேர்ப்பாகன், பாணன், விறலி எனும் அகமாந்தர்களின் பண்பு நலன்களைக் கூறுகின்றன. இம்மாந்தர்களுள் தலைவியின் பண்புநலன்களை இக்கட்டுரை விளக்குகின்றது. இக்கட்டுரையில் 106 ஆம் பாடல் கருத்து இடம்பெற்றுள்ளது. ஆண், பெண் அன்றில் பறவைகள் தடாமரத்தின் கிளை உச்சியில் கூடுகட்டியிருக்கின்றன. இப்பறவைகள் குளிர்காலத்தில் ஒன்றாக இணையும்போது இன்பம் ஏற்படுகின்றது. இவ்இன்பத்தால் பறவைகள் மெதுவாக ஒலிக்கும். இதைக்கேட்ட தலைவி, தலைவனின் பிரிவை எண்ணி வருந்துவாள் என்ற கருத்து இக்கட்டுரையில் இடம்பெற்றுள்ளது. தலைவன் குறித்த காலத்து வாராமை கண்டு தலைவி வருந்துதலை எடுத்துக்காட்ட இப்பாடல் அடியை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கிய ஒருபொருட் பல சொற்களின் சொல்லிணைவு

க.அன்பழகன் என்பவரால் இக்கட்டுரை எழுதப்பெற்றுள்ளது. இதில் 284 ஆம் பாடல் இடம்பெற்றுள்ளது. இப்பாடலின் கீழ்வரும் அடி கட்டுரையில் எடுத்தாளப்பெற்றுள்ளது.

"மன்றத் துறுகல் மீமிசைப் பலஉடன்"

மன்றத்தின் கண் உள்ள பாறையின் மேல், ஒள்ளிய செங்காந்தள் மலர்கள் பல ஒருங்கே மலர்கின்ற நாட்டையுடையவன் தலைவன் என்பது பாடல் அடியின் பொருள். இப்பாடலடியில் இடம்பெற்ற மீ, மிசை என்ற இரு சொற்களும் 'உயரம்' என்ற ஒரு பொருளைக் குறிப்பன என்பதை விளக்கவும், ஒரு பொருளைக் குறிக்கும் (உயரம்) பல சொற்கள் இரண்டு (மீ, மிசை) அடுத்தடுத்து வந்து, சில நோக்கங்களை நிறைவு செய்து அழுத்தமான உணர்வு வெளிப்பாட்டில் பொருளைத் தெளிவுபடுத்தப்

பயனாகின்றன இவ்வகைச் சொல்பயன்பாடு சங்க இலக்கியத்தில் காணப்பெறுவதை எடுத்துக் கூறவும் இப்பாடல் அடியை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் தழையுடை

இக்கட்டுரை அ.ஜெயக்குமார் என்பவரால் எழுதப்பெற்றது. இதில் 223, 214 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன. தழையுடையைத் தலைவன் தலைவிக்குக் கொடுத்தான் என்பதை

"தழலும் தட்டையும் முறியுந் தந்திவை" (223)

எனும் இப்பாடல் அடி விளக்குகின்றது. அல்குலில் அசோக மரத்தின் இலைகளைத் தழையுடையாகப் பயன்படுத்தினர் என்பதை,

"திருந்து இழை அல்குற்குப் பெருந்தழை உதவிச்" (214)

எனும் இப்பாடல் அடி விளக்குகின்றது. இவை அக்கால மக்களின் உடைமுறையை எடுத்துக் கூறுகின்றன. இவ் உடைமுறையை விளக்குவதற்காகவே ஆசிரியர் இப்பாடல்களின் அடிகளைப் பயன்படுத்தியுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் 'பேச்சுநடை' அடிப்படைகள்

இக்கட்டுரை சா.அங்கயற்கண்ணி என்பவரால் எழுதப்பட்டது (1991 ஆவணி). 'வாய்மொழி இலக்கியத்தின் பண்பு எந்த ஒரு பழமையான இலக்கியத்திலும் வெளிப்படும். அதனால் உலகின் நடைமுறைப் பேச்சு வழக்கும் இலக்கியத்தில் பிரதிபலிக்கப்படுவதுண்டு. வாய்மொழி இலக்கியமாகத் தொன்றுதொட்டு வழங்கிவந்த பாடல்களே, பின்பு வரிவடிவம் பெற்றன என்பது 'ஹோமர்' காப்பியங்களை வைத்து மெய்ப்பிக்கப்பட்டுள்ளது. சங்க இலக்கியங்கள் வீரயுகப்பாடல்கள் என்பதனை, க.கைலாசபதி தமது "தமிழ்வீரநிலைக் கவிதை" என்ற நூலில் நிறுவ முயல்கின்றார். அவர் சங்கப் பாடல்களில் உள்ள வாய்மொழித் தன்மையை நன்றாக எடுத்துக்காட்டுகிறார் என்று விளக்கம் அளித்து அதன்பின்னர், குறுந்தொகை வழிப் பல சான்றுகள் காட்டி வாய்மொழிக் கூறுகளுள் ஒன்றான பேச்சுநடை போன்றதே இலக்கிய நடை என்பதை நிறுவ முயல்வது இக்கட்டுரை. இக்கட்டுரையில் 112, 249, 375, 160, 141, 244 ஆகிய குறிஞ்சித்திணைப் பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

தலைவனைப் பெயர் சொல்லி அழைக்காத மரபு தமிழர் மரபு. வீட்டில் கணவன் எங்கு சென்றுள்ளார் என வினவியவிடத்து, “அவர் ஊரிலில்லை” என்று மனைவி கூறுவது வழக்கம். இஃது ஒரு பேச்சு நடை மரபாகும். **112, 249, 375** ஆம் பாடல்களில் தலைவனைத் தலைவி ‘அவர்’ என்றுதான் குறிப்பிடுகிறாள். தோழி கூற்றிலும் இந்நிலை காணப்படுகின்றது என்பனவற்றை விளக்கவும் சங்க இலக்கியத்தில் காணப்படும் பேச்சு நடையை விளக்கவும் இப்பாடல் அடிகளை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

‘குளிர்ச்சிமிக்க வாடைக்காற்று வீசும் கூதிர்காலத்திலும் நம் தலைவர் வந்திலர். அவர் வாராமையோ, தன் வரைவிற்குக் காரணமாவது’ என்று தலைவி கூறுவது **160** ஆம் பாடலடிகளின் பொருளாகும். காதலன் வருகை இத்தன்மையதுதானா? எனத் தலைவி கூறுவது பேச்சு நடை வழக்கு எனப் பேச்சு நடை வழக்கு பற்றி விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

இரவுக்குறியில் வருவதால் வரும் ஏதங்களைச் சுட்டிக் காட்டித் தலைவனைப் பகலில் வருமாறு தோழி வேண்டுவது **141** ஆம் பாடலடிகளின் பொருளாகும்.

‘(நீ சொல்லின் எவனோ) பகலில் வருமாறு தலைவனிடம் கூறினால் என்ன குற்றம் நேர்ந்துவிடும்?’ என்று தலைவி கூறுவது பேச்சுவழக்கினை ஒட்டிய இலக்கிய வழக்கு என்பதை விளக்க இப்பாடலை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியங்களில் அறிவியல் கோட்பாடுகள்

இக்கட்டுரை சு.தமிழ்வேலு என்பவரால் எழுதப்பெற்றது (**1996** வைகாசி). ‘தமிழ்மொழி பன்னூறு ஆண்டுகளுக்கு முன் இலக்கியம் கண்டது. இம்மொழி மானுடனின் வாழ்வை மட்டும் புலப்படுத்தவில்லை, அதில் ஆங்காங்கு நுணுகி அவன் வாழ்வினை மேம்படுத்துவதற்குத் துணையான அறிவியல் கூறுகள் ஒரு சில நுவலப் பெற்றுள்ளன. இவ்வறிவியற் கூறுகள் பிற்கால அறிவியல் வல்லுநர்களால் கோட்பாடுகளாக உருவாக்கப் பெற்றுள்ளன. அக்கோட்பாடுகளுக்கு மூலப்

பிறப்பிடம் என்று நுவலும் வகையில் தமிழ் இலக்கியங்களும் இருந்துள்ளன' என்று குறிப்பிடும் இக்கட்டுரை சங்க இலக்கியங்களில் அறிவியல் கோட்பாடு எவ்வாறு காணப்படுகின்றது என்பதை விளக்குவதாக அமைகின்றது.

இக்கட்டுரையில் 41 ஆம் பாடல் இடம்பெற்றுள்ளது. 'தலைவன் பக்கத்தில் இருக்கும்போது, விழா நடந்து கொண்டிருக்கும் ஊரில் உள்ள மக்கள் மகிழ்வது போல மகிழ்வேன். தலைவன் பிரியும் போது, பாலைவனத்தில் உள்ள அழகிய குடிசைகள் அமைந்த ஊர்களை மக்கள் விட்டுச் சென்றதால் அவ்வீட்டில் அணில்கள் விளையாடும். இத்தகைய அணில் விளையாடும் தனிமையான வீட்டைப்போல வருந்துவேன்' என்பது பாடலின் பொருளாகும்.

"ஒரு சாதாரணப் பரப்பை அதன்மீதுள்ள எண்ணிறந்த புள்ளிகளின் மூலம் வரையறுக்கலாம்" என்பது ஐன்ஸ்டீனின் கொள்கைகளில் ஒன்றாகும். 'இவ்வடிப்படையில் 41 ஆம் பாடல் மக்கள் புழக்கத்தில் இருந்த ஒரு பெரிய தளம் எவ்விதப் பயன்பாடும் இல்லாமல் இருக்கும் தன்மையைப் புனைந்து காட்டுகின்றது. அம்மன்றலில் ஓர் அணில் மட்டும் விளையாடுகின்றது' என்று காட்டும் பொழுது, அதன் பரப்பளவை உணர முடிகின்றது என்கிறார் ஆசிரியர். தமிழ் இலக்கியத்தில் காணப்படும் இலக்கியக் கூறுகளை அறிவியல் முறையோடு ஒப்பிட்டுக் காட்டுவதற்காக இப்பாடலை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

### 3.2.2 முல்லை

தமிழ்ப்பொழில் இதழில் வெளிவந்துள்ள குறுந்தொகை முல்லைத்திணைப் பாடல்களின் எண்ணிக்கை 07 ஆகும்.

### தமிழில் தாவரங்கள்

கு.சீனிவாசன் எழுதிய இக்கட்டுரையில் 208, 370, 148 ஆகிய குறுந்தொகை முல்லைத் திணைப் பாடல்கள் இடம்பெற்றுள்ளன.

'நொதுமலர் வரைவோடு புகுந்த வழி, தலைவி தலைவன் செலவு நீட்டித்தலால் ஆற்றாளாயினாள். களிறுகள் தம்முள் மோதிக் கொண்டு

மிதித்ததால் வேங்கைமரம் சாய்கின்றது. வேங்கை மரத்தில் ஏறிப் பூப்பறிக்கும் மகளிர், மரத்தில் ஏறாமலே பூப்பறித்துத் தலையில் சூடினர்' என்ற கருத்தை விளக்கும் பாடலடிகள் வருமாறு:

"ஒன்றேன் அல்லேன் ஒன்றுவென் குன்றத்துப்" (208)

ஒன்றேன்... எனும் அடிமுதலாக 5 அடிகள் இப்பாடலில் இடம்பெற்றுள்ளன. வேங்கைப்பூவின் சிறப்பைக் கூறவும் யானைப் போரில் சாய்ந்த வேங்கைமரத்தில் மகளிர் பூப்பறித்தனர் என்பதை எடுத்துக் கூறவும் இப்பாடல் அடிகளை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

பொய்கையில் உள்ள ஆம்பலின், அழகிய நிறத்தையுடைய கொழுவிய முகையானது, வண்டுகளுக்குத் தன்னுடைய இதழாகிய வாயைத் திறக்கும் என்பது,

"பொய்கை யாம்பல் அணிநிறக் கொழுமுகை
வண்டுவாய் திறக்கும் தண்டுறை யூரனொடு" (370)

எனும் இப்பாடலடிகளின் மூலம் வெளிப்படுகிறது. விடியற்காலையில் பூக்கும் பூக்களை வண்டுகள் மொய்த்துத் திறக்கும் என்ற கருத்தை இப்பாடலடிகள் கொண்டு ஆசிரியர் விளக்குகின்றார்.

'செல்வத்தோடு பிறந்த சிறுபிள்ளைகளின் சிறிய அடியில் பொலிவுபெற விளங்கும் பொன்னால் செய்யப்பட்ட, தவளையின் வாய்போன்ற வாயினையுடைய சிறு சதங்கையில் அமைந்துள்ள காசுகளைப் போல, கொன்றை மரம் மொட்டுக்களை ஈன்றது' என்பது,

"செல்வச் சிறாஅர் சீறடிப் பொலிந்த
தவளை வாய பொலம்செய் கிண்கிணிக்
காசின் அன்ன போதீன் கொன்றை" (148)

எனும் இப்பாடலடிகளின் வழி வெளிப்படுகிறது. கொன்றைமரம் பச்சை நிறமுள்ள ஐந்து புறவிதழ்களையும், பொற்காசு போன்ற ஐந்து அகவிதழ்களையும் உடையது. அகவிதழ்களும், கேசரங்களும் வடிவில் வேறுபாடுடைமையின் ஒரு புறச் சமச்சீர் உடையதாக இருக்கும். மொட்டின் அடிப்புறத்து அகவிதழ்கள் சற்றுப் பெரியதாகவும், மேற்பாகத்து அகவிதழ்களை மூடிக்கொண்டுயிருத்தலின் இம்முகை, தவளையின் வாய்

போலவும் தோன்றும்' எனக் கொன்றை மரப் பூவின் சிறப்பை விளக்க இப்பாடலடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

'தலைவன், கொன்றை ஈனும் பருவத்தில் வருவதாகக் கூறித் தலைவியைப் பிரிந்துசென்றான். கொன்றை ஈன்றவுடன் தலைவி கார்காலம் வந்தது என எண்ணுகின்றாள். ஆனால் தோழி, மழை பெய்யாமையால் மலராமல் திகைத்த கொன்றையைக் காட்டி, கார்ப்பருவம் இன்னும் வரவில்லை என்கிறாள் என்ற கருத்தை விளக்கும் பாடல் வருமாறு.'

"செல்வச் சிறாஅர் சீறடிப் பொலிந்த"

எனும் அடிமுதலாக இப்பாடல் முழுவதும் இக்கட்டுரையில் இடம்பெற்றுள்ளது. கார்காலத்தின் தொடக்கத்தில் கொன்றைப் பூக்கள் மலரும் என்பதை விளக்க இப்பாடலை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## தமிழ்நாட்டுப் பெண்களின் பண்பாடு

சாமி.சிதம்பரனார் எழுதிய இக்கட்டுரையில்,

"முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்"

எனும் இவ்வடியை முதலாகக் கொண்ட 167 ஆம் பாடல் முழுவதும் இடம்பெற்றுள்ளது. தலைவி காந்தள் மென்விரலால் பிசைந்த தயிரைத் தாளித்துப் புளிச்சுவையுடைய குழம்பைச் செய்து, தலைவனுக்குக் கொடுப்பாள். இதை உண்ட தலைவன் 'இனிது' எனப் புகழ, தலைவி மனம் பெரிதும் மகிழும் என்பது பாடலின் பொருள்.

நல்ல குடும்பப் பெண்கள் தமது கையாலேயே கணவனுக்கு உணவு பரிமாற விரும்புவார்கள்.தாமே சமைத்த உணவைத் தமது கையாற் பரிமாறுவதில் அவர்களுக்கொரு தனியின்பம். தான் சமைத்த உணவைத் தனது கணவன் சுவைத்து உண்பதைக் கண்டால் அவர்கள் அடையும் மகிழ்ச்சிக்கு அளவேயில்லை. இது பண்டைத் தமிழ்ப் பெண்களின் பண்பு. இதனை விளக்க இப்பாடலை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## திருநீலகண்ட நாயனாரும் குறுந்தொகையும்

நா.ஆறுமுகம் என்பவர் எழுதிய இக்கட்டுரையில்,

"உதுக்காணதுவே, யிதுஎன் மொழிகோ" (191)

எனும் இவ்வடி முதலாகப் பாடல் முழுவதும் இடம்பெற்றுள்ளது.

மரக்கிளைகளில் தத்தம் துணைகளோடு கூடியிருந்த பறவைக் கூட்டங்கள், துணையைப் பிரிந்தோர் வருந்துமாறு தன் இனிய குரலாலே அகவும். அதைக் கேட்டுப் பிரிந்து சென்ற அயன்மையுடைய தலைவன் வரவில்லை என்றால் எம் கூந்தலையும் தன்னையும் தொடவிடமாட்டேன் என்று தலைவி தோழியிடம் கூறுவது இப்பாடலின் பொருள். திருநீலகண்ட நாயனாருடைய மனைவியின் கூற்றுக்குச் சங்க இலக்கியமான குறுந்தொகைத் தலைவி வழிகாட்டியாக உள்ளாள் என்பதை விளக்க இப்பாடலை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் 'பேச்சு நடை' அடிப்படைகள்

சா.அங்கயற்கண்ணி எழுதிய இக்கட்டுரையில் குறுந்தொகையின் 221, 191, 110 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

'தலைவன் பிரிந்து செல்லும்போது முல்லை பூக்கும் நாளில் வருவேன் என்றார். ஆனால் முல்லைகள் பூத்தன; தலைவன் வரவில்லை என்பதை,

"அவரோ வாரார், முல்லையும் பூத்தன" (221)

எனும் இப்பாடல் அடி உணர்த்துகிறது. தலைவி தலைவனைப் பெயர் சொல்லி அழைக்காமல் 'அவர்' என்றே அழைத்தாள் என்பதை எடுத்துக்காட்டுவதற்காக இப்பாடல் அடியை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

'பிரிந்து சென்று அயலவராகிவிட்ட தலைவர் மீண்டும் இங்கே வந்தால், பொங்குதலை உடைய தம் கூந்தலை மலர்களால் அலங்கரித்தலை விடுக என்றும், தம்மைத் தொடுதலை விட்டு நீங்குக என்றும் உரைப்பேன்' எனத் தலைவி தோழியிடம் கூறுவது,

"ஏதிலாளர் இவண்வரிற், போதிற்
பொம்மல் ஓதியும் புனையல்
எம்முந் தொடாஅ லென்குவெ மன்னே" (191)

எனும் இப்பாடலடிகளின் பொருளாகும்.

'ஏதிலாளர்' எனப் பன்மையில் கூறிய தலைவி, பின்பு 'புனையல்,' 'தொடாஅல்' என ஒருமையில் கூறுகின்றாள். தலைவியின் சினத்தை

எடுத்துக் கூறவும் பேச்சு நடையை ஒட்டி வரும் இலக்கிய வழக்கின் உணர்ச்சி வெளிப்பாட்டு முறையை விளக்கவும் இப்பாடலை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

தலைவன் கூதிர்ப் பருவம் தொடங்குவதற்கு முன் வருவதாகத் தலைவியிடம் கூறிச் செல்கின்றான். ஆனால் வரவில்லை. எனவே 'துன்பம் வீசும் வாடைக்காற்றினால் தலைவி எத்தன்மையவள் ஆயினளோ என்று நினைந்து கவலையுறாத தலைவன் வந்தாலும் வாராவிடினும் அவர் நமக்கு எத்தகைய உறவினராவர்' என்று தலைவி வருந்திக் கூறுவதை விளக்கும் பாடலடிகள் வருமாறு.

"வாரார் ஆயினும், வரினும், அவர்நமக்கு" (110)

எனும் அடி முதலாக 8 அடிகள் இப்பாடலில் இடம்பெற்றுள்ளன. "அவரோடு நமக்கு என்ன உறவுளது?" என்பது பேச்சு நடையாகும் என்று விளக்குவதற்காக ஆசிரியர் இப்பாடலைக் கையாண்டுள்ளார்.

### 3.2.3 மருதம்

தமிழ்ப்பொழில் இதழில் குறுந்தொகைக்குரிய மருதத்திணைப் பாடல்களின் எண்ணிக்கை 15 ஆகும்.

### தமிழில் தாவரங்கள்

கு.சீனிவாசன் எழுதிய இக்கட்டுரையில் 46, 178 ஆகிய குறுந்தொகைப் பாடல்கள் இடம்பெற்றுள்ளன.

ஆம்பல் பூவின் வாடலைப் போன்று குவிந்த சிறகுகளையுடைய குருவிகள் வீட்டின்கண் தங்கும் என்பது,

"ஆம்பற் பூவின் சாம்ப லன்ன
கூம்பிய சிறகர் மனைஉறை குரீஇ" (46)

எனும் இப்பாடல் அடிகளின் கருத்தாகும்.

துளையைக் கொண்ட, திரண்ட தண்டினையுடைய ஆம்பல் என்பது

"தூம்புடைத் திரள்கா லாம்பல்" (178)

எனும் இப்பாடல் அடியின் பொருளாகும். ஆம்பல் பூவில் நான்கு

புறவிதழ்களும் பத்துப் பதினைந்து அகவிதழ்களும் உள்ளன. புறவிதழ்களின் வெளிப்புறம் பசுமையானது என்பதை விளக்கவும் தமிழ் மக்கள் ஆம்பலின் இலைக்காம்பிலும், பூக்காம்பிலும் உள்ள தூம்பை அறிந்திருந்தனர் என்பதை எடுத்துக் கூறவும் இப்பாடல்களின் அடிகளை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

## தமிழ்நாட்டுப் பெண்களின் பண்பாடு

*சாமி.சிதம்பரனார் எழுதிய இக்கட்டுரையில் 10, 295 ஆகிய குறுந்தொகைப் பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.*

*தலைவியானவள், தலைவன் செல்வம்பெற்று மகிழ்ந்து வாழ்வதற்குக் காரணமாக உள்ளாள் என்பது,*

*'யாய் ஆகியளே விழவுமுத லாட்டி' (10)*

*எனும் இப்பாடல் அடிகளின் பொருளாகும்.*

*தலைவன், தலைவி வருந்த பரத்தையுடன் நீர் விளையாடிவிட்டு வந்து தலைவியைச் சமாதானம் செய்யுமாறு தோழியிடம் கூறுகின்றான். அதைக் கேட்ட தோழி தலைவியை மணப்பதற்கு முன் தலைவனின் குடும்பம் ஒரு பசுமாட்டால் உணவு பெற்றுச் செல்வச்சிறப்பற்ற குடும்பமாக இருந்தது என்றும் தலைவியை மணந்ததால் பரத்தையுடன் கூடிய நீர் விளையாடுவதற்குரிய பெருஞ்செல்வத்தைப் பெற்றது என்றும் இவ்வூரார் கூறுகின்றனர் எனத் தோழி உரைக்கும் பாடலடிகள் வருமாறு.*

*'உடுத்தும், தொடுத்தும் பூண்டும், செரீஇயும்*

*...' (295)*

*பெண்ணால்தான் ஒரு குடும்பத்திலே செல்வம் பெருகும் என்ற நம்பிக்கை பழந்தமிழ் மக்களிடம் குடிகொண்டிருந்தது என்பதை விளக்க மேலே இடம்பெற்றுள்ள பாடல்களை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.*

## சங்க அகத்துறைப் பாடல்களில் பாத்திரப் பண்போவியம்

*சாலினி இளந்திரையன் என்பவரால் இக்கட்டுரை எழுதப்பெற்றுள்ளது. இக்கட்டுரையில் 202, 93, 8, 45, 91, 80, 89 ஆகிய குறுந்தொகைப் பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.*

சிறிய இலையை உடைய நெருஞ்சி, கண்ணுக்கு இனிமைதரும் மலர்களை முதலில் உருவாக்கிப் பின் உடலுக்குத் தீமைதரும் முட்களை உருவாக்கும். அதுபோல, களவுக்காலத்தில் இனியவனான தலைவன் கற்புக்காலத்தில் இன்னாதவனாகக் காணப்படுகின்றான் எனத் தலைவி கூறுவது,

"சிறியிலை நெருஞ்சிக்

கட்கின் புதுமலர் முட்பயந்தாஅங்கு

இனிய செய்த நம் காதலர்

இன்னா செய்தல் நோம்என் நெஞ்சே" (202)

எனும் இப்பாடலடிகளின் பொருளாகும்.

தலைவனை வெறுத்துக் கடிந்து கொள்ள முடியாத தலைவியின் பாத்திரப் பண்பை இப்பாடல் மூலம் ஆசிரியர் விளக்குகின்றார்.

தலைவன் தாயும், தந்தையும் அல்லரோ? அன்பு இல்லாத இடத்தில் ஊடல் கொள்வதால் விளையும் பயன் யாது என்று தலைவி கூறுவது,

"அவர் நமக்கு

அன்னையும் அத்தனும் அல்லரோ தோழி

புலவி அஃதுஎவனோ, அன்பிலங் கடையே" (93)

எனும் இப்பாடலடிகளின் பொருளாகும். பரத்தையிடம் இருந்து பிரிந்து வந்த தலைவனைத் தலைவி வேதனையோடு ஏற்றுக்கொள்ளும் பாத்திரப் பண்பை விளக்க இப்பாடல் அடிகளைப் பயன்படுத்தியுள்ளார் ஆசிரியர்.

ஆலங்குடி வங்கனார் மருதத்திணையில் ஆறு பாடல்கள் பாடியுள்ளார். இவ்ஆறு பாடல்களும் பரத்தை கூற்று, தோழி (வாயில் மறுத்த) கூற்று, என்னும் இரண்டே நிலையில் அடங்குகின்றன என்பதை விளக்க 8, 45 ஆம் பாடல்களின் எண்களை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

தலைவனின் பரத்தமையைத் தலைவி கண்டிக்க முடியாமலும் தலைவனுக்கு உடன்பட முடியாமலும் ஏங்குகின்றாள். இந்நிலைக்குத் தோழி வருந்துகின்றாள் என்ற கருத்தைக் கூற இப்பாடல் எண்ணை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார். தலைவி, தோழி பாத்திரப்

படைப்போவியத்தை எடுத்துக்கூற இக்கருத்து ஆசிரியரால் இக்கட்டுரையில் பயன்படுத்தப்பட்டுள்ளது.

"பிரப்பங்கொடியில் உள்ள பழத்தைக் குளத்தில் உள்ள கெண்டை மீன் கவ்வுதற்கு இடமாகிய நீர்த்துறைத் தலைவனுக்கு மனைவியாக விளங்கும் தலைவி, நெடுமான் அஞ்சி எனும் வள்ளலின் அச்சத்தைத் தரும் போர்க்களத்தில் உள்ள இரவையுடைய ஊரிலுள்ளார் போலத் துயிலும் நாட்கள் சிலவாகும். ஏனெனில் தலைவன் பரத்தையிடமே அதிக நாட்கள் வாழ்வான் என்ற கருத்தை விளக்கும் பாடலடிகள் வருமாறு:

"ஊரன் பெண்டினை ஆயின்" (91)

எனும் இவ்வடி முதலாக 8 அடிகள் பாடலில் இடம்பெற்றுள்ளன. இப்பாடலில் தலைவன் மிகுகாமம் உடையவனாகவும் தலைவியை முற்றிலும் புறக்கணிப்பவனாகவும் காணப்படுகின்றான். தலைவனின் பாத்திரப் பண்போவியத்தை விளக்க இப்பாடலடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

தலைவனால் விரும்பப்பட்ட ஒரு பரத்தை, 'நானும் தலைவனும் புதுப்புனலாடப்போகிறோம். முடிந்தால் தலைவனின் மனைவி தன் ஆட்களோடு வந்து தலைவனை (என்னோடு வாராமல்) தடுத்துவிடட்டும் பார்ப்போம்' என அறைகூவல் விடுக்கின்றாள். இக்கருத்தை விளக்க 80 ஆம் பாடல் எண்ணை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

'தலைவனின் நடத்தையை இடித்துரைக்க எங்கள் தலைவிக்கு உரிமை உண்டு. அதைக் கேட்க ஊராருக்கு உரிமை இல்லை' என்று பரத்தைக்கு எச்சரிக்கை விடுக்கின்றாள் தோழி என்ற கருத்தை எடுத்துக்காட்ட 89 ஆம் பாடல் எண்ணை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார். தோழியின் பாத்திரப் பண்போவியத்தை எடுத்துக்காட்ட இக்கருத்து ஆசிரியரால் பயன்படுத்தப்பட்டுள்ளது.

**சங்ககாலம் - ஒரு மறு ஆய்வு**

இக்கட்ரை க.த.திருநாவுக்கரசு என்பவரால் எழுதப்பெற்றது (1987 ஆவணி). இக்கட்டுரையில் சங்ககாலம் பற்றிய மறு ஆய்வுச் செய்திகளும், சங்க காலம் பற்றிக் கிருஷ்ணசாமி ஐயர், கனகசபை, கே.கே.பிள்ளை

முதலான தமிழ் அறிஞர்களின் கருத்துகளும், இக்கால அறிஞர்கள், மொழியியல் அறிஞர்கள், மேல்நாட்டு அறிஞர்கள் கருத்துகளும் எடுத்து விளக்கப்பெற்றுள்ளன. இக்கட்டுரையில் குறுந்தொகை 75 ஆம் பாடலின் கருத்து இடம்பெற்றுள்ளது.

> "பல்லவருடைய ஆட்சிக்கு (கி.பி. ஆறாம் நூற்றாண்டுக்கு) முற்பட்டது சங்ககாலம். வடஇந்தியாவில் சிறப்புற்று விளங்கிய பாடலிபுத்திரம் அழிவதற்கு முன்னரே சங்கப் பாடல்கள் இயற்றப்பட்டு இருக்க வேண்டும் (அகம்.265, 149 பாடலியின் சிறப்பைப் பாடுகின்றன) பாடலிபுரம் கி.பி. நான்காம் நூற்றாண்டில் அழிந்துவிட்டது. எனவே, பாடலியின் புகழ்பாடும் சங்கப்பாடல்கள் கி.பி.நான்காம் நூற்றாண்டிற்கு முற்பட்டவையாக இருக்க வேண்டும்"

என்கிறார் இக்கட்டுரை ஆசிரியர். கி.பி.4 ஆம் நூற்றாண்டில் பாடலிபுரம் அழிந்துவிட்டது எனும் கருத்தைக் கூற இப்பாடல் எண்ணை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

## சங்க இலக்கியங்களில் துணங்கைக் கூத்து

இக்கட்டுரை பழ.முத்தப்பன் என்பவரால் எழுதப்பெற்றது. இக்கட்டுரையில் குறுந்தொகை 31 ஆம் பாடல் இடம்பெற்றுள்ளது. அப்பாடலின் கீழ்வரும் அடி கட்டுரையில் எடுத்தாளப்பெற்றுள்ளது.

> "மகளிர் தழீஇய துணங்கையானும்"

பரத்தை மகளிர் துணங்கை ஆடும்பொழுது ஒருவரை ஒருவர் தழுவிக்கொண்டு ஆடினர் என்பது இப்பாடல் அடியின் கருத்தாகும். துணங்கைக் கூத்து ஆடும் முறையை விளக்கவும் இக்கூத்து விழாக்காலங்களில் நிகழ்த்தப்பெற்றது என்பதை எடுத்துக்கூறவும் இப்பாடல் அடியை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்கத் தமிழரின் வாழ்வியல் கூறுகள்

இக்கட்டுரை சு.கு.பன்னீர்செல்வம் என்பவரால் எழுதப்பெற்றது. இக்கட்டுரையில் குறுந்தொகை 33 ஆம் பாடல் இடம்பெற்றுள்ளது. "கணக்காயர் இல்லாத ஊரும்... நன்மை பயத்தல் இல" எனக்

கூறப்பட்டுள்ளது. மேலும் ஒவ்வொரு ஊரிலும் கல்வி பயிற்றும் கணக்காயர் இருந்தனர் என்றும் விளக்கப்பட்டுள்ளது. கட்டுரையில் இடம்பெற்ற இப்பாடலும் இப்பொருளும் குறுந்தொகை நியூ செஞ்சுரி பதிப்பில் இடம்பெறவில்லை.

## சங்க இலக்கியத்தில் தழையாடை

இக்கட்டுரை அ.ஜெயக்குமார் என்பவரால் எழுதப்பெற்றது. இதில் குறுந்தொகை **295** ஆம் பாடல் இடம்பெற்றுள்ளது. அப்பாடலின் கீழ்வரும் அடி இக்கட்டுரையில் எடுத்தாளப்பெற்றுள்ளது.

"தழையணிப் பொலிந்த ஆயம்"

'தழையணி அலங்காரத்தால் பொலிவு பெற்ற பரத்தையர்' என்பது இப்பாடல் அடியின் பொருளாகும். அக்கால மக்கள் தங்களை அலங்கரித்துக் கொள்ளத் தழையணிகளை அணிந்தனர் என்பதை விளக்க இப்பாடல் அடியை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் 'பேச்சு நடை' அடிப்படைகள்

பழ.முத்தப்பன் அவர்கள் எழுதிய இக்கட்டுரையில் 89, 330 ஆகிய குறுந்தொகைப் பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

தலைவி வள்ளைப்பாட்டில், தலைவன் பெயரைக்கூறி இடித்தமை அறிந்து, ஊரார் அவனைத் தலைவியோடு தொடர்புபடுத்தி அலர் மொழிந்தனர் என்பது,

"அழிவ தெவன்கொலிப் போதை ஊர்க்கே" (89)

எனும் இப்பாடலடியின் பொருளாகும்.

இப்பாடலில் இடம்பெற்றுள்ள 'ஊர்' என்ற சொல், பொதுவாக ஊரிலுள்ளோரைக் குறிக்கும் என்ற கருத்தை விளக்க இப்பாடல் அடியை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

துன்பத்தைத் தரும் மாலைக்காலமும் தனிமைத் துயரும் தலைவன் பிரிந்து சென்ற நாட்டில் இல்லை போலும் என்று தலைவி கூறுவது,

"புன்கண் மாலையும், புலம்பும்
இன்றுகொல் தோழி அவர் சென்ற நாட்டே?" (330)

எனும் இப்பாடலடிகளின் பொருளாகும். தலைவனை 'அவர்' என்றுதான் அக்காலப் பெண்கள் அழைத்தனர். தலைவனைப் பெயர் சொல்லி அழைக்கும் மரபு அக்காலத்தில் இல்லை என்ற கருத்தை விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

### 3.2.4 நெய்தல்

தமிழ்ப்பொழில் இதழில் குறுந்தொகைக்குரிய நெய்தல் திணைப்பாடல்களின் எண்ணிக்கை 08 ஆகும்.

### தமிழில் தாவரங்கள்

கு.சீனிவாசன் எழுதிய 'தமிழில் தாவரங்கள்' எனும் கட்டுரையில் 122, 66, 306, 9 ஆகிய குறுந்தொகைப் பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

பசுமையான கால்களையுடைய கொக்கினது புல்லிய புறத்தைப் போன்று, ஆழமான நீர்நிலையில் உள்ள ஆம்பல் மலர்கள் காணப்படுகின்றன என்பது,

"பைங்காற் கொக்கின் புன்புறத் தன்ன
குண்டுநீ ராம்பலும் கூம்பின" (122)

என்னும் பாடலடிகளின் பொருளாகும். ஆம்பல் பூவில் நான்குபுறவிதழ்களும், பத்துப்பதினைந்து அகவிதழ்களும் உள்ளன. இப்புறவிதழ்களின் வெளிப்புறம் பசுமையானது என ஆம்பல் பூவின் சிறப்பை எடுத்துக்காட்ட, இப்பாடலடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

தலைவன் கார்காலத்தில் வருவதாகக் கூறிச் செல்கின்றான். தலைவன் குறித்த பருவம் வரக் கண்ட தலைவி வருந்துகின்றாள். இதைப்பார்த்த தோழி, தலைவன் குறித்த, கொன்றை பூக்கும் கார்காலம் இதுவல்ல என்றும், பருவம் அல்லாத காலத்தில் பெய்த மழையை, இக்கொன்றைகள் கார்காலம் என எண்ணிப் பூத்தன என்றும் கூறுகின்றாள். இக்கருத்தை விளக்கும் பாடல் வருமாறு:

"மடவமன்ற தடவுநிலைக்கொன்றை
......" (66)

மடவமன்ற என்ற அடிமுதலாகப் பாடல் 66 முழுவதும் இக்கட்டுரையில்

இடம்பெற்றுள்ளது. கொன்றை மலரின் சிறப்பை விளக்கவும், கொன்றை பூக்கும் காலத்தை எடுத்துக்கூறவும் ஆசிரியரால் இப்பாடல் எடுத்தாளப்பட்டுள்ளது.

பசிய இலைகளுக்கிடையே வளர்ந்துள்ள, உயர்ந்த திரட்சியையுடைய தண்டினைக் கொண்ட நெய்தல், ஆழமான குளத்தில் மூழ்கி எழும் மகளிரின் கண்போலத் தோற்றமளிக்கும் என்பது,

"பாசடை நிவந்த கணைக்கால் நெய்தல்
கயம்மூழ்கு மகளிர் கண்ணின் மானும்" (9)

எனும் இப்பாடல் அடிகளின் பொருளாகும். நெய்தல் மலரின் அழகை எடுத்துக்கூற இப்பாடல் அடிகளை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

அழகிய மாமரத்தின் தாதுகள் பொருந்திய மலர்களில் வண்டுகள் பல வீழ்தலைச் செய்யும் கழிச்சோலையையுடைய தண்ணிய கடல்துறையின் தலைவன் என்பது,

"காமர் மாஅத்துத் தாதமர் பூவின்
வண்டுவீழ் பயருங் கானல்" (306)

எனும் பாடல் அடிகளின் பொருளாகும். 'மாம்பூ, கொத்துக் கொத்தாகக் கணுக்குருத்தாகவும் நுனிக்குருத்தாகவும் அரும்பிப் பூக்கும். மிகச்சிறிய இப்பூவில் நான்கு அல்லது ஐந்து புறவிதழ்களும் ஒன்று முதல் ஐந்து கேசரங்களும் உண்டு. இதில் ஒன்று அல்லது இரண்டு மட்டும் தாது சேர்ந்து நிற்கும். இதன் தாதுப்பை செந்நிறமானது. பூவினடியில் தாதிழைகளை ஒட்டி நான்கு அல்லது ஐந்து தேன் சுரப்பிகள் இருக்கும்' என மாமரம் பற்றிய கருத்தைக் கூற இப்பாடலடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கிய ஒரு பொருள் பல சொற்களின் சொல்லிணைவு

க.அன்பழகன் என்பவரால் இக்கட்டுரை எழுதப்பெற்றுள்ளது. இக்கட்டுரையில் குறுந்தொகை 200 ஆம் பாடல் இடம்பெற்றுள்ளது. இப்பாடலின் கீழ்வரும் அடி கட்டுரையில் எடுத்தாளப்பெற்றுள்ளது.

"மீமிசைத் தாஅய வீஇ சுமந்துவந்"

மழை பெய்த குன்றுகளிலிருந்து வெள்ளம் ஓடி வருகின்றது. அந்தக் கலங்கல் நீரின்மேல் பல மலர்கள் உதிருகின்றன. அம்மலர்களை வெள்ளம் சுமந்து

வருகின்றது என்பது இப்பாடல் அடியின் பொருளாகும். மீ, மிசை என்ற இருசொற்களும் "உயரம்" என்ற ஒத்த பொருளைக் குறிப்பன. ஒரு பொருள் (உயரம்) பல சொற்கள் இரண்டு (மீ, மிசை) அடுத்தடுத்து வரும் இச்சொற்கள் சில நோக்கங்களை நிறைவு செய்து அழுத்தமான உணர்வு வெளிப்பாட்டில் பொருளைத் தெளிவுபடுத்தப் பயன்படுகின்றன. மீ, மிசை என்ற ஒரு பொருள் பலசொற்கள் இரண்டு அடுத்தடுத்து வருவதை விளக்க இப்பாடலடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க காலத்தில் தழையுடை

அ.ஜெயக்குமார் என்பவரால் இக்கட்டுரை எழுதப்பெற்றது. இக்கட்டுரையில் குறுந்தொகை 294 ஆம் பாடல் இடம்பெற்றுள்ளது. இப்பாடலின் கீழ்வரும் அடி கட்டுரையில் எடுத்தாளப் பெற்றுள்ளது.

"தழையினும், உழையிற் போகான்"

'தழையாடையை விடப் பக்கத்திலிருந்து பெயர்ந்து போகாத தலைவன்' என்பது பாடலடியின் பொருளாகும். அக்காலத் தமிழ்மக்கள் தழையாடையை எவ்வாறு உடலோடு நெருக்கி அணிந்தனர் என்பதை எடுத்துக்காட்ட இப்பாடல் அடியை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் பேச்சுநடை அடிப்படைகள்

சா.அங்கயற்கண்ணி என்பவரால் எழுதப்பெற்ற இக்கட்டுரையில் 6, 397 ஆகிய குறுந்தொகைப் பாடல்கள் இடம்பெற்றுள்ளன. 'இரவில் நடுயாமத்தில் உலகமெல்லாம் வெறுப்பின்றித் தூக்கத்தில் ஆழ்ந்துவிட்டது. யான் ஒருத்தியே நிச்சயமாக உறங்காதவள் ஆகினேன்' எனத் தலைவி கூறுவது,

"நனந்தலை உலகமும் துஞ்சும்
ஓர்யான் மன்ற துஞ்சா தேனே" (6)

எனும் இப்பாடலடிகளின் பொருளாகும். இப்பாடலில் இடம்பெறும் இந்த இலக்கியநடை வாய்மொழிக் கூறுகளுள் ஒன்றான 'பேச்சுநடை' போன்றது என்பதை விளக்க இப்பாடலடிகளை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

'தாய் கோபித்து அடிக்கும் போது, வாய்விட்டு அன்னையே! என அழும் குழந்தையைப் போல, துன்பத்தைச் செய்தாலும் அன்பைக்

காட்டினாலும் தலைவி, தலைவனின் பாதுகாவலாகிய எல்லைக்குள் அடங்கியவள். அவள் அடையும் துன்பத்தை நீக்கக்கூடியவர் தலைவனைத் தவிர வேறு யாரும் இல்லை. எனவே தலைவன், தலைவியைக் காப்பாற்ற வேண்டும்,' எனத் தோழி தலைவனை நோக்கிக் கூறுவது 397 ஆம் பாடலின் பொருளாக அமைகின்றது. பழமொழிகள் தமிழர்தம் பேச்சு வழக்கில் தனக்கென ஒரு இடத்தைப் பெற்றிருப்பதை இப்பாடல் மூலம் ஆசிரியர் விளக்குகின்றார்.

### 3.2.5 பாலை

தமிழ்ப் பொழில் இதழில் வெளிவந்துள்ள குறுந்தொகைக்குரிய பாலைத்திணைப் பாடல்களின் எண்ணிக்கை 19 ஆகும்.

### தமிழில் தாவரங்கள்

கு.சீனிவாசன் எழுதிய இக்கட்டுரையில் 331, 27 ஆகிய குறுந்தொகைப் பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

'பசுமையான அடிமரத்தையுடைய மாமரத்தின் அழகிய தளிரைப் போன்ற நல்ல ஒளியமைந்த தலைவியின் உடம்பு, தலைவன் பிரிவால் பசலை பாய்ந்து போகுமாறு தலைவன் பிரிய மாட்டான்' எனத் தோழி தலைவியிடம் கூறுவது,

"பைங்கால் மாஅத் தந்தளிர் அன்ன
நன்மா மேனி பசப்ப" (331)

எனும் இப்பாடலடிகளின் பொருளாகும். மாமரத்தின் இளந்தளிர் வேனிற்காலத்துத் தழைக்கும். மேலும், இம்மாந்தளிர் முற்றிய இலைபோன்று சிறிய செந்நிறங்கலந்து அழகாகத் தொங்கும் என்பதை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

புள்ளிகள் பொருந்திய அல்குலையுடைய மாந்தளிர் போன்ற, அழகிய தலைவியின் நிறம், தலைவனின் பிரிவால் பசலை நோய் உண்பதற்கு விரும்புகின்றது என்பது,

"பசலை உணீஇயர் வேண்டும்
திதலை அல்குல் என்மாமைக் கவினே" (27)

எனும் இப்பாடலடிகளின் பொருளாகும். மாமரத்தின் சிறப்பைக் கூறவும், மாந்தளிரின் அழகை விளக்கவும் இப்பாடல் அடிகள் ஆசிரியரால் கையாளப்பெற்றுள்ளது.

## நற்றிணையில் தாவரங்கள்

சொ.சிங்காரவேலனார் எழுதிய கட்டுரையில் **274, 363** ஆகிய குறுந்தொகைப் பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன. புறாவின் முதுகைப் போன்ற அடிப்பாகத்தையுடைய மெல்லிய உகாய் மரத்தின் கனிகள் பொன்னைப் போன்று காணப்படும் என்பது,

"புறவுப் புறத்தன்ன புன்கால் உகாஅத்து
இறவுச் சினையன்ன நளிகனி உதிர" **(274)**

எனும் இப்பாடல் அடிகளின் பொருளாகும்.

"புல்லரை உகாய் வரிநிழல் வதியும்" **(363)**

மென்மையான அடிப்பாகத்தையுடைய உகாய் மரத்தின் கோடுகள் பொருந்திய நிழல் என்பது இப்பாடலடியின் பொருளாகும். மேலே இடம்பெற்ற பாடலடிகள் உகாய் மரத்தின் அடிப்பாகத்தையும், கனிகளையும், மரத்தின் நிழலையும் எடுத்துக் கூற ஆசிரியரால் பயன்படுத்தப்பட்டுள்ளன.

## குறுந்தொகையில் பாலைபாடிய பெருங்கடுங்கோ

சாமி.செல்வவிநாயகம் அவர்களால் இக்கட்டுரை எழுதப்பெற்றுள்ளது **(1958-59**, ஐப்பசி-கார்த்திகை**)**. குறுந்தொகையில் பாலைபாடிய பெருங்கடுங்கோவைப் பற்றி இக்கட்டுரை விளக்குகின்றது. மேலும் இவர் குறுந்தொகையில் பத்துப் பாடல்களையும் நற்றிணையில் பத்துப் பாடல்களையும், அகத்திணையில் பதினொரு பாடல்களையும் புறத்திணையில் ஒரு பாடலையும் அருளியுள்ளார். மேலும் பாலைக்கலியை இப்புலவர் மிகப் போற்றத்தக்க முறையில் ஏற்றியுள்ளார். இவருடைய குறுந்தொகைப் பாடலின் திறனை விளக்குவது இக்கட்டுரையின் நோக்கமாகும். இக்கட்டுரையில் **16, 37, 124, 135, 237, 209, 262, 283, 398** ஆகிய குறுந்தொகைப் பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

தலைவனைப் பிரிந்த தலைவி, தலைவன் தான் சென்ற இடத்தில் தன்னை நினைப்பாரா? என வருந்துகின்றாள். இதை அறிந்த தோழி, தலைவன் செல்லும் பாலை நிலத்தில் கள்ளி மரங்கள் காணப்படும். அதில் வாழும் ஆண் பல்லி, பெண் பல்லியை அழைப்பதற்கு ஒலி உண்டாக்கும். இவ்வொலி, பாலை நிலத்தில் வாழும் வழிப்பறிக் கள்வர் தங்கள் அம்புகளைப் புரட்டுவதால் உண்டாகும் ஒலியை ஒத்திருக்கும். இவ்வொலியைக் கேட்ட தலைவன், தலைவியை நினைத்துக் கொண்டும் வினையை முடித்துக் கொண்டும் வேகமாக வரமுயல்வான் என்பது 16 ஆம் பாடலின் பொருளாகும். வற்றி வறண்ட பாலைவனமாயினும், அங்கே வற்றாத அன்பு உண்டு. மேலும் பாலை நிலத்தின் இயல்பு மிக அழகாகக் கூறப்பட்டுள்ளது. அஃறிணை உயிர்களின் அன்பைக் காட்டித் தலைவன், தலைவி மீது கொண்ட நினைப்பை அறிவுறுத்தும் நல்ல அறிவுத்திறம் படைத்த தோழியைக் காட்டுகின்றார் இப்பாடலின் புலவர், என இப்பாடலைப் பலவாறு திறனாய்வு செய்துள்ளார் இக்கட்டுரையாசிரியர்.

தலைவன் பிரிந்து செல்லும் பாலை வழியில் தண்ணீர் கிடைக்காது. அங்கு வாழும் ஆண்யானை தன் பெண்யானையின் தாகத்தைப் போக்க 'யாஅம்' எனும் மரத்தின் பட்டையை உரித்து அதில் உள்ள தண்ணீரை அருந்தச் செய்யும். இதைப்பார்த்த தலைவன் உன்னை நினைத்து உள்ளங்கனிந்து விரைவில் திரும்புவார் என்பது 37 ஆம் பாடலின் பொருளாகும். இப்பாடல் தலைவனின் அன்பு, பண்பு நலன்களை விளக்குகின்றது. மேலும் யானையின் அன்புவாழ்க்கையின் மூலமாகத் தலைவன் விரைவில் வினைமுற்றி மீள்வான் என்ற குறிப்பும் பெறப்படுகின்றது. இவ்வாறு திறனாய்வு செய்வதற்காக இப்பாடலை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

தலைவன் பொருளீட்டச் செல்லும் போது தலைவியையும் உடன்போக்கில் அழைத்துச் செல்ல வேண்டும் என விரும்புகின்றாள் தோழி. அதற்கு, உப்பு வணிகர்கள் பலர் கடந்து செல்லும் பாலையின் கொடுமையை விளக்குகின்றான் தலைவன். பாலையின் கொடுமையைவிட உன் பிரிவு தலைவிக்குக் கொடுமையானது எனத் தோழி கூறுவது 124 ஆம் பாடலின் பொருளாகும். கற்பென்னும் திண்மை உண்டாகப் பெற்ற

பெண்ணுலகத்தின் துடிப்பு மிக்க பாடல் இது என்றும் நாகரிக உணர்வுடன் சிறந்த தமிழ்ப் பண்பாட்டை உலகத்திற்கு எடுத்துக்காட்டும் ஒளிமிக்க பாடல் என்றும் இப்பாடலைத் திறனாய்வு செய்து விளக்குகின்றார் இக்கட்டுரையாசிரியர்.

'ஆடவர்க்கு உயிர் வினையாகும். அதேபோல இல்லத்தில் வாழுகின்ற ஒளிபொருந்திய மகளிருக்குக் கணவன்மார்களே உயிராவர் என்று சொல்கின்றவர் தலைவன். எனவே, தலைவி நீ அழாதே! தலைவர் பிரிந்து செல்வதை விட்டுவிடுவார்' என்று தலைவிக்குத் தோழி கூறுவது 135 ஆம் பாடலின் பொருளாகும்.

> " 'வினையே ஆடவர்க்கு உயிரே' என்பது வினையைத் தவிர வேறொன்றும் பெருஞ்சிறப்புடையன அல்ல என்பதனை உணர்த்துகின்றது. வினையே ஆடவர்க்கு உயிர் என்பதனால் தலைவன் செலவு இன்றி வாழ்வு அமையாமையை உணர்த்தினான். மனையுறை மகளிர் பிரிவால் வருந்துவர் என்பது அவனுக்குத் தெரியும். எனவே ஆடவர் மகளிருக்கு உயிர் என்று கூறியமையால் இது பெறப்பட்டது."

என விளக்க இப்பாடலை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

தலைவியின் நல்ல உள்ளம் வருந்தும்படி தலைவியை விட்டுப் பிரிந்து, நான் போனவிடத்திலே தங்கிவிடமாட்டேன். அப்படித் தங்கிவிடுவேனாயின் இரவலர்கள் என்னைத் துறப்பார்களாக! இரவலர்கள் என்னை அணுகாமையால் நான் செய்யவேண்டிய அறத்தைச் செய்யமுடியாமல் பழிக்கு ஆளாவேன். அப்பழி காரணமாக நான் மிகுந்த துன்பத்தை அடைவேனாக என்று தலைவியிடம் தலைவன் கூறினான். இப்படிச் சொல்லித் தலைவிக்குத் தன் சொல்லில் நம்பிக்கை பிறக்கும்படிச் செய்தான் தலைவன் என்பது 237 ஆம் பாடலின் பொருளாகும். இப்பாடல் தலைவனின் பண்புநலனையும், அன்புள்ளத்தையும், கடமையுணர்ந்த நிலையையும், தலைவனின் கொடைப் பண்பையும் எடுத்துரைத்துத் திறனாய்வு நோக்கோடு விளக்குவதற்காக இப்பாடலைக் கையாண்டுள்ளார் இக்கட்டுரையாசிரியர்.

தலைவியை விட்டு நான் பொருள் தேடச் சென்ற வழியானது, நெல்லி மரங்கள் நிறைந்தது. அந்நெல்லிமரம் புலிக்குட்டிகள் பொறுக்கிக் கொள்வதற்குரிய காய்களை உதிர்க்கும். இத்தகைய கொடிய மலைநெறியைக் கடந்து செல்லும்போதுகூட நான் தலைவியை மறக்கவில்லை என்று தலைவன் கூறுவது 209 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். ‘இப்பாடல் தலைவனின் அன்பு நெஞ்சத்தை விளக்குகின்றது. மேலும் பாலை நிலத்தில் வழிப் போக்கருக்காக நெல்லித் தருக்களை வைத்து வளர்க்கும் தமிழறம் எடுத்துரைக்கப்பெற்றுள்ளது. தலைவன், தலைவியின் அழகை உரைத்துவிட்டு அன்பை ‘நட்பு’ என்று குறித்தமை சிறப்பான ஒன்று. காதலையும் நட்பையும் ஒன்றாகக் கருதுதல் தமிழர்க்கே உரிய ஒரு தனிப் பண்பாடு இங்கு வெளிப்படுகின்றது’ எனப் பல கருத்துகளை விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

ஊரில் அலர் தோன்றியதால், தாய் தலைவியை இற்செறிக்கின்றாள். இதை அறிந்த தோழி, தலைவியைத் தலைவனுடன் உடன்போக்கில் செல்ல விடுத்தலே நலன் என எண்ணி, தலைவிக்குத் தோழி உடன்போக்கு உணர்த்துவது 262 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும்.

> “தலைவி, தன் தலைமகனுடன் செல்லுங்கால் நிகழப் போவதை முன்னரே எண்ணிப் பார்க்கின்றது தோழியின் அன்புள்ளம். கூரிய பற்களைக் கூறினமையால் தலைவியின் அழகு பெறப்பட்டது. ‘அறனில் அன்னை’ என்று குறித்தது நகைச்சுவை ததும்புவது. ‘ஆனாதலைக்கும் அறனில் அன்னை தானே இருக்க’ என்னும் போது பழிவாங்கத் துடிக்கும் உள்ளத்தின் சாயல் தெரிவது காண்க. பெருங்களிற்று அடிவழிக்கும் கரும்பு நடு பாத்தியை ஒப்பிட்டது மிக மிக அழகாக உள்ளது. பெருங்களிற்று அடிநிலையில் தேங்கிய நீராயினும் அது தலைவனுடன் உண்ணுங்கால் அமிழ்தம் போல்வது இது தலைவன், தலைவி இருவருக்குமிடையே நிலவும் அன்புரிமையைக் காட்டும் பாடல்”

இவ்வாறு பல வகையில் இப்பாடலைத் திறனாய்வு செய்துள்ளார் இக்கட்டுரையாசிரியர்.

தலைவன் பொருள் தேடச் சென்ற பாலை நிலமானது, வழிப்பறிக்கொள்ளை செய்யும் மறவர்கள் இருக்கும் மிகவும் நீண்ட, நீரில்லாத, வறண்டவழி எனத் தலைவன் சென்ற வழியைத் தலைவி எண்ணி வருந்துவது 283 ஆம் பாடலின் பொருளாகும். 'அவர் பிரிந்து போயின கானத்துத் தன்மை நினைத்து வேறுபட்டேன் என்று தலைவி சொல்லும் போது தலைவியின் தெளிந்த அன்புள்ளத்தைக் காண முடிகின்றது. 'உள்ளது சிதைப்போர் ஊரெனப் பாட அவர் இல்லோர் வாழ்க்கை இரவினும் இளிவு' என்று தலைவன் கூறுவதாகத் தலைவி கூறுகின்றாள். இப்பொழுது தலைவனின் குணநலம் நன்கு வெளிப்படுகின்றது' இவ்வாறு பல கருத்துகளைத் திறனாய்வு முறையில் பார்க்க, இப்பாடலை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

துளிர்ந்த மழைத்துளிகள் சிந்தும் துயரம் தரும் மழைக்காலத்தில், தலைவர் வந்துவிட்டார் என்று கூறி, என் கண்ணீரைத் துடைத்து மகிழ்ச்சி தருவோர் யாரும் இல்லையே எனத் தலைவி கூறுவது 398 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். 'இப்பாடல் மாலைக்காலத்தில் விளக்கேற்றும் மகளிரை மிக அழகாக வருணித்துள்ளது. மேலும் தலைவியின் பெண் நெஞ்சத்தை எப்படித்தான் இப்புலவன் உணர்ந்தானோ? என எண்ணவும் வைக்கிறது. பிரிவின்கண் கீழே விழும் துன்பக் கண்ணீரைத் துடைப்பதைவிடத் தலைவர் வந்தவுடன் துளிக்கும் இன்பக் கண்ணீரைத் துடைப்பது மேலாயது என்று தலைவி கருதுகின்றாள். இது தலைவியின் அன்பை எடுத்துக் கூறுகின்றது.' இவ்வாறு பல கோணங்களில் இப்பாடலை இக்கட்டுரையாசிரியர் திறனாய்வு செய்து விளக்குகின்றார்.

## சங்க இலக்கியங்களில் அறிவியல் கோட்பாடுகள்

சு.தமிழ்வேலு என்பவரால் எழுதப்பெற்ற இக்கட்டுரையில் குறுந்தொகை 224 ஆம் பாடலின்,

> "கவலை யாத்த அவல நீள்இடைச்
> சென்றோர் கொடுமை எற்றி துஞ்சா
> நோயினும் நோய் ஆகின்றே"

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன.

தலைவன் செல்லும் வழிகள் பல கிளை உடையது. அவ்வழியில் யாமரங்கள் வளர்ந்திருக்கும். அது நீண்டவழியுமாகும். தலைவனின் துன்பத்தை எண்ணித் தூங்காமல் துன்புறுகின்றாள் தலைவி. இத்துன்பத்தைக் காட்டிலும் தலைவியால் தோழிபடும் துன்பத்தை எண்ணித் தலைவி வருந்துகின்றாள் என்பது பாடலடிகளின் பொருளாகும். உறக்கமின்மை என்ற நோய் கவலை மிகுதியால் வருகின்றது என உளவியல் பகுப்பாய்வு மருத்துவர்கள் கண்டறிந்துள்ளனர். இந்நோயினை அவ்வல்லுநர்கள் எவ்வாறு கருதினரோ, அவ்வாறே உணர்ந்து இப்பாடலடிகள் எழுதப்பெற்றுள்ளது என ஆசிரியர் கூறுகின்றார். இக்காலத்தில் உளவியல் வல்லுநர்களால் கண்டுபிடிக்கப்பட்ட ஒரு செய்தி அக்காலத் தமிழ் புலவர்களால் பதிவுசெய்யப்பெற்றுள்ளது என்பதை விளக்க இப்பாடலை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியம் கூறும் அறம்

க.அமுதா என்பவரால் எழுதப்பெற்ற இக்கட்டுரையில் குறுந்தொகை 262 ஆம் பாடலின்,

"ஊஉர் அலர் எழ, சேரி கல்லென
ஆனாது அலைக்கும் அறன்இல் அன்னை"

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன.

ஊரிலே பழிச்சொற்கள் உண்டாகச் சேரியிலே 'கல்' என்று ஆரவாரம் உண்டாக, இடைவிடாமல் துன்புறுத்தும் அறநெறியை நினைக்காத அன்னை என்று தோழி கூறுவது இப்பாடல் அடிகளின் பொருளாகும். சங்க காலத்தில் தலைவன் தலைவி இருவரும் ஒன்றுபட்டு விட்டாலே, கற்பாகக் கருதப்படுவதோடு ஊழ்வினையால் சந்தித்தவர்கள் அவர்கள். நன்மைகருதி அவர்களைத் தாய் பிரித்தாலும் அச்செயல் அறமற்றதுதான் என்பதைப் புலவர் உலகம் ஏற்றதைத் தோழி கூற்று வாயிலாக வெளிப்படுத்தவும் தோழியின் "அறம்" பற்றி விளக்கவும் இப்பாடலடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்கத் தமிழரின் வாழ்வியல் கூறுகள்

*சு.கு.பன்னீர்செல்வம் என்பவரால் இக்கட்டுரை எழுதப்பெற்றுள்ளது. குறுந்தொகையின் 235 ஆம் பாடல் இடம்பெற்றுள்ளது.*

*ஆடவரும் தலைமயிரை வளர்த்து அதைச் சுருட்டிப் பின்புறம் அணிந்திருந்தனர் என்ற கருத்தை விளக்க இப்பாடல் எண்ணைக் கொடுத்து இக்கட்டுரையில் விளக்கப்பட்டுள்ளது. ஆனால் இதற்கான பாடலோ, பொருளோ நியூ செஞ்சுரி பதிப்பில் இடம்பெறவில்லை.*

## சங்க இலக்கியத்தில் 'பேச்சுநடை' அடிப்படைகள்

*சா.அங்கயற்கண்ணி என்பவரால் இக்கட்டுரை எழுதப்பெற்றுள்ளது. இக்கட்டுரையில் குறுந்தொகை 140, 28, 130, 22 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.*

*பாலை நிலத்தைக் கடந்து சென்றார் தலைவர். அதனால் எனது வலிமை குறைந்தது. தலைவனின் பிரிவுத் துயரைத் தாங்கிக் கொண்டு நான் இங்கே தனித்து இருக்கின்றேன். இரங்குதற்குரிய இவ்வூர் என் துன்பத்தை எவ்வாறு அறிந்து கொண்டது என்று தலைவி தோழியை நோக்கிக் கூறுவது,*

*"சுரனே சென்றனர், காதலர் ; உரன் அழிந்து,*

*ஈங்கு யான் அழுங்கிய எவ்வம்*

*யாங்கு அறிந்தன்று இவ்அழுங்கல் ஊரே" (140)*

*எனும் இப்பாடலடிகளின் பொருளாகும். இப்பாடலில் இடம்பெறும் ஊர் என்ற சொல் இலக்கிய நடை, இது பேச்சு நடையிலும் உண்டு. பேச்சு நடை போன்றதே இலக்கிய நடை என்பதை நிறுவுவதற்காக இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார். இங்கு 'ஊர்' என்ற சொல் ஊரில் உள்ளோரைக் குறிக்கின்றது.*

*'அசையும் தென்றற் காற்று என்னை வருத்துவதால் நான் தூங்காது நிற்கின்றேன். என்னைத் துன்புறுத்தும் காமநோயை அறியாமல் ஊரார் நன்றாக உறங்குகின்றனர். இவ்வூராரை முட்டித்தள்ளுவேனா, அல்லது தாக்குவேனா, அல்லது ஏதாவது ஒரு காரணத்தை முன்னிட்டுக் கொண்டு திடீரென்று கூவுவேனா என்னது செய்வதென்று அறியாமல் நான்*

திண்டாடுகின்றேன்' என்று தலைவி கூறுவது 28 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். இப்பாடலில் உள்ள 'ஊர்' என்ற சொல் ஊரைக் குறிக்காமல் தலைவியின் துயரை அறியாது உறங்கும் தோழி, தாயார் முதலியோரைக் குறிக்கின்றது என்பதை விளக்க இப்பாடலை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

"நாட்டின் நாட்டின் ஊரின் ஊரின்
குடிமுறை குடிமுறை தேரின்
கெடுநரும் உளரோ? நம்காதலோரே" (130)

இந்தத் தேசத்தில் உள்ள பல நாடுகளிலும் பல ஊர்களிலும், பல குடும்பங்களிலும் தேடினால் அவரைக் கண்டுபிடித்துவிடலாம் என்று தலைவனைப் பிரிந்து வருந்தும் தலைவிக்குத் தோழி கூறுவது இப்பாடலடிகளின் பொருளாகும்.

நீரொழுகும் கண்களையுடைய தலைவி இங்கே தனித்திருக்கும் போது, தலைவன் எவ்வாறு பிரிந்து போவான் எனத் தலைவிக்குத் தோழி கூறுவது,

"நீர்வார் கண்ணை நீஇவண் ஒழிய
யாரோ பிரிகிற் பவரே..." (22)

எனும் இப்பாடலடிகளின் பொருளாகும்.

பேச்சு நடையை ஒட்டிய இலக்கிய வழக்கினை உணர்ச்சி வெளிப்பாட்டு நடையின் மூலம் விளக்க இப்பாடல்களை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார். மேலே இடம்பெற்றுள்ள பாடல்கள் உணர்ச்சி வெளிப்பாட்டு நடையைச் சார்ந்ததாகும்.

பகுதி மூன்று

## 3.3 தொகுப்புரை

செந்தமிழ்ச்செல்வி இலக்கிய இதழில் குறுந்தொகைப்பாடல்கள் 39 கட்டுரைகளில் இடம்பெற்றுள்ளன. இக்கட்டுரைகளில் இடம்பெற்றுள்ள குறுந்தொகைப்பாடல்களின் எண்ணிக்கை 102 ஆகும். இவை குறிஞ்சிக்குரியவை - 27, முல்லைக்குரியவை - 11, மருதத்திற்குரியவை- 12, நெய்தலுக்குரியவை - 26, பாலைக்குரியவை - 26 என அமைந்துள்ளன.

இப்பாடல்கள் பி.எல்.சாமி எழுதிய 34 கட்டுரைகளிலும் இரா.இராசகோபாலன், வாணிஅறிவாளன், ச.கணபதி, லூர்துசாமி, சிவமங்கையர்க்கரசி ஆகியோர் எழுதிய ஒவ்வொரு கட்டுரையிலும் காணப்படுகின்றன.

தமிழ்ப்பொழில் இலக்கிய இதழில் குறுந்தொகைப்பாடல்கள் 20 கட்டுரைகளில் இடம்பெற்றுள்ளன. இக்கட்டுரையில் இடம்பெற்றுள்ள குறுந்தொகைப்பாடல்களின் எண்ணிக்கை - 73 ஆகும். இவை குறிஞ்சிக்குரியவை - 24, முல்லைக்குரியவை - 07, மருதத்திற்குரியவை - 15, நெய்தலுக்குரியவை - 08, பாலைக்குரியவை - 19 என அமைந்துள்ளன. இப்பாடல்கள் க.அன்பழகன் எழுதிய இரண்டு கட்டுரைகளிலும் கு.சீனிவாசன், துரை.பிச்சை, சாலினி இளந்திரையன், வி.சா.பாலசுப்பிரமணியன், பெ.மாதையன், வ.கிருஷ்ணன், சு.கு.பன்னீர்ச்செல்வம், சோ.முத்தமிழ்ச்செல்வன், அ.ஜெயக்குமார், சா.அங்கயற்கண்ணி, சு.தமிழ்வேலு, சாமிசிதம்பரனார், நா.ஆறுமுகம், க.த.திருநாவுக்கரசு, பழ.முத்தப்பன், சொ.சிங்காரவேலனார், சாமி.செல்வவிநாயகன், க.அமுதா ஆகியோர் எழுதிய 18 கட்டுரைகளிலும் காணப்படுகின்றன. ஆக, இவ்விரு இலக்கிய இதழ்களிலும் இடம்பெற்றுள்ள குறுந்தொகைப் பாடல்களைக் கட்டுரையாசிரியர்கள் எடுத்தாண்டதற்கான காரணங்களாகக் கீழ்வருவனவற்றைக் குறிக்கலாம்.

1. ஊர்வன, நடப்பன, பறப்பன, நீந்துவன, தாவுவன என்று அமையும் உயிரினங்களின் உருவஅமைப்பு, செயல்பாடு, வாழும் இடம், சிறப்புத் தன்மை, வேட்டைமுறை ஆகியவற்றை விளக்கும் நோக்கோடு சில பாடல்கள் எடுத்தாளப்பெற்றுள்ளன. அவ்வாறு எடுத்தாளப்பெற்ற பாடல்களும், உயிரினங்கள் தொடர்பான விபரங்களும் வருமாறு:
    - பாம்பு - 185, 119, 268, 35, 43, 235, ஓந்தி - 140, ஆமை - 152, பல்லி -16
    - புலி - 321, 257, நீர்நாய் - 364, யானை - 394, 225, 298, 292
    - மயில் - 249, 138, 264, 38, 183, 110, 194, 391, 347, காக்கை - 210, குருகு-228, 260, கொக்கு - 117, 122, நாரை - 349, 114, 128, 166, 236, வெண்குருகு, கருங்கால்வெண்குருகு - 303, 325, அன்னப்பறவை - 304, 205.

- ஆரல்மீன் - *25*, கெண்டை - *178, 91, 127*, வாளை - *8, 164, 364*, சுறா - *304, 230, 269, 318, 304*, முதலை - *324*, அயிரை - *128, 166*, ஆரல் - *144*, கயல்மீன் - *250*.
- தவளை - *48, 93*.

2. பண்டைத்தமிழகத்தில் காணப்பெற்ற செடி, கொடி, பயிர், மரம் எனும் தாவரங்களின் வடிவம், பயன்பாடு, வாழும் தன்மை, இலை, காய், வேர், பூ அமைப்புமுறை, வளரிடம் ஆகியவற்றை விளக்கும் நோக்கில் சில பாடல்கள் எடுத்தாளப்பெற்றுள்ளன. விபரம் வருமாறு:

- நாணல் - *170*, குளவி - *100*, குறிஞ்சி - *03*, முந்தூழ் - *239*, பாசலம் - *156*, பித்திகம் - *156*, உழுந்து - *68*, கூதளம் - *60, 100, 282, 56, 59*, பயறு-*10, 338*, அடப்பம் - *243*, முண்டகம் முள்ளி - *49, 51*, குல்லை- *11*, ஆம்பல் - *293, 325, 300, 370, 122*, நெய்தல் - *09*.
- பிரப்பங்கொடி - *91*
- வரகு - *220, 282*
- இற்றி - *106*, செயலை - *233*, ஞாழல் - *12*, எழில்மரம் - *138*, உகாய்- *274, 369*, உழிஞ்சி - *39*, வாகை - *7, 34, 369*, வழை - *260*, ஓமை - *79, 124, 207, 396, 260*, ஆலமரம் - *15*, தாழை - *228*, கண்டல் - *117, 340*, மயிலை - *138*, வேங்கை - *47, 26, 208, 370*, கொன்றை - *148, 66*, உகாய் - *247, 363*, மாமரம் - *306, 331, 27*, ஞாழல் - *81, 310, 313, 328, 397*.

3. குறுந்தொகைப்பாடல்கள் சிலவற்றிற்குப் புலவர் பெயர் கிடைக்கப்பெறவில்லை. அப்பாக்களுக்குப் புலவர்பெயர்களை வருவித்துச்சொல்லும் நோக்கில் சிலபாடல்கள் எடுத்து விளக்கப்பட்டுள்ளன. விபரம் வருமாறு:

- வள்உகிர்ப்பறவையார் - *201*, வினைநலத்தார் - *256*, செங்கண் இரும்புலியார் - *321*, சிறுபறையார் - *375*, பொம்மல் ஓதியார் - *379*, சிறுவெண்காக்கையார் - *313*, சிறுமனைப்புணர்ந்தார் - *326*, நக்கதனார் - *381*.

4. பண்டைத்தமிழகத்தில் வழக்கில் இருந்த நாணயங்களையும், மக்கள் புழக்கத்தில் இருந்த மணிகளையும் விளக்கச் சிலபாடல்கள் எடுத்தாளப் பெற்றுள்ளன. விபரம் வருமாறு:

- ♦ *காசு - 67, 247, 67*
- ♦ *மாணிக்கம் - 379, உரைக்கல் - 192, பணிலச்சங்கு - 15.*

5. அறிவியலோடு தமிழை இணைத்துக்காட்டவும் உளவியல் சார்ந்த கருத்தாக்கங்களை அக்கால மக்கள் வாழ்வில் பிணைத்துக்காட்டவும் சில பாடல்கள் கையாளப்பெற்றுள்ளன. விபரம் வருமாறு:

- ♦ *அறிவியல் தமிழ் - 69, 41, 46, 178*
- ♦ *உளவியல் - 224*

6. தலைவன் தலைவியரின் குணநலன்களை விளக்கச் சில பாடல்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. விபரம் வருமாறு:

- ♦ *தலைவன் - பரத்தை ஒழுக்கம் - 70, 91, 89, 73, அன்பு - 300, 37, 398, சிறப்புத்தன்மை - 139.*
- ♦ *தலைவி, பண்புநலன்கள் - 209, 93, 283, 262, 135, துன்பம் - 160.*

7. சங்க இலக்கியத்தில் காணப்படும் சொற்களின் சிறப்பியல்புகளையும் சங்ககாலப் பேச்சுவழக்கு குறித்த கருத்தாக்கங்களையும் விளக்கச் சில பாடல்கள் எடுத்துக்காட்டப்பெற்றுள்ள விபரம் வருமாறு.

- ♦ *'உயர்நிலை உலகம்' என்ற சொல்லின் சிறப்பு - 83, 101, 99*
- ♦ *ஒருபொருள் குறித்த பல சொல் - 161, 355*
- ♦ *பொதுச்சொல்லோடு சிறப்புச் சொல் சேர்ந்துவரல் - 13*
- ♦ *ஒருபொருள், பலசொற்கள் இரண்டு அடுத்தடுத்துவரல் - 284, 200*
- ♦ *சங்ககாலப் பேச்சுநடை - 112, 249, 375, 160, 110, 89, 300, 3, 397, 140, 28, 130, 22.*
- ♦ *சங்ககாலப் பேச்சுநடையை ஒட்டிய இலக்கிய நடை - 141, 191.*

8. அக்கால மக்களின் பண்பாடு, பழக்கவழக்கம், நம்பிக்கை ஆகியன பற்றிய பல கருத்தாக்கங்களை விளக்குவதற்காகச் சில பாடல்கள் எடுத்தாளப்பெற்றுள்ளன. விபரம் வருமாறு:

♦ உடை - 223, 214, பேய் - 87, துணங்கை - 81, தழையணி - 295, தழையுடை - 294, பாலைநிலச்சிறப்பு - 124, தமிழ்ப்பெண்களின் பண்பாடு - 167, 227, 70, 205, 135, தோழியின் அறச்செயல் - 262 தமிழரின் பண்பாட்டு நாகரிகம் - 124.

9. பிற்கால இலக்கியக் கருத்துகளைச் சங்க இலக்கியப் பாடல்களுடன் ஒப்பிட்டுப் பார்க்கும் நிலையில் சில பாடல்கள் எடுத்தாளப்பெற்றுள்ளன. விபரம் வருமாறு:

♦ திருநீலகண்ட நாயனாரும் சங்கத்தலைவியும் - 191.

10. சங்கப்பாடல்களின் காலவரையறையை விளக்கச் சில பாடல்கள் எடுத்தாளப்பெற்றுள்ளன. விபரம் வருமாறு:

♦ சங்கப்பாடல்களின் காலவரையறை - 294.

11. கூற்றுமுறையை விளக்கும் நிலையில் சில பாடல்கள் எடுத்தாளப் பெற்றுள்ளன. விபரம் வருமாறு:

♦ கூற்று முறை - 8, 45.

## 3.4.முடிவுரை

மேலே தொகுப்புரையில் குறிப்பிடப்பட்டுள்ள 11 கருத்துகளின் வழி, செந்தமிழ்ச்செல்வி, தமிழ்ப்பொழில் ஆகிய இதழ்களில் இடம்பெற்றுள்ள கட்டுரைகளில் குறுந்தொகைப்பாடல்கள் எடுத்தாளப் பெற்றுள்ள நோக்கத்தினைக் கீழ்வருமாறு வரையறுக்கலாம்.

1. மக்களின் சமூகவாழ்வியலை விளக்கும் நோக்கில் வாசிக்கப்பெற்றுள்ளன.
2. தாவரங்கள், உயிரினங்கள் தொடர்பான இயற்கைநிலையை விளக்கும் நோக்கில் வாசிக்கப்பெற்றுள்ளன.
3. பாடல்களில் இடம்பெற்றுள்ள மொழிப்பயன்பாட்டுநிலையை விளக்கும் நிலையில் வாசிக்கப்பெற்றுள்ளன.
4. பெயர் இல்லாக் குறுந்தொகைப்பாடலுக்குப் பெயர் சூட்டும் நோக்கோடு வாசிக்கப்பெற்றுள்ளன.
5. அறிவியல் முறையை இலக்கியத்தில் பொருத்திக்காட்டும் எண்ணத்தோடு வாசிக்கப்பெற்றுள்ளன.
6. பாடல்களின் கவிதைநயத்தை விளக்கும் தன்மையில் வாசிக்கப்பெற்றுள்ளன.

7. பிற்கால இலக்கியக் கருத்துகளுடன் சங்கப்பாடல் கருத்துகளை ஒப்பிட்டு நோக்கும் நிலையில் சிலபாடல்கள் வாசிக்கப்பெற்றுள்ளன.
8. சங்கப்பாடல்களின் காலவரையறையை விளக்கும் எண்ணப்போக்கில் வாசிக்கப்பெற்றுள்ளன.
9. கூற்றுத்திறனை விளக்கும் சிந்தனைப் போக்கோடு சில பாடல்கள் வாசிக்கப்பெற்றுள்ளன.

இந்த ஒன்பது வகைப்பட்ட நோக்கங்களில் முதல் இரண்டு வகைக்குரிய நோக்கங்களே, குறுந்தொகை வாசிப்புநிலையில் மிகுந்து வெளிப்பட்டுள்ளன. அடுத்து அமையும் ஏழு வகை வாசிப்புமுறைகள் மிக அரிய நிலைக்குரியனவாக உள்ளன.

# அகநானூற்று ஆய்வுகள்

## 4.0 முன்னுரை

எட்டுத்தொகை நூல்களில் ஒன்று அகநானூறு. இது பதின்மூன்றடிச் சிற்றெல்லையும் முப்பத்தோரடிப் பேரெல்லையும் உடையது. அகநானூறு மூன்று பிரிவுகளைக் கொண்டது. ஒன்று முதல் நூற்றிருபது வரையிலான பாடல்கள் 'களிற்றியானைநிரை' எனவும் நூற்று இருபத்து ஒன்று முதல் முன்னூறு வரையிலான பாடல்கள் 'மணிமிடைபவளம்' எனவும் முன்னூற்று ஒன்று முதல் நானூறு வரையிலான பாடல்கள் 'நித்திலக்கோவை' எனவும் பெயரிடப்பட்டுள்ளன. இந்நூல் 145 புலவர்களால் பாடப்பெற்றதாகும். அகநானூற்றைத் தொகுத்தவர் உப்பூரிகுடிக்கிழார் மகனார் உருத்திரசன்மர். தொகுப்பித்தவன் பாண்டியன் உக்கிரப் பெருவழுதி ஆவான். இவ்வாறு பல சிறப்புகளை உடைய அகநானூற்றுப் பாடல்கள் 'செந்தமிழ்ச்செல்வி,' 'தமிழ்ப்பொழில்' இதழ்களில் காணப்படும் சங்க இலக்கியம் தொடர்பான பல ஆய்வுப்போக்குகளில் இடம்பெற்றுள்ளன. இப்பாடல்களைக் கட்டுரைகளின் ஒவ்வொரு இடத்திலும் தன் கருத்திற்கு இணங்க எவ்வாறு கட்டுரை ஆசிரியர்கள் பயன்படுத்தியுள்ளார்கள் என்பதனை விளக்குவது இவ்வியலின் நோக்கம்.

### பகுதி ஒன்று

## 4.1 செந்தமிழ்ச் செல்வி

'செந்தமிழ்ச்செல்வி' இதழில் இடம்பெற்றுள்ள சங்க இலக்கியம் தொடர்பான கட்டுரைகளில் பயன்படுத்தப்பட்டுள்ள அகநானூற்றுப் பாடல்களின் எண்ணிக்கை 227 ஆகும். இவை குறிஞ்சிக்குரியவை - 48, முல்லைக்குரியவை - 21, மருதத்திற்குரியவை - 20, நெய்தலுக்குரியவை - 28, பாலைக்குரியவை - 110 என அமைந்துள்ளன (விரிவு- பின்னிணைப்பு-7). இப்பாடல்களில் சில ஒருமுறையும் சில ஒன்றுக்கு மேற்பட்ட முறையும் கட்டுரையாளர்களால் எடுத்தாளப் பெற்றுள்ளன. அவை தொடர்பான விபரம் வருமாறு :

| வ. எண் | திணை | ஒருமுறை | இருமுறை | மும்முறை | நான்கு முறை | ஐந்து முறை | ஆறு முறை |
|---|---|---|---|---|---|---|---|
| 1. | குறிஞ்சி | 88, 158, 392, 62, 348, 92, 192, 308, 142, 42, 262, 68, 182, 372, 98, 318, 232, 22, 118, 398, 362, 252, 12, 218, 238, 168, 332, 242 | 82, 378, 152, 248, 18, 78, 268, 52, 282, 48, 112, 8, 212, 322, 122 | 108, 272, 72 | --- | 178, 202 | --- |
| 2. | முல்லை | 194, 264, 244, 234, 144, 174, 314, 274, 74, 304, 384, 364, 114 | 334, 344, 94, 154, 284, 374 | 14 | 394 | --- | --- |
| 3. | மருதம் | 246, 176, 46, 156, 296, 256, 216, 306, 386, 26 | 126, 346, 6, 276, 86, 356, 136 | 236, 226, 336 | --- | --- | --- |
| 4. | நெய்தல் | 60, 110, 300, 10, 170, 280, 320, 180, 370, 360, 210, 260, 160 | 220, 100, 290, 120, 20, 240, 40, 350, 270, 150, 130, 190 | 340 | 80 | --- | 70 |
| 5. | பாலை | 9, 141, 176, 50, 105, 88, 257, 349, 187, 157, 261, 393, 237, 23, 34, 344, 219, 295, 37, 339, 345, 397, 7, 47, 255, 73, 127, 1, 399, 315, 25, 27, 279, 115, 357, 249, 107, 155, 29, 99, 381, 347, 169, 221, 307, 81, 167, 377, 241, 243, 375, 193, 337, 139, 394, 165, 111, 387, 361, 45, 53, 151, 385, 327, 89, 303, 191, 297, 177, 91, 363, 67, 291, 135, 171, 335, 181, 61, 321, 199 | 351, 313, 13, 125, 273, 229, 133, 137, 201, 331, 97, 205, 287, 391 | 277, 223, 3, 5, 225, 147, 149, 117, 293, 269, 267, 301, 319 | 21, 251, 145 | --- | --- |

### 4.1.1 குறிஞ்சி

செந்தமிழ்ச்செல்வி இதழில் 21 ஆய்வுக்கட்டுரைகளில் இடம்பெற்றுள்ள அகநானூற்றுக் குறிஞ்சித்திணைப் பாடல்களின் எண்ணிக்கை 48 ஆகும்.

### சங்க இலக்கியத்தில் பல்லி

இக்கட்டுரையில் அகநானூற்று 88 ஆம் பாடலின்,

"முதைச்சுவற் கலித்த மூரிச் செந்தினை
ஓங்கு வணர்ப்பெருங் குரல் உணீஇயபாங்கர்ப்
பகுவாயப் பல்லிப் பாடு ஓர்த்து குறுகும்
புருவைப் பன்றி வரு திறம் நோக்கி"

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன. 'பழங்கொல்லையில் வளர்ந்த தினைப்பயிரைத் தின்னவரும் காட்டுப்பன்றி பல்லி ஒலிக்கும் ஓசையினைக் கேட்டு, கொல்லையினை நெருங்கும்' என்பது இப்பாடல் அடிகளின் பொருளாகும். இப்பாடலின் அடிகளை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம் நற்றிணை - பாலைத்திணைப் பகுதியில் இடம்பெற்றுள்ளது (2.1.5).

### சங்க இலக்கியத்தில் கருங்கால்வெண்குருகும், வெள்ளாங்குருகும், சிறுவெள்ளாங்குருகும்

இக்கட்டுரையில் அகநானூறு 178 ஆம் பாடலின்,

"பைம்புதல் நளிசினைக் குருகிருந்தன்ன
வண்பிணி யவிழ்ந்த வெண்கூ தாளத்து"

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன. 'புதரின் கிளைமீது வெண்ணிற நாரைகள் இருந்தாற்போன்று தோன்றுகின்ற வெண்மையான கூதளஞ்செடி' என்பது பாடலடிகளின் பொருளாகும். வெண்குருகை கூதளஞ்செடிக்கு ஒப்பிட்டுக்காட்டுவதற்காக இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

### சங்க இலக்கியத்தில் மயில்

இக்கட்டுரையில் அகநானூற்றின் 82, 158, 378, 152, 108, 392 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன. 'மூங்கில் வளர்ந்து காணப்படும், பக்கமலையில் மயில்கள் உலாவி ஆடும் என்பது 82 ஆம் பாடலடியின்

பொருளாகும். மலையினின்று இறங்கிவரும் மயிலைப் போன்று, தளர்நடை நடந்துவரும் தலைவி என்பது 158 ஆம் பாடலடியின் பொருளாகும். 'பீலி பொருந்திய தோகைமயில், மலைவாழ் வருடைகளின் இளைய கடாக்களின் ஒலியைக்கேட்டு அஞ்சி, ஆடுகளத்து ஒலிக்கும் கொம்பின் ஒலிபோல் ஒலித்து காற்றெனப் பறந்து, அசைந்தாடும் மூங்கிலின்கண் அமரும்' என்பது 378 ஆம் பாடலடிகளின் பொருளாகும். 'நன்னனின் எழில் என்னும் நெடியமலையைச் சார்ந்த பாழி என்னும் பக்கமலையிடத்துள்ள மகிழ்ந்தாடும் மயிலின் தோகையைப் போன்ற கூந்தலை உடைய தலைவி' என்பது 152 ஆம் பாடலடிகளின் பொருளாகும். காட்டுமயில் காடுகளிலும் கானாற்றின் கரைகளிலும் அருவி விழும்மலைச்சாரலிலும் காணப்படும் எனக் காட்டுமயில்கள் வாழும் இடத்தை எடுத்துக்காட்ட மேலே இடம்பெற்றுள்ள பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார். 'மயிலைக் கண்டு அஞ்சிப் பாம்பின் தலைகள் படத்தை விரிப்பதுபோல, காயாவின் மென்சினை தோய்வதால் காந்தளின் மடல் விரிந்து மலரும்' என்பது 108 ஆம் பாடலடிகளின் பொருளாகும். மயிலின் கழுத்து காயாமரத்தின் பூங்கொம்புபோல இருக்கும் என்ற மயிலின் கழுத்து பற்றிய உவமையை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார். 'தினை மேய்ந்த யானையை, குறவன் கவண்கல்கொண்டு வீசினான். அக்கவண்கல்லின் ஓசையைக்கேட்ட மறப்புலி முழங்கியது. யானை கதறியது. அதனை இடியோசை எனக் கருதி மயில் ஆடியது' என்பது 392 ஆம் பாடலடிகளின் பொருளாகும். மயில் கார்காலத்தில் ஆடும், இரவில் மரக்கிளையின் உச்சியில் தூங்கும். இரவில் இடிவிழுந்தாலும் யாதாவதொரு பெரிய ஓசை கேட்டாலும் ஆண்மயில்கள் சேர்ந்து கூவும் என மயிலின் செயல்பாடுகளை எடுத்துக்காட்ட மேலே இடம்பெற்றுள்ள பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க நூல்களில் பைஞ்சாய்

இக்கட்டுரையில் அகநானூற்றின் 62 ஆம் பாடலின்,

"அயத்து வளர் பைஞ்சாய் முருந்தி அன்ன
நகைப் பொலிந் திலங்கு மெயிறுகெழு துவர்வா
யாகத் தரும்பிய முலையள் பணைத்தோள்"

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன. 'நீரில் வளரும் பைஞ்சாய்க் கோரையின் தண்டினைப்போன்று ஒளிபெற்றுத் திகழ்கின்ற, பற்கள் பொருந்திய சிவந்தவாயையும் மூங்கில் போன்ற தோளையும் உடையவள் தலைவி' என்பது பாடலடியின் பொருளாகும். பைஞ்சாய்க்கோரை கடற்கரையோர நிலத்திலும் கழனியிலும் காணப்படும். இக்கோரைக்கு பெரியகிழங்குபோன்ற வேர்உண்டு எனப் பைஞ்சாய் பற்றிய கருத்துகளை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க நூல்களில் எருவையும் நாணலும்

இக்கட்டுரையில் அகநானூற்றின் 212 ஆம் பாடலின்,

"கிளையரில் நாணல் கிழங்கு மணற்கீன்ற
முளையோ ரன்ன முள்ளெயிற்றுத் துவர்வாய்"

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன. தலைவி, நாணற்கிழங்கு மணலிடத்து ஈன்ற முளையை ஒத்த முள்போன்ற கூர்மையான பற்களையும் சிவந்த வாயினையும் உடையவள் என்பது பாடலடிகளின் பொருளாகும். 'சங்கநூலில் இப்பாடலில் மட்டும் தான் நாணலைப் பற்றிய செய்தி உள்ளது என விளக்கவும் நாணலை அறிவியலில் "Saccarum officinarum" என்றும், ஆங்கிலத்தில் "wild sugar cane" என்றும் அழைப்பர்' என எடுத்துக் கூறவும் மேலே இடம்பெற்றுள்ள பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் கேழல்

இக்கட்டுரையில் அகநானூற்றின் 178, 248, 322, 178, 248, 18 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன. மூங்கில் வேரைப் போன்ற பருத்த மயிரையுடைய பன்றி என்பது 178 ஆம் பாடலடியின் பொருளாகும். 'காட்டுப்பன்றிக்கு முதுகிலும் கழுத்திலும் கதிர்போன்ற மயிர்க்கற்றை காணப்படும். இதைப் 'பிணற்சுவல்,' 'பிணர்எருத்து,' 'பரூஉமயிர் எருத்து' என அழைப்பர்' எனக் காட்டுப்பன்றியின் கழுத்தில் காணப்படும் தடித்தமயிர் அமைப்பை எடுத்துக்காட்ட மேலே இடம்பெற்றுள்ள பாடலடியை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

ஆண்பன்றி, வேட்டைநாயிடம் இருந்தும் வேடரிடம் இருந்தும் பெண் பன்றியையும், தன் குட்டியையும் தப்பிப் பிழைத்துப் போகும்படிச்

செய்யும் என்பது 248 ஆம் பாடலடியின் பொருளாகும். பெண்பன்றிக்கு, நான்குகாம்புகள் உள்ளமடி இருக்கும் எனப் பன்றியின் மடி அமைப்பை எடுத்துக்காட்ட இப்பாடல் அடியை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

பிறைமதியினைப் போன்ற கொம்பினையும் அஞ்சாத தன்மையையும் உடைய பன்றி என்பது 322 ஆம் பாடலடியின் பொருள். பன்றியின் வளைந்த கொம்பினைப் போன்ற தூய்மை உடைய பருத்த காயினையும் முதிர்ந்த அரும்புகளையும் கொண்ட முருக்கமரம் என்பது 223 ஆம் பாடலடிகளின் பொருளாகும்.

சங்க இலக்கியத்தில் காட்டுப் பன்றியின் கடைவாய்ப்பற்களைக் 'கோடு' என்றும் மருப்பு என்றும் அழைப்பர் என விளக்கவும் 223 ஆம் அகப்பாடலில் சில உரையாசிரியர்கள் 'உளைநெடும்பெருங்காய்' என்ற சொல்லுக்கு, முருக்கமரத்தின் காயைக் காட்டுப் பன்றியின் கொம்பிற்கு உவமைப் படுத்தியுள்ளனர். இது தவறான பாடமாகும். ஏனெனில் இவ்உவமை பொருத்தமற்றது. எனவே, 'உளைநெடும்பொங்கர்' எனப் பாடங்கொள்ள வேண்டும் எனத் தெளிவுபடுத்தவும் இப்பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

'வயிரம் போன்ற கொம்பையும் மூங்கிலின் வேர் போன்ற மயிரையும் உடைய பன்றி, சுனையில் நீர்குடித்து, சேம்புச்செடியின் கிழங்கைத் தின்று கூதளஞ்செடியின் மீது மோதுவதால், கூதளப்பூ பன்றியின் மீது உதிரும். அப்பொழுது பன்றி அழகுறக் காட்சியளிக்கும். பின்னர் அப்பன்றி முற்றிய தினைக்கதிரைத் தின்று இனிது உறங்கும்' என்பது 178 ஆம் பாடலடிகளின் பொருளாகும். காட்டுப் பன்றியானது கருமை நிறம் உடையதாகவும் சாம்பல்நிறம் கலந்தும் காணப்படும் எனப் பன்றியின் நிறம் பற்றிய கருத்துகளை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

'ஆண் பன்றியானது தன் பெண்பன்றியையும் குட்டிகளையும் வேட்டையாளரிடம் இருந்து தப்பிக்கச் செய்துவிட்டு, வேட்டையாளரை எதிர்த்து நிற்கும். இத்தகைய வீரம் மிக்க ஆண் பன்றியைப் பார்த்த

வேட்டையாளன். அதன் வீரத்தின் சிறப்பை எண்ணிக் கொல்லாமல் செல்வான். இச்சிறப்புமிக்க மலைக்குத் தலைவன், தலைவியைப் பார்க்க இரவில் வரும்போது, செடிகளின் தூறுகளால் அவன் அணிந்த மாலை சிதையும். இச்சிதைந்த மாலையோடு தலைவியின் வீட்டுவேலியோரமாகத் தலைவன் வருவான். இதைப்பார்த்த அன்னை சிரிப்பாள். இந்நிகழ்வைக் கண்ட தோழி, தலைவியின் களவு வாழ்க்கையை அன்னை அறிந்துவிட்டாள் எனத் தலைவிக்குக் கூறுவதுபோல சிறைப்புறமாக நிற்கும் தலைவனுக்குக் கூறுவது' 248 ஆம் பாடலின் பொருளாகும். 'காட்டாற்றின் வெள்ளத்தினைத் தறுகண்மையையுடைய பன்றியைப்போல அஞ்சாது கடந்து, நீர்த்துறையினைத் தாண்டி நள்ளிரவில் இத்தகைய இடர்மிகு இடத்துக்கு வருவாரும் உளரோ? எனத் தலைவனை நோக்கி தோழி கூறுவது' 18 ஆம் பாடலடிகளின் பொருளாகும்.

காட்டுப் பன்றி மிகவும் அறிவுக்கூர்மையும் மன தைரியமும் வீரமும் நிறைந்த விலங்கு. இப்பன்றியை வேட்டையாடுவது மிகவும் கடினம் எனக் காட்டுப்பன்றியின் செயல்பாடுகளையும் குணத்தன்மையையும் எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் பாம்பு

இக்கட்டுரையில் 202, 348, 372, 72, 92, 192, 108, 202 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன. 'தலைவன் வரும் இடமானது, புள்ளிகளைக் கொண்ட படத்தினை உடைய பாம்பினது தலை துண்டாகுமாறு, வலிய இடியானது முழங்கும் அச்சம் தரக்கூடியதாக இருக்கும்' என்பது 202 ஆம் பாடலடியின் பொருளாகும். இப்பாடலை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம் நற்றிணை - குறிஞ்சித்திணைப் பகுதியில் விளக்கப்பட்டுள்ளது (2.1.1).

'நாட்பட்டு முதிர்ந்தமையால் கடிய வேகங்கொண்ட பாம்பினது சீற்றத்தை ஒத்த வெறியையுடைய கள்' என்பது 348 ஆம் பாடலடிகளின் பொருளாகும். இப்பாடலை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம், நற்றிணை - குறிஞ்சித்திணைப் பகுதியில் குறிப்பிடப்பெற்றுள்ளது (2.1.1).

மேய்வதற்காக உமிழ்ந்துவைத்த மணியை இழந்த நல்ல பாம்பைப் போல, தலைவியைக் காணாது தலைவன் வருந்துவான் என்பது 372 ஆம் பாடலடிகளின் பொருளாகும். நல்லபாம்பு மேய்வதற்குச் செல்ல ஒளிவேண்டி உமிழ்ந்துவைத்த மணியாகிய விளக்கொளியில் புலால் நாறும் படியாக ஆண்புலி, ஆண்பன்றியைக் கொன்று இழுத்துச் செல்லும் என்பது 72 ஆம் பாடலடிகளின் பொருளாகும். இடியால் துன்புறும் பாம்பு தான் இரைதேடக் கக்கிவைத்த மாணிக்க மணியின் வெளிச்சத்தில், தலைவியின் கூந்தலில் இன்பம் காணும் உறக்கம் பெறுவாய் எனத் தோழி தலைவனுக்குக் கூறுவது 92 ஆம் பாடலடிகளின் பொருளாகும். மலை உச்சியில் இருந்து கொட்டும் அருவி, குகையில் எல்லாம் பரவி, அங்கு பாம்பு உமிழ்ந்து வைத்த அழகிய மணியைக் கீழ் உள்ள சிறுகுடிகளுக்குக் கொண்டுசெல்லும் என்பது 192 ஆம் பாடலடிகளின் பொருளாகும். பாம்புகள் இரவில் இரைதேடும்போது, வெளிச்சம் உண்டாவதற்காகத் தன் வாயில் இருந்து ஒருவகையான மணியை உமிழ்ந்து வைக்கும் என்ற கருத்தை எடுத்துக்காட்ட இப்பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

வருத்தம் தரும் பாம்பினது நஞ்சினை உடைய தலைகள், மயிலினைக்கண்டு அஞ்சி படத்தை விரிக்கும் என்பது 108 ஆம் பாடலடியின் பொருளாகும். பாம்புகள் மயிலுக்கு அஞ்சும் என்ற கருத்தை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

'தலைவன் வரும் இடமானது, புள்ளிகளைக்கொண்ட படத்தினை உடைய பாம்பினது தலை துண்டாகுமாறு, வலிய இடியானது முழங்கும் அச்சம் தரக்கூடியதாக இருக்கும்' என்பது 202 ஆம் பாடலடிகளின் பொருளாகும். இப்பாடலை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம் நற்றிணை - குறிஞ்சித்திணை ஆய்வுப் பகுதியில் விளக்கப்பெற்றுள்ளது (2.1.1).

## சங்க இலக்கியத்தில் மீன்கள்

இக்கட்டுரையில் 122, 152 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

பாய்ந்து ஓடும் குதிரைகளையுடைய தித்தனின் மதில் சூழ்ந்த உறையூரைச் சுற்றியுள்ள காவல்காடு, பகைவர் தாண்டி வரமுடியாத பல தடைகளை உடையது என்பது 122 ஆம் பாடலடிகளின் பொருளாகும். 'அகநானூற்றில் காணப்படும் முட்டு (தடை) என்ற சொல்வழக்கு மலையாள மீனவர்களிடையே வழங்கப்படுகின்றது (மலையாளத்தில் கடல்நீர்ப்பரப்பில் இருக்கும் பாறை போன்ற தடைகளை முட்டு என அழைப்பர்)' என விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

'தித்தன் வெளியன் என்பான் சினமிக்க படையையும், கானலம் பெருந்துறை என்னும் பட்டினத்தையும் உடையவன். அப்பட்டினத்திற்குச் செல்வம் கொண்டுவரும் மரக்கலம் உடையுமாறு திரண்டு வந்து தாக்கும் இறால்மீன்போல, திரண்ட படையுடன் வந்து தாக்கும் மிக்கபடை கொண்ட பிண்டன் என்பானை, நன்னன் என்பான் வென்று வாகை சூடுவான்' என்பது 152 ஆம் பாடலடிகளின் பொருளாகும். சுறா, கோட்டு போன்ற மீன்கள் இறாலைத்தின்று வாழும், இறால்மீன்கள் கடலில் கூட்டமாகச் செல்லும் தன்மையுடையது என இறால்மீனின் செயல்பாடுகளை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் முதலையும் இடங்கரும் கராமும்

இக்கட்டுரையில் அகநானூற்றின் 18 ஆம் பாடலின்,

"நீர்நிறங் கரப்ப வூழுறு புதிர்ந்து
பூமலர் கஞலிய கடு வரற் கான் யாற்று
கராஅம் துஞ்சும் கல்உயர் மறிசுழி
மராஅ யானை மதம்தப ஒற்றி
உராஅ ஈர்க்கும் உட்குவரு நீத்தம்"

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன.

பெரிய முதலைகளும், கற்பாறைகளும், நீர்ச்சுழிகளும் உடைய தண்ணீரே தெரியாதவாறு மலர்களால் மூடப்பட்டு ஓடும் காட்டாற்று

வெள்ளம் ஆண்யானைகளை அழச்செய்யும். இத்தகைய கொடிய வழியில் தலைவன், தலைவியைக் காணவருவான் என்பது பாடலடிகளின் பொருளாகும்.

'முதலையினத்தில் 'கராம்' என்ற ஒரு முதலை உண்டு. இது வடநாட்டில் கங்கை ஆற்றில் காணப்படும். 'கரியால்' என இம்முதலை வடமொழியில் அழைக்கப்படுகின்றது. இதன் ஆணிற்கு நீண்ட கூர்ந்த வாயின்மேல் பூண்போன்ற பாகம் உண்டு. எனவே இதைக் 'கரா' என அழைப்பர். இம்முதலை மீன்களை மட்டும் தின்னும் விலங்குகளையோ, மனிதர்களையோ தின்னாது' எனக் கராம் என்ற முதலையின் உடல் அமைப்பு, அது காணப்படும் இடம், அதன் உணவுமுறை, அம்முதலையின் பெயர்க்காரணம் போன்ற பல செய்திகளை எடுத்துக்காட்ட இப்பாடல்அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## குறிஞ்சிப்பாட்டில் வரும் செடி, கொடி,மரப் பெயர்கள்

இக்கட்டுரையில் அகநானூற்றின் 82, 272, 308, 78, 142, 42 ஆகிய பாடல்கள் இடம்பெற்றுள்ளன.

'சங்க நூல்களில் 'குளவி' என்ற செடி காணப்படுகின்றது. நச்சினார்க்கினியர் இதைக் 'காட்டுமல்லிகை' என்றும், பிற உரை ஆசிரியர்கள் 'மலைப்பச்சை' என்றும் கூறுவர்.' ஆனால் மலைப்பச்சை என்பதே சரி என எடுத்துக்காட்டுவதற்காக 82, 272 ஆகிய பாடல்களை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

குறிஞ்சிச் செடி 12 ஆண்டுகளுக்கு ஒருமுறை பூக்கும். இதன் பூவையும் தேனையும் சங்கப்பாடல்கள் பல எடுத்துக் கூறியுள்ளன. அவற்றில் ஒன்று 308 ஆம் பாடல் என எடுத்துக்காட்ட இப்பாடலை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார். சங்க நூல்களில் 'முந்தூழ்' என்ற ஒரு செடி காணப்படுகின்றது என விளக்க 78 ஆம் பாடலை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

இலவமரம் (முள்ளிலவு) சிவந்த பூவிதழ்களைக் கொண்டது. இது மனிதனின் நாவினைப்போல இருக்கும் என இலவம் பற்றிய செய்திகளை விளக்க 142 ஆம் பாடலை ஆசிரியர் கையாண்டுள்ளார். 'முருக்கு' என்ற

பூவின் அழகு பற்றிய செய்திகளை எடுத்துக்காட்ட 42 ஆம் பாடல் எண்ணை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க நூல்களில் பயறும் உழுந்தும்

இக்கட்டுரையில் அகநானூற்றின் 262 ஆம் பாடலின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

"முதைபடு பசுங்காட்டு அரில்பவர் மயக்கி
பகடுபல பூண்ட உழவுறு செஞ்செய்
இடுமுறை நிரம்பி ஆகுவினைக் கலித்து
பாசிலை அமன்ற பயறுஆ புக்கென"

பழமை வாய்ந்த ஊரில் உள்ள கோசர்களுக்குச் சொந்தமாகப் புன்செய் நிலங்கள் இருந்தன. அந்நிலத்தில் உள்ள கொடிகளை உழவுசெய்து நீக்கி, உரம் இட்டு, நீர்பாய்ச்சி, பயறு விளைவித்தனர் என்பது இப்பாடல் அடிகளின் பொருளாகும். இப்பாடலை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம் குறுந்தொகை - பாலைத்திணை ஆய்வுப் பகுதியில் குறிப்பிடப் பெற்றுள்ளது (3.1.5).

## தமிழிலக்கியங்களில் தாவர நூலின் நுட்பங்கள்

இக்கட்டுரையில் அகநானூற்றின் 202, 268 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன. 'வேங்கை மரத்தினது நறுமணப் பூக்கள் சிதறிவிழுவது கொல்லன் துருத்தியை மிதித்து ஊதும் உலைக்களத்தினின்று தெறித்து எழும் தீப்பொறி போல இருக்கும்' என்பது 202 ஆம் பாடலடிகளின் பொருளாகும். வேங்கைப்பூவின் உருவ அமைப்பை எடுத்துக்காட்ட இப்பாடலை ஆசிரியர் கையாண்டுள்ளார். குறிஞ்சிச்செடியில் காணப்படும் தேனின் அமைப்பு முறையினை எடுத்துக்காட்ட 268 ஆம் பாடலின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க நூல்களில் வள்ளியும் கவலையும்

இக்கட்டுரையில் அகநானூற்றின் 52 ஆம் பாடலின்,

'வலந்த வள்ளி மரனோங்கு சாரல்'

எனும் அடி இடம்பெற்றுள்ளது. மரங்கள் ஓங்கி உயர்ந்துள்ள மலைச் சாரலிலே சுற்றிப் படர்ந்த வள்ளிக்கொடி என்பது பாடலடியின்

பொருளாகும். இப்பாடல் அடியை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம் நற்றிணை - பாலைத்திணை ஆய்வுப் பகுதியில் இடம்பெற்றுள்ளது (2.1.5).

## சங்க நூல்களில் மின்மினி

இக்கட்டுரையில் 72, 202 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

‘மழைத்துளி பெய்யும் நள்ளிரவில் மின்மினிகள் மொய்த்த கரையான் புற்றை, புற்றாம் சோற்றைத் தின்னும் கரடி தோண்டும். அப்பொழுது மின்மினிப் பூச்சிகள் சிதறிப் பறக்கும். இது கொல்லன் பட்டறையில் இரும்பை அடிக்கும்போது தீப்பொறி சிதறுவது போல’ இருக்கும் என்பது 72 ஆம் பாடலடிகளின் பொருளாகும். ‘வேங்கை மரத்தின் பூக்கள் கொல்லன் துருத்தியை மிதித்து ஊதும் உலையில் பிதிர்ந்து எழும் தீப்பொறி போலப் பொங்கி எழுந்து, மின்மினிப் பூச்சிகளைப்போலத் தோன்றும்’ என்பது 202 ஆம் பாடலடிகளின் பொருளாகும். மின்மினிப் பூச்சியின் சிறப்பை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க நூல்களில் கூதளமும் குளவியும் குல்லையும்

இக்கட்டுரையில் 68, 178, 272, 182, 268 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன. தோட்டத்தில் உள்ள குளிர்ந்த நீர்நிலையில் நெருங்கி வளர்ந்த கூதளஞ் செடியின் தழைகள் குலையுமாறு அருவி வீழும் என்பது 68 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். ‘ஆற்றினை அடுத்த நீர் ஊறும் இடத்தில், புதரின் கிளைமீது வெண்ணிற நாரைகள் இருப்பதுபோன்று, கூதளஞ்செடியின் வெண்மையான பூங்கொத்து காணப்படும். இப்பூங்கொத்தில் உள்ள பூந்தாதுகள் பன்றியின் மேல் உதிர்வதால், பன்றி பொன் உரைத்து மாற்று அறியும் கட்டளைக் கல்லைப் போன்று அழகுறக் காணப்படும்’ என்பது 178 ஆம் பாடலடிகளின் பொருளாகும். அருவிநீர் ஒழுகும் இடத்தில் மலரும் காட்டுமல்லிகையையும் கூதளமலரையும் சேர்த்துத் தொடுத்த கண்ணியில் உள்ள நீங்காத மணத்தைக் காற்றானது சுமந்துவரும் என்பது 272 ஆம் பாடலடிகளின் பொருளாகும்.

மேலே இடம்பெற்றுள்ள பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம் நற்றிணை - குறிஞ்சித்திணை ஆய்வுப் பகுதியில் இடம்பெற்றுள்ளது (2.1.1).

"வேட்டம் போகிய குறவன்காட்ட
குளவித் தண்புதல் குருதியொடு துயல்வர" (182)

'வேட்டைக்குச் சென்ற குறவன், காட்டுமல்லிகையின் குளிர்ந்த புதரானது குருதிக்கரையுடன் அசையும்படி, அதனுள் பதுங்கியிருந்த முள்ளம்பன்றியைக் கொன்றான்' என்பது பாடலடிகளின் பொருளாகும். காட்டுமல்லிகையின் மணம் வீசக்கூடிய பெரிய மலைநாட்டையுடையவன் தலைவன் என்பது 268 ஆம் பாடலடிகளின் பொருளாகும். மேலே இடம்பெற்றுள்ள பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம் நற்றிணை-குறிஞ்சித்திணை ஆய்வுப்பகுதியில் குறிப்பிடப்பெற்றுள்ளது (2.1.1).

## சங்க இலக்கியத்தில் மணிகள்

இக்கட்டுரையில் 282, 372, 178, 282, 108 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

'வேட்டுவன் தான்வேட்டையாடிய யானையின் வெண்மையான கூரிய தந்தத்தால் பொற்படிவங்களைக் கிளரும்போது, ஒளிபடைத்த மணிகள்பல பொன்னுடன் வெளிப்பட்டுத் தோன்றின. அந்நிலையில் யானையின் தந்தம் ஒடிய அதிலிருந்து ஆலங்கட்டியை ஒத்த பெரிய முத்துகள் உதிர்ந்தன' என்பது 282 ஆம் பாடலடிகளின் பொருளாகும். பண்டைத் தமிழர்கள் பொன், மணி, முத்து போன்ற பொருள்களை விலைமதிப்பிற்குரியவையாகக் கருதினர். இவற்றை மூவேறுதரங்கள் என்று அழைத்தனர் என விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

மேய்வதற்காகப் பாம்பு மணியை உமிழ்ந்து வைக்கும். தான் உமிழ்ந்த மணி காணாமல் போனபோது அது மிகவும் வருந்தும் என்பது 372 ஆம் பாடலடியின் பொருளாகும். நல்ல பாம்பின் தலையில் மணி இருப்பதாகச் சங்க இலக்கியங்கள் கூறுகின்றன என விளக்கவும் இம்மணியை மாணிக்கம் என அழைத்தனர் என எடுத்துக்காட்டவும் இம்மணியை நாகரத்தினம்,

நாகமணி, நாகமாணிக்கம் என இக்கால மக்கள் அழைக்கின்றனர் எனத் தெளிவுபடுத்தவும் இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

வயிரம் போன்ற கூர்மையான மேல்நோக்கிய கொம்பையுடைய பன்றி என்பது 178 ஆம் பாடலடியின் பொருளாகும். வேட்டுவன், யானையின் கூரிய கொம்பைக்கொண்டு, கிளறி நீர்வளம் மிக்க நெடுவரையில் பொன்னை அகழ்ந்தெடுத்தான். அவ்வாறு அகழ்ந்தெடுக்கும்போது, அப்பொன்னுடன் கண்ணை மழுங்கச்செய்யும் மணிகளும் வெளிப்பட்டன என்பது 282 ஆம் பாடலடிகளின் பொருளாகும். சங்க நூல்களில் வைரத்தைத் 'திண்மணி' என்று அழைப்பர் என விளக்கவும் அதன் திண்மையையும், வலிமையையும் எடுத்துக்காட்டவும் வைரம் பாறைகளிலும், மணற்பாங்கான பகுதிகளிலும் காணப்படும் எனக் கூறவும் இப்பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

"புகர் முகம் பொருத புதுநீர் ஆலி
பளிங்கு சொரிவது போல் பாறை வரிப்ப" (108)

யானையின் முகத்துவிழும் ஆலங்கட்டிகள் பாறையில் சொரியும் பளிங்குபோல் தோற்றம் தரும் என்பது இப்பாடலடிகளின் பொருளாகும். பளிங்குக்கல் விலைகுறைந்த மணிகளில் ஒன்று. இது காவிரி பாயும் பள்ளத்தாக்கில் கிடைக்கும். இது வெண்மையாகவும் கண்ணாடிபோலவும் இருக்கும் என விளக்க இப்பாடலடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க நூல்களில் கடம்பு

இக்கட்டுரையில் 98 ஆம் அகநானூற்றுப் பாடலின்,

"வெண் போழ் கடம்பொடு சூடிஇன்சீர்"

எனும் அடி இடம்பெற்றுள்ளது. 'வெறியாட்டின்போது வெண்மையான பனந்தோட்டினைக் கடம்ப மலரோடு முருகனுக்குச் சூடுவர்' என்பது பாடலடியின் பொருளாகும். கடம்பமரத்தின் பூவினை எடுத்துக்காட்டுவதற்காக இப்பாடலடியை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியம் காட்டும் யாழ்

இக்கட்டுரையில் 212 ஆம் அகநானூற்றுப் பாடலின்,

"...................... செவ்வழி நல்யாழ்

இசைஓர்த் தன்ன இன்தீம் கிளவி"

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன. யாழின் செவ்வழிப்பண் போன்ற இனிமையான சொற்களை உடையவள் தலைவி என்பது பாடலடிகளின் பொருளாகும். யாழ் இசைக்கும் செவ்வழிப் பண்ணை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் புலி

இக்கட்டுரையில் இடம்பெற்றுள்ள அகநானூற்றுக்குரிய குறிஞ்சித்திணைப் பாடல்கள் 21 ஆகும். இப்பாடல்களைக் கீழ்வருமாறு அட்டவணைப் படுத்தலாம்.

| ஒருமுறை இடம் பெற்ற பாடல்கள் | இருமுறை இடம் பெற்ற பாடல்கள் | மும்முறை இடம் பெற்ற பாடல்கள் | நான்குமுறை இடம் பெற்ற பாடல்கள் |
|---|---|---|---|
| 72, 318, 78, 232,, 22, 118, 272, 398, 48, 322 | 352, 362, 12 218, 52, 238, 112, 202, 332 | 168 | 08 |

புலி தனது உணவாக மான்களையும் பன்றிகளையும் கொன்று உண்ணும். புலி விலங்குகளைக் கொன்ற இடத்தில் உண்ணாது. இழுத்துச்சென்று பதுக்கி உண்ணும் தன்மையுடையது. இவ்வாறு பதுக்கிவைத்த உணவு புழுத்துப்போய் நாற்றம் அடித்தாலும் அதை உண்ணும் என, புலிவேட்டையாடும் தன்மையையும் வேட்டையாடிய உணவைப் பாதுகாத்து உண்ணும் சிறப்பையும் எடுத்துக்காட்ட 72 ஆம் பாடலை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

தலைவன், தலைவியைக் காணவரும் காடு சிறுவழிகளை உடையது. அதில் யானைகள் திரியும்; அச்சம் தரும் பாம்பும் புலியும் அதிகமாகக் காணப்படும் என்பது 318 ஆம் பாடலடிகளின் பொருளாகும். காடுகளில் மான்கள் முதலிய விலங்குகள் அன்றாடம் நீர்நிலையை நோக்கிச் செல்லும்

தடங்களைச் சங்கப் புலவர்கள் நன்கு அறிந்திருந்தனர். அவற்றை ‘மானதர்’ என்று அழைத்தனர் என விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

தலைவியும் தோழியும் மலைச்சாரலில் பூத்துக் குலுங்கிய வேங்கைப் பூவைப் புலிபுலி என ஆரவாரமிட்டுப் பறிப்பர் என்பது 48 ஆம் பாடலடிகளின் பொருளாகும். வேங்கையின் சிறப்பை எடுத்துரைப்பதற்காக இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

பிறைச்சந்திரன் போன்ற கொம்பையும் அஞ்சாமையினையும் உடைய பன்றியின் இறைச்சியைத் தின்ற புலிகள் கூடி, முழங்கும் என்பது 322 ஆம் பாடலடிகளின் பொருளாகும். புலி காட்டுப் பன்றியை வேட்டையாடி உண்ணும் செய்தியை எடுத்து விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

களிறு, அகலிய இடத்தையுடைய கானகத்து ஆளியை நினைத்து அஞ்சும் யானைக்கூட்டத்தின் தலைவனாகிய இக்களிறு தன் இனத்தைத் தன்னிடத்தே அழைத்துச் சூழ்ந்துகொள்ளுமாறு செய்யும் இயல்பினை உடையது என்பது 78 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். ‘ஆளி’ என்ற ஒரு விலங்கு சங்க இலக்கியத்தில் கூறப்பட்டுள்ளது. இது, யானையின் தந்தத்தைப் பிய்த்து உண்ணும் தன்மையுடையது. இந்த ‘ஆளி’க்குப் புலியும் அஞ்சும் என ‘ஆளி’ பற்றிய செய்திகளை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

யானை, இடியொலியைப் புலியின் முழங்கொலி என எண்ணி மலைக்குகையெல்லாம் எதிரொலிக்குமாறு பேரொலி எழுப்பி ஓடும் என்பது 232 ஆம் பாடலடிகளின் பொருளாகும். புலி விடரகத்தில் வாழும் என்ற கருத்தை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

களிறாகிய இரையைத் தேடும் பார்வையோடு பதுங்கிப் பாயவல்ல ஆண்புலி என்பது 22 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். புலி வேட்டையாடும் போது பதுங்கி இருந்து பாய்ந்து தாக்கும். இதற்கு இரவில்

காணும் சக்தியுள்ள கண்கள் உண்டு. புலியின் முன்கால்கள் மிக வலிமையுடையதாக இருக்கும் எனப் புலியின் வேட்டைத்தன்மை பற்றி எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

பிடியோடும், கன்றோடும் கூடிய ஆண் யானையை இரையாகக் கொள்ளுதலினின்று தப்பவிடுத்து, அவற்றைப் பகை உணர்வுடன் ஓரிடத்தே கூட்டமாக மறைந்திருக்கும்படி செய்த புலி உலவித் திரியும் நள்ளிரவு என்பது 118 ஆம் பாடலடிகளின் பொருளாகும்.

'பெரிய புலியினைக் கொன்ற யானை, புலால் நாறும் தன் புள்ளிகள் கொண்ட நெற்றியைக் கழுவுதற்கு தெய்வம் வாழும் நெடிய உச்சியினையுடைய மலையானது அருவிநீரைத் தந்து உதவும்' என்பது 272 ஆம் பாடலடிகளின் பொருளாகும்.

பெரிய ஆண்புலியால் தாக்கப்பெற்றுப் புண்மிகுந்து வருந்தும் பெண் யானையால் தழுவப்படும் வலிமை குன்றிய ஆண் யானை என்பது 398 ஆம் பாடலடிகளின் பொருளாகும். மேலே இடம்பெற்றுள்ள பாடல்களின் அடிகள் அனைத்தும் யானைக்கும் புலிக்கும் நடந்த போர்முறையை எடுத்துக்காட்ட ஆசிரியரால் பயன்படுத்தப்பட்டுள்ளது.

"வெண்கோட்டு யானை பொருத புண்கூர்ந்து
பையங்கண் வல்லியம் கல்லளைச் செறிய" (362)

வெண்மையான கொம்புகளையுடைய களிறானது பாய்ந்து குத்தியமையால் புண் மிகப்பெற்ற ஆண்புலி கற்குகையிலே ஒடுங்கிக் கிடக்கும் என்பது இப் பாடல் அடிகளின் பொருளாகும். புலியை, யானை வேட்டையாடும் தன்மையை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஓரிடத்திலும் புலியின் வாழிடமான கற்குகையை தெளிவுபடுத்த இப்பாடல் அடிகளை மற்றொரு இடத்திலும் ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

வேட்டையாடும் பொழுது இடப்பக்கம் வீழும் விலங்குகளை உண்ணாத வலிமையுடைய புலியானது நடுங்கும் வண்ணம் ஆளியானது யானையைத் தாக்கி அதன் வெண்மையான தந்தத்தைப் பிரித்தெடுக்கும் என்பது 352 ஆம் பாடலடிகளின் பொருளாகும். புலியானது

வேட்டையாடும்பொழுது இடப்பக்கமாக விழும் உயிர்களை உண்ணாது என்ற செய்தியை எடுத்தக்காட்ட இப்பாடல் அடிகளை ஓரிடத்திலும் புலி ஆளிக்கு அஞ்சும் எனக் கூற இப்பாடல் அடிகளை மற்றொரு இடத்திலும் ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார். பலாப்பழத்தைக் கொள்ள வேண்டி, குறவர்கள் போட்டுவைத்த குடிசையில் வேங்கைப்பூ உதிர்வதால், குடிசை வேங்கைபோல் தோன்றும். இதைக் கண்ட யானை வேங்கை என நினைத்து அஞ்சி மலைப்பக்கத்தில் ஓடும் என்பது 12 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். புலி பற்றிய உவமையை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஓரிடத்திலும் புலிவாழும் இடமான மலைச்சாரல் பகுதியை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை மற்றொரு இடத்திலும் ஆசிரியர் கையாண்டுள்ளார்.

இருள் செறிந்த நடுயாமத்தில் வரிகளுடன் விளங்கும் வலிமை மிக்க புலியானது வழிவருவாரை எதிர்ப்பார்த்து இருத்தற்கு இடனான பிளவுகள் கொண்ட பெருமலை என்பது 218 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். புலி மனிதர்களை வேட்டையாடும் தன்மையுடையது என விளக்க இப்பாடல் அடிகளை ஓரிடத்திலும் கல்முகை, கல்லளை, கன்முழை என அழைக்கப்படும் கற்பாறைகளில் இயற்கையாகவே காணும் மறைவான பிளவுகளில் புலிவாழும் என எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை மற்றொரு இடத்திலும் ஆசிரியர் கையாண்டுள்ளார்.

'வேங்கை மரத்தின் பூவைப் பறிக்க வந்த குறமகள் புலிபுலி என ஒலி எழுப்ப, அதைக்கேட்ட வேடன், பெருத்த பாறை அடுக்குகள் கொண்ட இருண்ட குகையினையுடைய பக்க மலையில் பசுவினைக் கவர்ந்து செல்லும் வலிமை பொருந்திய புலி வந்ததால் எழுந்த ஒலியோ என எண்ணி வில்லோடு அவ்விடம் சென்றான்' என்பது 52 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். வேங்கைமரத்தின் உதிர்ந்த தோற்றம் புலி போலக் காணப்படும். வேங்கையின் பூவை, 'புலிபுலி' எனக் கூறிக் குறமகள் பறிப்பர் என்ற செய்தியை எடுத்துக்காட்ட இப்பாடலடிகளை ஓரிடத்திலும் பசுவைப் புலி கொன்று உண்டது என்ற செய்தியை எடுத்துக்காட்ட மற்றொரு இடத்திலும் இப்பாடலடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

மலையின் சாரலில் மரங்கள் அடர்ந்த இடத்தில் பெண்புலி குட்டிகளை ஈன்றது. அதன் பசியைப் போக்க எண்ணிய ஆண்புலி இளைய மானை வேட்டையாடிவரச் செல்லும்போது எதிர்ப்பட்ட காட்டு எருமையை வலப்புறமாகத் தாக்கி கொன்று, பாறைகள் குருதியால் சிவக்கும்படி இழுத்துச்செல்லும் என்பது 238 ஆம் பாடலடிகளின் பொருளாகும். மான்களைப் புலி விரும்பி உண்ணும் என்ற கருத்தை விளக்க, காட்டு எருமையைப் புலி வேட்டையாடிய செயலை எடுத்துக்காட்ட, புலி எவ்வளவு பெரிய விலங்கைக் கொண்றாலும் இழுத்துச்செல்லும் என்ற அதன் திறனை எடுத்தியம்ப, இப்பாடலை ஓரிடத்திலும், புலி இருள்சூழ்ந்த குகைகளை உடைய பக்கமலையில் வாழும் என்ற கருத்தை எடுத்துரைக்க இப்பாடலை மற்றொரு இடத்திலும் ஆசிரியர் கையாண்டுள்ளார்.

குட்டியை ஈன்ற பெண்புலியின் பசியைப் போக்க ஆண்புலியானது ஆண் யானையைக் கொன்று முழக்கமிடும் குளிர்ச்சி பொருந்திய இருள்செறிந்த சோலை என்பது 112 ஆம் பாடலடிகளின் பொருளாகும். புலி யானையை வேட்டையாடும் என்ற கருத்தை விளக்க ஓரிடத்திலும் புலிவாழும் சோலையை எடுத்துக்காட்ட மற்றொரு இடத்திலும் இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

'வெண்ணிற அருவிகளைக் கொண்ட மலைப்பக்கத்தில், பெண் யானை தன் இனத்துடன் இன்புறுமாறு, களிறானது புலியைப் போரிட்டு வெல்லும். புலியுடன் ஏற்பட்ட போரில் உண்டான புண் யானைக்குத் துன்பம் தருவதால், யானை கற்களைத் தன் கையகத்தே கொண்ட பக்கமலையில் தன் கையை உயர்த்திப் பெருமூச்சுவிடும்' என்பது 202 ஆம் பாடலடிகளின் பொருளாகும். புலியுடன் போரிட்டுப் புண்ணுற்ற யானை வருந்தும் செயலை எடுத்துக்காட்ட ஓரிடத்திலும் புலிவாழும் மலைச்சாரலை எடுத்துக்காட்ட மற்றொரு இடத்திலும் இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

'மூங்கிலைத் தன் இனத்துடன் தின்ற களிறானது, நீர்வேட்கை காரணமாகச் சென்ற போது, அங்குத் தாக்குவதற்குப் பதுங்கியிருந்த புலியைத் தன் கொம்பால் குத்திக்கொன்று, குருதிபடிந்த தன் கொம்பை

மழைநீரால் கழுவி, கல்முனைகளையுடைய மலைப்பக்கம் மெல்ல நடந்து செல்லும்' என்பது 332 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். புலியைக் கொன்ற யானை பற்றி எடுத்துக்கூற ஓரிடத்திலும் புலிவாழும் கன்முகை (கற்குகை)யைப் பற்றி எடுத்துக்காட்ட மற்றொரு இடத்திலும் இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

'பிளந்த வாயினையுடைய புலி, பெரிய ஆண்பன்றியினைக் கொன்று வீழ்த்தி, மூங்கில்கள் ஒலிசெய்யும், மலையிடத்துப் பலாமரங்கள் நெருங்கிய பக்கமலைகளில் புலால் நாறும்படியாக இழுத்துச் செல்லும்' என்பது 8 ஆம் பாடலடிகளின் பொருளாகும். புலி, விலங்குகளைக் கொன்ற இடத்தில் உண்ணாது இழுத்துச்சென்று பதுக்கி உண்ணும் குணமுடையது என விளக்க ஓரிடத்திலும் புலி மூங்கில் காடுகளில் வாழும் எனக் கூற மற்றொரு இடத்திலும் புலி பலாமரங்கள் நிறைந்த மலைச்சாரலிலும், மழைமிகுந்து பெய்யும் மலைக்காடுகளிலும் வாழும் என உரைக்க வேறொரு இடத்திலும் இது வழைமரமும், வாழைமரமும் அடர்ந்த காட்டில் வாழும் என்று விளக்க பிரிதொரு இடத்திலும் இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

'அஞ்சாமையுடைய வாள்போன்ற கோடுகளைக் கொண்ட வலிமைமிக்க புலியானது, தான் உறங்கிய குகையை விட்டு வெளியே முழங்கும், வழிப்பறி செய்யும் வேட்டுவர் உறங்கும் கொடுமையான வழி' என்பது 168 ஆம் பாடலடிகளின் பொருளாகும். புலிகள் காட்டு விலங்குகளை வேட்டையாட, விலங்குகள் செல்லும் தடங்களில் பதுங்கிப் பார்க்கும். இத்தடங்களைச் சங்கப்புலவர்கள் 'மானதர்' என அழைப்பர் என விளக்க இப்பாடலை ஓரிடத்திலும் புலிகள் குகைகளில் வாழும் என்ற கருத்தை விளக்க மற்றொரு இடத்திலும் புலி யானையின் குட்டிகளைப் பெரும்பாலும் கவரும், ஆனால் நிரையுடன் கூடி இருக்கும்போது, யானையின் கன்றைப் புலி கவரமுடியாது என்ற கருத்தை எடுத்துக்கூற பிரிதொரு இடத்திலும் இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க நூல்களில் சிதலையும் ஈயலும்

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1987 நவம்பர்). சங்க நூல்களில் கரையான்பூச்சி ஈயல் என்றும் சிதலை என்றும்

அழைக்கப்படுகின்றது. ஈயலும் சிதலையும் ஒரே இனமாயினும் சிறிது வேற்றுமையுடையது. இவற்றின் வாழிடம் செயல்பாடுகள் ஆகியவற்றை விளக்குவது இக்கட்டுரையின் நோக்கமாகும். இதில் 112, 08 ஆகிய அகநானூற்றுப் பாடலின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

'கூனல் முதுகினையும் குறுகக்குறுக அடியிட்டு நடந்து செல்லும் நடையினையும் உடைய கரடிக்கூட்டம், கரையானின் நீண்ட உச்சியைக் கொண்ட புற்றைப்பெயர்த்து, புற்றாஞ்சோறாகிய இரையினைத் தின்னும்' என்பது 112 ஆம் பாடலடிகளின் பொருளாகும்.

"ஈயற் புற்றத்து ஈரம் புறத்து இறுத்த
குரும்பி வல்சிப் பெருங் கை ஏற்றை" (8)

'ஈசல் புற்றுக்களின் குளிர்ந்த மேற்புறத்தே தங்கியிருக்கின்ற புற்றாஞ்சோறாகிய இரையைப் பெரிய கையை உடைய ஆண்கரடி அகழ்ந்தெடுக்கும்' என்பது இப்பாடலடிகளின் பொருளாகும். ஈயலும் சிதலையும் அதன் புற்றில் சேர்த்து வைக்கும் ஒருவகையான தாவரப்பொருள்களை எடுத்துக்காட்டவும் ஈயல், சிதலையின் உணவு சேமிக்கும் முறையை விளக்கவும் இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க காலச் செய்யுள் நடை

ச.கணபதி என்பவரால் எழுதப்பெற்ற இக்கட்டுரையில்,

"அன்னாய் வாழிவண்டு அன்னை நின் மகள்" (48)

எனும் பாடல் அடி இடம்பெற்றுள்ளது. தலைவியின் உடல்வேறுபாட்டை அறிந்த செவிலித்தாய், அவ்வுடல் வேறுபாட்டிற்கான காரணத்தைத் தோழியிடம் கேட்கத் தோழி, தலைவி கற்புக்கடம்பூண்ட செய்தியைச் செவிலியிடம் குறிப்பாக அறிவுறுத்துவது பாடலடியின் பொருளாகும். தலைவன், தலைவியின் முதல் சந்திப்பை விளக்கவும் சங்ககாலச் செய்யுள் நடையின் அழகினை எடுத்துக்காட்டவும் இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

### குறிஞ்சிப்பாட்டின் சிறப்பியல்புகள்

இக்கட்டுரை சரளா இராசகோபாலன் என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1985 ஆகஸ்ட்). குறிஞ்சிப்பாட்டில் காணப்படும் கற்பின் கோட்பாடு, தமிழர் திருமணமுறை, விருந்தோம்பல் பண்பு, களவின் முட்டுப்பாடு போன்ற பல கருத்துகளை எடுத்துக் கூறுவது இக்கட்டுரையின் நோக்கமாகும். இதில் 242, 122 ஆகிய அகநானூற்றுப் பாடல்கள் இடம்பெற்றுள்ளன. இவை களவின் முட்டுப்பாட்டை எடுத்துக்காட்டுவதற்காக ஆசிரியரால் பயன்படுத்தப்பட்டுள்ளது.

## 4.1.2 முல்லை

செந்தமிழ்ச்செல்வி இதழில் 17 ஆய்வுக்கட்டுரைகளில் இடம்பெற்றுள்ள அகநானூற்றுக்குரிய முல்லைத்திணைப் பாடல்களின் எண்ணிக்கை 21 ஆகும்.

### சங்க இலக்கியத்தில் அன்னம்

இக்கட்டுரையில் அகநானூற்றின் 234, 334 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன. தலைவனின் தேர், குளிர்ந்த நீர்நிலையின் பக்கத்தில் வரிசையாகப் பறக்கும் அன்னப்பறவை போன்று விரைந்தோடும் தன்மை உடையது என்பது 234 ஆம் பாடலடிகளின் பொருளாகும்.

ஆகாயத்தில் பறக்கும் அன்னப்பறவைகளின் கூட்டம்போல, விரைந்து ஓடும் குதிரைகள் நான்கினை ஒருசேரப் பூட்டி, வேகம் குன்றாது செலுத்துவாயாக என வினைமுற்றிய தலைவன் தேர்ப்பாகனுக்குக் கூறுவது 334 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும்.

அன்னப்பறவை கூட்டமாக மிகுந்த விரைவுடன் பறக்கும் தன்மையுடையது. இது வானில் பறக்கும்போது ‘V’ என்ற வரிசையில் காணப்படும் என விளக்க இப்பாடல்களின் அடிகளை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

### சங்க நூல்களில் ஞாழல்

இக்கட்டுரையில் அகநானூற்றின் 144, 174, 314, 344 ஆகிய பாடல்களின் எண்கள் இடம்பெற்றுள்ளன. இப்பாடல்களை ‘மதுரை

அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார் என்ற புலவர் இயற்றியதாக நூல்பதிப்புகள் கூறுகின்றன. ஆனால் இப்பெயரில் உள்ள 'அளக்கர் ஞாழார்' என்ற சொல் பொருளற்றதாகும். இதனால் 'அளக்கர் ஞாழலார்' என்றே இருத்தல் வேண்டும் என விளக்க இப்பாடல் எண்களை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் மயில்

இக்கட்டுரையில் அகநானூறு 334, 344, 194 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

"இனமயில் அகவுங் கார்கொள் வியன்புனத்து" (334)

என்ற பாடலடிக்குக் கார்காலத்தில் மயில்அகவும் என்பது பொருளாகும்.

"மயிலினம் பயிலும் மரம்பயில் கானம்" (344)

மரங்களின் மீது மயிலின் கூட்டங்கள் விளையாடும் என்பது இப்பாடலடியின் பொருளாகும். மயில்கள் மலைச்சாரலில் வாழும் என விளக்கவும் மயில்கள் இனமாகவும் கணமாகவும் காணப்படும் என எடுத்துக்காட்டவும் இப்பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

புனத்தில் விளைந்த வரகின் கருமைநிறப் புறப்பகுதியைக் குடுமியாகக் கொண்ட கரியமயில் என்பது 194 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். மயிலின் உச்சிக்கொண்டை பற்றிய கருத்தாக்கத்தை எடுத்துக்காட்ட ஓரிடத்திலும் மயில் நெல், தினை, வரகு, பலாப்பழம் போன்றவற்றை விரும்பி உண்ணும் என விளக்க மற்றொரு இடத்திலும், இப்பாடலடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் பாம்பு

இக்கட்டுரையில் 154 ஆம் அகநானூற்றுப் பாடலின்,

"வெஞ்சின அரவின் பைஅணந் தன்ன
தண்கமழ் கோடல் தாதுபிணி அவிழ"

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன. சினம்மிக்க பாம்பின் படம் மேல்நோக்கி இருப்பதுபோல, காந்தள் பூவின் மொட்டுகள் கட்டவிழ்ந்து மலர்ந்தன என்பது இப்பாடல் அடிகளின் பொருளாகும். பாம்பு

படமெடுத்து ஆடுவதை, 'பை அணந்து' என்றும் படத்தை ஒடுக்கித் தணிவதை, 'பை அவிந்த' என்றும் கூறுவர் எனப் பாம்பு படமெடுத்து ஆடும் தன்மையை எடுத்துக்காட்ட இப்பாடலின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் நரி

இக்கட்டுரையில் அகநானூறு 94, 274 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

'இடையன், குறுநரிகளிடமிருந்து செம்மறி ஆடுகளின் குட்டிகளைக் காப்பாற்றுவதற்காக எழுப்பும் ஒலியும் பன்றியின் பெருங்கூட்டத்தை ஓட்டுவதற்குத் தினைப்புனம் காவல்செய்வோர் எழுப்பும் ஒலியும் ஒருங்கே காணப்படும் ஊரில் தலைவி தனியே காத்திருப்பாள். எனவே தேரை விரைந்து செலுத்து எனத் தேர்ப்பாகனிடம் தலைவன் கூறுவது' 94 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும்.

இடையன் குறுநரியிடமிருந்து செம்மறிக்குட்டிகளைக் காக்க சீழ்க்கை செய்வான். இவ்வொலி கேட்ட குறுநரி புதரின்கண் புகுந்து ஒடுங்கும் என்பது 274 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். 'குறுநரி குறுங்காடு, குறுந்தூறுகளில் வாழும். இது ஊளையிடுவதில்லை, 'உளம்பும்' தன்மை உடையது. இந்நரி பூச்சி, புழு, பிணம், நண்டு போன்றவற்றை உண்டு வாழும். இதன் வாலில் மயிர்க்கற்றை அதிகமாக இருக்கும்' எனக் குறுநரி வாழுமிடம், அதன் ஒலி எழுப்பும் தன்மை, அதன் உணவுமுறை, உடலமைப்பு போன்ற குறுநரி பற்றிய பல கருத்துகளை எடுத்துக்காட்ட இப்பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## முளவுமா முயலா?

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1974 செப்டம்பர்). முளவுமா? என்பது முள்ளம் பன்றியன்று, இது முயலே எனக் கூறும் மதிவாணன் என்பவரின் கட்டுரையை மீளாய்வு செய்து முளவுமா? என்பது 'முள்ளெலி' எனத் தற்காலத்தில் அழைக்கப்படும் சிறு விலங்கே எனப் பி.எல்.சாமி கூறி விளக்குவது இக்கட்டுரையின் நோக்கமாகும். இதில் அகநானூற்றின் 284, 394 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

நெல்லிக்காய் போன்ற கண்களையும் வளைந்த காதுகளையும் கூர்மையான மயிரினையும் உடைய குறுமுயல்கள் வரகின் கதிர்களைத் தின்று உறங்கும். பின்னர் உறக்கத்தினின்று எழுந்து தம் துணையோடு சென்று நீர்பருகும் என்பது 284 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும்.

இடையன் தன் ஆட்டுமந்தையை ஒருங்கே ஓட்டுவதற்கு எழுப்பும் ஒலியைக் கேட்ட குறுமுயல் புதரில் மறைந்துகொள்ளும் என்பது 394 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். 'சங்க இலக்கியத்தில் 'முளவுமா' என்ற ஒரு விலங்கு காணப்படுகின்றது. இவ்விலங்கு 'மருட்டுப்பன்றி' என அழைக்கப்படும். இக்காலத்தில் இதை 'முள்ளெலி' என அழைப்பர். ஆனால் இது எலி அன்று 'எலியினத்தைச் சார்ந்த கொறிக்கும் விலங்கு' என 'முளவுமா' பற்றி விளக்கவும் 'முளவுமா'வில் இருந்து 'முயலை' வேறுபடுத்திக்காட்டவும் இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க நூல்களில் மூதாய்

இக்கட்டுரையில் அகநானூற்றின் 74, 14, 374, 304 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

மழை பெய்தமையால் பசுமையாகக் காணப்படும் முல்லைநிலத்தின் வழிதோறும் இந்திரகோபப் பூச்சிகளும் முல்லைக்கொடியின் மலர்களும் பரவிக்கிடக்கும் என்பது 74 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். 'செவ்வரக்கு போன்ற சிவந்த முல்லை நிலத்தின் பெருவழியில், காயாவின் பூக்களும் இந்திரகோபப் பூச்சிகளும் பரவிக்கிடக்கும். ஆண்மான், பெண்மானைத் தழுவிப் புல்லைத் தின்னும், ஆயர்கள் பசுக்களை மேயவிட்டுக் குன்றில் உள்ள நறுமணப்பூக்களை மாலைகட்டி மார்பில் அணிந்திருப்பர்' என்பது 14 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும்.

'கார்காலத்தில் அரிய பாலைவழியில் காணப்படும் இந்திரகோபப் பூச்சி குறுகக் குறுகச் சென்று காயாவின் வாடற்பூவில் ஒளிந்துகொள்ளும். இந்நிகழ்வு பார்ப்பதற்கு நீலமணியுடன் பவளத்தைக் கலந்தார்போல இருக்கும்' என்பது 374 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். இப்பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம் நற்றிணை - பாலைத்திணை ஆய்வுப் பகுதியில் இடம்பெற்றுள்ளது (2.1.5).

நீலமணியுடன் செம்பவளம் கலந்து காணப்படுவது போல, இந்திரகோபப் பூச்சிகளுடன் காயாவின் பூ ஒருசேரப் பரவிக் காணப்படும் கார்காலம் என்பது 304 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். ‘மூதாய்ப் பூச்சி மூன்று மில்லிமீட்டர் நீளமுடையது. இது மஞ்சள்நிறம், பொன்நிறம், சிவப்புநிறம் எனப் பல நிறங்களில் காணப்படும். ஆனால் தமிழ்நாட்டில் உள்ள மூதாய் கருஞ்சிவப்பு நிறமுடையது. இப்பூச்சியைத் தற்காலத்தில் ‘வெல்வெட்’ பூச்சி என்று அழைப்பர்’ என ‘மூதாய்’ பூச்சி பற்றிய செய்திகளை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## குறிஞ்சிப்பாட்டில் வரும் செடி, கொடி மரப்பெயர்கள்

இக்கட்டுரையில் அகநானூற்றின் 264 ஆம் பாடல் இடம்பெற்றுள்ளது. குறிஞ்சிப் பாட்டில் காணப்படும் ‘வெண்காந்தள் செடி’யைப் பற்றி எடுத்துக்கூற இப்பாடலின் எண்ணை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

## சங்க நூல்களில் களா

இக்கட்டுரையில் 394 ஆம் அகநானூற்றுப் பாடலின்,

“களவும் புளித்தன்ன விளவும் பழுநின”

எனும் அடி இடம்பெற்றுள்ளது. முல்லைநிலத்து ஊரில், புளிச்சுவையுடைய களாப்பழமும் விளாம்பழமும் பழுத்தன என்பது இப்பாடல் அடிகளின் பொருளாகும். ‘களா’ என்ற செடியின் கனி புளிப்பும் இனிப்பும் கலந்து காணப்படும் என்று கூற இப்பாடல் அடியை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க நூல்களில் சிதலையும் ஈயலும்

இக்கட்டுரையில் 394 ஆம் அகநானூற்றுப் பாடலின்,

“சிறுதலைத் துருவின் பழுப்புஉறு விளைதயிர்
இதைப்புன் வரகின் அவைப்புமாண் அரிசியொடு
கார்வாய்த்து ஒழிந்த ஈர்வாய்ப் புற்றத்து
ஈயல்பெய் தட்ட இன்புளி வெஞ்சோறு”

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன. செம்மறி ஆட்டின் தயிரை உலையாக்கி, அவ்வுலையில் வரகு அரிசியையும் ஈயலையும் இட்டுச்

*சமைத்த இனிய புளிப்புச்சுவையுடைய வெண்சோறு என்பது இப்பாடல் அடிகளின் பொருளாகும். கரையானில் ஒருவகை 'ஈயல்' இவ்ஈயலை உணவாக உண்ணும் வழக்கம் சங்ககாலத்தில் இருந்துவந்தது என விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.*

## சங்க இலக்கியத்தில் மணிகள்

*இக்கட்டுரையில் 14, 374 ஆகிய அகநானூற்றுப் பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.*

*"ஈயன் மூதாய் வரிப்ப பவளமொடு*
*மணி மிடைந்தன்ன குன்றம் கவைஇய" (14)*

*முல்லைநிலப் பெருவழியில் இந்திரகோபப் பூச்சிகள் ஊர்ந்து செல்வது பவளம்போலக் காணப்படும் என்பது இப்பாடலடிகளின் பொருளாகும். பாலைநிலவழியில் இந்திர கோபப்பூச்சிகள் குறுகக் குறுகச் சென்று காயாவின் வாடற்பூவில் ஒளிந்துகொள்ளும் இந்நிகழ்வு பார்ப்பதற்கு நீலமணியுடன் பவளத்தைக் கலந்தார்போல இருக்கும் என்பது 374 ஆம் பாடலடிகளின் பொருளாகும். அக்கால மக்கள் பவளத்தைப் பெரிதும் விரும்பினர். இவர்கள் பவளத்தைக் கோவையாகவும் மணியுடனும், முத்துடனும் சேர்த்து அணிகலன்களாக்கிப் பயன்படுத்தினர் என விளக்க இப்பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.*

## சங்க இலக்கியத்தில் கேழல்

*இக்கட்டுரையில் அகநானூற்றின் 94 ஆம் பாடல் இடம்பெற்றுள்ளது. காட்டுப்பன்றி பல குட்டிகளை ஈனும் தன்மையுடையது. எனவே இது காடுகளில் பல்கிப் பெருகும். மேலும் காட்டுப் பன்றிகள் கூட்டமாகவே காணப்படும் என விளக்க இப்பாடலை ஆசிரியர் கையாண்டுள்ளார்.*

## சங்க இலக்கியத்தில் முயல்

*இக்கட்டுரையில் அகநானூற்றின் 284, 384, 394 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.*

'நெல்லிக்காய் போன்ற கண்களையும் வளைந்த காதுகளையும் கூர்மையான மயிரினையும் உடைய குறுமுயல்கள் வரகின் கதிர்களைத்

தின்று உறங்கும். பின்னர் உறக்கத்தினின்று எழுந்து தம் துணையோடு சென்று நீர்பருகும்' என்பது **284** ஆம் பாடலடிகளின் பொருளாகும். முயல்குட்டிகள் தாவித்தாவி ஓடித்திரியும் முல்லைக்காடு என்பது **384** ஆம் பாடலடிகளின் பொருளாகும். இடையன் தன் ஆட்டு மந்தையை, ஒருங்கே ஓட்டுவதற்கு எழுப்பும் ஒலியைக் கேட்ட குறுமுயல் புதரில் மறைந்துகொள்ளும் என்பது **394** ஆம் பாடலடிகளின் பொருளாகும்.

காட்டு முயலானது, புன்புலத்திலும் காட்டுநாட்டிலும் முல்லை நிலத்திலும் வாழும் தன்மையுடையது. இது புதர், குறுங்காடு, விளைவயல் போன்றவற்றில் மிகுந்து காணப்படும் என விளக்கவும் முயலின் கண், காது அமைப்பு முறையை எடுத்துக்காட்டவும் இப்பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க நூல்களில் தவளையும் தேரையும் நுணலும்

இக்கட்டுரையில் அகநானூற்றின் **154**, **364** ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

நீரினையுடைய ஆழமான பள்ளங்களில் காணப்படும் பிளந்த வாயினை உடைய தேரைகள், வாத்தியங்கள் பல ஒன்றுசேர்ந்து ஒலிப்பனபோல ஒலிக்கும் என்பது **154** ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். பெருமழை பெய்ததால் பள்ளங்கள் தோரும் காணப்படும் தேரைகள் கூத்தர் ஆடுகின்ற களத்தில் ஒளிக்கின்ற பறைஒலி போல ஒலி எழுப்பும் என்பது **364** ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். நுணலானது தவளையில் இருந்து வேறானது என விளக்கவும் நுணல் எழுப்பும் குரல் ஆடுகளப் பறையொலியைப்போலக் காணப்படும் என எடுத்துக்காட்டவும் இப்பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் பெயர்களைத் தேடும் பாடல்கள்

இரா.இராசகோபாலன் என்பவரால் எழுதப்பெற்ற இக்கட்டுரையில் **114** ஆம் அகநானூற்றுப் பாடலின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

'வினைமுடித்துத் திரும்பும் தலைவன், தலைவியின் பிரிவுத்துன்பத்தைப் போக்க எண்ணி, தேர்ப்பாகனை நோக்கி, மேற்கு மலையில் ஞாயிறு

மறையும் சிறிய புல்லிய மாலைக்காலத்தில் தலைவர் நினைந்திலரோ என்று தலைவி வருந்துவாள். ஆதலின் தேரினை விரைந்து செலுத்துவாயாக' எனத் தலைவன் கூறுவது பாடலின் பொருளாகும். தலைவி, தலைவனை நினைத்து வருந்தும், 'சிறுபுன்மாலை' என்ற தொடரால் இப்பாடலின் ஆசிரியருக்கு 'சிறுபுன்மாலையார்' எனப் பெயர் சூட்டுகின்றார் கட்டுரையாசிரியர். ஆசிரியர் பெயர் இல்லாப் பாடலுக்கு ஆசிரியர்பெயர்சூட்ட இப்பாடல் அடிகளைக் கட்டுரை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

## சங்க இலக்கியம் காட்டும் யாழ்

இக்கட்டுரை மார்கரெட் பாஸ்டின் என்பவரால் எழுதப்பெற்றதாகும். இதில் அகநானூற்று 14 ஆம் பாடலின்,

"செவ்வழி நல்யாழ் இசையின்"

எனும் பாடலடி இடம்பெற்றுள்ளது. எட்டுத்தொகை நூலில் சீறியாழ், பேரியாழ் என இரு யாழ்ப்பெயர்கள் உண்டு. பாடல் அடியில் இடம்பெற்றுள்ள செவ்வழி நல்யாழ் என்பது யாழின் பெயர் அல்ல, ஏனெனில் செவ்வழி என்பது பண்ணின் பெயராகும் என விளக்க இப்பாடலடியை ஆசிரியர் கையாண்டுள்ளார். எட்டுத்தொகையில் இடம்பெற்றுள்ள யாழின் பெயரை அறிந்துகொள்ள இக்கட்டுரை பெரிதும் உதவுகின்றது.

## தமிழிலக்கியத்தில் தாவர நூலின் நுட்பங்கள்

லூர்துசாமி என்பவரால் எழுதப்பெற்ற இக்கட்டுரையில் அகநானூற்றின் 244 ஆம் பாடலின்,

"பசைபடு பச்சை நெய்தோய்த் தன்ன"

எனும் பாடலடி இடம்பெற்றுள்ளது. பசையையுடைய தோலை நெய்யில் தோய்த்தாற் போன்ற கருமைநிறச் சிறகுகளையுடைய வெளவால் பறவை என்பது பாடலடியின் பொருளாகும். புன்னை மரத்தின் கரும்பச்சை இலையின் சிறப்புத்தன்மையை விளக்க இப்பாடலடியை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

### 4.1.3 மருதம்

*செந்தமிழ்ச்செல்வி இதழில் 15 ஆய்வுக்கட்டுரைகளில் இடம்பெற்றுள்ள அகநானூறுக்குரிய மருதத்திணைப் பாடல்களின் எண்ணிக்கை 20 ஆகும்.*

### சங்க நூல்களில் ஞாழல்

*இக்கட்டுரையில் அகநானூற்றின் 216 ஆம் பாடலின் அடிகள் இடம்பெற்றுள்ளன.*

*'தலைவன் இருக்கும் பரத்தையர் சேரியில், கடலாடும் பெண்கள் பறித்த புலிநகக்கொன்றைப் பூவினையும் வயலில் உழுவோர் பறித்துவந்த வேளைப்பூவினையும் முல்லைப் பூவோடு இணைத்து மாலைகட்டிக் கோசர்கள் விளையாடுவர்' என்பது இப்பாடல் அடிகளின் பொருளாகும். இப்பாடலை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம் நற்றிணை - நெய்தல்திணை ஆய்வுப் பகுதியில் இடம்பெற்றுள்ளது (2.1.4).*

### சங்க நூல்களில் பைஞ்சாய்

*இக்கட்டுரையில் அகநானூற்றின் 236, 226 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.*

*"இடைநிலம் நெரிதரு நெடுங்கதிர்ப் பல்சூட்டுப்*
*பனிபடு சாய்ப்புறம் பரிப்ப, கழனிக்" (236)*

*நெல் அரிவோர், நீண்ட கதிர்களைக் கொண்ட நெற்கட்டுகளையும் பனிதங்கிய கோரையையும் கனத்தில் குவிப்பர் என்பது இப்பாடலடிகளின் பொருளாகும். பைஞ்சாய்க்கோரை, நெய்தலிலும் கடற்கரைக்கானத்திலும் பௌவநீரிலும் நீர்த்துறையிலும் தன் பணையிலும் காணப்பட்டது என விளக்கவும், கடற்கரையையொட்டிய கழனிகளிலும் நீர் திகழும் வயலிலும் சாய்க்கோரையைப் பறித்தனர் எனச் சங்கஇலக்கியம் கூறுகின்றது என எடுத்துக்காட்டவும் இப்பாடல் அடிகளை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.*

*மகளிர் பொய்கையில் உள்ள கோரைப்புல்லைப் பறித்து, வயலில் உள்ள வெண்ணிற நாரையை ஒட்டி விளையாடுவர் என்பது 226 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். இப்பாடல் அடியை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம் அகநானூறு - குறிஞ்சித்திணை ஆய்வுப்பகுதியில் இடம்பெற்றுள்ளது (4.1.1).*

## சங்க இலக்கியத்தில் ஆடை அணிகலன்கள்

இக்கட்டுரையில் அகநானூறு 236, 86, 136 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

"அணிகிளர் சாந்தி னம்பட்டிமைப்பக்
கொடுங்குழை மகளிரின் ஒடுங்கிய இருக்கை" (236)

அழகுதோன்றும் சந்தனத்துடன், அழகிய பட்டாடை ஒளிவீச, வளைந்த மகரக்குழையணிந்த மகளிர் காணப்படுவர் என்பது பாடலடிகளின் பொருள். சங்ககால மக்கள் பட்டுப்புடவையை அணிந்த செய்தியை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

தலைவன் தலைவியின் அன்புவாழ்வில், தலைவியைத் தழுவ எண்ணிய தலைவன், புதுப்புடவையால் மூடியிருந்த தலைவியின் முகத்தை விலக்கினான் என்பது 86 ஆம் பாடலடிகளின் பொருளாகும். தலைவி, கற்பைக் கடமாகப் பூண்டவள், என் உயிர்க்கு உடம்பாகும் பொருத்தம் உடையவள், புதுமைகெடாத ஆடை அணிந்தவள் எனத் தலைவன் கூறுவது 136 ஆம் பாடலடிகளின் பொருளாகும். 'கலிங்கம்' என்ற சிறந்த துகிலாடை சங்ககாலத்தில் இருந்தது. இவ்வாடையை மக்கள் மணஞ்செய்யும் மகளிர் அணியும் புத்தாடையாகவும் மணஆடையாகவும் பயன்படுத்தினர் என்ற கருத்தை விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் நீர்நாய்

இக்கட்டுரையில் 6, 336, 386 ஆகிய அகநானூற்றுப் பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

'தாமரைப் பூக்கள் பூத்திருக்கும், நீர்மிக்க வயற்பரப்பில் உள்ள வள்ளையினது மெல்லிய கொடிகளை உழக்கி, வாளை மீனைத் தின்னும் நீர்நாய், பிரப்பங்கொடியின் சிறுதூறில் தங்கும்' என்பது 6 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். 'பெண்நீர்நாய் தன்குட்டியுடன் இரை உண்ணாது வருந்தும். அதன் துன்பத்தைப் போக்க எண்ணிய ஆண் நீர்நாய், நீர்நிலையில் உள்ள வாளைமீனைக் கவ்வி அதோடு போரிட்டு இம்மீனைப் பெண் நீர்நாய்க்கு கொண்டுவரும்' என்பது 336 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். பொய்கையில் உள்ள ஆண் நீர்நாய் விடியற்காலத்தே வாளை

மீனை இறையாகக் கொள்ளும் என்பது 386 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். இப்பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம் நற்றிணை - மருதத்திணை ஆய்வுப்பகுதியில் குறிப்பிடப்பட்டுள்ளது (2.1.3).

## சங்க நூல்களில் கரந்தை

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1984 ஜீன்). கரந்தை வளரும் இடம், அதன் பூவின் நிற அமைப்பு, கரந்தை வகை எனக் கரந்தை பற்றிய பல செய்திகளை விளக்குவது இக்கட்டுரையின் நோக்கமாகும். இதில் அகநானூற்றின் 226 ஆம் பாடலின்,

"பழனப் பைஞ்சாய் கொழுதி கழனிக்
கரந்தைஅம் செறுவின் வெண்குருகு ஒப்பும்"

'பெண்கள், பொய்கையில் உள்ள கோரைப்புல்லைப் பறித்து, கொட்டைக் கரந்தையை உடைய வயலில் உள்ள நாரையை ஓட்டி விளையாடுவர்' என்பது பாடலடிகளின் பொருளாகும். கரந்தைச் செடியின் சிறப்பை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க நூல்களில் ஆமை

இக்கட்டுரையில் அகநானூறு 306, 356 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

'பிரப்பங்கொடியும் ஈங்கைக்கொடியும் மாமரத்தின் இளந்தளிரும் தடவுதலால் குருகு உறங்கும். இச்சிறப்புமிக்க வயலின்கண் உள்ள கரும்பின் மேல் ஆமை ஊர்ந்து சென்று வெயில்காய்தற்கு இடனான நெல் வளம் கொண்ட தெருக்களையுடைய ஊரன்' என்பது 306 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். இப்பாடலை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம் நற்றிணை - மருதத்திணை ஆய்வுப்பகுதியில் இடம்பெற்றுள்ளது (2.1.3).

மேற்றிசைத் துறையில் கள்ளிருந்த கலன்களைக் கள்ளர்கள் கழுவுவர். அந்நீர் கீழ்த்திசைநோக்கி வரும். அங்கு உள்ள ஆமை அந்த நீரை உண்டு பிறழும் என்பது 356 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். குளத்து ஆமை

பற்றிய செய்திகளை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்கநூல்களில் மீன்கள்

இக்கட்டுரையில் அகநானூற்றின் **246, 126, 346, 06, 126, 336, 276, 96, 376** ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

"பிணர்மோட்டு நந்தின் பேழ்வாய் ஏற்றை

கதிர்மூக்கு ஆரல்களவன் ஆக

நெடுநீர்ப் பொய்கைத் துணையோடு புணரும்" **(246)**

ஆண்சங்கானது கதிர்நுனை போன்ற மூக்கையுடைய ஆரல் மீனைச் சாட்சியாகக் கொண்டு, பெண்சங்கொடு மணங்கொள்ளும் என்பது இப்பாடல் அடிகளின் பொருளாகும். இப்பாடலை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம் குறுந்தொகை - குறிஞ்சித்திணை ஆய்வுப் பகுதியில் இடம்பெற்றுள்ளது **(3.1.1)**.

தலைவி கயல்மீன் ஒன்றோடொன்று போரிடுகின்ற மையுண்ட கண்களை உடையவள் என்பது **126** ஆம் பாடல் அடியின் பொருளாகும். ஆண்கொக்கானது உழவன் நீர்தேக்க வயலில்கட்டும் அணைமீது வழிந்தோடும் நீரில் காணப்படும் கயல்மீனைத் தின்னுவதற்காகத் தேங்கி வழியும் நீரினை உற்றுப்பார்த்த வண்ணம் இருக்கும் என்பது **346** ஆம் பாடல் அடியின் பொருளாகும். இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம் குறுந்தொகை - பாலைத்திணை ஆய்வுப் பகுதியில் இடம்பெற்றுள்ளது **(3.1.5)**.

தாமரைப்பூக்கள் பூத்திருக்கும், நீர்மிக்க வயற்பரப்பில் உள்ள வள்ளையினது மெல்லிய கொடிகளை விழக்கி, வாளைமீனைத் தின்னும் நீர்நாய், பிரப்பங்கொடியின் சிறுதூறில் தங்கும் என்பது **6** ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். பாண்மகளின் அண்ணன்மார், வாளைமீனைப் பிடிக்க இரவு சென்று, விடியலில் கொண்டுவருவர் என்பது **126** ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். நீர்நாய் நீர்நிலையில் உள்ள வாளைமீனைக் கவ்வி அதனோடு போரிடும் என்பது **336** ஆம் பாடல் அடிகளின் பொருள். பொய்கையில் உள்ள ஆண்நீர்நாய் விடியற்காலத்தே வாளை மீனை

இரையாகக் கொள்ளும் என்பது 336 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். நீர்நிலையில் உள்ள வாளைப்போத்தினை உண்ண எண்ணிய நாரை மெல்ல மெல்ல நடந்துசெல்லும் என்பது 276 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். மேலே இடம்பெற்றுள்ள பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம் குறுந்தொகை - மருதத்திணை ஆய்வுப் பகுதியில் இடம்பெற்றுள்ளது (3.1.3).

## குறிஞ்சிப்பாட்டில் வரும் செடி, கொடி, மரப்பெயர்கள்

இக்கட்டுரையில் அகநானூற்றின் 226 ஆம் பாடல் இடம்பெற்றுள்ளது. இது 'கரந்தைச்செடி' விளைநிலத்தில் காணப்படும் என்ற செய்தியை எடுத்துக்காட்ட ஆசிரியரால் பயன்படுத்தப்பெற்றுள்ளது.

## சங்கநூல்களில் பயறும் உழுந்தும்

இக்கட்டுரையில் அகநானூற்றின் 86 ஆம் பாடலின்,

"உழுந்து தலைப்பெய்த கொழுங் களி மிதவை"

எனும் பாடலடி இடம்பெற்றுள்ளது. உழுந்தம் பருப்புடன் கூட்டிச் சமைத்த குழைவாக வெந்த பொங்கல் பெருஞ்சோற்றுத்திரள் என்பது பாடல்அடியின் பொருளாகும். அக்காலத்திருமணங்களில் உழுந்து பெய்த மிதவை உண்ணப்பட்டது என விளக்க இப்பாடல் அடியை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

## சங்க நூல்களில் முண்டகமும் முள்ளியும்

இக்கட்டுரையில் அகநானூற்றின் 26, 236 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

கூன்முள் முள்ளிக் குவிகுலைக் கழன்ற
மீன்முள் ளன்ன வெண்கால் மா மலர் (26)

நீர்முள்ளிச் செடியின் குவிந்த குலைகளிலிருந்து மீனினது முள்போன்ற காம்புகளையுடைய கருமையான மலர்கள் உதிரும் என்பது பாடல் அடிகளின் பொருளாகும். 'நீலமணிபோன்ற மலர்களையுடைய முள்ளிச்செடிகள் செறிந்து கிடக்கும் தெளிந்த நீரினையுடைய மடுவில் உள்ள மீன்களை நெற்கதிர் உண்போர் அரிவோர்' என்பது 236 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். மேலே இடம்பெற்றுள்ள பாடல்களை ஆசிரியர்

கையாண்டதற்கான காரணம், நற்றிணை - நெய்தல்திணை ஆய்வுப்பகுதியில் இடம்பெற்றுள்ளது (2.1.4).

## சங்க நூல்களில் வாகையும் உழிஞ்சிலும்

இக்கட்டுரையில் அகநானூற்று 136 ஆம் பாடலின்,

"மென்பூ வாகைப் புன்புறக் கவட்டிலை

பழங்கன்று கறித்த பயம்புஅமல் அறுகை"

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன. வாகைமரம் மெல்லிய பூவையும் புல்லிய புறத்தினையும் சுவடுபொருந்திய இலைகளையும் உடையது என்பது பாடல்அடிகளின் பொருளாகும். இப்பாடலை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம், குறுந்தொகை - பாலைத்திணை ஆய்வுப்பகுதியில் இடம்பெற்றுள்ளது (3.1.5).

## சங்க இலக்கியத்தில் மணிகள்

இக்கட்டுரையில் அகநானூறு 356, 296 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

'நன்னனது பறம்புமலையில் சிறிய சாணைக்கல் செய்வோன் அரக்கோடு சேர்த்துச்செய்த சாணைக்கல் போன்ற திண்மையுடைய நாவை உடையோனாய், தலைவன் தன் கையைப்பற்றியதை, தாய்க்கு உரைக்கவில்லை எனத் தலைவி தோழிக்கு கூறுவது' 356 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். சங்கநூல்களில் விலையுயர்ந்த மணிகள் கூறப்பட்டுள்ளது போல, விலைகுறைந்த கற்களும் கூறப்பட்டுள்ளன. இவற்றில் ஒன்று 'சாணைக்கல்' என விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

கடலில் பல்வகை மீன்களைப் பிடிப்போர், முகந்துவந்த சிப்பியினைக் கள்ளிற்கு விலையாகக் கொடுப்பர். இச்சிறப்புமிக்க கொற்கைக்குத் தலைவன் பசும்பூண்பாண்டியன் என்பது 296 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். அக்காலத்தில் கொற்கையில் சங்குகள் எளிதாகக் கிடைத்தன என விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் நாரையும் கொக்கும்

*இக்கட்டுரையில் அகநானூற்றின்* ***276, 346*** *ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.*

*'நீர்நிலையில் உள்ள வாளைப்போத்தினை உண்ணும் பொருட்டுச் செல்லும் நாரை, தன் அடிகளின் ஓசையை அம்மீன் அறிந்துவிடுமோ என எண்ணிக் கள்வன்போல் மெல்லநடந்து செல்லும்' என்பது* ***276*** *ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். நாரை, மீனினை வேட்டையாடும் தன்மையினை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.*

*'ஆண் கொக்கானது உழவன் நீர்தேக்க வயலில் கட்டும் அணைமீது வழிந்தோடும் நீரில் காணப்படும் கயல்மீனைத் தின்னுவதற்காகத் தேங்கி வழியும் நீரினை உற்றுப் பார்த்த வண்ணம் இருக்கும்' என்பது* ***346*** *ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். கொக்கு வெள்ளை நிறமுடையது அல்ல. இது பழுப்புநிறம் மிகுந்தது. கொக்கின் நிறம் மழைக்காலத்தில் நிறம் மாறும் சுண்ணாம்புச் சுவர்போலக் காணப்படும். எனக்கொக்கின் நிறம் பற்றிய செய்திகளை எடுத்துக்காட்ட ஓரிடத்திலும், கொக்கின் வேட்டைத்தன்மையினை விளக்க மற்றொரு இடத்திலும் இப்பாடலின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.*

## தமிழிலக்கியத்தில் தாவரநூலின் நுட்பங்கள்

*இக்கட்டுரையில் அகநானூறு* ***176, 46, 156, 336*** *ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.*

*முதிர்ந்த கிழங்கினையும், மூங்கில் போன்ற துளையையுடைய தண்டினையும், பசுமைநிற இலையினையும், செழுமையான அரும்புகளையும், பல பூக்களையும் உடைய தாமரை என்பது* ***176*** *ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். அழகிய உள்துளையையுடைய வள்ளைக் கொடியைக் கலக்கிச் சிதைத்த எருமை, தாமரை மலரை வயிறார உண்ணும் என்பது* ***46*** *ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். நீர்வாழ்தாவரங்கள் துளையை உடைய தண்டினைப் பெற்றிருக்கும் என விளக்க இப்பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.*

*“கழனியாம்பல் முழுநெறிப் பைந்தழை” (156)*

*வயலில் பூத்த இதழ் ஒடியாத ஆம்பல் மலரின் பசியதழை என்பது இப்பாடலடிகளின் பொருளாகும். ‘தாவர நூலில் ஆம்பல் இலையின் ஓரத்தை* Dentate and sinuate *என்று சொல்வர்’ என ஆம்பல் இலையின் தன்மையினை எடுத்துக்காட்ட இப்பாடல் அடியை ஆசிரியர் கையாண்டுள்ளார்.*

*“சுடரொடு திரிதரும் நெருஞ்சி போல” (336)*

*ஞாயிறு செல்லும் திசைநோக்கிச் செல்லும் ‘நெருஞ்சிப்பூ’ என்பது இப்பாடலடியின் பொருளாகும். சூரியகாந்திப் பூ, சூரியன் இருக்கும் இடம் நோக்கி நகர்வதுபோல, நெருஞ்சிப்பூவும் நகரும் எனச் சங்க இலக்கியம் கூறும் செய்தியை விளக்க இப்பாடல் அடியை ஆசிரியர் கையாண்டுள்ளார்.*

### சங்ககாலச் செய்யுள்நடை

*ச.கணபதி என்பவரால் எழுதப்பெற்ற இக்கட்டுரையில் அகநானூற்றின் 256 ஆம் பாடலின் அடிகள் இடம்பெற்றுள்ளன.*

*‘கள்ளூர் எனும் ஊரில் நெறிதவறிய அறமிலி ஒருவன் இளம்பெண் நலம்கவர்ந்து, அவளை அறியேன் எனப் பொய்யுரைக்க, அவன் பொய்யுரை அறிந்த அவையோர், அவனை மரக்கிளையில் கட்டித் தலையில் நீற்றினைப் பெய்தனர். அவ்அவையில் எழுந்த ஆரவாரத்தினும், நீ பரத்தையொடு புனலாடியதால் எழுந்த அலர் பெரியதாயிற்று எனத் தலைவனிடம் தோழி கூறுவது’ பாடலடிகளின் பொருளாகும். சங்ககாலச் செய்யுள் நடைகளின் சிறப்பினை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.*

### 4.1.4 நெய்தல்

*செந்தமிழ்ச்செல்வி இதழில் 17 ஆய்வுக்கட்டுரைகளில் இடம்பெற்றுள்ள அகநானூற்றுக்குரிய நெய்தல்திணைப் பாடல்களின் எண்ணிக்கை 28 ஆகும்.*

### சங்க இலக்கியத்தில் கடல்வாழ் விலங்குகள்

*இக்கட்டுரையில் அகநானூற்றின் 210 பாடலின் அடிகள் இடம்பெற்றுள்ளன.*

பரதவர்களின் எறியுளியால் தாக்கப்பட்ட பெருமீன், கடற்பரப்பைக் கலக்கி, வலியிழந்து, பரதவர்களின் படகுகளின் பக்கத்திலே வந்து சேரும் என்பது 210 ஆம் பாடலடிகளின் பொருளாகும். பரதவர்கள் கடலில்வாழும் பெருமீனைக் கயிற்றினால் கட்டப்பட்ட எறியுளி கொண்டு வேட்டையாடும் தன்மையை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் அன்னம்

இக்கட்டுரையில் அகநானூறு 320 ஆம் பாடலின்,

"நெடுங்கழி துழைஇய குறுங்கால் அன்னம்
அடும்புஅமர் எக்கர் அம்சிறை உளரும்
தடவுநிலைப் புன்னைத் தாதுஅணி பெருந்துறை"

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன. நீண்ட உப்பங்கழியைத் துழாவி மீனைப் பிடிக்கும், குறிய காலையுடைய அன்னம், தன் சிறகினை உலர்த்துவதற்காக, அடுப்பங்கொடி படர்ந்த மணல் மேட்டிலிருந்து, புன்னை மரத்தில் ஏறும் என்பது இப்பாடலடிகளின் பொருளாகும். அன்னப்பறவை கழிகளில் துழாவும், கடற்கரை மணலில் இறகுகளைக் கோதும், மழைக்காலத்தில் வானில் விரைந்து பறக்கும் என அன்னப்பறவை பற்றிய செய்திகளை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க நூல்களில் ஞாழல்

இக்கட்டுரையில் அகநானூற்று 20, 70, 180, 240, 270, 370 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

ஞாழல் மரமானது கொடுங்கழியிலும், கானலம் பெருந்துறையிலும், புலவுநாறிருங்கழியிலும், நளிகடற்கானலிலும், இருங்கழியிலும் காணப்படும். ஞாழல்மரத்திற்குப் பெருங்கிளை உண்டு. 'பொன்வீஞாழல்,' 'செவ்வீஞாழல்' என ஞாழல் பூவின் நிறத்தைக் குறிப்பிடுவர் என ஞாழல் பற்றிய கருத்துகளை எடுத்துக்காட்ட இப்பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் நாரையும் கொக்கும்

*இக்கட்டுரையில் அகநானூற்றின் 240, 360, 100, 190, 40, 290, 120 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.*

*தாழப்பறக்கும் நாரை, செந்நிறப்பூவினையுடைய கொன்றையின் கருநிறக் கொம்பின் கிளையில் உள்ள தன் குஞ்சினை நினைத்து, நீலநிற நெய்தல் பூக்களை உடைய உப்பங்கழியின் மேலே எழுந்து பறக்கும் என்பது 240 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். பல்வேறு மீன்களை உண்ணும் நாரையுடன் பனைமீது அன்றில் தங்கும் என்பது 360 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். பெரியன் எனும் கோமான் கொடைத்தன்மை கொண்டவன். அவனது புன்னைமரங்கள் நிரம்பிய கடற்கரைச் சோலை சூழ்ந்த புறையாற்றின் கடல்துறையில் புதிய நாரைக்கூட்டம் ஒலி எழுப்பும் என்பது 100 ஆம் பாடல்அடிகளின் பொருளாகும். கடற்கரைச் சோலையில் உள்ள புன்னை மரத்தின் கிளையில் தங்கியிருக்கும் நாரை பறந்தோடுமாறு தலைவன் தேரில் வருவான் என்பது 190 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும்.*

*நாரை புன்னை, பனை, ஞாழல், கடற்கரை ஓரம் போன்ற பல இடங்களில் தங்குவதாகவும், இது மருதமரத்திலும், பலாமரத்திலும் கூடுகட்டுவதாகவும் சங்க இலக்கியங்கள் கூறுகின்றன என எடுத்துக்காட்ட மேலே இடம்பெற்றுள்ள பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.*

*தண்ணுமை வெரீஇய தடந்தாள் நாரை*
*செறிமடை வயிரிற் பிளிற்றி பெண்ணை*
*அகமடல் சேர்க்கும் துறைவன் (40)*

*நீண்ட கால்களையுடைய நாரை செறிந்த மூட்டுவாயினையுடைய கொம்புபோல் ஒலித்துப் பனைமரத்தின் அகமடலில் தங்கும் சிறப்புமிக்க நாட்டின் தலைவன் என்பது பாடலின் பொருளாகும். நாரையின் குரலை, 'கணைகுரல்' என்றும், 'பிளிறும்குரல்' என்றும் கூறுவர் என நாரையின் குரல் அமைப்பு பற்றிய கருத்துகளை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார். 'ஞாயிறு, பகற்பொழுதில் மேற்றிசை மலையை அடைந்து மறையும் காலத்தில், முருகக்கடவுளின் மார்பில் உள்ள*

ஆரல்போல, சிவந்த வானத்தில், மீனைத் தின்னும் கூட்டம் வரிசையாகப் பறந்து உயர்ந்து செல்லும்' என்பது 120 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும்.

சிறுவர்கள் சேற்றுவயலில் விரித்த வலையில் கொண்டையினையுடைய சேவல்கொக்கு அகப்படும். இதை அறிந்த பேடைக்கொக்கு உணவு உண்ணாது, தன் குஞ்சினைத் தழுவிய வண்ணம் பனைமரத்தின்கண் அன்பு மேலிட 'ஒய்' என ஒலிக்கும் என்பது 290 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். கொக்கு, தன் பிள்ளைகளைத் தழுவி உணவூட்டும் தன்மையுடையது. இது பறக்கும்போது 'V' எழுத்துப்போல வரிசையாகப் பறக்கும் என விளக்க இப்பாடல் அடிகளை ஓரிடத்திலும் கொக்கு இனஞ் சேருங்காலத்தில் குடுமிபோன்ற மூன்று அல்லது நான்கு தூவிகள் அதன் தலையில் தோன்றும், இதைக் 'குடுமிக்கொக்கு' என்பர் என எடுத்துக்கூற இப்பாடல் அடிகளை மற்றொரு இடத்திலும் கொக்கின் கால்கள் பச்சைநிறமாகக் காணப்படும் எனச் சுட்டிக்காட்ட இப்பாடல் அடிகளை இன்னொரு இடத்திலும் ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க நூல்களில் பைஞ்சாய்

இக்கட்டுரையில் அகநானூற்றின் 220 ஆம் பாடலின்,

"நெடுங்கதிர்க் கழனித் தண்சாய்க் கானத்து
யாணர்த் தண்பணை உறும்என கானல்"

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன. குளிர்ச்சி பொருந்திய சாய்க்கானம் என்னும் பதி, நெடியகதிர்களை உடைய நெல்வயல்களைக் கொண்டது என்பது பாடலடிகளின் பொருளாகும். இப் பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம் அகநானூறு - மருதத்திணை ஆய்வுப் பகுதியில் குறிப்பிடப்பெற்றுள்ளது (4.1.3).

## அகநானூற்றில் பவத்திரி

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1979 ஜூலை, ஆகஸ்ட்). 'பவத்திரி' என்ற பட்டினத்தின் சிறப்பை விளக்குவது இக்கட்டுரையின் நோக்கமாகும். இதில் அகநானூற்றின் 340 ஆம் பாடல் இடம்பெற்றுள்ளது. 'நல்ல புகழையும் பொன்னாலான பூணினையும்

உடைய திரையன் என்பானது சோலைகள் சூழ்ந்த 'பவத்திரி' என்னும் ஊர்போன்ற இவளது நல்அழகு தொலையுமாறு பிரிந்து சென்றான் தலைவன் எனத் தோழி கூறுவது' 340 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். 'பவத்திரி' எனும் பட்டினம் சங்ககாலத்தில் செழிப்புடன், சிறப்புடன் இருந்ததை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

## அகநானூற்றில் கோடிக்கரை

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1975-76 செப்டம்பர்). கோடிக்கரை பற்றிய செய்திகளை விளக்குவது இக்கட்டுரையின் நோக்கமாகும். இதில் அகநானூற்றின் 70 ஆம் பாடல் இடம்பெற்றுள்ளது. 'கடல்துறையினை உடைய தலைவன், தலைவியை மணம்கூட நினைத்தான். இதனால் வெல்போர் இராமன் அருமறைக்கு அவித்த பல்வீழ் ஆலம்போல, தலைவியை அலர்தூற்றிய ஊர், அலர் ஒழித்தது' என்பது பாடலின் பொருளாகும். கோடிக்கரையில் மிகுதியான பறவைகள் உண்டு என விளக்க இப்பாடலை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் பாம்பு

இக்கட்டுரையில் அகநானூற்றின் 340 ஆம் பாடலின்,

"கழியே ஓதம் மல்கின்று வழியே
வள்ளெயிற் றரவொடு வயமீன் கொட்டும்"

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன. உப்பங்கழியில் நீர்பெருக, அக்கழியிடத்துக் கூரிய பற்களையுடைய பாம்பினொடு வலிமை மிக்க சுறாமீன்களும் சுழன்றுதிரியும் என்பது பாடலடிகளின் பொருளாகும். கடற்பாம்பு கழியிடத்து காணப்படும்; இவை நஞ்சுடையவை; ஆனால் கடிப்பது அரிதாகும் எனக் கடல்பாம்பு பற்றிய செய்திகளை விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் குருகு

இக்கட்டுரையில் அகநானூற்றின் 40 ஆம் பாடலின்,

"நீல்நிறப் பெருங்கடல் பாடெழுந் தொலிப்ப

மீனார் குருகின் மென்பறைத் தொழுதி

குவையிரும் புன்னைக் குடம்பை சேர"

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன. நீலநிறத்தையுடைய பெரிய கடல் பேரொலியுடன் ஒலித்தது. மீனை உண்ணும் மெல்லிய இறகினையுடைய பறவைக்கூட்டம், திரண்ட புன்னை மரத்திலுள்ள கூடுகளில் போய்ச்சேர்ந்தது. இவ்வாறு மாலைக்காலம் காணப்படும் என்பது பாடலடிகளின் பொருளாகும். இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம் நற்றிணை - நெய்தல்திணை ஆய்வுப்பகுதியில் குறிப்பிடப்பட்டுள்ளது (2.1.4).

## சங்க நூல்களில் ஆலம்

இக்கட்டுரையில் அகநானூற்றின் 70 ஆம் பாடலின் அடிகள் இடம்பெற்றுள்ளன. போரில் வெல்லும் ஆற்றலையுடைய இராமன் இலங்கைமேற் படையெடுப்பது பற்றிய செய்திகளை ஆராயும் பொருட்டு, ஆலமரத்தில் ஒலிசெய்த பறவைகளைக் கைகவித்து ஒலி அடங்கச் செய்தான் என்பது 70 ஆம் பாடல்அடிகளின் பொருளாகும். ஆலமரம் பல விழுதுகளை உடையது என விளக்க இப்பாடல் அடிகளை ஓரிடத்திலும் ஆலமரக்கனிகளைப் பறவைகள் நாடிவரும் செய்தியைக் கூற மற்றொரு இடத்திலும் போர்ப்படைகள் ஆலமரநிழலில் தங்கும் என்ற செய்தியை எடுத்துக்காட்ட இன்னொரு இடத்திலும் இப்பாடல் அடிகளை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

## சங்க நூல்களில் ஆமை

இக்கட்டுரையில் அகநானூற்றின் 160 ஆம் பாடலின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

'நிறைந்த சூல்கொண்ட ஆமை, யானையின் கொம்பினாற் செய்த வட்டுப்போன்ற வடிவமுடைய புலால் மணக்கும் முட்டையை ஈன்று பிறஉயிர்கள் அறியாவண்ணம் மணலில் மறைத்து வைத்தது. ஆண் ஆமை அம்முட்டையினின்று குஞ்சு வெளிவரும் வரைக் காத்து நிற்கும். இத்தகைய கடற்கரைச் சோலையை உடைய தலைவன்' என்பது இப்பாடல் அடிகளின்

பொருளாகும். கடல் ஆமை முட்டையிட்டுப் பாதுகாக்கும் செய்திகளை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் முதலையும் இடங்கரும் கராமும்

இக்கட்டுரையில் அகநானூற்றின் 80 ஆம் பாடலின்,

"கொடுந்தாள் முதலையொடு கோட்டுமீன் வழங்கும்

இருங்கழி யிட்டுச்சுரம் நீந்தி யிரவின்"

என்ற அடிகள் இடம்பெற்றுள்ளன. வளைந்த கால்களையுடைய முதலையொடு, கொம்பினை உடைய சுறாமீன் உலவித்திரியும் கரிய உப்பங்கழி என்பது இப்பாடல் அடிகளின் பொருளாகும். முதலைக்கு வளைந்த கால்கள் உண்டு. இது கழிகளிலும் கடற்கரைச் சூழலிலும் ஆற்றுத்துறைகளிலும் வாழும். முதலையின் முக்கிய உணவு மீன். இது பிற விலங்குகளையும் ஆட்களையும் கொல்லும் தன்மையுடையது என முதலை பற்றிய செய்திகளை விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## குறிஞ்சிப்பாட்டில் வரும் செடி, கொடி, மரப்பெயர்கள்

இக்கட்டுரையில் அகநானூற்றின் 280, 80 ஆகிய பாடல்கள் இடம்பெற்றுள்ளன.

'செருந்தி' என்பது பைஞ்சாய்க்கோரை என்றும், செங்கோடு பஞ்சரம் போன்ற மரம் என்றும் உரையாசிரியர்கள் கூறுவர் என விளக்கவும் 'செருந்தி' என்பது மரம் இதற்கு ஆரஞ்சு நிறத்தில் பூவிதழ் உண்டு என எடுத்துக்கூறவும் 280 ஆம் பாடலை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

'அடும்பு' என்ற செடி கவைத்த இலைகளையும் மணிபோன்ற பூக்களையும் உடையது. இதை Ipomea pescapra என அறிவியலில் அழைப்பர்' எனக் கூற 80 ஆம் பாடலை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

## சங்க நூல்களில் கண்டல்

இக்கட்டுரையில் அகநானூற்றின் 260 ஆம் பாடலின்,

"கண்டற் கானல் குருகினம் ஒலிப்ப

திரைபாடு அவிய திமில் தொழில் மறப்ப

கரையா டலவன் அளைவயிற் செறிய"

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன. சோலையின் மீதிருந்த நாரைக் கூட்டம் ஒலி எழுப்பியது. கடற்கரையில் விளையாடித் திரிந்த நண்டு வளையிற் சென்று புகுந்தது என்பது இப்பாடல் அடிகளின் பொருளாகும். இப்பாடல் அடிகளை ஆசிரியர் எடுத்தாண்டமைக்கான காரணம் நற்றிணை - நெய்தல் திணை ஆய்வுப் பகுதியில் குறிப்பிடப் பெற்றுள்ளது (2.1.4).

## சங்க நூல்களில் முண்டகமும் முள்ளியும்

இக்கட்டுரையில் அகநானூறு 80, 130 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

கழிமுள்ளிச் செடி படர்ந்திருக்கும் முதுநீர் அடைகரை என்பது 80 ஆம் பாடல் அடியின் பொருளாகும்.

'நுண்ணிய பூந்தாது மூடிய சிவந்த காம்பினையும் கொழுவிய மொட்டினையும் உடைய கழிமுள்ளிச் செடிகள் மணலால் ஆன உயர்ந்த நீரோடைக் கரையின்கண் வளர்ந்திருக்கும் என்பது' 130 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். முண்டகத்தின் மொட்டு அமைப்பையும் அது வளரும் இடத்தினையும் விளக்க இப்பாடல்களின் அடிகளை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

## சங்கநூல்களில் சங்குகள்

இக்கட்டுரையில் அகநானூற்றின் 150 ஆம் பாடலின்,

"வாட்சுறா வழங்கும் வளைமேய் பெருந்துறை"

எனும் அடி இடம்பெற்றுள்ளது. வாள்போன்ற கொம்பினை உடைய சுறாமீன்கள் திரியும் சங்குகள் மேயும் பெரியதுறை என்பது இப்பாடலடியின் பொருளாகும். சங்க நூல்களில் சங்கு வளையென்று அழைக்கப்படுகின்றது. இந்த வளையைச் சங்ககால மக்கள் நீரில் மூழ்கி

எடுத்தனர். வாளரம்கொண்டு இச்சங்கை வெட்டி வளையல்கள் செய்து மகளிர் அணிந்தனர் எனக் கூற இப்பாடலின் அடியை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் மணிகள்

இக்கட்டுரையில் அகநானூற்றின் 350, 130 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

'பெரிய படகினை உடைய பரதவர்கள் கொல்லும் தன்மை வாய்ந்த சுறாமீனை ஒதுக்கிவிட்டு, நீரில் மூழ்கிச் சங்கினை எடுப்பர். சங்குகள் கல்லென ஒலி எழுப்ப, ஆரவாரமிக்க கொற்கையோர் எதிர்கொண்டு அழைக்குமாறு படகினின்று இறங்கி வருவர்' என்பது 350 ஆம் பாடலடிகளின் பொருளாகும். சங்க காலத்தில் மிகச்சிறந்த மணிகளில் ஒன்றாக முத்து கருதப்பட்டது. அக்காலத்தில் வலம்புரிச்சங்கை மூழ்கி எடுத்தது போலவே, முத்துச்சிற்பியையும் மூழ்கி எடுத்தனர் என முத்தின் சிறப்பையும் அம்முத்தைச் சங்கமக்கள் எடுத்த முறையையும் விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

கடல் அலைகள் முத்துகளைக் கொணர்ந்து வெளியே தள்ளும். அம்முத்துகள் குதிரைகளின் கால்களை வடுப்படுத்தி, அவற்றை மேற்செல்லவிடாது தடுத்துநிறுத்தும் என்பது 130 ஆம் பாடலடிகளின் பொருளாகும். இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம் நற்றிணை - பாலைத்திணை ஆய்வுப்பகுதியில் குறிப்பிடப்பட்டுள்ளது (2.1.5).

## சங்க நூல்களில் மீன்கள்

இக்கட்டுரையில் அகநானூறு 70, 60, 100, 110, 290, 120, 190, 300, 340, 350, 10, 170, 80, 270, 150, 220 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

'வளைந்த படகினையுடைய பரத மக்கள், அழகிய வலைகளைப் பயன்படுத்தி, கொழுவிய கண்களையுடைய அயிரை மீன்களைப் பிடித்து எல்லோருக்கும் பகுத்துக்கொடுத்தனர். இதற்கிடனான கடல்துறையினை

உடையவன் தலைவன்' என்பது 70 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். சங்ககால மக்கள் அயிரை மீனை வேட்டையாடிய தன்மையினை எடுத்துக்காட்டவும் சங்ககால மக்கள் மீனை விரும்பி உண்ட செய்தியை விளக்கவும் இப்பாடல் அடிகளை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

'உப்பிற்கு வாங்கிய நெல்லால் ஆக்கப்பட்ட வெண்சோற்றுடன், அயிரைமீனின் சுவை மிகுந்த புளிங்கறியை அதில் ஊற்றி, கொழுமீன் கருவாட்டையும் அதனுடன் சேர்த்துத் தன் தந்தைக்குக் கொடுப்பாள் இளமகள்' என்பது 60 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். கொழுமீனைச் சங்க மக்கள் உண்ட செய்தியை எடுத்துக்காட்ட இப்பாடலடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

'மேகஞ்சூழ்ந்த இரவில் கடலில் பெரிய அலையின் ஒலி அடங்கிற்று. இக்கடலில் மீன்பிடிக்கச் செல்லும் பரதவர்கள் இருள் நீங்குவதற்குத் தம் தோணியில் விளக்குகளைக் கொளுத்திக்கொண்டு செல்வர்' என்பது 100 ஆம் பாடலடியின் பொருளாகும். கொழுமீனாகிய உணவு உனக்கு ஏற்றனஅல்ல எனத் தலைவனிடம் தலைவி கூறுவது 110 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும்.

கொழுமீனாகிய உணவை உண்ட சிறுவர்கள் வேட்டைக்கு விரித்த நுண்ணிய கயிற்றினாலாகிய வலையில் சேவல்கொக்கு அகப்பட்டது என்பது 290 ஆம் பாடலடியின் பொருளாகும். கொழுமீன் பற்றிய செய்திகளை விளக்க இப்பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

உப்பங்கழியில் உள்ள சுறாமீனின் கொம்பு, கோவேறு கழுதையின் காலில் பட்டதால் கோவேறு கழுதை உப்பங்கழியில் செல்லவியலாது மெலிந்துபோகும் என்பது 120 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். பெரிய உப்பங்கழிகளைக் கொண்ட துறைமுகத்தில் வலிமையுடைய சுறாமீன் குதிரையைத் தாக்கி அடித்த காரணத்தால், தேர்ப்பாகன் குதிரையைப் பூட்டவிழ்த்துத் தேரினை நிறுத்தினான் என்பது 190 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். நீர்த்துறைக்கண் அலைபெருகி வெள்ளம்

மிகுந்ததால் சுறாக்களும் நமக்குப் பகையாயின எனத் தோழி தலைவனிடம் கூறுவது 300 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். ‘கடலில் வேட்டைக்குச் சென்ற பரதவர்கள் கூர்மையான உளியால், மிக்க விசையுடன் எறிந்தமையால் அவர்தம் மீன்பிடி வலைகள் கொல்லும் தொழிலையுடைய சுறாமீன்களால் கிழிக்கப்பட்டன’ என்பது 340 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும்.

பெரிய படகினையுடைய பரதவர்கள் கடற்பரப்பில் தம்மைத் தாக்காதவாறு கொல்லும் தன்மைவாய்ந்த சுறாமீனை ஒதுக்கிவிட்டு நீரில் மூழ்கி வலம்புரிச் சங்கினை எடுப்பர் என்பது 350 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். மேலே இடம்பெற்றுள்ள பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம் நற்றிணை - நெய்தல்திணை ஆய்வுப் பகுதியில் இடம்பெற்றுள்ளது (2.1.4).

பரதவர்கள் மணம் கமழ்கின்ற பாக்கத்தில் ஒதுங்கும் சுறாமீனை அறுத்துத் தாமும் தின்று பக்கத்தில் உள்ள பலருக்கும் கொடுக்கும் தொண்டிப்பட்டினம் என்பது 10 ஆம் பாடலடிகளின் பொருளாகும். வளைந்த காலினையுடைய முதலையொடு கொம்பினை உடைய சுறாமீன் உலாவித்திரியும் கரிய உப்பங்கழி என்பது 80 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும்.

துன்பத்துடன் தன் பெடையொடு இருக்கும் கடற்காக்கை பரதவர்கள் மீன் வேட்டைக்குச் செல்லாத, சுறாமீன் திரிகின்ற கடற்பரப்பின்கண் வெண்மையான இறால்மீனைப் பிடித்து உண்ணும் என்பது 170 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். மேலே இடம்பெற்றுள்ள பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம் நற்றிணை - நெய்தல்திணை ஆய்வுப்பகுதியில் இடம்பெற்றுள்ளது (2.1.4).

விரைந்து செல்லும் இயல்பினையும் வாள்போன்ற கொம்பினையும் உடைய சுறாமீன் திரியும், சங்குகள் மேயும் பெரியதுறை என்பது 150 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். இப்பாடல் அடிகளை ஆசிரியர்

கையாண்டதற்கான காரணம் நற்றிணை - நெய்தல் திணை ஆய்வுப் பகுதியில் குறிப்பிடப்பட்டுள்ளது (2.1.4).

'மீன் இனத்தை வேட்டையாடச் செல்லும் பரதவர்கள், உப்பங்கழியில் மலர்ந்திருக்கம் நீலப்பூக்களைப் புலிநகக் கொன்றைப் பூக்களுடன் சூடும் மென்னிலத்திற்கு உரிய தலைவனே! இவள் தோள்கள் மெலிந்தன. சிவந்த இறால்மீன்கள் துழாவித் திரியும் கடற்கரைச் சோலையில் நின்வரவை எதிர்பார்த்து வருந்திய வண்ணம் தலைவி இருப்பாள் எனத் தலைவனிடம் தோழி கூறுவது' 270 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். இப்பாடலை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம் நற்றிணை - நெய்தல்திணை ஆய்வுப்பகுதியில் இடம்பெற்றுள்ளது (2.1.4).

சிறந்த கோல்களையுடைய அழகிய வலையை வீசிப் பெரிய கழியைத் துழாவிப் பிடித்த வளைந்த முதுகினையுடைய இறால் மீனுடன் பிறமீன் இனங்களையும் ஒருசேரப் பிடித்துக் குவிப்பதற்கான இடம் என்பது 220 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். இறால்மீனின் வளைந்த உடல் அமைப்பை எடுத்துவிளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

## தமிழிலக்கியத்தில் தாவர நூலின் நுட்பங்கள்

இக்கட்டுரையில் அகநானூறு 70, 20 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

"பல்வீழ் ஆலம்போல்" (70)

பல விழுதுகளை உடைய ஆலமரம் என்பது இப்பாடலடியின் பொருளாகும்.

"வீழ்தாழ்தாழை" (20)

வீழும் விழுதுகளை உடைய தாழை என்பது இப்பாடலடியின் பொருளாகும். தாவரங்களின் வேர்களில் 'கிழங்குவேர்' 'விழுதுவேர்' என இருவகைவேர்கள் காணப்படுகின்றன. ஆலம், தாழை ஆகியவற்றின் விழுதுவேர்களை எடுத்துக்காட்ட இப்பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்ககாலத் துறைமுக நகரங்களும் பெயர்களும்

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1993 நவம்பர், டிசம்பர்). சங்ககாலத் துறைமுக நகரங்களின் பெயர்களை விளக்குவது இக்கட்டுரையின் நோக்கமாகும். இதில் அகநானூற்றின் 70 ஆம் பாடல் இடம்பெற்றுள்ளது. சோழருடைய துறைமுகமாகக் கோடிக்கரை சங்கநூல்களில் ஒரேஒரு பாடலில் இடம்பெற்றுள்ளது என்ற செய்தியைக் கூற இப்பாடலை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## 4.1.5 பாலை

செந்தமிழ்ச்செல்வி இதழில் 46 ஆய்வுக்கட்டுரைகளில் இடம்பெற்றுள்ள அகநானூற்றுப் பாலைத்திணைப் பாடல்களின் எண்ணிக்கை 110 ஆகும்.

## சங்க இலக்கியத்தில் பல்லி

இக்கட்டுரையில் 9, 351 ஆகிய அகநானூற்றுப் பாலைத்திணைப்பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

வினைமுடிந்து வரும் தலைவன், வீட்டில் உள்ள பல்லியின் ஒலியைக் கேட்ட தலைவி தன் வரவினை எண்ணி காத்திருப்பாள் எனத் தேர்ப்பாகனிடம் கூறுவது 9 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். என்னைப் பிரிந்து வருந்தும் தலைவிக்கு, என் வரவினைச் சொல்லிப் பல்லி அறிவுறுத்துமோ எனச் செலவு முடித்துவரும் தலைவன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது 351 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். மேலே இடம்பெற்றுள்ள பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம், நற்றிணை - பாலைத்திணை ஆய்வுப் பகுதியில் இடம்பெற்றுள்ளது (2.1.5).

## குரங்கு, முசு, ஊகம்

இக்கட்டுரையில் அகநானூற்றின் 267 ஆம் பாடலின்,

“மைபட் டன்ன மாமுக முசுவினம்
பைதுஅறு நெடுங்கழை பாய்தலின் ஒய்யென”

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன. கரிய மையை மெழுகிவைத்தாற்

போன்ற கரிய முகத்தையுடைய ஆண்குரங்கு, பசுமையற்ற நீண்ட மூங்கிலில் பாயும் என்பது இப்பாடல் அடிகளின் பொருளாகும். முசு என்ற குரங்கு நீண்ட வாலை உடையது. இது காடுகளிலும் பாறைகளிலும் குன்றுகளிலும் வாழும். இதற்கு மைபூசியதுபோல முகம் இருக்கும் என முசு பற்றிய செய்திகளை எடுத்துக்காட்ட மேலே இடம்பெற்றுள்ள பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் யானையங்குருகு

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1971 செப்டம்பர்). யானையங்குருகு பற்றிய செய்திகளை எடுத்து விளக்குவதும் யானையங்குருகு என்ற பறவைக்குப் பிற ஆசிரியர்கள், நிகண்டுகள், அகராதிகள் கூறும் விளக்கங்களை எடுத்துக்காட்டுவதும் இக்கட்டுரையின் நோக்கமாகும். இதில், அகநானூற்றின் 145 ஆம் பாடலின்,

"குஞ்சரக் குரல குருகோடு ஆலும்
துஞ்சா முழவின் துய்த்தியல் வாழ்க்கை
கூழுடைத் தந்தை இடனுடை வரைப்பின்"

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன. தலைவி, தந்தையாரின் மாளிகை நெல்வளம் மிக்கது, ஐம்புல இன்பங்களும் உடையது. அங்கு ஆடிக்களிக்கும் மயில்கள் யானைபோன்று குரல் எழுப்பும் பறவைகளுடன் கூடி ஒலிக்கும் என்பது பாடலடிகளின் பொருளாகும். 'யானையங்குருகு என்ற பறவை கூட்டமாகக் காணப்படும். இது மயிலொடு ஆடும். இதற்குக் குஞ்சரத்தின் குரல் உண்டு. இதை நச்சினார்க்கினியர் 'வண்டாழ்ங்குருகு' என அழைப்பர். இவ்வண்டாழ்ங்குருகை மலையாளத்தில் செம்போத்து என அழைப்பர். இது பிற்காலத்தே 'குக்கில்' என அழைக்கப்பட்டது' என யானையங்குருகு பற்றிய செய்திகளை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் கருங்கால் வெண்குருகும் வெள்ளாங்குருகும் சிறுவெள்ளாங்குருகும்

இக்கட்டுரையில் அகநானூறு 141, 13, 176, 273 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

‘சிறிய தொலைவே பறக்கும் தன்மைவாய்ந்த நிறைந்த கருப்பத்தையுடைய வெண்ணிறப் பறவை வாழையின் ஓங்கிய மடலில் தங்கியிருக்கும். இப்பறவை, அவ்வூரில் உள்ள பெண்கள் உரலில் கதிரை முறித்து வைத்து இடிக்கும் ஓசைக்கு அஞ்சி மாமரத்தின் உயர்ந்த மடலில் தங்கும்’ என்பது **141** ஆம் பாடலடிகளின் பொருளாகும். வாடைக்காற்று, கரும்பின் ஓங்கி உயர்ந்த தண்டின் மீதிருக்கும் வெண்குருகு துன்புற்று வருந்தும்படி வீசும் என்பது **13** ஆம் பாடலின் பொருள்.

வேப்பின் அரும்புபோன்ற நீண்ட கண்களையுடைய நண்டு, இரையை எதிர்பார்த்து நிற்கும் வெண்ணிற நாரையைக் கண்டு அஞ்சும் என்பது **176** ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். ‘வெண்குருகு’ என்ற பெயர் வெள்ளைக்கொக்கிற்குப் பொதுவான பெயர் என விளக்கவும் இது மீன், இறால், நண்டு போன்ற உயிர்களை உண்ணும் எனத் தெளிவுபடுத்தவும் இப்பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார். வெள்ளைக்கொக்கின் பொதுப்பெயரைத் தெரிந்துகொள்ளவும் வெள்ளைக் கொக்கின் உணவுமுறையை அறிந்துகொள்ளவும் மேலே இடம்பெற்றுள்ள பாடல்கள் பெரிதும் உதவுகின்றன.

விண்ணில் எறியப்பட்ட கூதாளியின் மாலைபோலப் பசிய கால்களை உடைய வெள்ளாங்குருகுகள் காணப்படும் என்பது **273** ஆம் பாடலடிகளின் பொருளாகும். வெண்கூதாளத்தை வெண்குருகின் நிறத்திற்கு ஒப்பிட்டு விளக்கவதற்காக இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் மயில்

இக்கட்டுரையில் அகநானூற்றின் **15**, **105** ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

திரண்ட பசுமையான பாகற்பழத்தைத் தின்னும் பறைபோன்ற வட்டமான கண்களைக் கொண்ட தோகையினையுடைய மயில்கள் மிக்கச் சோலை என்பது **15** ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். இக்கட்டுரையில் **105** எனக் குறிக்கப்பட்ட பாடலின் எண் தவறு.

மயில் நெல், தினை, வரகு, பலாப்பழம் போன்றவற்றை உண்டதாகச் சங்க இலக்கியங்கள் கூறுகின்றன என்று எடுத்துக்காட்ட மேலே இடம்பெற்றுள்ள பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் புலி

இக்கட்டுரையில் அகநானூற்றுக்குரிய பாலைத்திணைப் பாடல்கள் 21 இடம்பெற்றுள்ளன. இப்பாடல்களில் 2 பாடல்கள் இரு முறையும் 1 பாடல் மூன்று முறையும் கட்டுரையாசிரியரால் எடுத்தாளப்பெற்றுள்ளன. இப்பாடல்களைப் புலியின் தன்மையினைக் கொண்டும் செயல்பாடுகளைக் கொண்டும் கீழ்வருமாறு அட்டவணைப்படுத்தலாம்.

| வ. எண். | புலியின் தன்மைகளும் செயல்பாடுகளும் | பாடல்கள் |
|---|---|---|
| 1. | புலியின் வேட்டைத் தன்மை | 357, 3, 97, 97, 249, 147, 107, 277, 155, 29, 99 |
| 2. | புலியின் பய உணர்வு | 381 |
| 3. | புலியின் வாழிடமும் குட்டிபோடும் தன்மையும் | 251, 147, 147 |
| 4. | புலிக்கு உவமை | 205, 205 |
| 5. | புலி - யானை போர்த்திறம் | 347, 169, 145, 221, 251, 307 |

‘புலியானது களிற்றுயானையைத் தன் வலப்பக்கம் வீழுமாறு அடித்துக் கொன்று, அதன் உடலைக் கிழித்து இழுத்துச் செல்லும். பின்னர் மூரி நிமிர்ந்து புலால்நாறும் உடலோடு புற்கள் மீது புரழும்’ என்பது 357 ஆம் பாடலடிகளின் பொருளாகும். ‘மலையுச்சியின்கண் சிறப்புவாய்ந்த, பக்கமலையில், உள்ள மரையாவை வலப்பக்கம் விழும்படிப் புலி கொன்று, அதன் குருதியை உண்டு அதனைக் கைவிட்டு நீங்கும். அப்புலால் உணவை எருவைச் சேவல் கள்வரைப்போல் கவர்ந்து செல்லும் இத்தகைய கொடுமையான மரங்கள் நிறைந்த வழி’ என்பது 3 ஆம் பாடலடிகளின் பொருளாகும். ‘கள்ளிக்காட்டில் துள்ளி ஓடும் புள்ளிமானைப் பற்றித் தின்றபுலி, விட்டுச்சென்ற தசைகளைப் பெரிய கழுகுகளும் பருந்துகளும் தின்னும். இக்காட்சி காட்டரண்களில் உள்ளவர்களைக் கொன்று பசுவைக்

கவர்ந்து, அப்பசுக்களை அறுத்துத்தின்னும் வெட்சி வீரர்களைப் போன்று இருக்கும்' என்பது 97 ஆம் பாடலடிகளின் பொருளாகும்.

புலி வேட்டையாடும் போது இடப்புறமாக விழும் உயிர்களை உண்ணாது என விளக்கி, இந்நிகழ்வு கற்பனைச் செய்தி என்று கூற ஓரிடத்திலும் புலிவேட்டையாடிய உணவை வேட்டையாடிய இடத்தில் உண்ணாது என்று விளக்க மற்றொரு இடத்திலும் இப்பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

'கோடைக்காற்று, ஒலியை எழுப்பி வீசும். இவ்வொலியைக் கேட்ட மான்கள், மலையில் உள்ள புலி மானைப் பற்றியதால் உண்டான ஒலியோ! என எண்ணி அலறி ஓடும் என்பது' 249 ஆம் பாடல் அடியின் பொருளாகும். 'பெண்புலியானது உயர்ந்த மலையின் பக்கமலையின்கண் பாறையின் பிளப்பாகிய குகையில் குட்டிகளை ஈன்று, பசிமிக்கதாய் இருக்கும். அதன் பசியைப் போக்க எண்ணிய ஆண்புலி, ஆண்மானினது குரலினைக் கூர்ந்து கேட்கும்' என்பது 147 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். 'பெரிய புலியானது ஆண்மானை அடித்துக் கொன்று, கருங்கற்களையுடைய அகன்ற இடத்தில் கிடத்தி அதனை வயிறு நிறையுமளவு தின்று கைவிட்டுப் போகும்' என்பது 107 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். மானைப் புலி விரும்பி உண்ணும். மானின் குரலைக்கேட்டுப் புலி வேட்டையாடும் எனப் புலியின் மான்வேட்டையை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

'தயிர்கடையும் ஓசையைப் போன்ற குரலையும் வாள்போன்ற கோடுகளையும் உடைய வேங்கை, தன் பெண்புலியின் பசியைப் போக்கக் கரியநிறமும் பனைமரத்தின் சிலம்புபோன்ற மயிரையும் சிறிய கண்ணையும் உடைய பன்றி வரும்வழியினைப் பார்த்திருக்கும். இத்தகைய காட்டில் உள்ள மரத்தில் வழிப்போகும் பயணிகள் தங்கிச்செல்வர்' என்பது 277 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். காட்டுப்பன்றியைப் புலி வேட்டையாடும் தன்மையினை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

கோவலர்கள் தாங்கள் தோண்டிய கிணற்றிலிருந்து நீரை முகந்து சிறிய குழியில் நிறைப்பர். இந்நீரை உண்ண யானையும் புலியும் கோடைக்காலத்தில் வரும் என்பது 155 ஆம் பாடலின் பொருளாகும். புலி தனக்கு உணவாகும் விலங்குகள் நீரைத் தேடிச்செல்லும்போது அவற்றைப் பின்தொடர்ந்து பதுங்கிச் சென்று வேட்டையாடும் என்ற கருத்தை எடுத்து விளக்க இப்பாடலை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

'புலி தான் தொடங்கிய வினையைக் கைவிடாது செய்யும் தளர்ச்சியற்ற வலிய முயற்சியினை உடையது. அதிகம் பசித்து உயிர் வருந்துவதாயினும், தான் வீழ்த்திய களிறு இடப்பக்கம் வீழ்ந்தால் அதனை உண்ணாது. இப்புலி போன்ற ஊக்கத்துடன் தலைவன் பொருள்தேடச் செல்வான்' என்பது 29 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். புலி வேட்டையாடும் போது இடப்புறமாக வீழும் உயிர்களை உண்ணாது என விளக்கி, இச்செய்தி கற்பனையானது என எடுத்துக்காட்ட மேலே இடம்பெற்றுள்ள பாடல்அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

'வாளின் வடிவு போன்ற கோடுகளையுடைய புலியின் கூரிய நகத்தினைப்போன்ற சிவந்த மொட்டவிழ்ந்து மலர்ந்த முள்முருங்கையில் வண்டுகள் மொய்த்த வாடிய பூக்கள் பரவிக்கிடக்கும்' என்பது 99 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். புலியின் கால்களில் காணப்படும் வலிமையான நகங்களை எடுத்துக்காட்ட மேலே இடம்பெற்றுள்ள பாடல்அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

'ஆளி' எனும் விலங்கு, வலிமைபொருந்திய ஆண்யானையின் தலைவன் வருந்தும்படி, அதன் நிமிர்த்த வெண்மையான கொம்பை பறித்துக் குருத்தைத் தின்னும். அத்தகைய அச்சம்மிக்க காடு என்பது' 381 ஆம் பாடலடிகளின் பொருளாகும். 'ஆளி' என்ற விலங்கின் வேட்டைத்தன்மையையும் புலி, யானை ஆகியன ஆளியைப் பார்த்துப் பயந்து செல்லும் தன்மையையும் எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

தேக்குமரங்கள் செறிந்த கானம் என்பது **251** ஆம் பாடலடியின் பொருளாகும். உயர்ந்த மலை, அதன் சாரலில் முடக்கமான இடத்தில் ஒரு பாறையின் பிளப்பாகிய குகையில் குட்டிகளை ஈன்ற பெண்புலிக்கு ஆண்புலி இரைதேடிச் செல்லும் என்பது **147** ஆம் பாடலடியின் பொருளாகும். புலி, தேக்குமரங்கள் நிறைந்த சோலை, மறைவான மலைபிளப்பு போன்ற பல இடங்களில் வாழும் என்ற கருத்தை எடுத்தக்காட்ட மேலே இடம்பெற்றுள்ள பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

'பெண்புலி, மலையின் பக்கமலையில் உள்ள பாறைப் பிளப்பாகிய குகையின் இடுக்கில் பிடாமரத்தோடு ஒருங்கே மலர்ந்த, வேங்கை மரத்தின் மணம்கமழும் பூவோடு கூடிய இலையைத் தனித்தனிக் கூறுகட்டி வைத்ததுபோலக் குட்டிகளை ஈனும். இப்பெண்புலிக்கு இரைதேட ஆண்புலி செல்லும்' என்பது **147** ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். புலி புதர்நிறைந்த குகையில் மறைவான இடத்தில் குட்டிபோடும் என விளக்கவும் புலி இரண்டு அல்லது மூன்று குட்டிகளை ஈனும் தன்மையுடையது என எடுத்துரைக்கவும் இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

'ஆண் குரங்கின் கூட்டம் வரிகளையுடைய புலியின் தோல்போன்ற வேங்கையின் மணநாளைக் காட்டும் பூக்கள் உதிருமாறு வேங்கைமரத்தில் ஏறித் தம் இனமாகிய மந்திக்கூட்டத்தைக் கூப்பிட்ட வண்ணம் ஆண்டும் ஈண்டும் தாவித்திரியும்' என்பது **205** ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். புலியைக் கண்டு குரங்குகள் அஞ்சும் தன்மையுடையன என எடுத்துக்காட்ட ஓரிடத்திலும் புலியின் தோளுக்கு வேங்கைப் பூவை உவமைகூற மற்றொரு இடத்திலும் இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

'ஒளிபொருந்திய நிறமுடைய வலிமை மிக்க புலியானது, களிற்றி யானையின் மீது பாயும், இதனால் களிற்றுயானை ஒலிஎழுப்பும். அவ்வொலியைக் கேட்ட பிடியானை கன்றினைவிட்டு அஞ்சி ஓடிப் பின்னர் காணாதுபோன குழந்தையைத் தேடியலையும் பெண்டிர் போலத்

தன் கன்றினைத் தேடித் தன் தலையைக் கன்றின் தலையில் வைத்துக் குரலிட்டு அழையும்' என்பது 347 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். புலி, பெண்யானையைக் கொல்வது அரிது. சில சமயங்களில் ஆண்யானையைப் புலியும், புலியை ஆண் யானையும் கொல்லும் என விளக்கவும் யானைத் தனக்கு அச்சத்தாலோ, சினத்தாலோ குரலிடும்போது தும்பிக்கையைத் தலைக்குமேலே வைத்துக் குரலிடும் எனத் தெளிவுபடுத்தவும் இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார். புலியானது கொன்று உண்டு, கைவிட்டுப்போன, எஞ்சிய பெரிய யானையின் ஊன் என்பது 169 ஆம் பாடலடிகளின் பொருளாகும். யானையைக் கொன்று உண்ணும் தன்மையை எடுத்துக்காட்ட இப்பாடல்அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

'வாள்போன்ற வரியினையுடைய புலியுடன் போர்செய்து புண்பெற்ற யானைகள், புள்ளிகள் சிதைவுற்ற முகத்தினை உடையனவாய்க் கருதி ஒழுக, நெடியமலைச் சிகரங்களின் உயர்ந்த உச்சியின் கண் இடிக்கும் இடிபோல் முழங்கும்' என்பது 15 ஆம் பாடல்அடிகளின் பொருளாகும். 'மழைபெய்யாததால் மூங்கில்கள் அழகுஇழந்து காணப்படும் பாலைநிலத்தில் பெரிய வாயினையுடைய வேங்கை, களிறாகிய இரை தப்ப, ஆராச்சினம்கொண்டு முழக்கம் செய்ய, அம்முழக்கம் கேட்ட கரிய பெண்யானைகள் அஞ்சி நிலைகெட்டு ஓடும்' என்பது 221 ஆம் பாடலடிகளின் பொருளாகும். 'வெண்மையான கொம்புகளையுடைய தலைமை வாய்ந்த யானை தன்வாயினின்று தப்பிச்சென்ற புலியைப் பெருநிலம் குழியும்படிக் குத்திக்கொன்று, மனச்செருக்கால் பாதுகாவல் ஏதுமின்றித் தனித்துக் கிடக்கும்' என்பது 251 ஆம் பாடலடிகளின் பொருளாகும்.

வேங்கையின் பகை கொல்லும் வலிமையை அழித்த உயர்ந்த நல்லயானை என்பது 307 ஆம் பாடல்அடிகளின் பொருளாகும். புலி, யானையை வேட்டையாடுதலையும் யானை புலியைக் கொல்லும் தன்மையையும் எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் கேழல்

இக்கட்டுரையில் அகநானூற்றின் 277, 223, 88, 21 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

கரிய நிறம் கொண்ட பனைமரத்தின் சிலம்புபோன்ற தடித்த மயிரினையும் சிறிய கண்ணினையும் உடைய பன்றி என்பது 277 ஆம் பாடலடிகளின் பொருளாகும். காட்டுப்பன்றியின் முதுகிலும் கழுத்திலும் காணப்படும் மயிர் அமைப்பை எடுத்து விளக்க 277 ஆம் பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

"வளைமருப்பு உறழும் உளைநெடும் பெருங்காய்
நனைமுதிர் முருக்கின் சினைசேர் பொங்கர்" (223)

பன்றியின் வளைந்த கொம்பினைப் போன்ற தூய்மை உடைய பருத்த காயினையும் முதிர்ந்த அரும்புகளையும் கொண்ட முருக்க மரத்தின் கிளைகள் கல்லின்மீது படிந்து கிடக்கும் என்பது பாடல் அடிகளின் பொருளாகும். இப்பாடல்அடிகளை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம் அகநானூறு - குறிஞ்சித்திணை ஆய்வுப்பகுதியில் இடம்பெற்றுள்ளது (4.1.1).

'பிளந்தவாயினை உடைய பல்லியின் ஓசையைக்கேட்ட பன்றி கொல்லையினை அணுகிக் கதிர்களைத் தின்னவரும். இப்பன்றியினை ஓட்டுவதற்கு அதுவரும் வழிநோக்கி, வலிய கையை உடைய கானவர் விளக்கினைக் கொளுத்தி வைப்பர்' என்பது 88 ஆம் பாடலடிகளின் பொருளாகும். காட்டுப்பன்றி தினைப்பயிரை உண்ணவரும் முறையினையும் அப்பன்றியை விரட்டும் மக்களின் செயல்பாட்டையும் எடுத்துக்காட்ட இப்பாடலடிகளை ஆசிரியர் எடுத்தாண்டுள்ளார்.

'ஆண்பன்றியைச் செந்நாய் தாக்கி வீழ்த்தும். இதைக் கண்ட பெண்பன்றி அச்சத்தால் ஓடும்போது ஈந்தில் மோதும் இதனால் ஈந்தின் பசிய குலையை உடைய செங்காய்கள் கீழே உதிரும் என்பது' 21 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். ஈச்சமரம் முதலிய குறுமரங்கள் புதர்களாக உள்ள இடத்திலும் குறுங்காடுகளிலும் குன்றுச்சாரலிலும் காட்டுப்பன்றி

வாழும் தன்மையுடையது எனக் காட்டுப்பன்றி வாழும் இடத்தை எடுத்துக்காட்ட மேலே இடம்பெற்றுள்ள பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் இரம் என்ற மரம்

இக்கட்டுரையில் அகநானூற்றின் 125 ஆம் பாடலின்,

"இரங்கா ழன்ன வரும்புமுதி ரீங்கை"

எனும் பாடலடிகள் இடம்பெற்றுள்ளன. இரவமரத்தின் கொட்டையைப் போன்ற அரும்புகள் முதிர்ந்த வேங்கை மரம் என்பது பாடலடியின் பொருளாகும். 'இரம்' என்ற மரத்தின் விதையை 'இரங்காழ்' என அழைப்பர் என விளக்க இப்பாடலின் அடியை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் காக்கை

இக்கட்டுரையில், அகநானூற்றின் 313, 319, 327 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

'தலைவன் பொருள்தேடச் செல்லும் பாலைநிலத்தில் உள்ள ஆறலைக்கள்வர்கள் வழிபோக்கர்களைக் கொல்வர். இவ்வழிப்போக்கர்களின் உடலில் ஒழுகும் குருதியைக் காக்கை உண்டு, மலையிடத்தே தங்கும் எனப் பாலைநிலக் கொடுமையைத் தலைவியிடம் தோழி கூறுவது' 313 ஆம் பாடலின் பொருளாகும். 'நீவீர் செல்லும் பாலைநிலப்பரப்பு, ஆறலைக்கள்வர்களின் அம்பினால் இறந்துபட்ட வழிப்போக்கர்களின் பிணங்களைக் காக்கைக் கவர்ந்து உண்ணும் பாழ்பட்ட பகுதியாகும் எனத் தலைவனின் செலவு அறிந்த தோழி தலைவனுக்குக் கூறுவது' 319 ஆம் பாடலடிகளின் பொருளாகும்.

கருமைநிறமும், நீலமணிபோன்ற கண்ணும் உடைய காக்கை, பாலைநிலத்தில் காணப்படும் பிணங்களைக் கவர்ந்து உண்ணும் என்பது 327 ஆம் பாடலடிகளின் பொருளாகும். அண்டங்காக்கைகள் பிணங்களை விரும்பி உண்ணும் தன்மையுடையன என விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் பாம்பு

இக்கட்டுரையில் அகநானூறு 257, 349, 391 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

"அரில்இவர் புற்றத்து அல்கிரை நசைஇ
வெள்ளரா மிளிர வாங்கும்
பிள்ளை எண்கின் மலைவயினானே" (257)

கரடிக்குட்டிகள் இரையினைப்பெற, வெண்ணிறப்பாம்புகள் நெளியும் படியாகப் புற்றாஞ் சோற்றினை அகழ்ந்தெடுக்கும் என்பது பாடல்அடிகளின் பொருளாகும். இப்பாடலை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம் நற்றிணை - பாலைத்திணை ஆய்வுப்பகுதியில் குறிப்பிடப்பட்டுள்ளது (2.1.5).

களிற்றியானை தனது வரிகள் பொருந்திய நெற்றியில் வைத்த கையானது, மலையின்மேல் ஊர்ந்துசெல்லும் பாம்புபோல் காணப்படும் என்பது 349 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். மதங்கொண்ட ஆண் யானை தன்வாய் நிறையுமாறு புகுத்திய பெரிய கை, மலைக்குகையினுள் புகும் பாம்புபோல் தோற்றம் தரும் என்பது 391 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். மலைப்பாம்பின் கரிய உருவம், தோற்றம், யானையின் துதிக்கை போன்று இருக்கும் என எடுத்துரைக்க இப்பாடல்அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க நூல்களில் உகாய்

இக்கட்டுரையில் 293 ஆம் அகநானூற்றுப் பாடல் இடம்பெற்றுள்ளது.

'உகாய்மரத்தில் உள்ள குயிலின்கண்போன்ற காய்கள் முற்றிப் பொற்காசு போன்ற நிறமுடைய கனிகள் தோன்றி, மரத்தின் கிளையில் இருந்து உதிர்ந்து விழும்' என்பது பாடல் அடிகளின் பொருளாகும். உகாய்மரத்தின் காய், கனி, பற்றிய செய்திகளை எடுத்துக்காட்ட இப்பாடல்அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்கநூல்களில் சிள்வீடு

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1980 மே). 'சிள்வீடு' என்ற பூச்சி ஓசையிடும் காலம், அது வாழும் இடம் போன்ற

சிள்வீடு பற்றிய பல கருத்துகளை எடுத்து விளக்குவது இக்கட்டுரையின் நோக்கமாகும். இதில் அகநானூறு 89, 145, 303 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

'தலைவன், தலைவியை உடன்போக்கில் அழைத்துச்சென்ற வழியானது, ஞாயிற்றின் வெண்மைநிறைந்தது; நீர் அற்றது. பேராந்தைச்சேவல் ஒலிசெய்யும் வேலமரத்தில் சிள்வண்டுகள் ஒலி செய்யும். வண்ணார்கள் எடுக்கும் உவர்மண் ஒழிந்து கற்கள் காணப்படும் எனச் செவிலித்தாய் எண்ணி வருந்துவது '89' ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். 'சிள்வண்டுகள் ஒலிக்கும், காய்ந்த பொந்து பட்ட அடியினையுடைய 'வற்றல்' மரத்தில், ஞாயிற்றின் வெப்பம் தாங்காமல் ஓந்தியானது ஏறி நிற்கும் பாலைநிலம்' என்பது 145 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும்.

'வற்றல்' மரத்தில் பொருந்தியுள்ள சிள்வீடு எனும் வண்டுகள் உப்பு வணிகருடைய எருதுகளின் கழுத்தில் கட்டிய மணிபோல ஒலிக்கும் என்பது 303 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். இப்பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம் நற்றிணை - பாலைத் திணை ஆய்வுப்பகுதியில் குறிப்பிடப்பட்டுள்ளது (2.1.5).

## சங்க நூல்களில் ஆலம்

இக்கட்டுரையில் அகநானூறு 251, 287, 319, 385, 319, 251, 287 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

'விரைந்தோடும் தேரினையுடைய கோசர்கள் பழமை பொருந்திய ஆலமரத்தடியில், இனிய ஓசையையுடைய முரசினைக் குறுந்தடியால் அடித்து ஒலிஎழுப்பி, பகைவர்மேற்சென்று போர் செய்வர்' என்பது 251 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். ஆலமரம் நீண்டகாலம் வாழும் தன்மையுடையது. எனவே இம்மரத்தைத் தொன்மூதலாம் என அழைப்பர் என விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

பொரிந்த அடியினையுடைய ஆலமரத்தில் கோடைக்காற்று வீசுவதால் அதன்விழுதுகள் அசையும் என்பது 287 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். நீலமணி போன்ற நிறமுடைய காக்கை, விழுதுகளை உடைய

ஆலமரத்தில் ஏறி இருந்து எயினர்களால் கொல்லப்பட்ட வழிப்போக்கர்களின் பிணங்களை உண்ணும் என்பது 319 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். ‘உயர்ந்த கற்பாறைகளும் மூங்கிலுடன் நெல்லிமரங்களையும் கொண்ட பக்கமலையில் உள்ள ஆலமரத்தின் அசைகின்ற விழுதுகளும் காணப்படும். காட்டு வழியைத் தலைவனுடன் கடந்த தலைவி, தலைவனைத் திருமணம் செய்துகொள்வாள்’ என்பது 385 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். ஆலமரம் பல விழுதுகளை விடும் தன்மை உடையது என எடுத்துக்காட்ட இப்பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

நீலமணி போன்ற நிறமுடைய காக்கை, விழுதுகளை உடைய ஆலமரத்தில் ஏறி இருந்து, எயினர்களால் கொல்லப்பட்ட வழிப்போக்கர்களின் பிணங்களை உண்ணும் என்பது 319 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். ஆலமரத்தின் பழத்தைக் காக்கை, பச்சைப்புறா, புறா, மைனா போன்ற பறவைகள் விரும்பி உண்ணும் என விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

விரைந்தோடும் தேரினையுடைய கோசர்கள் பழமைபொருந்திய ஆலமரத்தடியில் தங்குவர் என்பது 251 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். விழுதுகளை உடைய ஆலமரம் கிளைகளைப் பரப்பி வளர்வதால் அதன் நிழலில் போர்ப்படைகளும் தங்கும் என விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

பொரிந்த அடியினையுடைய ஆலமரத்தில், கோடைக்காற்று வீசுவதால் அதன் விழுதுகள் அசையும் என்பது 287 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். “ஆலமரத்தைச் செடிநூலில் Ficus Bengalenis என்றும் அழைப்பர். இது ஆங்கிலத்தில் Banyan tree என்றும் அகலமாக வளர்வதால் ‘ஆலம்’ என்றும் அழைப்பர் என ஆலமரம் பற்றிய செய்திகளை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

### சங்க நூல்களில் உன்னமும் ஆவிரையும்

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1984 பிப்ரவரி). உன்னம், ஆவிரை வளரும் இடம், பூவின் நிற அமைப்பு போன்ற

செய்திகளை எடுத்து விளக்குவது இக்கட்டுரையின் நோக்கமாகும். இதில் அகநானூறு 301 ஆம் பாடலின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

"முளரித் தீயின் முழங்குஅழல் விளக்கத்துக்
களரி யாவிரைக் கிளர்பூங் கோதை
வண்ண மார்பின் வனமுலைத் துயல்வர"

கூத்தர்களின் மங்கையர் காட்டுத்தீயின் அழல் ஒளியில் தொடுக்கப்பட்ட ஆவிரைச்செடியின் மாலையைத் தம் மார்பகத்தில் அணிந்துகொள்வர் என்பது பாடலடிகளின் பொருளாகும். 'ஆவிரை என்றசெடி களர்ப்பாங்கான நிலத்திலும் வறட்சியான இடங்களிலும் வளரும். இது பொன்னிறமாகக் காணப்படும். இப்பூவை எருக்கம் பூவுடனும் பூளைப்பூவுடனும் சேர்த்து கண்ணியாகக் கட்டி மடலேறும்போது பயன்படுத்துவர். ஆவிரையை இக்காலத்தில் 'ஆவாரம்பூ' என அழைப்பர்' என ஆவிரை பற்றிய செய்திகளை எடுத்துக்காட்ட இப்பாடல்அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் நரி

இக்கட்டுரையில் அகநானூறு 375, 193, 337 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

'தலைவன் பொருள்தேடச் சென்ற வழியானது கொடுந்தொழிலை உடைய ஆறலைக்கள்வர்கள் வழிப்போக்கர்களைக் கொள்வர். இக்கள்வர்களால் கொல்லப்பட்ட பிணங்களை நரி தின்னும். அங்குள்ள யாமரத்தில் ஆண்பருந்துகளும் காணப்படும். இவ்வாறு கொடுமைநிறைந்தது எனத் தோழி தலைவனுக்குக் கூறுவது' 375 ஆம் பாடல்அடிகளின் பொருளாகும். நரி இனத்தில் இருவகை உண்டு. ஒன்று குறுநரி, மற்றொன்று கணநரி என விளக்கவும் இக்கணநரி கூட்டமாக உணவுதேடும். இது பிணங்களையும் பெரிய விலங்குகளால் வேட்டையாடி உண்டுவிட்டுச் சென்ற கழிவுகளையும் தின்னும் என எடுத்துக்காட்டவும் இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

‘கோசர்களால் கொல்லப்பட்ட வழிப்போக்கர்களின் உடலை உண்ட கழுகு, அவ்விறைச்சியைத் தன் குஞ்சுக்கு ஊட்ட எண்ணியபோது அக்குஞ்சின் வாயில் இருந்து வழுக்கிய ஊண்துண்டு, முதுநரிக்கு உணவாகும்’ என்பது 193 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். மலையின்றிப் பாலையாக மாறிய வழியில் கள்ளிமரத்தின் நிழலில் இரத்தம் சொட்டும் உடலைத்தின்னும் ஒரு ஆண் நரி காணப்படும் என்பது 337 ஆம் பாடல்அடிகளின் பொருளாகும்.

நரி, பிணங்களைத் தின்னும் தன்மையுடையது. இது இரவில் ஊளையிடும் சிறப்பும் கொண்டது என விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் ஓமை

இக்கட்டுரையில் அகநானூறு 3, 5, 21, 117, 191, 223, 297 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன. இப்பாடல்களை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம் நற்றிணை - பாலைத்திணை ஆய்வுப் பகுதியில் குறிப்பிடப்பட்டுள்ளது (2.1.5).

## சங்க நூல்களில் கரந்தை

இக்கட்டுரையில் அகநானூறு 269 ஆம் பாடலின்,

“நறுவிரை மஞ்சள்ஈர்ம்புறம் பொலிய
வம்புகொண்டறுத்த ஆர்நார் உரிவையின்
செம்பூங் கரந்தை புனைந்த கண்ணி”

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன. பசுக்களை மீட்டுப் போரில் இறந்த வீரர்களுக்குக் கல்லில் உருவம் செதுக்கி அவ்வுருவத்துக்கு மஞ்சள் சாந்துபூசி, கரந்தைப்பூ மாலையைச் சூட்டுவர் அக்கால மக்கள், என்பது பாடல் அடிகளின் பொருளாகும். கரந்தைச்செடியைப் பற்றி எடுத்து விளக்க இப்பாடல்அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க நூல்களில் நாகமும் வழையும்

இக்கட்டுரையில் அகநானூறு 177 ஆம் பாடலின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

தலைவன் பொருள்தேடச் சென்ற வழியானது, மூங்கில் நிறைந்த பக்கமலையில் உள்ள சுரபுன்னையின் உச்சி வாடும்படி ஞாயிறு சுட்டெரிக்கும் பெருகிய பரற்கற்கள் பொருந்திய வழியாகும் எனத் தலைவியிடம் தோழி கூறுவது பாடல் அடிகளின் பொருளாகும். "வழை' என்ற இம்மரம் மலைகளிலும் மலைச்சாரலிலும் காணப்படும். இம்மரத்தை உரையாசிரியர்கள் சுரபுன்னை என அழைப்பர். இது கடற்கரையில் வாழும் புன்னையினத்தைச் சார்ந்தது. கடற்புன்னையில் இருந்து வேறுபடுத்த இம்மரத்தைச் சுரபுன்னை என அழைப்பர்' என 'வழை' மரம் பற்றிய செய்திகளை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்கநூல்களில் ஆமை

இக்கட்டுரையில் அகநானூற்றின் **117, 361** ஆகிய பாடல்கள் இடம்பெற்றுள்ளன.

நெடிய அடிப்பகுதியை உடைய மாமரத்தின் முற்றிக் கனிந்து உதிரும் பழத்தைப் பொய்கையில் உள்ள ஆமை தன் பார்ப்போடு கவர்ந்து உண்ணும் என்பது **117** ஆம் பாடல் அடிகளின் பொருளாகும்.

வாடாத பூச்சூடிய வானோர்கள், உண்ணும்பொருட்டுத் தீ வளர்க்கும் வேள்விக் குண்டத்தைச் சார்ந்து வைக்கப்பெற்ற ஆமை, தான் முன்பிருந்த குளிர்ந்த பொய்கையினை விரும்பும் என்பது **316** ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். ஆமை வகைகளில் ஒன்றான குளத்தாமையை வேள்விச் சடங்கிற்குப் பயன்படுத்துவர் என விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க நூல்களில் ஓந்தி

இக்கட்டுரையில் அகநானூறு **125, 145** ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

இரவமரத்தின் கொட்டையைப் போன்ற அரும்புகள் முதிர்ந்த ஈங்கையில் ஆலங்கட்டி போன்ற பூக்கள் உதிரும். ஓந்தியின் தாடி போன்று

குவளை மொட்டுகள் மலரும் என்பது 125 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும்.

சிள்வண்டுகள் ஒலிக்கும் காய்ந்த பொந்துபட்ட அடியினையுடைய 'வற்றல்' மரத்தில் ஞாயிற்றின் வெப்பம் தாங்காமல் ஓந்தியானது ஏறும் என்பது 145 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். இப்பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம் நற்றிணை - பாலைத்திணை ஆய்வுப்பகுதியில் குறிப்பிடப்பெற்றுள்ளது (2.1.5).

## சங்க நூல்களில் மூதாய்

இக்கட்டுரையில் அகநானூற்றின் 139 ஆம் பாடல் இடம்பெற்றுள்ளது. 'முதுகில் வெண்புள்ளிகளையும் முறுக்கிய கொம்புகளையும் உடைய ஆண்மான், பெண்மானுடன் சேர்ந்து நீரைப் பருகி, அறுகம் புல்லை மேய்ந்து, பிடமரநிழலில் துய்க்கும். தண்ணீர் வடிந்த ஈரமுடைய இடத்தில் இந்திரகோபப்பூச்சிகள் பரப்பி வைத்தாற்போலக் காணப்படும் கார்கால நிகழ்வுகளைக் கண்ட தலைவி, பொருளீட்டச் சென்ற தலைவனை நினைத்துத் தோழியிடம் கூறுவது' பாடல் அடிகளின் பொருளாகும். இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம் நற்றிணை - பாலைத்திணை ஆய்வுப்பகுதியில் குறிப்பிடப்பட்டுள்ளது (2.1.5).

## சங்க இலக்கியத்தில் முதலையும் இடங்கரும் கராமும்

இக்கட்டுரையில் அகநானூற்றின் 301, 03 ஆகிய பாடல்கள் இடம்பெற்றுள்ளன.

நீரில் வாழும் முதலையின் அகலத்திறந்த வாய் போன்ற, பாயால் வேயப்பெற்ற ஒலிசெய்யும் சக்கரத்தை உடைய வண்டியில் கூத்தர்கள் அமர்ந்து செல்வர் என்பது 301 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். முதலையின் தோலைப்போன்ற கரிய அடிப்பகுதியையும் பெருங்கிளையையும் கொண்ட ஓமைமரம் என்பது 03 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். முதலைகள் கரையில் வந்து வாயைத் திறந்துகொண்டு வெயில்காயும் தன்மையுடையது என விளக்கவும் முதலையின் தோலிற்கு ஓமை மரத்தை எடுத்துக்காட்டவும் இத்தோலைக்கொண்டு பெட்டிகளும், பைகளும்

*செய்வர் என முதலைத் தோலின் பயன்பாட்டை எடுத்துக்கூறவும் இப்பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.*

## சங்க நூல்களில் மீன்கள்

*இக்கட்டுரையில் அகநானூறு 313, 187 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.*

*தலைவன் பொருளீட்டச் சென்ற பாலைவழியை நினைத்த தலைவி ஆழநீரில் மூழ்கி ஒன்றொடொன்று போரிடும் அருங்கயல் மீனைப்போல் நீர்சொரிவாள் எனத் தோழி கூறுவது 313 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். கயல்மீனை இக்காலத்தில் வெண்கெண்டை எனக் கூறுவர். இதன் உடல்வெண்மையாகவும் விளிம்பு கருமையாகவும் காணப்படும். இம்மீனை மையுண்ட கண்களுக்கு ஒப்புமைசெய்வர் என எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.*

*'வாள்போன்ற கூரிய பற்கள் கொண்ட சுறாமீன்கள் திரியும் கடலில் வேட்டைக்குப் பரதவர்கள் பயன்படுத்தும் தோணியைப் போல பாலைநிலத்தில் உள்ள யானை இரவெல்லாம் கண் அயராது திரிந்து காலைநேரத்தில் செயலொடுங்கி, அசைந்து அசைந்து உறங்கும்' என்பது 187 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம் நற்றிணை - பாலைத்திணை ஆய்வுப்பகுதியில் இடம்பெற்றுள்ளது (2.1.5).*

## குறிஞ்சிப்பாட்டில் வரும் செடிகொடி மரப்பெயர்கள்

*இக்கட்டுரையில் அகநானூறு 391, 157, 261, 393, 269, 149, 237, 23, 34, 344, 219, 223, 229, 277, 295 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.*

*'அதிரல் கொடியை மோசிமல்லிகை என்றும் புனலிப்பூ என்றும் உரையாசிரியர்கள் கூறுவர். இது பல பூக்களைப் பூக்கும். இதன் மொட்டினைக் குயிலின் மூக்கிற்கும் காட்டுப்பூனையின் பல்லிற்கும் ஒப்பிடுவர். இக்கொடி முதுவேனில் காலத்தில் பூக்கும்' என அதிரல்*

கொடியைப் பற்றி விளக்க 391, 157, 261, 393 ஆகிய பாடல்களின் எண்களை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

கரந்தைச் செடி பற்றிய செய்திகளை விளக்க 269 ஆம் பாடல் எண்ணை ஆசிரியர் கையாண்டுள்ளார். 'கள்ளி' என்ற செடியைப் பற்றிய செய்திகளை எடுத்துக்காட்ட 149 ஆம் பாடல் எண்ணை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார். 'குரவம்' என்ற செடி கொத்தாகப் பூக்கும் இது பளபளப்பான இலைகளை உடையது. இதன் பூக்களின் சூலகம் நீண்டுகொண்டிருப்பதால் இதன் பூவை நல்லபாம்பின் பல்லிற்கு ஒப்பிடுவர் எனக் 'குரவம்' செடி பற்றிய கருத்தை எடுத்துக்கூற 237 ஆம் பாடல் எண்ணை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

'பிடவம்' முள்ளுடையதாகவும் வெண்மையான தளிருடையதாகவும் காணப்படும். இது மழைக்காலத்தில் பூக்கும் எனப் பிடவம் பற்றிய செய்திகளை விளக்க 23, 34, 344 ஆகிய பாடல்களின் எண்களை ஆசிரியர் கையாண்டுள்ளார். பகன்றை என்ற கொடி வெள்ளித்தகடுகள் போல் பூக்கும் குளத்தின் அருகிலும் சதுப்புநிலங்களிலும் வாழும் தன்மையுடையது என விளக்க 219 ஆம் பாடல் எண்ணை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

'பலாசம்' என்ற முருக்கச் செடிப் பூவின் அழகை எடுத்துக்காட்ட 223, 229, 277 ஆகிய பாடல்களின் எண்களை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார். 'வஞ்சி' என்ற மரத்தின் பூ செவ்வரி உடையதாக இருக்கும். இது கார்காலத்தில் பூக்கும் தன்மையுடையது என விளக்க 295 ஆம் பாடல் எண்ணை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

### சங்க நூல்களில் வெட்சி

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1986 அக்டோபர்). வெட்சிப்பூவின் சிறப்பு, வரகு போன்ற அதன் அமைப்பு ஆகிய வெட்சி பற்றிய பல கருத்துகளை எடுத்துக்காட்டுவது இக்கட்டுரையின் நோக்கமாகும். இதில் அகநானூறு 133 ஆம் பாடலின்,

"இதல்முள் ஒப்பின் முகைமுதிர்வெட்சி"

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன. 'சிவல்' எனும் ஒருவகைப் பறவையின்

காலில் உள்ள முள்ளைப்போன்று வெட்சி மலர்களின் முதிர்ந்த அரும்புகள் காணப்படும் என்பது பாடல் அடியின் பொருளாகும். 'வெட்சி' என்ற செடி சிவந்த காலினை உடையது. இதன் பூக்கள் ஒரு காம்பில் குழுமி இருக்கும் என வெட்சிச் செடியின் சிறப்பை எடுத்து விளக்க இப்பாடல் அடியை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க நூல்களில் ஆசினி

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1986 டிசம்பர்). ஆசினிப் பலா காணப்படும் இடம், அப்பலாவை இக்கால மக்கள் அழைக்கும் முறை ஆகிய ஆசினிப்பலா பற்றிய பல செய்திகளை எடுத்து விளக்குவது இக்கட்டுரையின் நோக்கமாகும். இதில் அகநானூற்றின் 91 ஆம் பாடலின்,

"நெடுங்கால் ஆசினி ஒடுங்காட் டும்பர்"

எனும் பாடல் அடி இடம்பெற்றுள்ளது. ஒடுங்காடு என்னும் ஊர், நீண்ட அடிப்பாகத்தினையுடைய ஈரப்பலா மரங்களைக் கொண்டது என்பது இப்பாடலடியின் பொருளாகும். 'ஆசினி' என்பது ஒருவகைப் பலாமரமாகும். இதை ஈரப்பலா என உரையாசிரியர்கள் அழைப்பர். இது மலைகளிலும் காடுகளிலும் காணப்படும். இப்பலா, பலகைகள் செய்யப் பயன்படுகின்றன என ஆசினிப்பலா பற்றிய செய்திகளை எடுத்துக்காட்ட இப்பாடல் அடியை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்கநூல்களில் பயறும் உழுந்தும்

இக்கட்டுரையில் அகநானூறு 37, 339 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

பயறும் பாலும் கலந்து ஆக்கிய, வெள்ளிக்கம்பி போன்ற சூடான கஞ்சியை வேண்டுமளவு குடித்து, நெல் அறுவடையினால் உண்டான களைப்பை உழவர்கள் போக்கிக்கொள்வர் என்பது 37 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். விரைந்தோடும் குதிரை பூட்டிய தேரின் சக்கரங்கள் பதிந்த சுவட்டில் நீரானது பாம்புபோல ஓடும். குவிந்த ஒன்றொடொன்று தொடர்பற்ற விரல்கள் போலப் பயிற்றங்காய்கள் விரிந்து முதிரும். இவ்வாறு பனிக்காலம் தோன்றும் என்பது 339 ஆம் பாடல்

அடிகளின் பொருளாகும். பயறு உணவு பற்றி விளக்கவும் பயறின் காய் அமைப்பு பற்றித் தெளிவுபடுத்தவும் இப்பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்ககாலத்தில் காசு

இக்கட்டுரையில் அகநானூறு 293, 363, 267 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

உகாய்மரத்தில் உள்ள குயிலின் கண்போன்ற காய்முற்றி, பொற்காசு போன்ற நிறமுடைய கனிகளாக மாறி, மரத்தின் கிளையில் இருந்து உதிரும் என்பது 293 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். சிறிய இலைகளையுடைய நெல்லியின் பசியகாய்கள் பொன்னாலான காசுகள் போலப் பாலைப்பரப்பில் பரவிக்கிடக்கும் என்பது 363 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும்.

"பல்காசு நிறைந்த கோடேந்து அல்குல்" (267)

கட்டுரையில் இவ்வடி இடம்பெற்றுள்ளது என்சிபிஎச் பதிப்பில் இடம்பெறவில்லை. சங்ககாலத்தில் மக்களால் பயன்படுத்தப்பட்ட உருண்டைப் பொற்காசு, கொய்மரத்தின் கனிபோலவும் நெல்லிக்காய் போலவும் இருந்தது என விளக்க இப்பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க நூல்களில் களா

இக்கட்டுரையில் 199 ஆம் பாடல் எண் இடம்பெற்றுள்ளது. களாவின் பழம் இனிப்பும் புளிப்பும் கலந்த சுவையுடையதாகும். இதனால் தீம்புளி என்றும் களவுப்புளி என்றும் கூறப்படும். இது இளவேனில் காலத்தில் பூக்கும் தன்மையுடையது. சேர அரசன் ஒருவன் யாதோ காரணத்தால் முடியையிழந்ததால் களாவின் காயைக் கண்ணியாக அணிந்தமையால் களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரல் என்றழைக்கப்பட்டான். இந்தச் சேர மன்னனை அகநானூற்றுப்பாடலும் களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரல் என்று அழைக்கின்றது என எடுத்துக்காட்ட இப்பாடல் எண்ணை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க நூல்களில் மஞ்சளும் இஞ்சியும்

இக்கட்டுரையில் அகநானூறு 269 ஆம் பாடலின்,

"நறுவிரை மஞ்சள் ஈர்ம்புறம் பொலிய
அம்புகொண்டு அறுத்த ஆர்நார் உரிவையின்"

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன. போரில் இறந்த கரந்தை வீரர்களுக்கு உயிர் பிழைத்த வீரர்கள், குன்றுகளில் நட்டுவைத்தாற்போன்று காணப்படும் கற்களைச் செதுக்கி, நீராட்டி, மஞ்சள்பூசி, அம்புகொண்டு அறுத்து உரித்தெடுத்த ஆத்தியின் நாரில் சிவந்த கரந்தைப் பூவினைச் சூடிப் பலி செலுத்துவர் என்பது பாடல் அடிகளின் பொருளாகும். இப்பாடலை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம் நற்றிணை - நெய்தல்திணைப் பகுதியில் இடம்பெற்றுள்ளது (2.1.4).

## சங்கநூல்களில் முண்டகமும் முள்ளியும்

இக்கட்டுரையில் அகநானூறு 21 ஆம் பாடல் இடம்பெற்றுள்ளது. முள்ளிக்கு முள் உண்டு எனும் கருத்தை எடுத்துரைக்க இப்பாடல் எண்ணை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்கநூல்களில் வாகையும் உழிஞ்சிலும்

இக்கட்டுரையில் அகநானூறு 45, 53, 151 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன. வாகைமரத்தின் முற்றிய காய்நெற்றுகள், கூத்தரின் பறைபோல் ஒலிக்கும். இத்தகைய வெப்பம் மிகுந்த குன்றுகளின் வழியே தலைவன் பொருள்தேடச் செல்வான் என்பது 45 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். தலைவன் பொருள்தேடச் செல்லும் கள்ளிமரங்கள் நிறைந்த காட்டில் உள்ள உழிஞை மரங்களின் அடிப்பகுதியில் சுரிந்த மூக்குடைய நத்தைகள் பற்றிக்கொண்டிருக்கும் என்பது 53 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். மானின் கொம்புபோன்ற சுவடுகளையும் குறியகாலினையும் உடைய வாகைமரத்ினது நெற்றியின் குலை, ஆடும் கூத்தியர் ஒலிக்கும் பறை போலக் கேட்போர் வியக்க ஒலி உண்டாக்கும் என்பது 151 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம் குறுந்தொகை- பாலைத்திணை ஆய்வுப் பகுதியில் குறிப்பிடப்பட்டுள்ளது (3.1.5).

## சங்க நூல்களில் மின்மினி

இக்கட்டுரையில் அகநானூறு 67, 291 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

தலைவன் பொருள்தேடச்செல்லும் வழியில் காணப்படும் பரற்கற்கள் வெயிலில் ஒளிவிடும். இது மின்மினி ஒளிவிடுவது போலக் காணப்படும் என்பது 67 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். கோடைக்காலத்தில் புலியுடன் போர்செய்த யானை திரியும் இடங்களில் உள்ள பெரிய பரற்கற்கள், சிறிய மின்மினிப் பூச்சிகள் போல ஒளிவிடும் என்பது 291 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். மின்மினிப்பூச்சியின் சிறப்பை எடுத்துக்காட்டவும் 'நிலம்படுமின்மினி' எனும் சொல்லுக்குச் சில உரையாசிரியர்கள் மின்மினிப்புழு என உரைகூறுவர் என விளக்கவும் இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்கநூல்களில் கூதளமும் குளவியும் குல்லையும்

இக்கட்டுரையில் அகநானூறு 47, 225, 273 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

மேகங்கள் தவழ்ந்து விளையாடும் சிறுமலை எனும் பெயருடைய பக்கமலையில் கூதளம் மணம்வீசும் என்பது 47 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். பலாக்காய் போன்ற புறப்பகுதியையுடைய பாகற்கொடிகள் முற்றிய இலைகளையுடைய கூதாளியோடு காற்றில் அசையும் என்பது 225 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். விண்ணில் எறியப்பட்ட கூதாளியின் மாலைபோல, பசியகால்களையுடைய வெள்ளாங்குருகுகள் காணப்படும் என்பது 273 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம் நற்றிணை - பாலைத்திணை ஆய்வுப் பகுதியில் குறிப்பிடப்பட்டுள்ளது (2.1.5).

## சங்க நூல்களில் இலுப்பை

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1988 அக்டோபர்). இலுப்பையின் பூ அமைப்பு, அதன் சுவை போன்ற இலுப்பை பற்றிய பல கருத்துகளை எடுத்துவிளக்குவது இக்கட்டுரையின்

நோக்கமாகும். இதில் அகநானூறு 135, 149, 171, 225, 267, 321, 331, 351 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

'இழுப்பை மரம் நீடுநிலை அரையமரம், குதிர்க்கால்மரம், திரளரைமரம் என வர்ணிக்கப்படும். இம்மரம் பொரிந்த அடிமரப் பட்டைகளை உடையது. இம்மரத்தின் பூ வெண்மையான வெண்ணெய்போல் காணப்படும். இதன் பூவிதழ் மகரந்தத்தால் நீண்டு இருக்கும். இலுப்பைப் பூவை ஆலங்கட்டிமலை, சங்கு, முத்து, காட்டுப்பூனையின் பாதம், கடைந்தெடுத்த தந்தம் ஆகியவற்றிற்கு ஒப்பிடுவர். இப்பூவினைக் கரடிகள் விரும்பி உண்ணும். வடநாட்டில் வாழும் கோண்டர்கள் (Gonds) இப்பூவில் இருந்து மதுவும் பண்ணியாரமும் செய்வர். இம்மரத்தை Mahuna Tree என ஆங்கிலத்திலும் Madhuca India என அறிவியலிலும் அழைப்பர்' என இலுப்பை பற்றிய செய்திகளை எடுத்துக்காட்ட மேலே இடம்பெற்றுள்ள பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க நூல்களில் கமுகு

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1988 ஆகஸ்ட்). கமுகு மரத்தின் கணைக்கால், பூ, இளங்காய் ஆகியன பற்றிய செய்திகளை விளக்குவது இக்கட்டுரையின் நோக்கமாகும். இதில் அகநானூற்றின் 335 ஆம் பாடல் அடிகள் இடம்பெற்றுள்ளன.

'கமுகுமரமானது சிறுகோடுகளையும் திரண்ட அடியினையும் உடையது. இம்மரத்தில் உள்ள பாளையின் புறமடல் அற்று வீழ அதிலிருந்து புதுப்பூக்கள் பூத்துத்தொங்கும். அப்பூக்களோடு வளர்ந்து வரும் ஆலங்கட்டி போன்ற ஒளிபொருந்திய முற்றாத இளங்காய் காணப்படும். இவ்விளங்காய் இனிமையுடையதாகக் காணப்படும். இக்காயின் சுவையைவிடத் தலைவியின் பற்களிடத்தே ஊறும் இனிய நீர் சுவைமிகுந்தது எனத் தலைவன் தன் நெஞ்சுக்குக் கூறுவது' பாடலின் பொருளாகும். கமுகுமரத்தின் கணைக்கால், பாளை, புதுப்பூ இளங்காய் போன்றவற்றை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க நூல்களில் சங்கு

*இக்கட்டுரையில் அகநானூறு 201 ஆம் பாடலின்,*

*"அவிர்கதிர் முத்தமொடு வலம்புரி சொரிந்து"*

*எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன. பாண்டியனது கொற்கைப்பட்டினத்துப் பெண்கள் ஒளியையுடைய முத்துகளோடு வலம்புரிச் சங்கினைச் சொரிந்து தெய்வத்தினை வாழ்த்தி வணங்குவர் என்பது இப்பாடல் அடியின் பொருளாகும். வலம்புரிச்சங்கு, சங்கு வகைகளில் ஒன்றாகும். இது மிகவும் அரிதாகக் கிடைக்கும் என விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.*

## சங்க நூல்களில் தவளையும் தேரையும் நுணலும்

*இக்கட்டுரையில் அகநானூறு 301 ஆம் பாடலின்,*

*"கார்வான் முழக்கின் நீர்மிசைத் தெவுட்டும்*
*தேரை யொலியின் மான சீரமைத்து*
*சில்அரி கறங்கும் சிறுபல் இயத்தொடு"*

*எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன. கரியமேகம் முழங்கும்போது, ஒலிக்கும் தேரையின் ஒலியினைப்போலக் கூத்தாடுபவர்களின் தாளஒலி காணப்படும் என்பது பாடல் அடிகளின் பொருளாகும். இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம் குறுந்தொகைக்குரிய முல்லைத்திணை ஆய்வுப் பகுதியில் இடம்பெற்றுள்ளது (3.1.2).*

## சங்க இலக்கியத்தில் மணிகள்

*இக்கட்டுரையில் அகநானூறு 73, 127, 1, 5, 399, 315, 25, 27, 137, 225, 201, 13, 137, 225 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.*

*வெருகுப்பூனையை இருளில் நோக்கினாற்போலத் தலைவி தன் மார்பில் அணிந்திருந்த முத்தின்ஒலி காணப்படும் என்பது 73 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். முத்திற்கு வெருகின் கண்ணை ஒப்பிட்டுக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.*

*சேரலாதன் தன்னுடைய பகைவரிடமிருந்து பொன் நகைகளுடன் பொற்பாவை, வயிரங்கள் முதலியவற்றைப் பெற்று, மரந்தை என்னும்*

ஊரிலுள்ள தன் மனைக்கண் முற்றத்திடமெல்லாம் நிறையும்படிக் குவித்தான் என்பது 127 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். வைரம் மணிகளில் மிக உறுதியானது என விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

'வேள்ஆவி என்பானது பொதினிமலையிடத்தில் தோல்துன்னும் சிறுதொழில் செய்வோனாகிய சாணைக்கால் இயற்றுவோன். அரக்கொடு சேர்த்துச்செய்த கல்லைப்போல 'நின்னைப்பிரிய மாட்டேன்' என்று தலைவன் கூறிய சொல்லைத் தலைவன் மறந்தனரோ? எனத் தோழி பிரிவிடை ஆற்றாளாகித் தலைவிக்குக் கூறுவது' 1 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். சங்க இலக்கியத்தில் விலையுயர்ந்த கற்களைப் போல, விலைகுறைந்த சாணைக்கல்லும் கூறப்பட்டுள்ளது என விளக்க இப்பாடல் அடியை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

பளிங்குபோன்ற நெல்லிக்காய்கள், உயர்ந்த பெரிய பாறைகளில் குவித்து வைத்திருக்கும் வட்டுகளைப் போல உதிர்ந்து கிடக்கும் என்பது 5ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். மாசற்ற பளிங்குபோல, நன்கு முற்றிய நெல்லிக்காய் காணப்படும் என்பது 339 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டதற்கான காரணம் நற்றிணை - குறிஞ்சித்திணை ஆய்வுப் பகுதியில் குறிப்பிடப்பட்டுள்ளது (2.1.1).

அறுந்தநூலில் இருந்து உதிரும் துளையுடைய பளிங்குக்காசு போல, நெல்லிமரத்தில் காற்றுவீச, நெல்லிக்காய் வறண்ட நிலத்தில் உதிர்ந்துவிழும் என்பது 315 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். அக்காலத்தில் உள்ள மக்களால் உருண்டையான பளிங்குக் கற்கள் காசாகப் பயன்படுத்தப்பட்டன என விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

கோங்கமரத்தின் பூந்தாதுகளை வண்டுகளின் கூட்டம் உதிர்க்கும். உதிரும் இப்பூந்தாது இலவம் பூக்களில் படும். இந்நிகழ்வு பொன்விற்பவர் பவளச்செப்பில் பொன்பொடியைச் செரிந்து வைத்ததுபோலக் காணப்படும் என்பது 25 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். பவளம் பற்றிய

செய்திகளை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

'பாண்டியன் தன் அறத்தில் காக்கும் கொற்கைத் துறையில் உள்ள முத்துகள் போன்ற பற்களைக் கொண்ட உன் பவளவாய், தலைவனைப் பிரிந்து போகவிடாமல் தடுக்கும் எனத் தோழி தலைவனிடம் கூறுவது' 27 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். முத்தெடுக்கும் தொழில் பாண்டிய அரசரின் கட்டுப்பாட்டிற்குள் இருந்தது என விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார். திண்ணிய தேரினையும் துளையிடப்படாத முத்துகள் விளையும் கடலையும் தனக்கு உரிமையாகக் கொண்ட பாண்டியன் என்பது 137 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். அம்புக்குப்பி போல அரும்புகொண்ட இரும்பைமரம், தம் பூங்கொத்துகளை, நூலில் இருந்து கழன்று விழும் முத்துக்களைப்போல, நிலத்தில் சிதறச்செய்யும் என்பது 225 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். பாண்டியனது, கொற்கைப் பட்டினத்துப் பெண்கள் ஒளியையுடைய முத்துகளோடு வலம்புரிச்சங்கினைச் சொரிந்து தெய்வத்தினை வாழ்த்தி வணங்குவர் என்பது 201 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். கொற்கைப்பட்டினத்தில் காணப்படும் முத்துகளின் சிறப்பை எடுத்துக்காட்ட இப்பாடலை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

சங்ககாலத்தில் முத்து மிகுந்து காணப்பட்டது. இம்முத்துகளைத் துளைபோடும் தொழிலாளர்கள் அக்காலக்கட்டத்தில் இருந்தனர். முத்துகளை மக்கள் விரும்பி அணிந்தனர் என முத்து காணப்படும் இடத்தையும் அதன் வேலைப்பாட்டு முறையையும் அவற்றை மக்கள் பயன்பாடு செய்த சிறப்பையும் எடுத்துக்காட்ட 225, 137, 13 ஆகிய பாடல்களை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் ஆடை அணிகலன்கள்

இக்கட்டுரையில் அகநானூறு 111, 293, 387 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன. பட்டத்து யானையின் மீது உள்ள துகிற்கொடி போல ஞெமை மரத்தில் உள்ள சிலந்திக்கூடு காற்றில் பறக்கும் என்பது 111

ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். வேலமரங்களில் சிலந்திப்பூச்சி வலைபின்னும் என்பது 293 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும்.

கூர்மையான நகத்தினையும் கஞ்சிப்பசை கொண்ட விரல்களையும் உடைய வண்ணாத்தி நீண்டநேரம் கஞ்சி ஊட்டிச் செய்த அழகிய ஆடை என்பது 387 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். துகில் ஆடை சிலந்திப்பூச்சிகளின் வலைபோல மென்மையாகக் காணப்படும். இவ்வாடைகளைப் புலத்தி கஞ்சிப்பசை போட்டு, நெடிது பிசைந்து செய்துள்ளாள் எனத் துகில்ஆடை பற்றிய செய்திகளை எடுத்துக்காட்ட இப்பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்கநூல்களில் சிதலையும் ஈயலும்

இக்கட்டுரையில் அகநானூற்றின் 81, 149, 167, 377 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன. சிதலை எனும் கரையான்பூச்சி எழுப்பும் உயரமான புற்றை 'நெடுங்கோடு' என அழைப்பர். இதன் கூட்டில் தாய்ப்பூச்சி, ஆண்பூச்சி, வேலைக்காரப்பூச்சிகள் காணப்படும். சிதலை, மரத்தாலான வீடுபோன்ற பல பொருள்களைச் சிதைக்கும் எனச் சிதலை பற்றிய செய்திகளை எடுத்துக்காட்ட இப்பாடல்களின் அடிகளை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் யாழ்

இக்கட்டுரையில் அகநானூறு 279, 331, 115 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன. இனிய விளரி என்னும் நரம்பினையுடைய இனிமை கொண்ட சிறிய யாழ் என்பது 279 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். இசைத்துறைகள் பலவற்றை முழுவதுமாகக் கற்றுணர்ந்த சிறிய யாழினையுடைய பாணர்கள் என்பது 331 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். யாழுக்குச் சீறியாழ் என்ற பெயரும் உண்டு என விளக்கவும் யாழின் பெயர்களை எடுத்துக்காட்டவும் இப்பாடல்களை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

பாணர் முறைமையோடு கையால் தொழுது போற்றிப் புகழ்ந்த வளம்பொருந்திய யாழின்கோட்டினை 'எவ்வி' என்ற மன்னன் இறந்ததால்

பாணர் முறித்து வருந்தினர் என்பது 115 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். யாழின் உறுப்புகளான கோடு, மறுப்பு, தண்டு பற்றிய செய்திகளை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்ககாலத்துக் காவிரிப்பூம்பட்டினம்

மயிலை.சீனி.வேங்கடசாமி எழுதிய இக்கட்டுரையில் 181 ஆம் பாடலின்,

"மகர நெற்றி வான் தோய் புரிசைச்
சிகரம் தோன்றாச் சேணுயர் நல்லில்
புகாஅர்நல்நாட் டதுவே"

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன. சோழநாடு மகரக்கொடியைக் கொண்ட மதிலையும் உயர்ந்த மாடங்களையும் கொண்ட காவிரிப்பூம்பட்டினத்தை உடையது என்பது பாடல் அடிகளின் பொருளாகும். காவிரிப்பூம்பட்டினத்தின் முக்கியப் பகுதி பட்டினப்பாக்கம். இப்பட்டினப்பாக்கத்தில் அரண்மனைகளும் பெருங்குடிமக்களின் மாளிகைகளும் கோயில்களும் மண்டபங்களும் நாடகசாலைகளும் ஆடலரங்கங்களும் இருந்தன என விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் பெயர்களைத் தேடும் பாடல்கள்

இக்கட்டுரையில் அகநானூறு 117, 165 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

தலைவனை நம்பித் தலைவி வளங்கெழு திருநகர் புலம்பப் போகிறாள். அப்பிரிவே 117 ஆம் பாடலாவதால், அப்பிரிவைப் புலப்படுத்தும் தொடரால் இப்பாடல் ஆசிரியர் 'புலம்பப்போகியார்' என்ற பெயர் பெறுவார் எனப் பெயரில்லா அகநானூற்றுப் பாடல்களுக்குப் பெயர் சூட்டுவதற்காக இப்பாடலை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

நாடுபல கடந்து தலைவனோடு சென்ற தலைவியை நினைத்து ஆயமும் தாயும் வருந்துவதை 165 ஆம் பாடல் வெளிப்படுத்துவதால் 'நாடுபல இறந்தார்' என்ற பெயரால் இப்பாடலாசிரியர் அழைக்கப்படுவார்

என ஆசிரியர் பெயரில்லாப் பாடலுக்கு ஆசிரியர் பெயர் கூறுவதற்காக இப்பாடலை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## குறிஞ்சிப்பாட்டின் சிறப்பியல்புகள்

சரளா இராசகோபாலன் என்பவரால் எழுதப்பெற்ற இக்கட்டுரையில் அகநானூறு 241, 243 ஆகிய பாடல்களின் எண்கள் இடம்பெற்றுள்ளன. இப்பாடல் எண்கள் களவின் முட்டுப்பாட்டை எடுத்துக்காட்டுவதற்காக ஆசிரியரால் பயன்படுத்தப்பட்டுள்ளன.

## தமிழிலக்கியத்தில் தாவரநூலின் நுட்பங்கள்

லூர்துசாமி என்பவரால் எழுதப்பெற்ற இக்கட்டுரையில் அகநானூறு 345, 397, 229, 21, 5, 7, 133 ஆகிய பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

இத்தி மரத்தின் நீண்ட தனித்த விழுது என்பது 345 ஆம் பாடலடியின் பொருளாகும். இத்திமரத்தின் விழுதுவேர்களைப் பற்றி எடுத்துக்கூற இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

ஓமை மரத்தினை யானை தாக்குவதால், அம்மரத்தின் பட்டை உரிந்து அடிமரம் சிவப்பாகக் காணப்படும் என்பது 397 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். ‘ஓமை’ மரத்தின் அடிமரம் பற்றிய செய்திகளை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

கரியகுயில், முருங்கைமரத்தின் பூந்தாதுகளை உண்டு, மாமரத்தின் கிளையில் அமரும் என்பது 229 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். பறவைகள் மூலம் மகரந்தச் சேர்க்கை அடையும் ஒரே மலர் முருங்கைமலர் எனத் தாவரநூல் வல்லுநர் டட்டாவின் கருத்தை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

பசிய குலையையுடைய ஈந்தினது செங்காய்கள் தன் காம்பிலிருந்து விடுபட்டு, மேட்டுநிலமாகிய வன்னிலத்தில் பரவிக்கிடக்கும் என்பது 21 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். பளிங்கு போன்ற நெல்லிக்காய்கள் என்பது 5 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். ஈந்து, நெல்லி போன்ற

மரங்களின் பழத்தின் நிறம், உருவம் போன்றவற்றை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

தலையில் ஆர்க்கினைப்பெற்ற வெள்ளிய பலாக்கொட்டைகள் என்பது 7 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். குன்றிமணி போன்ற கண்களையுடைய 'வெள்ளெலி' என்பது 133 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். தமிழ் இலக்கியத்தில் விதையைக் 'காழ்' அல்லது அரிசி என்று அழைப்பர் என விளக்கவும் பலா, குன்றிமணி போன்ற தாவரங்களின் விதை அமைப்பை எடுத்துக்காட்டவும் இப்பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

பகுதி இரண்டு

## 4.2 தமிழ்ப்பொழில்

'தமிழ்ப்பொழில்' இதழில் இடம்பெற்றுள்ள சங்க இலக்கியம் தொடர்பான கட்டுரைகளில் பயன்படுத்தப்பெற்றுள்ள அகநானூற்றுப் பாடல்களின் எண்ணிக்கை 101 ஆகும். இவை குறிஞ்சிக்குரியவை - 15, முல்லைக்குரியவை - 06, மருதத்திற்குரியவை - 28, நெய்தலுக்குரியவை - 08, பாலைக்குரியவை - 44 என அமைந்துள்ளன (விரிவு - பின்னிணைப்பு -10). இப்பாடல்கள் ஒருமுறையும் ஒன்றுக்கு மேற்பட்ட முறையும் கட்டுரையாளர்களால் எடுத்தாளப்பெற்றுள்ளன. அவை தொடர்பான விபரம் வருமாறு :

| வ. எண். | திணை | ஒருமுறை | இருமுறை | மும்முறை |
|---|---|---|---|---|
| 1. | குறிஞ்சி | 378, 388, 202, 12, 48, 52, 38, 68, 122, 208, 348, 392, 142 | 182, 102 | |
| 2. | முல்லை | 294, 364, 24, 104, 284, 184 | | |
| 3. | மருதம் | 86, 196, 176, 336, 66, 156, 226, 46, | 136, 316 | |

| | | | | |
|---|---|---|---|---|
| | | *106, 286, 36, 346, 126, 6, 196, 266, 386, 116, 226, 326, 186, 376, 396, 196, 356, 236* | | |
| *4.* | நெய்தல் | *70, 150, 100, 290, 230, 140, 220, 390* | | |
| *5.* | பாலை | *349, 297, 119, 341, 355, 205, 197, 53, 201, 37, 87, 1, 356, 271, 05, 121, 59, 07, 275, 67, 151, 283, 97, 115, 219, 256, 111, 149, 65, 55, 127, 91, 15, 295, 61, 325, 227, 265* | *33, 69, 99* | *233, 281, 251* |

## 4.2.1 குறிஞ்சி

*தமிழ்ப்பொழில் இதழில் எடுத்தாளப்பெற்றுள்ள அகநானூறுக்குரிய குறிஞ்சித்திணைப் பாடல்களின் எண்ணிக்கை 15 ஆகும்.*

## தமிழில் தாவரங்கள்

*இக்கட்டுரை கு.சீனிவாசன் என்பவரால் எழுதப்பெற்றதாகும். இதில் 378, 388, 202, 182, 12, 48, 52, 38, 68, 102 ஆகிய அகநானூற்றுப் பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன. இப்பாடல்களைத் தாவரங்கள் அடிப்படையில் கீழ்வருமாறு பகுக்கலாம்.*

| ***தாவரங்கள் / பண்*** | ***பாடல்எண்கள்*** |
|---|---|
| *1. வேங்கை* | *378, 388, 12, 48, 52, 202, 182* |
| *2. செயலை (அசோகமரம்)* | *38, 68* |
| *3. குறிஞ்சிப் பண்* | *102* |

*வேங்கை மரத்தின் பொன்னிறத் தாதுகள் காற்று அடித்ததால் உதிர்ந்து வீழ்ந்தன என்பது,*

“நன் பொன் அன்ன நறுந்தாது உதிர” (378)
எனும் இப்பாடல் அடியின் பொருளாகும்.

“பொன்மருள் நறுந்தாது ஊதும் தும்பி” (388)
வேங்கையின் பொன்னிறப் பூந்தாதுகளில் தேனைப் பருகும் வண்டு என்பது இப்பாடல் அடியின் கருத்தாகும்.

“வேங்கை தாஅய தேம்பாய் தோற்றம்
புலி செத்து, வெரீஇய புகர்முகவேழம்” (12)

‘குறவர் ஊன்றிய குடிசையின் கூரையில் வேங்கைப் பூ உதிர்ந்து கிடத்தலால் அக்குடிசையின் தோற்றம் புள்ளிகளையுடைய புலியின் உருவம்போல் தோன்ற, அது கண்ட யானை அதனைப் புலியென்றே கருதி வெருவி ஓடும்’ என்பது இப்பாடல் அடிகளின் பொருளாகும்.

“ஒலிசினை வேங்கை கொய்குவம் சென்றுழி
‘புலிபுலி!’ யெனும் பூசல் தோன்ற” (48)

‘தழைத்த கிளைகளையுடைய வேங்கையின் பூக்களைப் பறிக்கச் சென்றபோது புலி, புலி என்றும் ஆரவாரம் கேட்டது. அங்கு ஒரு தலைவன் வந்தான். அத்தலைவனே தலைவியின் உடல் வேறுபாட்டுக்குக் காரணம் எனச் செவிலிக்குத் தோழி கூறியது’ என்பது இப்பாடலடிகளின் பொருளாகும்.

“கிளர்ந்த வேங்கைக் சேண்நெடும் பொங்கர்ப்
பொன் நேர் புதுமலர் வேண்டிய குறமகள்
இன்னா இசைய பூசல் பயிற்றலின்” (52)

‘செழித்து வளர்ந்த வேங்கை மரத்தினது மிக உயர்ந்த கிளையில் உள்ள பொன்னைப் போன்ற புதிய மலர்களைக் குடிமகள் பறிக்க விரும்பியபோது கேட்பார்க்கு இனிமை தாராத ஒலியையுடைய புலிபுலி என்னும் ஆரவாரத்தினை அடுத்தடுத்து எழுப்பினாள்’ என்பது இப்பாடலடிகளின் பொருளாகும்.

"நல்லிணர் வேங்கை நறுவீ கொல்லன்
குருகு ஊது மிதி உலைப் பிதிர்வின் பொங்கி,
சிறுபல் மின்மினி போல பலவுடன்
மணிநிற இரும்புதல் தாவும் நாட" (202)

'வேங்கை மரத்தினது நல்ல கொத்துகளின் நறுமணப் பூக்கள் சிதறிவிழுந்தன. இப்பூக்கள், கொல்லன் துருத்தியை மிதித்து ஊதும் உலைக்களத்தினின்றும் தெறித்து எழும் தீப்பொறி போல எழுந்து, பலவாகிய சின்னஞ்சிறு மின்மினிப் பூச்சிகளைப் போல, நீல மணி போன்ற நிறத்தினைக் கொண்ட பெரிய புதரில் ஒருசேரப் பரவி விழும்' என்பது இப் பாடலடிகளின் பொருளாகும்.

"பூங்கண் வேங்கைப் பொன்னிணர் மிலைந்து" (182)

குறவன் அழகிய இடத்தில் வளர்ந்து நிற்கும் வேங்கை மரத்தின் பொன்போன்ற பூங்கொத்துகளைச் சூடினான் என்பது இப்பாடலின் கருத்தாகும். இப்பாடல் அடிகளை வேங்கைப் பூவின் சிறப்பை எடுத்துக்கூறவும் வேங்கை மரப் பயன்பாடுகளை விளக்கவும் ஆசிரியர் கையாண்டுள்ளார். அவற்றின் விபரம் வருமாறு.

வேங்கை, கணுக்குருத்தாகவும் நுனிக்குருத்தாகவும் வளர்ந்து, கொத்துக் கொத்தாகப் பூக்கும். இதன் பூ மஞ்சள் நிறமுடையது. ஐந்து புறவிதழ்களும் (Sapals)கருமை கலந்து பழுப்பு நிறமுடையனவாகவும் ஐந்து அகவிதழ்களும் (Petals) புறவிதழ்களைக் காட்டிலும் இரு மடங்கு பெரியவையாகவும் பொன் மஞ்சள் நிறமுடையவையாகவும் இதழ்களில் விளிம்புகள் அமைந்தும் இப்பூ கண்கவர் வனப்புடையதாகவும் இருக்கும். வேங்கைப் பூவில் இருபது மகரந்தப் பைகள் இருத்தலின் தாது மிகுதியாக விளையும், இப்பூந்தாது பொன்னிறமாக இருக்கும். இதனை வண்டினம் உண்டு மகிழும் என்றும், வேங்கை பூப்பதும் பூத்தமலர் உதிர்வதும் சற்றேறக்குறைய ஒருவாரத்தில் நிகழ்ந்துவிடும் என்றும், பூத்த வேங்கைச் சினை தாழ்ந்து கொடுத்தற் பொருட்டு மகளிர் புலிபுலி என்று ஆரவாரிப்பர் என்றும் தமிழரின் கருத்தை அறிவியல் முறையோடு ஒப்பிட்டுக் காட்டுகின்றார் இக்கட்டுரையாசிரியர்.

'வேங்கைச் சினை பலகோடி உயிரணுக்களால் ஆனது. ஒவ்வொரு உயிர் அணுவிலும் உயிர்த்தாது என்ற உயிர்ப்பொருள் இருக்கின்றது. புலி புலி என்னும் பூசலாகிய ஒலியால் இத்தாதுப் பொருளில் மாற்றம் நிகழக்கூடும். ஒலியலைகள் உயிரணுக்களிலுள்ள உயிர்த்தாதுவை உறுத்தும் போலும் அதனால் உயிர்த்தாது உந்தப்பெற்று தம்மியல் மாறித் தண்டு வளைதலும் வளர்ச்சி பெருகுதலும் கூடும் என்கிறார்' இக்கட்டுரையாசிரியர். வேங்கைப் பூவின் சிறப்பை எடுத்துக்கூறவும் வேங்கை மரத்தின் பயன்பாடுகளை எடுத்து விளக்கவும் இப்பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

கொடிச்சி பெரிய மலைப்பக்கத்தே குறிஞ்சிப் பண்பாடியவளாய் நின்றாள் என்பது,

"கொடிச்சி
பெருவரை மருங்கில் குறிஞ்சி பாட" (102)

எனும் இப்பாடல் அடிகளின் பொருளாகும். குறிஞ்சிப்பண்ணை விறலியர், கொடிச்சி முதலியோர் பாடுவர் என்பதை விளக்க இப்பாடலின் அடிகள் ஆசிரியரால் கையாளப்பெற்றுள்ளது.

"அம்தளிர்ச் செயலைத்
தாழ்அஇல் ஓங்கு சினைத் தொடுத்த வீழ் கயிற்று
ஊசல் மாறிய மருங்கும்..." (38)

'அழகிய தளிர்களையுடைய அசோக மரத்தினது ஓங்கி உயர்ந்த கிளையில் கட்டப்பட்ட தொங்கும் கயிற்றையுடைய ஊசல்' என்பது இப்பாடலடிகளின் பொருளாகும்.

"ஒண்தளிர்ச் செயலை
ஓங்குசினைத் தொடுத்த ஊசல்..." (68)

ஒளி பொருந்திய தளிர்களையுடைய அசோக மரத்தினது ஓங்கி உயர்ந்த கிளையிற் கட்டப்பட்டிருந்த ஊசல் என்பது பாடலடிகளின் பொருளாகும். அசோகமரத்தின் சிறப்புகளை எடுத்துக்கூறவும்

அசோகமரத்தில் மகளிர் ஊசலிட்டு ஆடி மகிழ்வர் என்பதை விளக்கவும் இப்பாடல்களின் அடிகளை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

## சங்க இலக்கியங்களில் பேய்

இக்கட்டுரை வி.சா.பாலசுப்பிரமணியன் (1993 ஆகஸ்டு-செப்டம்பர்) என்பவரால் எழுதப்பெற்றதாகும். இதில் 122 ஆம் அகநானூற்றுப் பாடலின் கீழ்வரும் அடிகள் கட்டுரையில் எடுத்தாளப்பெற்றுள்ளன.

"இல்எலி வல்சி வால்வாய்க் கூகை
கழுது வழங்கு யாமத்து"

'இல்லத்து எலியை இரையாகக் கொள்ளும் வலிய வாயினையுடைய கூகைச் சேவல் பேய்கள் திரியும் நள்ளிரவில் அழிவு உண்டாகக் குழறத் தொடங்கும் என்பது பாடலின் பொருள். பேய்கள் நடுநிசியில் உலவும்' என்ற செய்தியைக் காட்டுவதற்காக இப்பாடல் அடிகள் ஆசிரியரால் கையாளப்பெற்றுள்ளன.

## சங்க இலக்கியத்தில் பொதுச் சொல்லும் ஒரு பொருட் பல சொல் குறித்த சிறப்புச் சொல்லும்

இக்கட்டுரை க.அன்பழகன் என்பவரால் எழுதப்பெற்றதாகும். இதில் 182, 102, 208 ஆகிய அகநானூற்றுப் பாடல்கள் இடம்பெற்றுள்ளன.

"முளவுமா" (182)

"உளை மான்" (102)

என்ற அகப்பாடல்களின் சொல்லாட்சிகள் இக்கட்டுரையில் எடுத்தாளப் பெற்றுள்ளன.

'முளவுமா' என்பது முள்ளம்பன்றியையும் 'உளைமான்' என்பது சிங்கத்தையும் குறிக்கின்றன. இதுவே இரண்டு பாடல் அடிகளின் பொருளாகும். சங்க இலக்கியத்தில் விலங்கைக் குறித்து வரும் சொற்கள் 'மா', 'மான்' என்பனவாகும். இவை எல்லா விலங்கிற்கும் பொதுச் சொற்களாகும். இவை தம்முன்னே சேர்க்கப்படும் சிறப்புச் சொற்களைப் பொறுத்துச் சொற்கள் பொருள் மாற்றம் அடைகின்றன.

முளவு + மா = முளவுமா (முள்ளம்பன்றி)

உளை + மான் = உளைமான் (சிங்கம்)

மா, மான் எனும் பொதுச்சொற்கள் முளவு, உளை ஆகிய சிறப்புச் சொற்களோடு சேர்ந்து குறிப்பிட்ட விலங்கைக் குறிக்கும் சொல்லாக மாற்றம் பெருவதை விளக்க இப்பாடலடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

"படுகளம்" (208)

எனும் இச்சொல்லின் பொருள் அவைக்களம் என்பதாகும், "களம்" எனும் பொதுச்சொல் "படு" எனும் சிறப்புச் சொல்லோடு சேர்ந்து படுகளம் எனப் பொருள் மாற்றம் அடைகின்றது. படு+களம்=படுகளம் (போர்களம்) களம் எனும் பொதுச் சொல், சிறப்புச் சொல்லுடன் சேர்ந்து மாற்றம் அடையும் செய்தியை எடுத்துக்காட்ட இப்பாடல் அடியை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்கத் தமிழரின் வாழ்வியல் கூறுகள்

இக்கட்டுரை சு.கு.பன்னீர்செல்வம் என்பவரால் எழுதப்பெற்றதாகும். இதில் 348 ஆம் அகநானூற்றுப் பாடலின் கருத்து இடம்பெற்றுள்ளது. 'மாமரத்தின் கனியுடன் பாலாப்பழத்தின் சுளையிட்டுத் தேன் கலந்து உண்டாக்கிய கள்ளினை, நீண்ட மூங்கிற் குழாயுள் ஊற்றி நிரப்பி நெடுநாள் மண்ணில் புதைத்து வைப்பர்' என்பது இப்பாடலின் கருத்தாகும். இக்கருத்தை, பண்டைய தமிழர்களின் உணவு முறையினைத் தெரிந்துக்கொள்ள ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கிய ஒருபொருட் பல சொற்களின் சொல்லினைவு

இக்கட்டுரை க.அன்பழகன் என்பவரால் எழுதப்பெற்றதாகும். இதில் 392 ஆம் பாடலின் 'புரவி நெடுந்தேர்' எனும் அடி இடம்பெற்றுள்ளது. ஆனால் இவ்வடி என்சிபிஎச் பதிப்பில் உள்ள 392 ஆம் பாடலில் இடம்பெறவில்லை.

## சங்க இலக்கியத்தில் கல்வெட்டுச் சொற்கள்

பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்ற இக்கட்டுரை, கல்வெட்டுகளின் சிறப்பையும் கல்வெட்டுகளில் பயன்படுத்தப்பெற்ற சொற்களின்

விளக்கத்தையும் எடுத்துக் கூறுவதாக அமைந்துள்ளது. 142 ஆம் பாடலுக்குரிய “ஊட்டு” எனும் சொல் எடுத்தாளப் பெற்றுள்ளது.

> “சில முன்னாள் திருவிதாங்கூர் அரசர்கள்” என்ற புத்தகத்தில் பேராசிரியர் சுந்தரம் பிள்ளையவர்கள் தமிழில் கல்வெட்டுக்கள் பயன்படுத்தப்பட்ட வழக்காற்றினை ஆராய்ந்திருக்கிறார். எடுத்துக்காட்டாக “ஊரூட்டு” என்ற சொல் பெண் தெய்வங்களைப் பெருமைப்படுத்த எடுக்கும் கிராம விருந்து என்றும், அதன் மூலம் கண்ணகி திருப்தியடைந்தாள் என்றும் விவாதித்திருக்கிறார். ஆனால் “ஊட்டு” சங்க காலத்தில் இரத்தப்பலி என்ற பொருளில் பயன்படுத்தப்பட்டுள்ளமை அகநானூறு 142 வது பாடலால் புலனாகிறது என்கிறார்”

இக்கட்டுரையாசிரியர். எனவே “ஊட்டு” எனும் சொல்லுக்கு விளக்கம் தருவதற்காக இப்பாடல் அடியை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார் என்பதனை இக்கட்டுரைவழி அறியமுடிகிறது.

### 4.2.2 முல்லை

தமிழ்ப்பொழில் இதழில் எடுத்தாளப்பெற்றுள்ள அகநானூற்றுக்குரிய முல்லைத்திணைப் பாடல்களின் எண்ணிக்கை - 06 ஆகும்.

### தமிழில் தாவரங்கள்

இக்கட்டுரை கு.சீனிவாசன் என்பவரால் எழுதப்பெற்றதாகும். இதில் 294, 364 ஆகிய அகநானூற்றுக்குரிய முல்லைத்திணைப் பாடல்கள் இடம்பெற்றுள்ளன.

> “எரிமருள் வேங்கை பெருஞ்சினைத் தோகை
> பூக்கொய் மகளிரின் தோன்று நாட” (294)

இப்பாடல் அடிகள் கட்டுரையில் இடம்பெற்றுள்ளன. ஆனால் என்சிபிஎச் பதிப்பில் இடம்பெறவில்லை.

> “நீடிணர்க்கொன்றை” (364)

நீண்ட பூங்கொத்துக்களுடன் அழகுபெறத் திகழ்ந்த கொன்றை என்பது இப்பாடல் அடியின் பொருளாகும்.

‘கொன்றை கார்காலந் தொடங்குவதற்கு முன் பூத்துவிடும், இதன் பூக்கள் நல்ல மஞ்சள் நிறமுடையவையாக இருக்கும். இது கொத்துக் கொத்தாகப் பூக்கும் இயல்புடையது. மரத்தில் உள்ள பூங்கொத்து கீழ் நோக்கித் தொங்கிக் கொண்டிருக்கும்’ என்று கொன்றை பற்றிய கருத்துகளை எடுத்துக்காட்ட இப்பாடல் அடியை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## நற்றிணையில் தாவரங்கள்

இக்கட்டுரை சொ.சிங்காரவேலனார் என்பவரால் எழுதப்பெற்றது. இதில் அகநானூற்றுக்குரிய 284 ஆம் பாடலின்,

“சிறியிலை நெல்லிக் காய்கண்டன்ன
குறுவிழிக் கண்ண கூரல்அம் குறுமுயல்”

எனும் அடிகள் எடுத்தாளப் பெற்றுள்ளன. ‘சிறிய இலைகளையுடைய நெல்லியின் காயைக் கண்டாற் போன்ற குறுகிய விழி பொருந்திய கண்களையும் வளைந்த அழகிய காதுகளையும் கூர்மையான மயிரினையும் உடைய குறுமுயல்’ என்பது பாடல் அடிகளின் பொருளாகும்.

‘அக்காலத்தில் நீரற்ற காட்டுவழிகளில் நெல்லி மரங்களை வளர்ப்பர். காரணம், தண்ணீர் வேட்கையால் தவித்து வரும் மக்கள், கானகத்திற்குப் புதியவர்கள் நெல்லிக் கனியைத் தின்று தங்கள் தாகம் தவிர்ப்பர். எனவே, நெல்லியின் சுவைமிக்க காய்களை அறம் தலைப்பட்ட காய்கள் என்பர்’ என்ற கருத்தை விளக்க இப்பாடல் அடிகள் ஆசிரியரால் பயன்படுத்தப் பட்டுள்ளன.

## சங்கத் தமிழரின் வாழ்வியல் கூறுகள்

இக்கட்டுரை சு.கு.பன்னீர்செல்வம் என்பவரால் எழுதப்பெற்றதாகும். இதில் அகநானூறுக்குரிய 24 ஆம் பாடலின் கருத்து இடம்பெற்றுள்ளது.

‘கள்ளுண்ணும் வழக்கம் பழந்தமிழகத்தில் பரவலாகக் காணப்பட்டது. மன்னர், புலவர், பாணர், கூத்தர், பொருநர், விறலியர் அனைவரும் மது உண்டு களித்தனர். இயற்கையாகக் கிடைத்த பனங்கள், தென்னங்கள், ஈச்சங்கள் ஆகியவற்றையும் யவனர்கள் கப்பலில்

கொண்டுவந்த தேறலையும் அவர்கள் குடித்தனர்' என்ற கருத்து இங்குக் கையாளப்பட்டுள்ளது. அக்கால மக்களின் உணவு முறையைத் தெரிந்துகொள்ளுவதற்காக இக்கருத்தை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## மருதனிள நாகனார் பாடல்களில் காணலாகும் உள்ளுறையும் இறைச்சியும்

இக்கட்டுரை சோ.முத்தமிழ்ச்செல்வன் என்பவரால் எழுதப்பெற்றதாகும். இதில் அகநானூற்றின் 184 ஆம் பாடலின் கீழ்வரும் அடிகள் எடுத்தாளப்பெற்றுள்ளன.

"ஆர்கழல் புதுப்பூ உயிர்ப்பின் நீக்கி
தெள்ளறல் பருகிய திரிமருப்பு எழிற்கலை
புள்ளியம் பிணையொடு வதியும்"

'முல்லைக் கொடியின் காம்பு கழன்று உதிர்ந்த பூக்கள் நீரில் விழுகின்றன. இதை முறுக்குண்ட கொம்பினையுடைய அழகிய புல்வாய்க் கலைமான் தன் மூச்சுக் காற்றினால் ஒதுக்கிவிட்டு, அவ்விடத்தில் உள்ள தெளிந்த நீரைக் குடித்துப் பின் புள்ளிகளையுடைய அழகிய பெண் மானுடன் தங்கும்' என்பது பாடலின் பொருளாகும். தலைவன் சென்ற காட்டில் முல்லை, கள்ளிச் செடியின் புன்தலையை மறைத்திருப்பதையும் தலைவி, தலைவன் பிரிவால் உண்டான வருத்தத்தைப் பிறர் அறியாவண்ணம் தன் கற்பினால் ஆற்றியிருத்தலையும் நீரினை மறைத்திருந்த பூவைக் கலைமான் மூச்சுக்காற்றால் ஒதுக்கிவிட்டு நீரினைப் பருகிப் பின் கலைப்பிணையோடு வாழுதலையும் தலைவன், தலைவியின் வாட்டத்தைப் போக்கி அவளுடன் தங்கி இன்ப வாழ்வு வாழப் போவதையும் புலப்படுத்துகின்றன என இறைச்சிப் பொருள் கூற இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கிய ஒருபொருட் பல சொற்களின் சொல்லிணைவு

இக்கட்டுரை க.அன்பழகன் என்பவரால் எழுதப்பெற்றதாகும். இதில் 140 ஆம் பாடலுக்குரிய 'பரிநெடும்தேர்' எனும் பாடலடி எடுத்தாளப் பெற்றுள்ளது. குதிரைகள் நன்கு பூட்டப்பட்ட விரைந்தோடும் பெரிய தேர் என்பது இப்பாடல் அடியின் பொருளாகும். 'பரி' பல்பொருண்மைச்

சொல்லாக உள்ளது என்று விளக்க இப்பாடல் அடியை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

### 4.2.3 மருதம்

தமிழ்ப்பொழில் இதழில் எடுத்தாளப்பெற்றுள்ள அகநானூற்றுக்குரிய மருதத்திணைப் பாடல்களின் எண்ணிக்கை - 28 ஆகும்.

### தமிழில் தாவரங்கள்

கு.சீனிவாசன் என்பவரால் இக்கட்டுரை எழுதப்பெற்றுள்ளது. இதில் அகநானூற்றுக்குரிய 316 ஆம் பாடலின்,

"அரிமலர் ஆம்பல் மேய்ந்த நெறிமருப்பு
ஈர்ந்தண் எருமை"

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன. அழகிய ஆம்பல் மலரை எருமை மேய்ந்தது என்பது பாடலடிகளின் பொருளாகும்.

ஆம்பல் மலரை மகளிர் சூடுவர். மேலும் இப்பூக்களைக் கொய்து, அகவிதழ்களைத் தொடுத்து, மடிவைத் தழையென்னும் ஆடையாக்கி அணிந்தனர். மற்றும் இவ்விலைகளைப் பறித்துத் தழையுடை செய்தனர். மேலும் இவ்வாம்பல் எருமை மேய்தலுக்கும் உதவியது என ஆம்பல் மலரின் பயன்களை எடுத்துரைக்கவும் ஆம்பல் மலரின் சிறப்பை விளக்கவும் இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

### திருநீலகண்ட நாயனாரும் குறுந்தொகையும்

இக்கட்டுரை நா.ஆறுமுகம் என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1990 மாசி). திருநீலகண்ட நாயனார் பரத்தையிடத்தில் உறவுகொண்டு திரும்பியபோது, அவரின் மனைவி ஊடல் கொள்கின்றார். அவ்வூடலைத் தவிர்க்க எண்ணிய திருநீலகண்டரை அவருடைய மனைவி வெறுத்து "எம்மைத் தொடாதீர் இறைவன் மீது ஆணை" என்று கூறுகின்றார். இப்படிக் கூறுவதில் இருக்கும் பொருத்தத்தைக் காண்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும். இதில் 196 ஆம் பாடலுக்குரிய கீழ்வரும் அடிகள் இடம்பெற்றுள்ளது.

“தொடுகலம் ; குறுக வாரல் தந்தை
...”

தொடுகலம் எனும் அடி முதலாக 6 அடிகள் இப்பாடலில் இடம்பெற்றுள்ளன. ‘வஞ்சினம் கூறும் இயல்புடைய கோசர்கள், அன்னி மிஞலியின் தந்தையின் கண்ணைக் களைந்து அதன் அழகினைக் கெடுத்தனர். அக்குற்றத்திற்காக, வளைந்த குழையணிந்த அன்னி மிஞலி, விரைந்தோடும் தேரினையுடைய திதியனுடன் அழுந்தூர் என்னுமிடத்து, அச்சம் உண்டாக அவர்களைக் கொன்று தன் பகை தீர்ந்து மகிழ்ந்திருந்தாள்’ என்பது பாடலின் பொருள். பரத்தமை மேற்கொண்டு திரும்பிய தலைவனின் மார்பைத் தழுவமாட்டேன் என ஊடல் கொண்ட தலைவியின் நிலையை எடுத்துக்காட்ட இப்பாடலை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் துணங்கைக் கூத்து

இக்கட்டுரை பழ.முத்தப்பன் என்பவரால் எழுதப்பெற்றதாகும். இதில் 176, 336 ஆகிய பாடல்களின் பொருள்கள் இடம்பெற்றுள்ளன. துணங்கைக் கூத்து திருவிழாக்காலங்களில் நடைபெற்றுள்ளது. விழாக்களின் சிறப்பிற்கு இக்கூத்துநிலையே முத்தாய்ப்பாக அமைந்திருக்கின்றது என்ற கருத்தைமட்டும் விளக்க 176 ஆம் பாடலினை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

“முழவு இமிழ் துணங்கை தூங்கும் விழவின்” (336)

முழவு ஒலிக்கக் குரவை ஆடும் விழாக்காலம் என்பது பாடலடிகளின் பொருளாகும். துணங்கையின் சிறப்பைக் கூறவும், துணங்கை விழாக்காலங்களில் நடைபெறும் என்பதை எடுத்துக்காட்டவும் இப்பாடல் அடியை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்கச் சமூகமும் உயர்நிலை உலகமும்

இக்கட்டுரை பெ.மாதையன் என்பவரால் எழுதப்பெற்றதாகும். இதில் 66 ஆம் பாடலுக்குரிய ‘மறுமை உலகமும்’ எனும் பாடலடி எடுத்தாளப்பெற்றுள்ளது. வினைப் பயன் தொடரும் மறுபிறவியை உடைய உலகம் என்பது பாடல் அடியின் பொருளாகும். சங்க இலக்கியத்தில் சொர்க்கத்தைக் குறிக்கப் பல சொற்கள் பயன்படுத்தப்பெற்றுள்ளன.

அவற்றில் ஒன்று 'மறுமை உலகம்' என்பதனை விளக்க இப்பாடலின் அடியை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

## சங்கத்தமிழரின் வாழ்வியல் கூறுகள்

இக்கட்டுரை சு.கு.பன்னீர் செல்வம் என்பவரால் எழுதப்பெற்றதாகும். இதில் 86, 136 ஆகிய பாடல்களின் கருத்துகள் இடம்பெற்றுள்ளன.

திருமண வாழ்க்கை 'கற்பு' எனப்படும். திருமணம் தீயகோள்கள் இடம்விட்டு விலக, நிலா உரோகிணியுடன் கூடும் நல்ல நாளில் விடியற்காலையில்தான் நடைபெறும். மாலைகளால் அலங்கரித்த மணப்பந்தலில் புதுமணல் பரப்பி விளக்குகளால் அலங்கரிப்பர். வயது முதிர்ந்த மங்கல மகளிர் குடங்களில் தண்ணீரை முகந்துவந்து 'சிறுமண்டை' என்னும் அகன்ற வாயுடைய கலத்தில் பெய்து கொடுப்பர். குழந்தைகளைப் பெற்றெடுத்த மங்கல மகளிர் நால்வர் கூடி அந்தத் தண்ணீரில் பூவிதழ்களையும் நெல்மணிகளையும் சொரிந்து சுத்ததண்ணீரினால் மணமக்களை நீராட்டுவர். இச்சடங்குக்கு 'வதுவை நன்மணம்' என்று பெயர். மேலும் உளுந்தம்பருப்புடன் கலந்த அரிசிப் பொங்கல் மணவிழாவிற்கு வந்தவர்கள் அனைவருக்கும் வழங்கப்படும். இறைச்சியும் நெய்யும் கூட்டி ஆக்கிய வெண்சோற்றையும் வழங்குவதுண்டு என்பன 86, 136 ஆம் பாடல்களின் கருத்தாகும். திருமணம் செய்வதற்கு அக்கால மக்கள் பின்பற்றிய சகுனமுறைகளை விளக்கவும் திருமண மணப்பந்தல் அமைப்பு முறையை எடுத்துக்காட்டவும் திருமண விழாவிற்கு வருபவர்களுக்கு வழங்கப்படும் உணவு முறையைச் சுட்டிக்காட்டவும் மேலே இடம்பெற்றுள்ள பாடல்களின் கருத்துகளை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

## சங்க காலத்தில் தழையுடை

இக்கட்டுரை அ.ஜெயக்குமார் என்பவரால் எழுதப்பெற்றதாகும். இதில் 156, 226 ஆகிய அகநானூற்றுப் பாடல்கள் இடம்பெற்றுள்ளன.

"கழனி ஆம்பல் முழுநெறிப் பைந்தழை" (156)

வயலில் பூத்த இதழ் ஒடியாத ஆம்பல் மலரோடு கூடிய பசிய தழை என்பது பாடல் அடியின் பொருளாகும்.

“அம்பகை மடிவை” (226)

அழகிய மடிப்பையுடைய தழையாடையை அம்பகை மடிவை என்பர். இது இப்பாடல் அடியின் பொருளாகும். அக்காலத்தில் அழகிற்காகப் பெண்கள் அதிக அளவில் தழையாடை அணிந்துள்ளனர் என்பதை விளக்கவும் தழையாடையை ‘அம்பகை மடிவை’ என்று கூறுவர் என எடுத்துக்காட்டவும் இப்பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் கல்வெட்டுச் சொற்கள்

இக்கட்டுரை பி.எல்.சாமி என்பவரால் எழுதப்பெற்றது (1985 புரட்டாசி). இதில் 136 ஆம் பாடல் இடம்பெற்றுள்ளது. இப்பாடலில் ‘கறோடன்’ என்ற சொல் காணப்படுவதாகவும் அச்சொல் பட்டைக்கல் உற்பத்தி செய்யும் தொழிலில் ஈடுபட்டிருக்கும் கலைஞனைக் குறிப்பதாகவும் இக்கட்டுரையாசிரியர் கூறியுள்ளார். ஆனால் இப்பாடலில் கறோடன் என்ற சொல்லோ அல்லது அதற்கான பொருளோ இடம்பெறவில்லை.

## சங்க அகத்துறைப் பாடல்களில் பாத்திரப் பண்போவியம்

இக்கட்டுரை சாலினி இளந்திரையன் என்பவரால் எழுதப்பெற்றதாகும். இதில் 46, 106, 286, 316, 36, 346, 126, 266, 386, 116, 186, 376, 396, 356, 236, 6, 226, 326, 196 ஆகிய பாடல்களின் கருத்தாக்கங்கள் இடம்பெற்றுள்ளன.

தலைவன் வேறு ஒருத்தியோடு வதுவை அயர்ந்த நிலையிலும் தலைவியின்பாலுள்ள அன்பைத் தலைவன் விட்டுவிடவில்லை என்ற கருத்து 46 ஆம் பாடலில் குறிக்கப்பட்டுள்ளது. தலைவனின் பண்புநலனையும் பாத்திரப் பண்பையும் விளக்க இக்கருத்து ஆசிரியரால் கையாளப்பெற்றுள்ளது.

ஆலங்குடி வங்கனார் மருதத்திணையில் ஆறு பாடல்கள் பாடியுள்ளார். அதில் ஒன்று இப்பாடல் என்பதைக் கூறவும், இப்பாடல் பரத்தை கூற்று என விளக்கவும் 106 ஆம் பாடல் எண்ணை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

“நும்மோர் அன்னோர் மாட்டும், இன்ன
பொய்யொடு மிடைந்தவை தோன்றின்,
மெய்யாண்டு உளதோ, இவ்வுலகத்தானே?” (286)

‘பொருள் ஈட்டிவிட்டு உரிய காலத்தில் தலைவியை மணந்துகொள்வேன். எனத் தலைவன் தோழியிடம் கூறுகின்றான். அதனைச் சூள்மொழி என எண்ணிய தோழி தலைவனை நோக்கி, நம் போன்ற பெரியோரிடத்தில் பொய்யுடன் கூடிய புகழ்மொழிகள் தோன்றினால் இவ்வுலகில் உண்மை இல்லாது போய்விடும்’ எனக் கூறுவது பாடலடிகளின் பொருளாகும்.

“பரத்தைமை தாங்கலோ இலென்என வறிதுநீ
புலத்தல் ஒல்லுமோ?” (316)

தோழி! நீ ஊடல் தீர்ந்து தலைவனை ஏற்றுக்கொள்ள வேண்டும் எனத் தலைவியை நோக்கித் தோழி வற்புறுத்திக் கூறுவது பாடலின் பொருளாகும். தலைவன் பரத்தமை ஒழுக்கமுடையவனானாலும், தலைவி அவனை வெறுத்துவிடாமல் இருந்தால் அவனை நல்வழிப்படுத்திவிடலாம் என்ற நம்பிக்கை தோழிக்கு இருக்கின்றது. இத்தகு நல்ல பண்புடைய தோழியின் பாத்திரப் பண்பை விளக்க இப்பாடலை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

தலைவன் வேறு ஒருத்தியிடம் தொடர்புகொண்டிருந்த செய்தி ஊரெல்லாம் பரவித் தலைவிக்குத் தெரிந்துவிடுகிறது என்பது 36, 346 ஆகிய பாடல்களின் கருத்தாக இக்கட்டுரையாசிரியரால் பயன்படுத்தப்பெற்றுள்ளது. தலைவன் புதுப்பரத்தையர்களை நாடும் பண்புடையவன் என்ற தலைவனின் பாத்திரப் பண்பைக் காட்ட இப்பாடல்கள் ஆசிரியரால் கையாளப்பெற்றுள்ளது.

கடவுள் கற்புடையவர்களாகக் கூறப்படும் தலைவியர் போலத் தலைவன் செய்த துன்பத்தைத் தலைவி தன் அகத்தே ஒளித்துக் கொள்ளவில்லை. ஆயினும் (தவறு செய்தானாயினும்) தன்னிடம் அன்புடையவன் என்பதால், தலைவனைத் தலைவியால் வெறுத்துவிட முடியவில்லை என்ற கருத்தை இக்கட்டுரையாசிரியர் 126 ஆம் பாடலுக்குப் பயன்படுத்தியுள்ளார். இது தலைவன் மீது தலைவி கொண்டுள்ள அன்பு உள்ளத்தை எடுத்துக்காட்டுவதாக அமைகின்றது.

தலைவன் புதுப்புதுப் பரத்தைகளை நாடும் பண்புடையவன் என்ற தலைவனின் பாத்திரப் பண்பை விளக்க 6, 196, 266, 386, 186, 376, 396 ஆகிய பாடல்களை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார். தலைவன், பல பரத்தைகளைத் தேடிச்செல்லும் தன்மையுடையவன் என்பதை 116, 226, 326 ஆகிய தோழி கூற்றுப் பாடல்கள் உறுதிப்படுத்துகின்றன. தலைவனின் பாத்திரப் பண்போவியத்தை விளக்க இப்பாடல்களை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

பரத்தையைத் தழுவிய உன் மார்பைத் தீண்டமாட்டேன். அருகில் வரவேண்டாம் என்று தலைவி கூறுவது 196 ஆம் பாடலால் உறுதிசெய்யப்படுகின்றது. தலைவியின் ஒழுக்க உணர்வையும் பாத்திரச் சிறப்பையும் எடுத்துக்கூற இப்பாடல் ஆசிரியரால் கையாளப்பெற்றுள்ளது.

தலைவன் உன்னைப் புறக்கணித்தாலும் நீ தலைவனை விட்டுவிடக்கூடாது எனத் தலைவிக்குத் தோழி கூறுவதை 356 ஆம் பாடல் கொண்டு ஆசிரியர் விளக்கியுள்ளார். தலைவன் தலைவியிடம் அன்புடையவன் என்பதையும் அவன் பரத்தை ஒழுக்கத்தைக் கைவிடவே விரும்புகின்றான் என்பதையும் அறிந்ததனால், தலைவியும் தோழியும் தங்கள் போக்கை மாற்றிக்கொள்கின்றனர் என்பதை விளக்கவும் தோழி தலைவி மீது கொண்டுள்ள அன்பை எடுத்துக்காட்டவும் 356 ஆம் பாடல் ஆசிரியரால் எடுத்தாளப்பெற்றுள்ளது.

தலைவன் ஆற்றாமை காரணமாகத் தலைவியிடம் வருகின்றான். அவனைத் தலைவி ஏற்றுக்கொள்கின்றாள். பின்பு, அவனை உரிய சமயத்தில் ஏற்றுக்கொண்டதன் மூலம் ஆதிமந்திபோலக் கணவனை இழந்து துன்புறும் வேதனையிலிருந்து தப்பினேன் என்றும் கூறுகின்றாள். இக்கருத்து 236 ஆம் பாடல் எண்கொண்டு கட்டுரையில் விளக்கப்பெற்றுள்ளது. தலைவியின் அன்பு வாழ்வை எடுத்துக்காட்டுவதற்காகவும், தலைவியது பாத்திரப் பண்பின் சிறப்பைச் சுட்டிக்காட்டுவதற்காகவும் இப்பாடல் ஆசிரியரால் எடுத்தாளப்பெற்றுள்ளது.

### 4.2.4 நெய்தல்

*தமிழ்ப்பொழில் இதழில் அகநானூறுக்குரிய நெய்தல் திணைப் பாடல்களின் எண்ணிக்கை - 08 ஆகும்.*

*இக்கட்டுரை கு.சீனிவாசன் என்பவரால் எழுதப்பெற்றதாகும். இதில் 70, 150, 100, 290, 230 ஆகிய அகநானூற்றுப் பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.*

*"பாசடைக் கலித்த கணைக்கால் நெய்தல்*
*விழவுஅணி மகளிர் தழையணிக் கூட்டும்" (70)*

*'பசுமையான இலைகளையும், தழைத்த திரண்ட தண்டுகளையும் உடைய நெய்தல் பூக்களைக்கொண்டு விழாவிற்குத் தம்மை அலங்காரம் செய்துகொள்ளுகின்ற பெண்கள், தங்கள் தழையாடைக்கு அழகு செய்யும் பொருட்டுப் பறித்துச் சேர்ப்பர்' என்பது பாடலடிகளின் பொருளாகும். விழாக்காலத்து விழவணி மகளிர், நெய்தலின் இலைகளை ஆம்பலின் இலையுடன் சேர்த்துத் தழையணி செய்வர் என்பதை விளக்கவும், நெய்தலின் இலை, தண்டு மற்றும் அது வளரும் இடம் போன்றவற்றை எடுத்துக் கூறவும் இப்பாடலடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.*

*"கனைத்த நெய்தற் கண்போல் மாமலர்" (150)*

*தழை செறிந்த, கண்போன்ற பெரிய மலர்களை உடையது நெய்தல் என்பது இப்பாடலடியின் கருத்தாகும்.*

*நெய்தல்பூ நீல நிறமும் நறுமணமும் உடையது. இது அகன்று நீண்ட இதழ்களை உடையது. இதன் பூ நீலமணி போன்றும் கண் போன்றும் காணப்படும் என நெய்தல் பூவின் சிறப்பை எடுத்துக்காட்ட இப்பாடல் அடியை ஆசிரியர் கையாண்டுள்ளார்.*

*..."தண்புலர்*
*வைகுறு விடியல் போகிய எருமை*
*நெய்தல் அம்புது மலர் மாந்தும்" (100)*

‘விடியற்காலத்திலே மேயச்சென்ற எருமை அழகிய நெய்தற் புதுமலரைத் தின்னும்’ என்பது பாடல் அடிகளின் பொருளாகும்.

“சுரும்புஉண மலர்ந்த பெருந்தண் நெய்தல்” (290)

‘வண்டுகள் தேனை உண்ணும்படி மலர்ந்திருக்கும் குளிர்ச்சி பொருந்திய நெய்தல்’ என்பது இப்பாடலடியின் பொருளாகும். நெய்தல்பூ எருமை, வண்டு போன்ற உயிர்களுக்கு உணவாகப் பயன்படுகின்றது என்பதை விளக்க இப்பாடல்களின் அடிகள் ஆசிரியரால் பயன்படுத்தப்பட்டுள்ளன.

“சிறுகரு நெய்தற் கண்போல் மாமலர்” (230)

நெய்தல் பூவின் இதழ்கள் கருநீலமாக இருக்கும் என்பது இப்பாடலடியின் பொருளாகும். நெய்தல் பூவின் நிறம் பற்றி விளக்கவும் நெய்தலின் இதழ்களுக்கு அடியில் உட்புறமாக மகரந்த வட்டத்தைச் சுற்றி உள்ள தேன் சுரப்பிகள் பற்றி எடுத்துரைக்கவும் நெய்தல் மலர் விரியும் போது ஏற்படும் நறுமணம் பற்றிக் கூறவும் இப்பாடலை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் பொதுச்சொல்லும் ஒரு பொருட் பலசொல் குறித்த சிறப்புச் சொல்லும்

க.அன்பழகன் என்பவரால் இக்கட்டுரை எழுதப்பெற்றது. இதில் அகநானூற்றின் 140 ஆம் பாடலின், ‘வெண்கல்’ எனும் சொல் இடம்பெற்றுள்ளது. வெண்மையான கல்லை உடைய உப்பினை இப்பாடலின் அடி குறிக்கின்றது. “கல்” கடினத்தன்மையுடைய பொருள் எனும் பொதுப் பொருளைக் கொண்டது. ஆனால் இது சிறப்புச் சொல்லுடன் சேர்ந்து பொருள் மாற்றம் அடைகின்றது. வெண்மை+கல்= வெண்கல் (உப்பு) என விளக்க மேலே இடம்பெற்ற சொல்லை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

## மருதனிள நாகனார் பாடல்களில் காணலாகும் உள்ளுறையும் இறைச்சியும்

இக்கட்டுரை சோ.முத்தமிழ்ச்செல்வன் என்பவரால் எழுதப்பெற்றதாகும். இதில் அகநானூறுக்குரிய 220 ஆம் பாடல் இடம்பெற்றுள்ளது.

"ஊரும் சேரியும் உடனியைந் தலரெழத்
...

ஊரும்... எனும் அடி முதலாக 12 அடிகள் இப்பாடலில் இடம்பெற்றுள்ளன. 'தலைவன் தேரோடு தலைவியைக் காண வருகின்றான். இதனால் தலைவியின் ஊரில் அலர் உண்டாகின்றது. இந்நிலையில் தலைவி இற்செறிக்கப்பட்டுத் தலைவனால் காண்பதற்கு அரியவளாகின்றாள். ஆனால் தலைவன் நடுங்கும் நெஞ்சுடன் பலகாலும் தலைவியைக் காணவந்து வருந்திச் செல்கின்றான். இதையறிந்த தலைவியின் தோள் அழகு அழிகின்றது. இதைக் கண்ட தோழி, தலைவியை மணந்துகொள்ளுமாறு தலைவனிடம் கூறுவது' பாடலடிகளின் பொருளாகும். இறைச்சிப் பொருளை விளக்குவதற்காக இப்பாடலை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

## சங்க காலத்தில் தழையுடை

இக்கட்டுரை அ.ஜெயக்குமார் என்பவரால் எழுதப்பெற்றதாகும். இதில் அகநானூறு 390 ஆம் பாடலின்,

"ஐதுஅகல் அல்குல் கவின்பெறப் புனைந்த
பல்குழைத் தொடலை ஒல்குவயின் ஒல்கி,
"நெல்லும் உப்பும் நேரே, ஊரீர்!
கொள்ளீரோ எனச் சேரிதொறும் நுவலும்"

எனும் அடிகள் இடம்பெற்றுள்ளன. 'வளைந்து சுருண்ட கூந்தல் அலைபாய, அழகொழுகும் அல்குல் தடத்து அணிந்த தழையாடை அசைய நடந்து, ஊர்மக்களே! நெல்லும் உப்பும் ஒரே விலையாகும், எனவே வாங்கிக்கொள்வீராக என்று சேரிதோறும் கூறி விற்கும் அழகிய வளைந்த கொப்பூழையும் மூங்கில் போன்ற தோளினையும் உடைய உப்பு விற்கும் பெண்' என்பது பாடலின் பொருளாகும். உப்பு விற்கும் பெண்கள் தழையுடை அணிந்து உப்புவிற்றனர் என்பதை விளக்கவும் விழாவிற்குத் தழையுடை அணிந்து சென்றதைப் போலவே தொழிலுக்குச் செல்லும்போதும் தழையுடையை அக்கால உப்பு விற்கும் பெண்கள் அணிந்திருந்தனர் என்பதை எடுத்துரைக்கவும் இப்பாடலை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

### 4.2.5 பாலை

தமிழ்ப்பொழில் இதழில் அகநானூறுக்குரிய பாலைத்திணைப் பாடல்களின் எண்ணிக்கை 44 ஆகும்.

### தமிழில் தாவரங்கள்

கு.சீனிவாசன் என்பவரால் எழுதப்பெற்ற இக்கட்டுரையில் 349, 297, 119, 205, 197, 341, 355 ஆகிய அகநானூற்றுப் பாடல்கள் இடம்பெற்றுள்ளன.

"கருங்கால் வேங்கை" (349)

கரிய நிறமுடைய வேங்கைமரம் என்பது இப்பாடலடியின் பொருளாகும்.

"திருந்துஅரை நிவந்த கருங்கால் வேங்கை
எரிமருள் கவளம் மாந்தி" (349)

கரியநிறமுடைய வேங்கை மரத்தில் நெருப்புப் போன்ற பூக்கள் காணப்படும் என்பது பாடலடிகளின் பொருளாகும். 'கருங்கால் வேங்கையின் அடிமரம் ஆறடி முதல் எட்டடி வரை அகன்று பருத்து மிக்க வலிமையுடையதாக இருக்கும். இது ஐம்பது முதல் நூறு அடி உயரம் வரை நீண்டு செழித்து வளரும். இது ஆறாயிரத்து ஐந்நூறு அடி உயரத்திற்குமேல் நாலாயிரத்து ஐந்நூறு அடிக்குட்பட்ட மலைச்சரிவுகளில், நல்ல வெப்பமும், மிகுந்த மழையும் ஒருங்கமைந்த காடுகளில் செழித்து வளரும்' என்ற கருத்தைக் கூறவும் வேங்கையின் சிறப்பை எடுத்துக் கூறவும் இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

"விரிந்த வேங்காகப் பெருஞ்சினைத் தோகை
பூக்கொய் மகளிரின் தோன்றுநாட" (297)

எனும் பாடல் அடிகள் கட்டுரையில் இடம்பெற்றுள்ளன. ஆனால் அகநானூற்று என்சிபிஎச் பதிப்பில் இப்பாடல் அடிகள் இடம்பெறவில்லை.

"நெய்தல் உருவின் ஐதுஇலங்கு அகல்இலை,
தொடையமை பீலிப் பொலிந்த கடிகை,
மடைஅமை திண்சுரை, மாக்காழ் வேலொடு" (119)

‘நெய்தற் பூப்போன்ற உருவத்தையும், அழகாக விளங்கும் அகன்ற இலையினையும், மயில்தோகையால் தொடுக்கப்பெற்றுப் பொலிவாக உள்ள காம்பினையும், மூட்டுவாய் அமைந்த திட்பமான சுவையினையும், கரிய தண்டினையும் உடைய வேலைத் துணையாகக் கொண்டு, பகையைத் தணிவிக்கத் தலைவன் போர்க்களம் செல்லும்போது, யாமும் துணையாகச் செல்லலாமா? கேட்டுச்சொல்! எனத் தலைவி, தோழியை நோக்கிக் கூறுவது’ இப்பாடலடிகளின் பொருள். நெய்தல் இலை சற்று நீண்ட முக்கோண வடிவானது. இது சற்றுச் சிறியதாகவும் இருக்கும். இலைகளும் பூக்களும் நீண்ட காம்புகளை உடையன. நெய்தல் இலை நீரில் மிதக்கும் என நெய்தல் இலையின் வடிவத்தை எடுத்துக்கூற இப்பாடல் அடிகளை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

“... குயிலும்

தேம்பாய் மாஅத்து ஓங்குசினை விளிக்கும்” *(341)*

குயில் மாமரத்தின் உயர்ந்த கிளையில் இருந்து கூவும் என்பது பாடலடிகளின் பொருள்.

மாமரம் செழுமையான தளிர்களை ஈன்றது. குயில் அம்மரத்தின் கிளைகளினின்று தம் இனிய குரலால் பல முறை கூவியது என்பது,

“மாவும் வண்தளிர் ஈன்றன, குயிலும்

இன்தீம் பல்குரல் கொம்பர் நுவலும்” *(355)*

எனும் இப்பாடலடிகளின் பொருளாகும். வேனிற் காலத்தில் மாந்தளிர் தழைக்கும் என்பதை எடுத்துரைக்க இப்பாடல் அடிகள் ஆசிரியரால் கையாளப்பெற்றுள்ளன.

“புலிஉரி வரிஅதள் கடுப்ப கலிசிறந்து

நாட்பூ வேங்கை நறுமலர் உதிர” *(205)*

‘வரிகளையுடைய புலியின் உரித்த தோலைப் போன்ற வேங்கைமரத்திலிருந்து, மணநாளைக் காட்டும் மணங்கமழும் பூக்கள் உதிர்ந்தன’ என்பது இப்பாடலடிகளின் பொருளாகும். மலர்ந்த வேங்கை புலியை ஒத்திருக்கும் என்ற கருத்தைக் கூறவும் வேங்கை மலரின் சிறப்பை விளக்கவும் இப்பாடல் அடிகள் ஆசிரியரால் கையாளப்பட்டுள்ளது.

"ஒள்ளிணர்க் கொன்றை" (197)

ஒளிபொருந்திய பூங்கொத்துக்களைக் கொண்ட கொன்றை மரம் என்பது இப்பாடல் அடியின் பொருளாகும். கொன்றைப் பூவின் சிறப்பினை எடுத்துக்காட்ட இப்பாடல் அடி ஆசிரியரால் எடுத்தாளப்பட்டிருக்கின்றது.

## நற்றிணையில் தாவரங்கள்

வித்துவான் சொ.சிங்காரவேலனார் எழுதிய இக்கட்டுரையில் 271, 5 ஆகிய அகநானூற்றுப் பாடல்கள் இடம்பெற்றுள்ளன.

"குறும்பொறை மருங்கின் கோட்சுரம் நீந்தி,
நெடுஞ்சேண் வந்த நீர்நசை வம்பலர்
செல்உயிர் நிறுத்த சுவைக்காய் நெல்லிப்
பல்காய் அம்சினை" (271)

'சிறிய குன்றுகளும், ஆறலைக் கள்வர்களும் கொடிய விலங்குகளும் தீங்கு செய்யக்கூடிய அரிய வழிகளை, நெடுந்தூரம் கடந்து செல்லும் நீர்வேட்கை மிக்க வழிப்போக்கர்களுக்குத் தண்ணீர்த்தாகத்தைப் போக்கி, உயிரைக் காத்துக்கொள்ளும் வகையில், சுவைமிக்க காய்களைக் கொண்ட நெல்லிமரம் காணப்படும் என்பது பாடலடிகளின் பொருளாகும்.

"பளிங்கத்து அன்ன பல் காய் நெல்லி,
மோட்டு இரும் பாறை, ஈட்டு வட்டு ஏய்ப்ப,
உதிர்வன படூஉம் கதிர்தெறு கவாஅன்," (05)

'பளிங்கு போன்ற நெல்லிக்காய்கள் உயர்ந்த பெரிய பாறைகளில் குவித்து வைத்திருக்கும் வட்டுகளைப் போல உதிர்ந்து கிடக்கும்' என்பது பாடலடிகளின் பொருளாகும். நெல்லி மரத்தின் சிறப்பை விளக்கவும், நெல்லிக்காய் மக்களுக்கு எவ்வாறு பயனுள்ள வகையில் உள்ளது என்பதை எடுத்துக்காட்டவும் மேலே இடம்பெற்றுள்ள பாடல்களின் அடிகளை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் கல்வெட்டுச் சொற்கள்

*பி.எல்.சாமி என்பவரால் இக்கட்டுரை எழுதப்பெற்றுள்ளது.*

*“காரோடன்” (1)*

*“காரோடன்” (356)*

*ஆகிய அகநானூற்றுப் பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன. இச்சொல்லுக்குச் ‘சாணைக் கல் செய்வோன்’ என்பது பொருளாகும்.*

> *“ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்த கோபாலதேவன் என்ற பல்லவ மன்னன் ஹஸ்திவு புர கன்னட கல்வெட்டுக்களில் “கோலகுப்பா,” “ஜீவஸி,” “கார்ஸபிண்டா,” “கொம்பகரோடம்” போன்ற வணிகப் பெயர்கள் குறிப்பிடப்படுகின்றன. இப்பொருள்களின் பெயர்களை சங்கேத வாசகத்திலிருந்து மொழிபெயர்ப்பது கடினம் ஆகும். எனவே இக்கலைச் சொற்களுக்கு எந்தக் கல்வெட்டு நிபுணர்களும் விளக்கம் கொடுக்கவில்லை. ஆனால் அதிர்ஷ்டவசமாக சங்க இலக்கியம் “கொம்பகரோடம்” என்ற சொல்லுக்குப் பட்டைக்கல் உற்பத்தி செய்யும் தொழிலில் ஈடுபட்டிருக்கும் கலைஞன் என விளக்கம் தருகிறது”*

*என விளக்கம் தருவதற்காக மேலே இடம்பெற்றுள்ள பாடல்களின் சொற்களை ஆசிரியர் தன்வயம் கொண்டு பயன்படுத்தியுள்ளார்.*

## சங்க இலக்கியத்தில் பேய்

*வி.சா.பாலசுப்பிரமணியன் என்பவரால் எழுதப்பெற்ற இக்கட்டுரையில், 233, 67 ஆகிய அகநானூற்றுப் பாடல்கள் இடம்பெற்றுள்ளன.*

*“கூளிச் சுற்றம் குழீஇயிருந் தாங்கு” (233)*

*‘உதியஞ்சேரலாதன் தம் முன்னோர்களுக்குத் தென்புலக் கடன் செய்தற்பொருட்டு, அவர்களுக்குப் பலியாகப் பெருஞ்சோறு படைக்கின்றான். இவ்வுணவை உண்ணச் சிறிய, பெரிய, கரிய பேய்களின் சுற்றங்கள் கூடி நின்றன’ என்பது பாடல் அடியின் பொருளாகும். பேய்களைப் பற்றி எடுத்துக்கூற இப்பாடலின் அடியை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.*

"பேயும் அறியா மறைஅமை புணர்ச்சி" (67)

இப்பாடல் அடி கட்டுரையில் இடம்பெற்றுள்ளது. ஆனால் அகநானூற்று என்சிபிஎச் பதிப்பில் இடம்பெறவில்லை.

## சங்கச் சமூகமும் உயர்நிலை உலகமும்

பெ.மாதையன் என்பவர் எழுதிய இக்கட்டுரையில் 233 ஆம் பாடலுக்குரிய 'துறக்கம்' எனும் சொல் எடுத்தாளப் பெற்றுள்ளது. சங்க இலக்கியத்தில் சொர்க்கத்தைக் குறிக்கப் பல சொற்கள் பயன்பட்டுள்ளன. அவற்றில் ஒன்று 'துறக்கம்' என விளக்கம் காட்ட இப்பாடலின் சொல்லை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியங்களில் அறிவியல் கோட்பாடுகள்

சு.தமிழ்வேலு எழுதிய இக்கட்டுரையில் 151, 283, 97 ஆகிய அகநானூற்றுப் பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

"கலைமான் தலையின் முதல்முதற் கவர்த்த
கோடல்அம் கவட்ட குறுங்கால் உழுஞ்சில்" (151)

'கலைமானின் தலையின்கண் புதிதாக முளைத்துக் கிளைத்த கொம்பு போன்ற சுவடுகளையும், குறிய காலினையும் உடைய, வாகை மரத்ினது கிளையில் விளைந்த நெற்றின் குலை' என்பது பாடல் அடிகளின் பொருளாகும்.

"பல்கவர் மருப்பின் முதுமான் போக்கி" (283)

'சிற்றூரில் வாழும் பெண்கள், பல கிளை பொருந்திய கொம்புகளையுடைய முதிய மானை விரட்டிவிட்டு அவை உண்டு எஞ்சிய தினையைக் கொண்டு வருவர்' என்பது பாடல் அடியின் பொருளாகும்.

"கள்ளிஅம் காட்ட புள்ளியம் பொறிக்கலை
வறன்உறல் அம்கோடு உதிர, வலம்கடந்து,
புலவுப்புலி துறந்த கலவுக்கழி கடுமுடை" (97)

'கள்ளிகள் நிறைந்த காட்டினிடத்தே புள்ளிப்பொறி பொருந்திய கலைமானை, வறண்ட அழகிய அதன் கொம்புகள் சிதைந்து உதிருமாறு புலால் விருப்பமுடைய புலி அதனைத் துரத்திப் பற்றிக் கொன்று தின்னும்' என்பது பாடல் அடிகளின் பொருளாகும். மானுக்குக் கொம்பு முளைப்பது, கிளைவிடுவது, வளர்வது, உதிர்வது, திரும்ப முளைப்பது ஆகிய செயல்களை இன்றைய அறிவியல் வல்லுநர்கள் கண்டறிந்து உரைத்துள்ளனர். இச்செய்தியை, சங்ககால மக்கள் அக்காலத்திலேயே அறிந்திருந்தனர் என்பதை விளக்க இப்பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியத்தில் பொதுச் சொல்லும் ஒரு பொருட் பலசொல் குறித்த சிறப்புச் சொல்லும்

க.அன்பழகன் என்பவரால் எழுதப்பெற்ற இக்கட்டுரையில் 53, 201 ஆகிய அகநானூற்றுப் பாடலுக்குரிய 'திகிரி,' 'பகலோன்' எனும் அகநானூற்றுப் பாடற்சொற்கள் இடம்பெற்றுள்ளன. 'சூரியன்' என்பது இச்சொற்களின் பொருளாகும். ஒரு பொருளைக் குறித்து வரும் பல சொற்களை விளக்கப் பாடல்களின் சொற்களை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்க இலக்கியம் கூறும் அறம்

க.அமுதா என்பவரால் எழுதப்பெற்ற இக்கட்டுரையில் 115, 219, 256 ஆகிய அகநானூற்றுப் பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

"அறங்கடைப் படாஅ" (115)

சங்க இலக்கியத்தில் காதல், வீரம் என்ற இருபகுப்பிலும் 'அறம்' என்பது காணப்படுகின்றது என்று விளக்கவும் சங்க இலக்கியத்தில் 'அறம்' பற்றிக் குறிப்பிடும் இடங்களை எடுத்துக்காட்டவும் இப்பாடலின் அடியை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

"அறனி லாளனோடு இறந்தனள்" (219)

'அறநினைவு இல்லாதான்' என்பது பாடல் அடியின் பொருளாகும். தலைவன் தலைவியை உடன் கூட்டிச் சென்றதனை அறிந்த தாய் 'அறனிலாளனோடிறந்தனை' என்கிறாள். தலைவன் கற்பு வாழ்வில் ஈடுபட்டு, ஊரறியத் தலைவியை மணப்பது 'அறம்' என்று வலியுறுத்தப்படுவதையும்

இதன்வழி அறிய முடிகின்றது. தலைவனின் கூற்றில் வெளிப்படும் அறத்தை எடுத்துக்காட்ட இப்பாடல் ஆசிரியரால் கையாளப்பெற்றுள்ளது.

'கள்ளூர் எனும் ஊரில், ஒரு பெண்ணின் நலனை நுகர்ந்த ஒருவன், அறவோர் முன்னர் அறமற்ற பொய்ச் சூளுரை உரைக்கின்றான். அவன் செய்த அடாச்செயலின் உண்மையை அறிந்த அறவோர் அவனைத் தளிர்கள் கொண்டு பெரிய மரத்தின் கிளையில் கட்டி, அவன் தலையில் நீற்றினைப் பெய்தனர்' என்பது 256 ஆம் பாடல் அடிகளின் பொருளாகும். 'அறம்' அக்காலத்தில் வலியுறுத்தப்பட்டதையும் அறமற்ற செயலைக் கண்டு தண்டிக்கப்பட்டதையும் எடுத்துரைக்க இப்பாடலின் கருத்தை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்கத் தமிழரின் வாழ்வியல் கூறுகள்

சு.கு.பன்னீர்செல்வம் என்பவரால் எழுதப்பெற்ற இக்கட்டுரையில் 33, 37, 87 ஆகிய அகநானூற்றுப் பாடல்களின் கருத்தாக்கங்கள் இடம்பெற்றுள்ளன.

அரிசிச் சோற்றையே பண்டைய தமிழர் தம் சிறப்புணவாகக் கொண்டனர், வெளுக்கத் தீட்டியே அரிசியை உலையிலிடுவர் என்ற கருத்தைக் கூற 33 ஆம் பாடல் ஆசிரியரால் கையாளப்பெற்றுள்ளது. பலாப்பழம், இளநீர், வாழைப்பழம், நுங்கு, சேம்பிலைக்கறி, வள்ளிக்கிழங்கு, சுட்ட பனங்கிழங்கு ஆகியவையும் பழந்தமிழர்கள் உணவாகும். மேலும், அரிசி, கொள்ளுப்பருப்பு, பயிற்றம்பருப்பு ஆகியவற்றைப் பாலில் கூட்டிக் கஞ்சி காய்ச்சிக் குடிப்பார்கள் என்ற செய்தியை விளக்க 37 ஆம் பாடல் ஆசிரியரால் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. மேலே இடம்பெற்ற இரண்டு பாடல்களுமே சங்கத்தமிழரின் வாழ்வியல் கூறுகளில் ஒன்றான உணவுமுறையைத் தெரிந்துகொள்ளப் பெரிதும் பயன்படுகின்றன.

அக்காலத்தில் நகரங்களில் பெரிய மாடி வீடுகள் காணப்பட்டன. இவை சுட்ட செங்கற்களால் எழுப்பப்பட்டவை. இம்மாடிவீடுகள், கூட்டம், தாயக்கட்டு, அடுக்களை எனத் தனித்தனிப் பகுதிகளாகக் காணப்பட்டன என விளக்குவதற்காக இப்பாடல் எண்ணை

இக்கட்டுரையில் ஆசிரியர் கையாண்டுள்ளார். அக்கால மக்களின் இருப்பிடங்களைத் தெரிந்துகொள்ள இப்பாடல் பெரிதும் உதவுகின்றது.

## சங்க இலக்கிய ஒருபொருட் பலசொற்களின் சொல்லிணைவு

க.அன்பழகன் என்பவரால் எழுதப்பெற்ற இக்கட்டுரையில் 33 ஆம் அகநானூற்றுப் பாடல் இடம்பெற்றுள்ளது. இப்பாடலில் கீழ்வரும் அடி கட்டுரையில் எடுத்தாளப்பெற்றுள்ளது.

"வெல்போர் வானவன் சொல்லி மீமிசை"

'வெல்லும் போரைச் செய்யும் சேரனது கொல்லிமலை மிகப் பழமைவாய்ந்தது' என்பது பாடலடியின் பொருளாகும். ஒருபொருட் பல சொற்கள் இரண்டு அடுத்தடுத்து வரும் இச்சொல் சில நோக்கங்களை நிறைவு செய்து அழுத்தமான உணர்வு வெளிப்பாட்டில் பொருளைத் தெளிவுபடுத்தப் பயன்படுகிறது. (எ.கா.) மீ, மிசை - உயரம் என விளக்கம் கூற இப்பாடலடியை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## சங்ககாலத்தில் தழையுடை

அ.ஜெயக்குமார் என்பவரால் எழுதப்பெற்ற இக்கட்டுரையில் 07, 275 ஆகிய அகநானூற்றுப் பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

"ஒலிக்குழைச் செயலை உடைமாண் அல்குல்" (07)

தழைத்த அசோகந் தளிரினால் ஆன தழையாடையால் அழகுறத் திகழும் அல்குலினை உடையவள் தலைவி என்பது இப்பாடலடியின் பொருள்.

"ஐதுஅகல் அல்குல் தழையணிக் கூட்டும்
கூழை நொச்சி" (275)

தலைவி தன் அழகிய அல்குலில் அணிந்துகொள்ளும் தழையுடை நொச்சி இலையால் செய்யப்பட்டது என்பது இப்பாடலடிகளின் பொருளாகும். தழையுடை செய்ய நொச்சி, அசோகம் போன்ற மரங்களின் இலைகள் பயன்பட்டன என விளக்குவதற்காக இப்பாடலடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## பாலை பாடிய பெருங்கடுங்கோ

இக்கட்டுரை ஜி.சுப்பிரமணியபிள்ளை என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1942 பங்குனி). பாலைபாடிய பெருங்கடுங்கோவின் பாடல் சிறப்பை விளக்குவது இக்கட்டுரையின் நோக்கமாகும். இதில் 111, 99 ஆகிய அகநானூற்றுப் பாடல்களின் அடிகள் இடம்பெற்றுள்ளன.

"...அரச
யானை கொண்ட துகிற்கொடி போல
அலந்தலை ஞெமையத்து வலந்த சிலம்பி
ஓடைக் குன்றத்துக் கோடையொடு துயல்வர" (111)

'பட்டத்து யானை தன்மீது கொண்டுள்ள துகிற் கொடிபோல, வேனிற்காலத்தில் ஓடையென்னும் மலையின் மீதுள்ள ஞெமை மரங்களிற் கட்டியுள்ள சிலம்பிக் கூடுகள் காற்றில் அசைந்து ஆடும்' என்பது இப்பாடலடிகளின் பொருளாகும்.

"குருதி ஆரும் எருவைச் செஞ்செவி
மண்டுஅமர் அழுவத்து எல்லிக் கொண்ட
புண்தேர் விளக்கின், தோன்றும்" (111)

'ஆண் செந்நாயானது பன்றியினைக் கொன்று இழுத்துச்செல்லும்போது வழியெல்லாம் குருதி ஒழுகும். இக்குருதியைச் செஞ்செவியை உடைய எருவைப் பறவைகள் பருகும். இப்பறவை போர்க்களப்பரப்பில், இரவில் விழுப்புண்பட்டு வீழ்ந்த வீரர்களின் புண்களை ஆராயும் பொருட்டுக் கையிற் கொண்ட விளக்குகளைப் போன்று தோற்றமளிக்கும்' என்பது பாடலடிகளின் பொருளாகும்.

"அடுகளம் பாய்ந்த தொடிசிதை மருப்பின்
பிடிமிடை களிறு" (99)

யானைகள் போர்க்களத்துப் பாய்ந்து போர் செய்தமையால், பூண் சிதைந்த கோடுகளைப் பெற்றுக் காணப்படும் என்பது பாடல் அடிகளின் பொருளாகும். அரசன் தன் ஆட்சியில் அறங்காட்டி, போர்க்களத்தில் அஞ்சா நெஞ்சம் படைத்த ஆண்மையனாய், மறங்காட்டும் மாண்புபெறல்

வேண்டும். மேலும், போரின்கண் புறங்கொடாது உயிர்கொடுக்கும் வீரனே உண்மைப் புகழ்படைத்த ஆண்மகன் ஆவான் என்று அரசனின் போர்ச் செயல் பற்றிய கருத்துகளை எடுத்துக்காட்ட இப்பாடலடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

## மருதனிள நாகனார் பாடல்களில் காணலாகும் உள்ளுறையும் இறைச்சியும்

சோ.முத்தமிழ்ச்செல்வன் என்பவரால் எழுதப்பெற்ற இக்கட்டுரையில் 121, 59 ஆகிய அகநானூற்றுப் பாடல்களின் கருத்தாக்கங்கள் இடம்பெற்றுள்ளன.

'மிகவும் காய்தலையுடைய கோடையில், நீண்ட மிக உயர்ந்த நெறியில், நாளும் தன் வறுமை மிக, தோண்டப் பெற்ற குழியின்கண் உண்ணற்காகாத கலங்கிய நீரில், கன்றினையுடைய இளமைவாய்ந்த பிடியின் மெல்லிய தலையை முதலிற் கழுவி, பின் எஞ்சிய சேற்றில், அளைந்துகொண்டு நிறம் வேறுபட்ட வலிய ஆண்யானை, சிவந்த காம்பினையுடைய வெள்ளிய கொத்துகள் அசையத் தனது துதிக்கையால் பற்றித் தினவு பொருந்திய தன் முதுகினை உராய்ந்துகொண்டது' என்பது 121 ஆம் பாடலின் பொருளாகும். 'களிறு தன் பிடியைக் கழுவிப் பின்னர் சேற்றினைக் கொண்டு தான் ஆடியது. அதுபோலத் தலைவன், தலைவியைத் தலையளி செய்வான் என உள்ளுறை கூறுவதற்காக இப்பாடலை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

'தலைவன் பிரிவால் வருந்தும் தலைவியை நோக்கி, தோழி நம் தலைவன் சென்ற வழியோ, வடதிசைக்கண் யமுனை ஆற்றில் ஆயர் மகளிர் தழையாடையை உடுத்திக்கொள்வதற்காக, திருமால் கரையின்கண் இருந்த மரத்தை வளைத்தமை போல் களிறு தன் பிடி உண்ணும் பொருட்டு, அழகிய தழைகளையுடைய யாமரத்தினை வளைத்துத் தந்து, பெருகும் மத நீரால் நனைந்த கன்னத்தில் படியும் வண்டுகளை அம்மரக்குழையால் ஒட்டி நிற்கும் காட்சிகளை உடையது. இக்காட்சியினைப் பார்க்கும் தலைவன் விரைவில் வருவான்' என்று கூறுவது 59 ஆம் பாடலின் கருத்தாகும்.

களிறு, பிடியின் வருத்தம் களைய யாமரத்தின் கிளையை வளைத்துத் தந்தது. அதுபோலத் தலைவனும் தலைவி வருத்தத்தைக் களைய விரைந்து வருவான் என்பது இறைச்சிப் பொருள். இவ்இறைச்சியால், ஆற்றாது வருந்தும் தலைவியைத் தோழி வற்புறுத்தி ஆற்றுவிப்பது என்ற உள்ளடக்கத்தையும் பெறமுடிகின்றது. இறைச்சிப் பொருளால் வன்புறை என்ற உள்ளடக்கம் வலிமை பெறுகிறது என விளக்க இப்பாடலை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

## தெ.பொ.மீயின் முல்லைப்பாட்டு - ஒரு மனங்கொள் திறனாய்வு

இக்கட்டுரை மு.பெரி.மு.இராமசாமி என்பவரால் எழுதப்பெற்றதாகும் (1987 ஜூன், ஜூலை). இதில் முல்லை பற்றிய விளக்கமும் அகமுல்லை, புறவஞ்சித்தொடர்பு பற்றிய விளக்கமும் முரசு முழங்கும் பாசறைக் கண் அரசிருந்து பணித்தற்கான விளக்கமும் காணப்படுகின்றன. இவற்றை முறையாக விளக்குவது இக்கட்டுரையின் நோக்கம். இதில் 69, 251, 281 ஆகிய அகநானூற்றுப் பாடல்களின் எண்கள் இடம்பெற்றுள்ளன. இவ்வெண்கள் மோரியர் பற்றிய குறிப்புகளை விளக்குவதற்காக ஆசிரியரால் பயன்படுத்தப்பட்டுள்ளன.

## சங்க காலம் : ஒரு மறு ஆய்வு

க.த.திருநாவுக்கரசு என்பவரால் எழுதப்பெற்ற இக்கட்டுரையில் 227, 265, 149, 69, 251, 281 ஆகிய அகநானூற்றுப் பாடல்களின் அடிகளும், கருத்தாக்கங்களும் இடம்பெற்றுள்ளன.

“..............................வாய்வாள்
தமிழகப் படுத்த இமிழிசை முரசின்” (227)

தழும்பன் என்பவனின் வலிமையும் கொடையும் தமிழகம் முழுவதும் பரவிக்கிடந்தமையால், முழங்குகின்ற புகழ் முரசினைத் தன்னகத்தே கொண்டவன் என்பது பாடல் அடிகளின் பொருளாகும். ‘தமிழ் மொழி’ தென்னிந்தியாவில் பன்னெடுங்காலமாக வழங்கிவருகின்ற மொழியாகும். அம்மொழி வழங்கிய நாட்டின் பகுதியைத் ‘தமிழகம்’ எனச் சுட்டும் வழக்கம் தொன்மைச் சிறப்புடையதாகும் என விளக்க இப்பாடல் அடியை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

*‘சீர்மலி பாடலி’ (265, 149) சிறப்புமிக்க பாடலிபுரம் என்பது இப்பாடல் அடியின் பொருளாகும்.*

*‘பல்லவருடைய ஆட்சிக்கு (கி.பி.6 ஆம் நூற்றாண்டிற்கு) முற்பட்டது சங்ககாலம் எனவும் வட இந்தியாவில் சிறப்புற்று விளங்கிய பாடலிபுத்திரம் அழிவதற்கு முன்னரே சங்கப் பாடல்கள் இயற்றப்பட்டு இருக்க வேண்டும் எனவும் சங்கப் பாடல்கள் பாடலியின் சிறப்பைப் பாடுகின்றன எனவும், பாடலிபுத்திரம் கி.பி.நான்காம் நூற்றாண்டில் அழிந்துவிட்டது எனவும், பாடலியின் புகழ்பாடும் சங்கப்பாடல்கள் கி.பி. நான்காம் நூற்றாண்டிற்கு முற்பட்டனவாக இருக்கும்’ எனவும் விளக்க மேலே இடம்பெற்றுள்ள பாடல்அடியை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.*

*‘வானைப் பொருந்தும் நீண்டு உயர்ந்த பெரிய மலைகளிலும் செல்லும் தேரினையுடைய மோரியர்கள் தேர் உருளை, தடையின்றிச் செல்லுவதற்குப் பாறைகளை உடைத்து வழியாக்கி, தமிழ்நாட்டிற்குப் படையெடுத்துவந்தனர். மேலும் கோசர் என்பவர் மௌரியரின் தூசிப் படையாகச் சென்று மோகூரைத் தாக்கினர். அத்தாக்குதலுக்கு மோகூர் பணியவில்லை. இதனால் சீற்றம் கொண்ட மோரியர் பெரும்படையுடன் வந்து மோகூரை அழித்தனர்’ என்ற கருத்தை எடுத்துக்காட்ட இப்பாடல்களின் எண்களை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார். சங்கப்பாடல்கள் மோரியரின் தமிழகப் படையெடுப்பைப் பற்றி எடுத்துக்கூறுகின்றன என்பதை விளக்க இப்பாடல் எண்களை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.*

## கஜபாகுவின் கால அடிப்படையில் சங்ககாலம் கால ஆராய்ச்சிக்கு ஒரு மறுஆய்வு

*பூரண சந்திர ஜீவா என்பவரால் எழுதப்பெற்ற இக்கட்டுரையில் 65, 233, 55, 127, 91, 251, 281, 15, 295, 61, 325 ஆகிய அகநானூற்றுப் பாடல்கள் இடம்பெற்றுள்ளன.*

*“நாடு கண் அகற்றிய உதியஞ்சேரற்” (65)*

*பிறர் நாட்டினை வென்று தன் நாட்டின் பிறப்பிடத்தை விரிவாக்கிக்கொண்ட உதியஞ்சேரலாதன் என்பது பாடலடியின் பொருளாகும்.*

*"துறக்க மெய்திய தொய்யா நல்லிசை*
*முதியர்ப் பேணிய, உதியஞ்சேரல்" (233)*

துறக்கத்தினை அடைந்த கெடாத நல்ல புகழினையுடைய தன் முன்னோர்க்குச் செய்தற்கரிய தென்புலக் கடனைச் செய்தான் உதியஞ்சேரலாதன் என்பது பாடலடிகளின் பொருளாகும். சேரமன்னருள் காலத்தால் முந்தியவனாகக் கருதப்படும் உதியஞ்சேரலாதனின் பெருஞ்சோறு கொடுத்த செய்தியினை விளக்கவும் பெருஞ்செல்வத்தைத் துறந்த சிறப்பினை எடுத்துக்காட்டவும் இப்பாடல்களின் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

*"வலம்படு முரசிற் சேரலாதன்*
*முந்நீர் ஒட்டிக் கடம்புஅறுத்து இமயத்து*
*முன்னோர் மருள வணங்குவில் பொறித்து" (127)*

முரசினையுடைய சேரலாதன், தம் முன்னோரைப் போல இமயத்தில் வளைந்த விற்பொறியைப் பொறித்தான் என்பது பாடலடிகளின் பொருளாகும். இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் வடதிசை வெற்றிகளை எடுத்துக்கூற இப்பாடலின் அடிகள் ஆசிரியரால் கையாளப்பெற்றுள்ளன.

*"கரிகால் வளவனொடு வெண்ணிப் பறந்தலைப்*
*பொருதுபுண் நாணிய சேரலாதன்*
*அழி கள மருங்கின் வாள் வடக்கிருந்தென" (55)*

'கரிகால் வளவனோடு பெருஞ்சேரலாதன் வெண்ணிப் போர்க்களத்தே போர்செய்தான். போரில் புறப்புண்பட்டமைக்கு நாணியவனாய்த் தான் போரிட்டுத் தோற்றழிந்த அந்தக் களத்தின் ஒருபுறத்தே வாளோடு வடக்கிருந்து உயிர் நீத்தான்' என்பது பாடலடிகளின் பொருளாகும். பெருஞ்சேரலாதனின் வீரச்செயல்களை எடுத்துரைக்க இப்பாடல் அடிகள் ஆசிரியரால் கையாளப்பெற்றுள்ளது.

விசிபிணி முழவின் குட்டுவன் காப்ப,

"பசியென அறியாப் பணைபயி லிருக்கை

தடமருப் பெருமை தாமரை முனையின்,

முடம்முதிர் பலவின் கொழுநிழல் வதியும்

குடநாடு பெறினும் தவிரலர்" (91)

'குடகு நாடு பசி என்பது என்னவென்று அறியாத மக்களைக் கொண்ட மருதவளமிக்க ஊர்களையுடையது. மேலும் அங்குள்ள வளைந்த கொம்பினையுடைய எருமை தான் மேய்ந்த தாமரையை வெறுத்து, முடத்தன்மை மிக்க பலா மரத்தின் கொழுவிய நிழலிலே தூங்கும்.' இத்தகைய சிறப்புடைய நாட்டிற்குத் தலைவன் குட்டுவன் என்பது பாடலடிகளின் பொருள். குட்டுவனின் குடநாட்டுச் சிறப்பை எடுத்துக்காட்ட இப்பாடல் அடிகள் ஆசிரியரால் எடுத்தாளப்பெற்றுள்ளது.

"மாகெழு தானை வம்ப மோரியர்

புனைதேர் நேமி உருளிய குறைத்த

இலங்குவெள் அருவிய அறைவாய் உம்பர்" (251)

'குதிரைப் படையினையுடைய மோரியர்கள், அழகு செய்யப்பட்ட தம் தேரினது சக்கரங்கள் தடையின்றிச் செல்லும் பொருட்டு மலைவழிகளில் உள்ள பாறைகளை உடைத்துப் பாதையாக்கினர்' என்பது பாடலடிகளின் பொருளாகும்.

"முரண்மிகு வடுகர் முன்னுற, மோரியர்

............" (281)

'முரண்மிகு எனும் அடியிலிருந்து 6 அடிகள் இப்பாடலில் இடம்பெற்றுள்ளன. 'பகைமிக்க வடுகர் முன்னே துணையாகச் செல்ல, அதன்திசை நாடுகளைக் கைப்பற்றக் கருதிய மோரியர், தாம் படைநடத்தி வரும்போது தமது ஒளி பொருந்திய ஆரங்களைக் கொண்ட ஆழியானது தடையின்றிச் செல்லும்பொருட்டுப் பனிதங்கும் வானளாவிய பெரிய மலையினைப் பிளந்து வழியமைத்தனர்' என்பது பாடலடிகளின் பொருள்.

‘அசோகர் கி.மு.232 இல் மறைந்தார். இதனால் அசோகப் பேரரசு சிதைவுற்று ஆந்திரா, கலிங்கம் விதர்ப்பப் பகுதிகள் சுயாட்சி பெற்றன. இதைத் தொடர்ந்து கி.மு.230 அளவில் மேற்குத் தக்காணப் பகுதியில் சாதவாகன அரசு தோன்றியது. இதனால் தமிழகத்தில் மௌரியப் படையெடுப்பின் அச்சுறுத்தல் நீங்கியது; அமைதி உருவானது. காலம் செல்லச்செல்ல மௌரியப் படை வரவிற்காக அமைக்கப்பட்ட படைவழிகளை மக்கள் போக்குவரவிற்குப் பயன்படுத்தினர். பின்னர் வடக்குத் தொடர்புகள் மிகுதியாயின’ என அக்காலச் சூழ்நிலைகளை எடுத்துக்காட்ட மேலே இடம்பெற்ற பாடல் அடிகளை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

எருமை நாடு (மைசூர்) (அகம்.15), வடுகர் (அகம்.295), புல்லி நாடு (அகம்.61), பாணர் (அகம்.325) போன்ற தமிழகத்தின் வடக்கே இருந்த ஊர்களை எடுத்துக்கூற 15, 295, 61, 325 ஆகிய இப்பாடல்களின் எண்களை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

பகுதி மூன்று

## 4.3 தொகுப்புரை

செந்தமிழ்ச்செல்வி இலக்கிய இதழில் அகநானூற்றுப் பாடல்கள் 64 கட்டுரைகளில் இடம்பெற்றுள்ளன. இக்கட்டுரைகளில் இடம்பெற்றுள்ள அகநானூற்றுப் பாடல்களின் எண்ணிக்கை - 227 ஆகும். இவை குறிஞ்சிக்குரியவை - 48, முல்லைக்குரியவை - 21, மருதத்திற்குரியவை - 20, நெய்தலுக்குரியவை - 28, பாலைக்குரியவை - 110 என அமைந்துள்ளன. இப்பாடல்கள் பி.எல்.சாமி எழுதிய 60 கட்டுரைகளிலும், இரா.இராசகோபாலன், சரளா.இராசகோபாலன், ச.கணபதி, லூர்துசாமி, மயிலை சீனிவேங்கடசாமி ஆகியோர் எழுதிய 5 கட்டுரைகளிலும் காணப்படுகின்றன.

தமிழ்ப்பொழில் இலக்கிய இதழில் அகநானூற்றுப் பாடல்கள் 19 கட்டுரைகளில் இடம்பெற்றுள்ளன. இக்கட்டுரைகளில் இடம்பெற்றுள்ள குறுந்தொகைப்பாடல்களின் எண்ணிக்கை - 101 ஆகும். இவை குறிஞ்சிக்குரியவை - 15, முல்லைக்குரியவை - 06, மருதத்திற்குரியவை - 15, நெய்தலுக்குரியவை - 08, பாலைக்குரியவை - 44 என அமைந்துள்ளன.

*இப்பாடல்கள் வி.சா.பாலசுப்பிரமணியன் எழுதிய இரண்டு கட்டுரைகளிலும், க.அன்பழகன் எழுதிய இரண்டு கட்டுரைகளிலும் கு.சீனிவாசன், சு.கு.பன்னீர்செல்வம், பி.எல்.சாமி, சொ.சிங்காரவேலனார், சோ.முத்தமிழ்ச்செல்வன், நா.ஆறுமுகம், பழ.முத்தப்பன், பெ.மாதையன், அ.ஜெயக்குமார், சாலினி இளந்திரையன், சு.தமிழ்வேலு, க.அமுதா, ஜி.சுப்பிரமணியன், மு.பெரி.மு.இராமசாமி, க.த.திருநாவுக்கரசு, பூரணசந்திரஜீவா ஆகியோர் எழுதிய கட்டுரைகளிலும் காணப்படுகின்றன. மேலே இடம்பெற்றுள்ள இரு இலக்கிய இதழ்களிலும் இடம்பெற்றுள்ள குறுந்தொகைப் பாடல்களைக் கட்டுரையாசிரியர்கள் எடுத்தாளுவதற்கான காரணங்களாகக் கீழ்வருவனவற்றைக் குறிக்கலாம்.*

*1. சங்க இலக்கியத்தில் காணப்படும், ஊர்வன, நடப்பன, பறப்பன, நீந்துவன, தாவுவன என்று அமையும் உயிரினங்களின் உருவம், நிறம், குணம், வாழிடம், வேட்டைமுறை ஆகியவற்றை விளக்கும் வகையில் சில பாடல்கள் எடுத்தாளப்பெற்றுள்ளன. அவற்றின் விபரம் வருமாறு:*

- *பல்லி - 09, 88, 351, பாம்பு - 72, 92, 108, 154, 192, 202, 287, 340, 348, 349, 372, 391, ஆமை - 117, 160, 306, 356, 361, ஓந்தி - 125, 145, சிதலை- 81, 149, 167, 377.*

- *கேழல் - 18, 21, 88, 94, 178, 223, 248, 277, 322, புலி - 03, 12, 22, 29, 52, 72, 78, 97, 99, 107, 112, 118, 147, 155, 168, 202, 218, 232, 238, 272, 277, 294, 318, 322, 332, 352, 357, 362, 381, 398, நரி - 94, 193, 279, 337, 375, முயல் - 50, 105, 284, 384, 394, நீர்நாய் - 6, 336, 386, குரங்கு- 267.*

- *ஈயல் - 08, 394, மூதாய் - 14, 74, 193, 304, 374, வெண்குருகு - 178, மயில் - 82, 108, 152, 194, 344, 378, 392, மின்மினிப்பூச்சி - 27, 202, 291, அன்னம் - 234, 320, 334, ஈயல் - 394, நாரை - 40, 100, 240, 276, 290, 360, கொக்கு - 290, 346, காக்கை - 313, 319, சிள்வீடு - 89, 145, 303, குருகு - 13, 40, 141, 145, 176, 273.*

- *இறால்மீன் - 152, ஆரல் மீன் - 246, கயல்மீன் - 126, 313, 346, வாளை - 06, 126, 276, 336, 386, பெருமீன் - 210, அயிரை - 70, கொழுமீன் - 60,*

*100, 110, 290, சுறா - 10, 80, 120, 150, 170, 187, 190, 300, 340, 350, இறால் - 152, 220, 270, முதலை - 03, 18, 80, 301.*

- தேரை - *301*, நுணல் - *154, 364.*

2. பண்டைத்தமிழகத்தில் காணப்பெற்ற செடி, மரம், கொடி, கோரை போன்ற தாவரங்களின் வடிவம், பயன்பாடு, வாழும் தன்மை, இலை, காய், வேர், பூ அமைப்பு, வளரிடம் ஆகியவற்றை விளக்கும் நோக்கில் சில பாடல்கள் எடுத்தாளப்பெற்றுள்ளன. விபரம் வருமாறு:

- *குளவிச்செடி - 22, 82, குறிஞ்சி-268, 308, முந்தூழ் - 78, பயறு - 37, 262, 399, உழுந்து - 86, ஆவிரை - 301, குரவம் - 237, நெய்தல் - 70, 100, 119, 150, 290, மஞ்சள் - 269, வள்ளி - 52, கூதளம் - 47, 68, 178, 182, 255, 268, 272, 273, வெண்காந்தள் - 264, களா - 394, கரந்தை - 226, 269, முள்ளி - 21, 26, 236, ஆம்பல் - 156, அரும்புச்செடி - 80, கண்டல் - 260, முண்டகம் - 80, 130, வெட்சிச்செடி - 133, சூரியகாந்தி - 336.*

- *இலவமரம் - 142, வேங்கை - 12, 48, 52, 182, 202, 205, 294, 297, 349, 364, 378, புன்னை - 244, வாகை - 45, 136, 151, ஆலமரம் - 70, 251, 287, 289, 319, இரம் - 125, ஓமை - 21, 35, 117, 191, 223, 297, 397, வழை - 177, உழிஞை-53, இலுப்பை - 135, 149, 171, 225, 267, 321, 331, 351, கமுகு - 335, இத்தி - 345, பலா - 7, 91, அசோகமரம் - 38, 68, மாமரம் - 341, 355, நெல்லி - 5, 271, 284, கொன்றை - 197, ஞாழல் - 20, 70, 180, 216, 240, 270, 370, தாழை - 20, தாமரை - 156, ஆம்பல் - 316, நெய்தல்- 70, 100, 119, 150, 290.*

- *அதிரல்கொடி - 157, 261, 391, 393, முருக்குச்செடி (பலாசம்) - 42, 223, 229, 277, வஞ்சிக்கொடி - 275, உகாய் - 296, சுள்ளி - 149, பிடவம் - 219, ஈந்து - 21, கடம்பம் - 98.*

- *பைஞ்சாய்கோரை - 62, 226, 236, 290, நாணல் - 212.*

3. சங்ககாலத்தில் வழக்கில் இருந்த நாணயங்களும் புழக்கத்தில் இருந்த மணிகளும் பற்றி விளக்கச் சில பாடல்கள் எடுத்தாளப்பெற்றுள்ளன. விபரம் வருமாறு :

♦ காசு - 267, 293, 363

♦ முத்து - 27, 73, 100, 137, 201, 225, 282, 305, பளிங்கு - 05, 108, 315, 399, பவளம் - 14, 25, 374, சாணக்கல் - 356, சங்கு - 150, 269, வலம்புரி சங்கு- 201.

4. சங்ககாலத்தமிழர்களின் பண்பாடு, பழக்கவழக்கம், நம்பிக்கை ஆகியன பற்றிய கருத்தாக்கங்களை விளக்கும் நோக்கில் சில பாடல்கள் எடுத்தாளப்பெற்றுள்ளன. விபரம் வருமாறு :

♦ உணவு - 24, 33, 37, 87, 348, கள் - 61, ஆடை - 86, 111, 136, 236, 293, 387, தழையுடை - 07, 156, 226, 275, 390, யாழ் - 14, 115, 212, 279, 331, பேய் - 122, 233, துணங்கை - 184, திருமணமுறை - 86, 136, குறிஞ்சிப்பாடல் - 102.

5. தலைவன், தலைவி, தோழி, பரத்தை ஆகியோர்களின் குணநலன்களை விளக்கச் சில பாடல்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. விபரம் வருமாறு :

♦ தலைவி பண்பு - 126, 184, 196, 228, 236, 316.

♦ தலைவன் - 6, 36, 46, 111, 186, 196, 226, 266, 326, 346, 376, 386, 396.

♦ தோழி - 228, 316, 356, பரத்தை - 106.

6. சங்ககாலத் துறைமுக நகரங்களும் பெயர்களும் சில பாடல்களில் இடம்பெற்றுள்ளன. விபரம் வருமாறு :

♦ பவத்திரிப்பட்டினம் - 30, 340, கோடிக்கரை - 70, காவிரிப்பூம்பட்டினம்- 181.

7. சங்க இலக்கியத்தில் காணப்படும் சொற்களின் சிறப்பியல்புகள் குறித்த கருத்துகளை விளக்கச் சில பாடல்கள் எடுத்துக் காட்டப்பெற்றுள்ளன. விபரம் வருமாறு :

♦ ‘உயர்நிலை உலகம்’ என்ற சொல்லின் சிறப்பு - 66, 233

♦ ஒருபொருள் குறித்த பல சொல் - 33, 104, 392.

♦ பொதுச்சொல்லோடு சிறப்புச்சொல் சேர்ந்துவரல் - 53, 102, 140, 182, 201, 208.

8. சங்ககால வரலாற்றுச் செய்திகள் பற்றியும் சங்ககால ஊர்ப்பெயர்கள் பற்றியும் சங்கச் செய்யுள் நடைபற்றியும் சங்ககால மன்னர்கள் பற்றியும் சங்ககாலப் பழமை பற்றியும் கல்வெட்டுச் செய்திகள் பற்றியும் விளக்கச் சில பாடல்கள் எடுத்தாளப்பெற்றுள்ளன. விபரம் வருமாறு :

♦ வரலாற்றுச் செய்திகள் - 25, 281, மோரியர் - 69, 251, 265, 281

♦ சங்ககால ஊர்ப்பெயர்கள் - 15, 61, 295, 325

♦ சங்கச் செய்யுள்நடை - 48, 256, இறைச்சி - 202, உள்ளுறை - 121, 256

♦ சங்ககால மன்னர்கள், குட்டுவன் - 91, பெருஞ்சேரலாதன் - 55, இமயவரம்பன் - 127, உதியஞ்சேரலாதன் - 65, 233, அரசர்களின் சிறப்பு- 99, 111.

♦ சங்ககாலப் பழமை - 149, 265

♦ கல்வெட்டுச்செய்திகள் - 1, 136, 356.

9. அறிவியலோடு தமிழை இணைத்துக்காட்டவும் இலக்கியத்தில் உள்ள அறம் பற்றிய செய்திகளை விளக்கவும் சில பாடல்கள் எடுத்தாளப்பட்டுள்ளன. விபரம் வருமாறு :

♦ அறிவியலோடு இலக்கியம் - 97

♦ அறம் - 115, 219, 256.

10. அகநானூற்றுப் பாடல்கள் சிலவற்றிற்குப் புலவர்கள் பெயர் கிடைக்கப்பெறவில்லை. அப்பாடல்களுக்குப் புலவர்பெயர்களை வருவித்துக் கூறும் நோக்கில் சில பாடல்கள் வாசிக்கப்பெற்றுள்ளன. விபரம் வருமாறு :

- ♦ சிறுபுன்மாலையார் - 114, புலம்பப்போகியார் - 115, நாடுபல இறந்தார்-165.

11. அகநானூற்றுப் பாடல்களில் காணப்படும் களவின் முட்டுப்பாட்டை விளக்கச் சில பாடல்கள் எடுத்தாளப்பெற்றுள்ளன. விபரம் வருமாறு :

- ♦ களவின் முட்டுப்பாடு - 122, 241, 242, 243.

12. மதுரை அளக்கர் ஞாழார் என்ற புலவரின் பெயரில் உள்ள தவற்றை விளக்கச் சில பாடல்கள் எடுத்தாளப்பட்டுள்ளன. விபரம் வருமாறு :

- ♦ 144, 174, 314, 344.

## 4.4.முடிவுரை

மேலே தொகுப்புரையில் குறிப்பிடப்பட்டுள்ள 11 கருத்துகளின் வழிச் செந்தமிழ்ச்செல்வி, தமிழ்ப்பொழில் ஆகிய இதழ்களில் இடம்பெற்றுள்ள கட்டுரைகளில் அகநானூற்றுப்பாடல்கள் எடுத்தாளப்பெற்றமைக்கான காரணங்களைக் கீழ்வருமாறு வரையறுக்கலாம்.

1) மக்களின் சமூக வாழ்வியல் தன்மைகளை எடுத்துரைக்கும் நோக்கில் வாசிக்கப்பெற்றுள்ளன.

2) உயிரினங்களான தாவர, விலங்குகளின் பயன்பாட்டையும் சிறப்பையும் விளக்கும் நோக்கில் வாசிக்கப்பெற்றுள்ளன.

3) பாடல்களில் காணப்படும் மொழிப்பயன்பாட்டைக் கண்டறியும் பாங்கோடு வாசிக்கப்பெற்றுள்ளன.

4) அறிவியலோடு இலக்கியத்தை இணைவு படுத்தும் நோக்கோடு வாசிக்கப்பெற்றுள்ளன.

5) வரலாற்றுத்தன்மையை அறியும் நோக்கில் வாசிக்கப்பெற்றுள்ளன.

6) புலவர் பெயரில்லா அகநானூற்றுப்பாடல்களுக்குப் பெயர் அறியும் நோக்கோடு வாசிக்கப்பெற்றுள்ளன.

7) புலவரின் பெயரில் உள்ள தவற்றை அறியும் நோக்கோடு வாசிக்கப்பெற்றுள்ளன.

இந்த எழுவகைப்பட்ட நோக்கங்களில் முதல் இரண்டு வகைக்குறிய நோக்கங்களே அகநானூற்று வாசிப்புநிலையில் மிகுந்து வெளிப்பட்டுள்ளன. அடுத்து அமையும் 5 வகை நோக்கங்களுக்கு உரிய வாசிப்புமுறைகள் மிக அரியநிலைக்குரியனவாக உள்ளன.

# நிறைவுரை

"இதழ்கள் வாயிலாக அறியலாகும் சங்கஇலக்கிய ஆய்வுகள்" எனும் இவ்வாய்வுவழி அறியப்பெற்ற நற்றிணை, குறுந்தொகை, அகநானூற்றுப் பாடல் வாசிப்பிற்கான காரணங்கள் இங்கு முதலில் தொகுத்து உரைக்கப்பெறுகின்றன. பின்னர் அப்பாடல்கள் வாசிக்கப்பெற்றதற்கான நோக்கங்கள் ஒப்பீட்டு நோக்கில் தடித்த எழுத்துக்களில் அளிக்கப்பெறுகின்றன.

இலக்கிய இதழான செந்தமிழ் 1902 முதல் 2007 வரை 101 தொகுதிகளைக் கொண்டுள்ளது. அதேபோல் செந்தமிழ்ச்செல்வி இலக்கிய இதழ் 1923 முதல் 2007 வரை 82 சிலம்புகளைக் கொண்டுள்ளது. மேலும் 'தமிழ்ப்பொழில்' இலக்கிய இதழ் 1925 முதல் 2007 வரை 82 துணர்களைக் கொண்டுள்ளது. இவற்றில் செந்தமிழ் இதழில் 52, 53, 62, 75, 78, 82, 91, 93 ஆகிய தொகுதிகள் கிடைக்கவில்லை. செந்தமிழ்ச்செல்வி இதழில் 1931-38, 1952-57, 69, 70, 89, 90, 96, 97 ஆகிய 20 ஆண்டு இதழ்கள் கிடைக்கவில்லை. தமிழ்ப்பொழில் இதழில் 1960 முதல் 1968 வரையிலான 8 ஆண்டு இதழ்கள் கிடைக்கப்பெறவில்லை. கிடைக்கப்பெறாத இவ்விதழ்கள் போக, கிடைத்த இதழ்களில் செந்தமிழ், செந்தமிழ்ச்செல்வி, தமிழ்ப்பொழில் ஆகியவற்றில் முறையே 87, 180, 90 எனச் சங்கஇலக்கியக் கட்டுரைகள் காணப்படுகின்றன. இம்மூன்று இலக்கிய இதழ்களில் காணப்படும் சங்கஇலக்கிய ஆய்வுக்கட்டுரைகளின் மொத்த எண்ணிக்கை - 357 ஆகும். செந்தமிழ்ச்செல்வி, தமிழ்ப்பொழில் ஆகிய இலக்கிய இதழ்களில் 270 சங்க இலக்கிய ஆய்வுக்கட்டுரைகள் காணப்பெறுகின்றன. இந்த 270 சங்க இலக்கியக் கட்டுரைகளில் நற்றிணை, குறுந்தொகை, அகநானூற்றுப் பாடல்கள் இடம்பெறும் ஆய்வுக்கட்டுரைகளின் எண்ணிக்கை 100 ஆகும். இக்கட்டுரைகளில் இடம்பெற்றுள்ள நற்றிணை, குறுந்தொகை, அகநானூற்றுப் பாடல்களைக் கட்டுரையாசிரியர்கள் எடுத்தாண்டமைக்கான காரணங்களைக் கீழ்வருமாறு வகைப்படுத்தலாம்.

- செந்தமிழ் இதழ் தோற்றம் முதல் 2007 வரை 101 தொகுதிகளைக் கொண்டு காணப்படுகின்றது. இத்தொகுதிகளை (1-25), (26-51), (52-76), (77-101) என நான்கு பிரிவுகளாகப் பிரிக்கலாம். முதல் பிரிவில் 29 சங்க

இலக்கியக் கட்டுரைகளும் இரண்டாம் பிரிவில் 18 சங்க இலக்கியக் கட்டுரைகளும் மூன்றாம் பிரிவில் 10 சங்க இலக்கியக் கட்டுரைகளும் நான்காம் பிரிவில் 30 சங்க இலக்கியக் கட்டுரைகளும் காணப்படுகின்றன. ஆக, இவ்விதழில் மொத்தம் 87 சங்க இலக்கியக் கட்டுரைகள் காணப்படுகின்றன. இக்கட்டுரைகள், சங்கநூல்கள், மன்னர்கள், புலவர்கள், அகப்பொருள், அகத்திணை, சங்ககால ஊர்ப்பெயர்கள், சங்ககாலச் சிறப்பக்குறிப்புகள், சங்கமக்கள் வாழ்வியல் எனும் பொருண்மைக்கு உரியனவாக உள்ளன.

♦ செந்தமிழ்ச்செல்வி வெளிவந்த ஆண்டு முதல் 2007 வரையிலான ஆண்டுகளை (1923-50) (1957-78) (1979-2007) எனப் பிரிக்கலாம். முதல் பிரிவில் 39 சங்கஇலக்கியக் கட்டுரைகளும் இரண்டாம் பிரிவில் 55 சங்க இலக்கியக் கட்டுரைகளும் மூன்றாம் பிரிவில் 86 சங்க இலக்கியக் கட்டுரைகளும் காணப்படுகின்றன. ஆக இவ்விதழில் மொத்தம் 180 சங்க இலக்கியக் கட்டுரைகள் காணப்படுகின்றன. இக்கட்டுரைகள், தமிழ்மக்கள் வாழ்வு, அரசியல், தாவரங்கள், விலங்குகள், சங்கநூலின் தனிச்சிறப்பு எனும் பொருண்மைகளுக்கு உரியனவாக உள்ளன.

♦ தமிழ்ப்பொழில் வெளிவந்த ஆண்டுமுதல் 2007 வரை உள்ள ஆண்டுகளை (1925-50) (1951-76) (1977-2003) (2004-2007) என நான்கு பிரிவுகளாகப் பிரிக்கலாம். முதல் பிரிவில் - 28 சங்க இலக்கியக் கட்டுரைகளும் இரண்டாம் பிரிவில் 22 கட்டுரைகளும் மூன்றாம் பிரிவில் - 37 கட்டுரைகளும் நான்காம் பிரிவில் - 3 கட்டுரைகளும் காணப்படுகின்றன. ஆக, இவ்விதழில் மொத்தம் உள்ள சங்க இலக்கியக் கட்டுரைகளின் எண்ணிக்கை - 90 ஆகும். இக்கட்டுரைகள் சங்க நூல்களின் சிறப்பு, சங்ககால அரசு, சங்கமக்கள் வாழ்வியல், தாவரங்கள், விலங்குகள் பற்றிய செய்திகள், பேச்சுநடை, சொற்பயன்பாடு எனும் பொருண்மைகளுக்குரியனவாக உள்ளன.

செந்தமிழ்ச்செல்வி இலக்கிய இதழில் நற்றிணைப் பாடல்கள் 52 கட்டுரைகளில் இடம்பெற்றுள்ளன. இக்கட்டுரைகளில் இடம்பெற்றுள்ள நற்றிணைப்பாடல்களின் எண்ணிக்கை - 178 ஆகும். இவை குறிஞ்சிக்குரியவை - 51, முல்லைக்குரியவை - 09, மருதத்திற்குரியவை- 14, நெய்தலுக்குரியவை-

59, பாலைக்குரியவை - 45 என அமைந்துள்ளன. இப்பாடல்கள் பி.எல்.சாமி எழுதிய 47 கட்டுரைகளிலும் அ.குமாரஸ்வாமி, மது.ச.விமலானந்தம், மயிலை சீனி.வேங்கடசாமி, மார்கரெட் பாஸ்டின், பொற்கோ ஆகியோர் எழுதிய 5 கட்டுரைகளிலும் காணப்படுகின்றன.

தமிழ்ப்பொழில் இலக்கிய இதழில் நற்றிணைப்பாடல்கள் 18 கட்டுரைகளில் இடம்பெற்றுள்ளன. இக்கட்டுரைகளில் இடம்பெற்றுள்ள நற்றிணைப் பாடல்களின் எண்ணிக்கை - 119. இவை, குறிஞ்சிக்குரியவை-28, முல்லைக்குரியவை - 10, மருதத்திற்குரியவை - 18, நெய்தலுக்குரியவை-20, பாலைக்குரியவை - 43 என அமைந்துள்ளன. இப்பாடல்கள் சொ.சிங்காரவேலனார், க.அன்பழகன் ஆகியோர் எழுதிய இரண்டு கட்டுரைகளிலும், கு.சீனிவாசன், ஆ.பாலன், வி.சா.பாலசுப்பிரமணியன், அ.ஜெயக்குமார், ச.தண்டபாணி தேசிகர், துரை.பிச்சை, சாமி.சிதம்பரனார், சோ.முத்தமிழ்ச்செல்வன், சாலினிஇளந்திரையன், பழ.முத்தப்பன், சு.கு.பன்னீர்செல்வம், க.அமுதா, பூரணசந்திரஜீவா ஆகியோர் எழுதிய 14 கட்டுரைகளிலும் காணப்படுகின்றன. மேலே இடம்பெற்றுள்ள இரு இலக்கிய இதழ்களிலும் இடம்பெற்றுள்ள நற்றிணைப் பாடல்களைக் கட்டுரையாசிரியர்கள் எடுத்தாண்டதற்கான காரணங்களாகக் கீழ்வருவனவற்றைக் குறிக்கலாம்.

1. பண்டைய இலக்கியத்தில் காணப்படும் ஊர்வன, நடப்பன, பறப்பன, நீந்துவன, தாவுவன என அமையும் உயிரினங்களின் உடல்அமைப்பு, பண்பு, வேட்டைத்தன்மை, செயல்பாடு ஆகிய தன்மைகளை விளக்கும் நோக்கில் பல பாடல்கள் எடுத்தாளப்பெற்றுள்ளன. அவை தொடர்பான விபரம் வருமாறு :
   - பல்லி - 98, 196, 246, பாம்பு - 14, 72, 92, 125, 168, 261, 285, 325, 366, ஆமை - 280, 385, ஓந்தி - 92, 186.
   - குரங்கு - 95, 151, 334, கேழல் - 82, 98, 119, 336, 386, புலி - 02, 29, 148, 158, 322, 332, 333, 383, 391, முயல் - 59, 251, நரி - 352, நீர்நாய் - 195, 390, யானை - 14, 18, 125, 126.

- அன்னம் - 73, 356, கொக்கு - 100, 258, 280, 326, மயில் - 13, 115, 248, 262, 264, 276, 288, 305, 357, 396, மின்மினிப்பூச்சி - 44, வெள்ளாங்குருகு - 70, வெண்குருகு - 4, 54, 67, 167, 183, 211, நாரை- 127, 178, 180, 263, குருகு - 27, 159, 369, சிள்வீடு - 252, மூதாய் - 52, காக்கை - 281, 343, யானை - 14, 18, 126.
- கயல்மீன் - 220, 230, முதலை - 287, 297, கெடிறு - 70, வாளை - 310, 340, 390, 400, திமிங்கிலம் - 388, அயிரை - 272, கொழுமீன் - 127, 159, 175, 195, 207, 291, 311, கோட்டுமீன் - 49, சுறா - 27, 45, 67, 78, 132, 199, 207, 215, 223, 303, 392, இறால் - 19, 31, 49, 67, 101, 111, 131, 211, 278, 358, சிறுமீன் - 91, 239, வாளை - 111, 131, 191.
- தவளை - 347, நுணல் - 59.

2. சங்ககாலத்தில் காணப்பெற்ற செடி, கொடி, மரம், புல், பயிர் ஆகிய தாவரங்களின் வடிவம், நிறம், பயன்பாடு, வாழும் காலம், இலை, காய், வேர், பூ அமைப்பு ஆகியவற்றை விளக்கும் நோக்கில் சில பாடல்கள் கையாளப்பெற்றுள்ளன. அவற்றின் விபரம் வருமாறு:
   - குவளை - 34, ஆம்பல் - 60, 230, 290, செங்காந்தள் - 34, 294, 379, குறிஞ்சிச்செடி - 116, 176, 268, 301, தாமரை - 301, கூதளம் - 119, 244, 313, 346, 376, உழுந்து - 89, தாழம் - 19, 78, 131, 235, சுள்ளி - 215, முண்டகம் - 191, 207, 311, 345, களா - 256, நெய்தல் - 78, 96, 117, 283, 332, 372, 382, குளவி - 51, 232.
   - வள்ளி - 82, 269, 295, 328.
   - ஞாழல் - 31, 54, 74, 82, 96, 106, 167, 191, 267, 291, 311, 315, 321, நாகம்- 82, கடம்பு - 34, குமிழம் - 6, வேங்கை - 13, 28, 112, 151, 168, 178, 232, 257, 313, 379, 383, கொன்றை - 07, 46, 99, 141, 221, 242, 246, 269, 296, 302, மயிலை - 115, கண்டல் - 54, 74, 191, 123, 207, 345, 363, 372, புன்னை- 09, 249, 278, நாவல் - 35, ஓமை- 84, 107, 137, 198, 252, 279, 318, ஆலம்- 76, 343, பலா - 77, 232, இரம் - 302, இத்தி - 162, இலந்தை-113, சந்தனம்- 1, 5, 259, 292, குரவம் - 266, மா - 118, 243, இலவம் - 105, பிடவம் - 256, ஈந்து -

*126, 174,* குரா *- 56, 224,* நெல்லி *- 03,* வேம்பு *- 3, 279,* பாதிரி *- 52, 118, 337,* வெண்பாலை *- 86,* வாழை *- 176, 222, 225, 232, 309.*

- ♦ பைஞ்சாய் *- 60,* எருவை *- 156, 261, 294.*
- ♦ வரகு *- 121.*

3. பண்டைத்தமிழகத்தில் வழக்கில் இருந்த காசுமுறையையும், மக்கள் பயன்பாட்டில் இருந்த மணிகளையும் விளக்கச் சில பாடல்கள் எடுத்து விளக்கப்பெற்றுள்ளன. விபரம் வருமாறு:
   - ♦ நீலமணி *- 8, 239,* பளிங்கு *- 292,* சங்கு *- 25, 77, 172, 331,* கட்டளைக்கல் *- 03,* முத்து *- 110,* காசு *- 274.*

4. சங்கத் தமிழர்கள் தங்களையும், தங்கள் இருப்பிடத்தையும், தன்னைச் சார்ந்து வாழும் விலங்குகளையும் ஒப்பனை செய்யப் பயன்படுத்திய பொருள்களைப் பற்றியும், அக்கால மக்களின் ஆடை முறைகள் பற்றியும் விளங்கும் நோக்கில் சில பாடல்கள் எடுத்து விளக்கப்பெற்றுள்ளன. விபரம் வருமாறு :
   - ♦ மகளிர் ஒப்பனை *- 3, 4, 9, 86, 97, 100, 133, 140, 170, 198, 262, 298, 301, 308, 337* மனை ஒப்பனை *115, 252, 283, 354,* குழந்தை ஒப்பனை *- 250, 268,* வீட்டுவிலங்கு *- 71, 78, 81, 162.*
   - ♦ துகில் *- 15, 43, 59, 99, 366,* கலிங்கம் *- 90, 380,* தழையாடை *- 09, 54, 96, 359, 363, 390,* உடை *- 64, 216.*

5. சங்க மக்களின் வாழ்வியல் கூறுகள் பற்றிய கருத்துகளை விளக்கும் நோக்கில் சில பாடல்கள் எடுத்தாளப்பெற்றுள்ளன. விபரம் வருமாறு:
   - ♦ விருந்தோம்பல் *- 120, 180,* நம்பிக்கை *- 80,* துணங்கை *- 50,* வழிபாடு*- 51, 303, 343,* பேய் *- 15, 73, 171, 225,* பெண்களின் பண்பாடு *- 85,* வேட்டைக்கருவி *- 265,* வீட்டைப் பாதுகாத்தல் *- 38, 354,* வேட்டைமுறை*- 388,* சிறார் விளையாட்டு *- 354, 363,* இருப்பிடமுறை *- 40, 300.*

6. சங்கத்தமிழர் வாழ்ந்த நிலங்களின் இயல்பு பற்றிய கருத்துகளை விளக்கும் வண்ணம் சில பாடல்கள் எடுத்தாளப்பெற்றுள்ளன. விபரம் வருமாறு:

♦ குறிஞ்சிநிலச் சிறப்புகள் - 168, முல்லைநிலச் செயல்பாடுகள் - 142, மருதநிலச் செய்திகள் - 210, நெய்தல்நிலம் - 311, பாலைநில இயல்பு - 84.

7. சங்க இலக்கியச் சொற்களின் சிறப்பியல்புகள் பற்றி விளக்கச் சில பாடல்கள் எடுத்து விளக்கப்பெற்றுள்ளன. அவற்றின் விபரம் வருமாறு:

♦ பொதுச்சொல்லும் ஒரு பொருள் பலசொல் குறித்த சிறப்புச் சொல்லும் - 69.

♦ ஒருபொருள் பல சொற்களின் சொல்லிணைவு - 16.

8. நற்றிணைப் பாடல்களில் காணப்படும் வள்ளுவத்தின் சிறப்பியல்புகளை எடுத்துக்காட்டச் சில பாடல்கள் விளக்கப்பெற்றுள்ளன. விபரம் வருமாறு:

♦ 1, 32, 308, 335.

9. சங்கப் பாடல்களில் காணப்பெறும் உத்தி முறைகளை விளக்கும் நோக்கில் சில பாடல்கள் எடுத்தாளப்பெற்றுள்ளன. விபரம் வருமாறு:

♦ இறைச்சி - 21, 302

♦ உள்ளுறை - 216.

10. பழந்தமிழர்கள் தங்கள் பயன்பாட்டில் வைத்துப் பயன்படுத்திய இசைக்கருவிகளின் தன்மைகளை விளக்கும் நோக்கில் சில பாடல்கள் எடுத்தாளப்பெற்றுள்ளன. விபரம் வருமாறு:

♦ யாழ் - 30, 189, 280.

11. சங்ககாலத்தில் காணப்பட்ட துறைமுகம் பற்றி விளக்க ஒரு பாடல் எடுத்தாளப் பெற்றுள்ளது. அது தொடர்பான விபரம் வருமாறு:

♦ காவிரிப்பூம்பட்டினம் - 258.

12. சங்க இலக்கியத்தில் அகம், புறம் என்ற இரு பிரிவுகள் காணப்படுகின்றன. இவ்விரு பிரிவுகளிலும் அறம் பற்றிய கருத்தை விளக்கும் நோக்கில் சில பாடல்கள் எடுத்தாளப்பெற்றுள்ளன. இது தொடர்பான விபரம் வருமாறு.

♦ அறம் - 32, 63, 145, 151, 275.

13. சங்கநூல்களில் இடம்பெறும் விலங்கினப் பண்புகளை விளக்கும் நோக்கில் ஒரு பாடல் எடுத்தாளப்பெற்றுள்ளது. அது தொடர்பான விபரம் வருமாறு:

- 181.

14. சங்கப் பாடல்களில் இடம்பெறும் தலைவன், தலைவி கூற்று பற்றிய கருத்துகளை விளக்கும் நோக்கில் சில பாடல்கள் எடுத்தாளப்பெற்றுள்ளன. அவை தொடர்பான விபரம் வருமாறு:

- 230, 330, 400.

15. மன்னனின் கால அடிப்படையினை வைத்துச் சங்க காலத்தினை ஆராயும் நோக்கில் சில பாடல்கள் எடுத்தாளப்பெற்றுள்ளன. அவை தொடர்பான விபரம் வருமாறு:

- 73, 171.

16. சங்கப்பாடலுக்கு உரை எழுதும் நோக்கில் ஒரு பாடல் கட்டுரை ஆசிரியரால் எடுத்தாளப்பட்டுள்ளது. அது தொடர்பான விபரம் வருமாறு:

- 110.

17. பரத்தையின் பாத்திரப் பண்பு பற்றிக் குறிப்பிட ஒரு பாடல் எடுத்தாளப்பட்டுள்ளது. அதன் விபரம் வருமாறு:

- 400.

18. மழையின் சிறப்புப் பற்றியும் சங்க காலத் தாவரங்களின் வேர்ப் பயன்பாடு பற்றியும் விளக்கச் சில பாடல்கள் எடுத்து விளக்கப்பெற்றுள்ளன. அவற்றின் விபரம் வருமாறு:

- மழை - 333
- தாவரவேர் - 328.

செந்தமிழ்ச்செல்வி இலக்கிய இதழில் குறுந்தொகைப்பாடல்கள் 39 கட்டுரைகளில் இடம்பெற்றுள்ளன. இக்கட்டுரைகளில் இடம்பெற்றுள்ள குறுந்தொகைப்பாடல்களின் எண்ணிக்கை 102 ஆகும். இவை குறிஞ்சிக்குரியவை - 27, முல்லைக்குரியவை - 11, மருதத்திற்குரியவை-

12, நெய்தலுக்குரியவை - 26, பாலைக்குரியவை - 26 என அமைந்துள்ளன. இப்பாடல்கள் பி.எல்.சாமி எழுதிய 34 கட்டுரைகளிலும் இரா.இராசகோபாலன், வாணிஅறிவாளன், ச.கணபதி, லூர்துசாமி, சிவமங்கையர்க்கரசி ஆகியோர் எழுதிய ஒவ்வொரு கட்டுரைகளிலும் காணப்படுகின்றன.

தமிழ்ப்பொழில் இலக்கிய இதழில் குறுந்தொகைப்பாடல்கள் 20 கட்டுரைகளில் இடம்பெற்றுள்ளன. இக்கட்டுரையில் இடம்பெற்றுள்ள குறுந்தொகைப்பாடல்களின் எண்ணிக்கை - 73 ஆகும். இவை குறிஞ்சிக்குரியவை - 24, முல்லைக்குரியவை - 07, மருதத்திற்குரியவை - 15, நெய்தலுக்குரியவை - 08, பாலைக்குரியவை - 19 என அமைந்துள்ளன. இப்பாடல்கள் க.அன்பழகன் எழுதிய இரண்டு கட்டுரைகளிலும் கு.சீனிவாசன், துரை.பிச்சை, சாலினி இளந்திரையன், வி.சா.பாலசுப்பிரமணியன், பெ.மாதையன், வ.கிருஷ்ணன், சு.கு.பன்னீர்ச்செல்வம், சோ.முத்தமிழ்ச்செல்வன், அ.ஜெயக்குமார், சா.அங்கயற்கண்ணி, சு.தமிழ்வேலு, சாமி.சிதம்பரனார், நா.ஆறுமுகம், க.த.திருநாவுக்கரசு, பழ.முத்தப்பன், சொ.சிங்காரவேலனார், சாமி.செல்வவிநாயகன், க.அமுதா ஆகியோர் எழுதிய 18 கட்டுரைகளிலும் காணப்படுகின்றன. ஆக இவ்விரு இலக்கிய இதழ்களிலும் இடம்பெற்றுள்ள குறுந்தொகைப் பாடல்களைக் கட்டுரையாசிரியர்கள் எடுத்தாண்டதற்கான காரணங்களாகக் கீழ்வருவனவற்றைக் குறிக்கலாம்.

1. ஊர்வன, நடப்பன, பறப்பன, நீந்துவன, தாவுவன என்று அமையும் உயிரினங்களின் உருவஅமைப்பு, செயல்பாடு, வாழும் இடம், சிறப்புத் தன்மை, வேட்டைமுறை ஆகியவற்றை விளக்கும் நோக்கோடு சில பாடல்கள் எடுத்தாளப்பெற்றுள்ளன. அவ்வாறு எடுத்தாளப்பட்டுள்ள உயிரினங்கள், அவை இடம்பெற்ற பாடல்கள். தொடர்பான விபரங்கள் வருமாறு:
   - பாம்பு - 185, 119, 268, 35, 43, 235, ஓந்தி - 140, ஆமை - 152, பல்லி -16
   - புலி - 321, 257, நீர்நாய் - 364, யானை - 394, 225, 298, 292
   - மயில் - 249, 138, 264, 38, 183, 110, 194, 391, 347, காக்கை - 210, குருகு-228, 260, கொக்கு - 117, 122, நாரை - 349, 114, 128, 166, 236, வெண்குருகு, கருங்கால்வெண்குருகு - 303, 325, அன்னப்பறவை - 304, 205.

- ஆரல்மீன் - 25, கெண்டை - 178, 91, 127, வாளை - 8, 164, 364, சுறா - 304, 230, 269, 318, 304, முதலை - 324, அயிரை - 128, 166, ஆரல் - 144, கயல்மீன் - 250.
- தவளை - 48, 93.

2. பண்டைத்தமிழகத்தில் காணப்பெற்ற செடி, கொடி, பயிர், மரம் எனும் தாவரங்களின் வடிவம், பயன்பாடு, வாழும் தன்மை, இலை, காய், வேர், பூ அமைப்புமுறை, வளரிடம் ஆகியவற்றை விளக்கும் நோக்கில் சில பாடல்கள் எடுத்தாளப்பெற்றுள்ளன. விபரம் வருமாறு.
    - நாணல் - 170, குளவி - 100, குறிஞ்சி - 03, முந்தூழ் - 239, பாசலம் - 156, பித்திகம் - 156, உழுந்து - 68, கூதளம் - 60, 100, 282, 56, 59, பயறு-10, 338, அடப்பம் - 243, முண்டகம் முள்ளி - 49, 51, குல்லை- 11, ஆம்பல் - 293, 325, 300, 370, 122, நெய்தல் - 09.
    - பிரப்பங்கொடி - 91
    - வரகு - 220, 282
    - இற்றி - 106, செயலை - 233, ஞாழல் - 12, எழில்மரம் - 138, உகாய்- 274, 369, உழிஞ்சி - 39, வாகை - 7, 34, 369, வழை - 260, ஓமை - 79, 124, 207, 396, 260, ஆலமரம் - 15, தாழை - 228, கண்டல் - 117, 340, மயிலை - 138, வேங்கை - 47, 26, 208, 370, கொன்றை - 148, 66, உகாய் - 247, 363, மாமரம் - 306, 331, 27, ஞாழல் - 81, 310, 313, 328, 397.

3. குறுந்தொகைப்பாடல்கள் சிலவற்றிற்குப் புலவர் பெயர் கிடைக்கப்பெறவில்லை. அப்பாக்களுக்குப் புலவர்பெயர்களை வருவித்துச்சொல்லும் நோக்கில் சிலபாடல்கள் எடுத்து விளக்கப்பட்டுள்ளன. விபரம் வருமாறு:
    - வள்உகிர்ப்பறவையார் - 201, வினைநலத்தார் - 256, செங்கண் இரும்புலி யார் - 321, சிறுபறையார் - 375, பொம்மல் ஓதி யார் - 379, சிறுவெண்காக்கையார் - 313, சிறுமனைப்புணர்ந்தார் - 326, நக்கதனார் - 381.

4. பண்டைத்தமிழகத்தில் வழக்கில் இருந்த நாணயங்களையும் மக்களது புழக்கத்தில் இருந்த மணிகளையும் விளக்கச் சிலபாடல்கள் எடுத்தாளப் பெற்றுள்ளன. விபரம் வருமாறு:

- காசு - 67, 247
- மாணிக்கம் - 379, உரைக்கல் - 192, பணிலச்சங்கு - 15.

5. அறிவியலோடு தமிழை இணைத்துக்காட்டவும் உளவியல் சார்ந்த கருத்தாக்கங்களை அக்கால மக்கள் வாழ்வில் பிணைத்துக்காட்டவும் சில பாடல்கள் கையாளப்பெற்றுள்ளன. விபரம் வருமாறு:

- அறிவியல் தமிழ் - 69, 41, 46, 178
- உளவியல் - 224

6. தலைவன் தலைவியரின் குணநலன்களை விளக்கச் சில பாடல்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. விபரம் வருமாறு:

- தலைவன் - பரத்தை ஒழுக்கம் - 70, 91, 89, 73, அன்பு - 300, 37, 398, சிறப்புத்தன்மை - 139.
- தலைவி, பண்புநலன்கள் - 209, 93, 283, 262, 135, துன்பம் - 160.

7. சங்க இலக்கியத்தில் காணப்படும் சொற்களின் சிறப்பியல்புகளையும், சங்ககாலப் பேச்சுவழக்கு குறித்த கருத்தாக்கங்களையும் விளக்கச் சில பாடல்கள் எடுத்துக்காட்டப்பெற்றுள்ளன. விபரம் வருமாறு:

- 'உயர்நிலை உலகம்' என்ற சொல்லின் சிறப்பு - 83, 101, 99
- ஒருபொருள் குறித்த பல சொல் - 161, 355
- பொதுச்சொல்லோடு சிறப்புச் சொல் சேர்ந்துவரல் - 13
- ஒருபொருள், பலசொற்கள் இரண்டு அடுத்தடுத்துவரல் - 284, 200
- சங்ககாலப் பேச்சுநடை - 112, 249, 375, 160, 110, 89, 300, 3, 397, 140, 28, 130, 22.
- சங்ககாலப் பேச்சுநடையை ஒட்டிய இலக்கிய நடை - 141, 191.

8. அக்கால மக்களின் பண்பாடு, பழக்கவழக்கம், நம்பிக்கை ஆகியன பற்றிய பல கருத்தாக்கங்களை விளக்குவதற்காகச் சில பாடல்கள் கையாளப்பெற்றுள்ளன. விபரம் வருமாறு:

♦ உடை - 223, 214, பேய் - 87, துணங்கை - 81, தழையணி - 295, தழையுடை - 294, பாலைநிலச்சிறப்பு - 124, தமிழ்ப்பெண்களின் பண்பாடு - 167, 227, 70, 205, 135, தோழியின் அறச்செயல் - 262 தமிழரின் பண்பாட்டு நாகரிகம் - 124.

9. பிற்கால இலக்கியக் கருத்துகளைச் சங்க இலக்கியப் பாடல்களுடன் ஒப்பிட்டுப் பார்க்கும் நிலையில் சில பாடல்கள் எடுத்தாளப் பெற்றுள்ளன. விபரம் வருமாறு:

♦ திருநீலகண்ட நாயனாரும் சங்கத்தலைவியும் - 191.

10. சங்கப்பாடல்களின் காலவரையறையை விளக்கச் சில பாடல்கள் எடுத்தாளப்பெற்றுள்ளன. விபரம் வருமாறு:

♦ சங்கப்பாடல்களின் காலவரையறை - 294.

11. கூற்றுமுறையை விளக்கும் நிலையில் சில பாடல்கள் எடுத்தாளப் பெற்றுள்ளன. விபரம் வருமாறு:

♦ கூற்றுமுறை - 8, 45.

செந்தமிழ்ச்செல்வி இலக்கிய இதழில் அகநானூற்றுப் பாடல்கள் 64 கட்டுரைகளில் இடம்பெற்றுள்ளன. இக்கட்டுரைகளில் இடம்பெற்றுள்ள அகநானூற்றுப் பாடல்களின் எண்ணிக்கை - 227 ஆகும். இவை குறிஞ்சிக்குரியவை - 48, முல்லைக்குரியவை - 21, மருதத்திற்குரியவை - 20, நெய்தலுக்குரியவை - 28, பாலைக்குரியவை - 110 என அமைந்துள்ளன. இப்பாடல்கள் பி.எல்.சாமி எழுதிய 60 கட்டுரைகளிலும் இரா.இராசகோபாலன், சரளா இராசகோபாலன், ச.கணபதி, லூர்துசாமி, மயிலை சீனிவேங்கடசாமி ஆகியோர் எழுதிய 5 கட்டுரைகளிலும் காணப்படுகின்றன.

தமிழ்ப்பொழில் இலக்கிய இதழில் அகநானூற்றுப் பாடல்கள் 19 கட்டுரைகளில் இடம்பெற்றுள்ளன. இக்கட்டுரைகளில் இடம்பெற்றுள்ள குறுந்தொகைப்பாடல்களின் எண்ணிக்கை - 101 ஆகும். இவை குறிஞ்சிக்குரியவை - 15, முல்லைக்குரியவை - 06, மருதத்திற்குரியவை-28, நெய்தலுக்குரியவை - 08, பாலைக்குரியவை - 44 என அமைந்துள்ளன. இப்பாடல்கள் வி.சா.பாலசுப்பிரமணியன் எழுதிய இரண்டு

கட்டுரைகளிலும் க.அன்பழகன் எழுதிய இரண்டு கட்டுரைகளிலும் கு.சீனிவாசன், சு.கு.பன்னீர்செல்வம், பி.எல்.சாமி, சொ.சிங்காரவேலனார், சோ.முத்தமிழ்ச்செல்வன், நா.ஆறுமுகம், பழ.முத்தப்பன், பெ.மாதையன், அ.ஜெயக்குமார், சாலினிஇளந்திரையன், சு.தமிழ்வேலு, க.அமுதா, ஜி.சுப்பிரமணியன், மு.பெரி.மு.இராமசாமி, க.த.திருநாவுக்கரசு, பூரணச்சந்திரஜீவா ஆகியோர் எழுதிய 16 கட்டுரைகளிலும் காணப்படுகின்றன. மேலே இடம்பெற்றுள்ள இரு இலக்கிய இதழ்களிலும் இடம்பெற்றுள்ள குறுந்தொகைப் பாடல்களைக் கட்டுரையாசிரியர்கள் எடுத்தாண்டதற்கான காரணங்களாகக் கீழ்வருவனவற்றைக் குறிக்கலாம்.

1. சங்க இலக்கியத்தில் காணப்படும் ஊர்வன, நடப்பன, பறப்பன, நீந்துவன, தாவுவன என்று அமையும் உயிரினங்களின் உருவம், நிறம், குணம், வாழிடம், வேட்டைமுறை ஆகியவற்றைச் சில பாடல்கள் விளக்குகின்றன. அவற்றின் விபரம் வருமாறு:

- பல்லி - 09, 88, 351, பாம்பு - 72, 92, 108, 154, 192, 202, 287, 340, 348, 349, 372, 391, ஆமை - 117, 160, 306, 356, 361, ஓந்தி - 125, 145, சிதலை- 81, 149, 167, 377.
- கேழல் - 18, 21, 88, 94, 178, 223, 248, 277, 322, புலி - 03, 12, 22, 29, 52, 72, 78, 97, 99, 107, 112, 118, 147, 155, 168, 202, 218, 232, 238, 272, 277, 294, 318, 322, 332, 352, 357, 362, 381, 398, நரி - 94, 193, 279, 337, 375, முயல் - 50, 105, 284, 384, 394, நீர்நாய் - 6, 336, 386, குரங்கு- 267.
- ஈயல் - 08, 394, மூதாய் - 14, 74, 193, 304, 374, வெண்குருகு - 178, மயில் - 82, 108, 152, 194, 344, 378, 392, மின்மினிப்பூச்சி - 27, 202, 291, அன்னம் - 234, 320, 334, ஈயல் - 394, நாரை - 40, 100, 240, 276, 290, 360, கொக்கு - 290, 346, காக்கை - 313, 319, சிள்வீடு - 89, 145, 303, குருகு - 13, 40, 141, 145, 176, 273.
- ஆரல் மீன் - 246, கயல்மீன் - 126, 313, 346, வாளை - 06, 126, 276, 336, 386, பெருமீன் - 210, அயிரை - 70, கொழுமீன் - 60, 100, 110, 290, சுறா - 10, 80, 120, 150, 170, 187, 190, 300, 340, 350, இறால்- 152, 220, 270, முதலை - 03, 18, 80, 301.
- தேரை - 301, நுணல் - 154, 364.

*2. பண்டைத்தமிழகத்தில் காணப்பெற்ற செடி, மரம், கொடி முதலான தாவரங்களின் வடிவம், பயன்பாடு, வாழும் தன்மை, இலை, காய், வேர், பூ அமைப்பு, வளரிடம் ஆகியவற்றை விளக்கும் நோக்கில் சில பாடல்கள் எடுத்தாளப்பெற்றுள்ளன. விபரம் வருமாறு:*

- *குளவிச்செடி - 22, 82, குறிஞ்சி-268, 308, முந்தூழ் - 78, பயறு - 37, 262, 399, உழுந்து - 86, ஆவிரை - 301, குரவம் - 237, நெய்தல் - 70, 100, 119, 150, 290, மஞ்சள் - 269, வள்ளி - 52, கூதளம் - 47, 68, 178, 182, 255, 268, 272, 273, வெண்காந்தள் - 264, களா - 394, கரந்தை - 226, 269, முள்ளி - 21, 26, 236, ஆம்பல் - 156, அரும்புச்செடி - 80, கண்டல் - 260, முண்டகம் - 80, 130, வெட்சிச்செடி - 133, சூரியகாந்தி - 336.*
- *இலவமரம் - 142, வேங்கை - 12, 48, 52, 182, 202, 205, 294, 297, 349, 364, 378, புன்னை - 244, வாகை - 45, 136, 151, ஆலமரம் - 70, 251, 287, 289, 319, 385, இரம் - 125, ஓமை - 21, 35, 117, 191, 223, 297, 397, வழை- 177, உழிஞை-53, இலுப்பை - 135, 149, 171, 225, 267, 321, 331, 351, கமுகு - 335, இத்தி - 345, பலா - 7, 91, அசோகமரம் - 38, 68, மாமரம் - 341, 355, நெல்லி - 5, 271, 284, கொன்றை - 197, ஞாழல் - 20, 70, 180, 216, 240, 270, 370, தாழை - 20, தாமரை - 156, ஆம்பல் - 316, நெய்தல்- 70, 100, 119, 150, 290.*
- *அதிரல்கொடி - 157, 261, 391, 393, முருக்குச்செடி (பலாசம்) - 42, 223, 229, 277, வஞ்சிக்கொடி - 275, உகாய் - 296, சுள்ளி - 149, பிடவம் - 219, ஈந்து - 21, கடம்பம் - 98.*
- *பைஞ்சாய்க்கோரை - 62, 226, 236, 290, நாணல் - 212.*

*3. சங்ககாலத்தில் வழக்கில் இருந்த நாணயங்களையும் புழக்கத்தில் இருந்த மணிகளையும் விளக்கச் சில பாடல்களில் எடுத்தாளப்பெற்றுள்ளன. விபரம் வருமாறு :*

- *காசு - 267, 293, 363*
- *முத்து - 27, 73, 100, 137, 201, 225, 282, 305, பளிங்கு - 05, 108, 315, 399, பவளம் - 14, 25, 374, சாணக்கல் - 356, சங்கு - 150, 269, வலம்புரிச் சங்கு- 201.*

4. பழங்காலத்தமிழர்களின் பண்பாடு, பழக்கவழக்கம், நம்பிக்கை ஆகியன பற்றிப் பல கருத்தாக்கங்கள் சில பாடல்களில் இடம்பெற்றுள்ளன என்பதனை விளக்கும் வகையில் அப்பாடல்கள் எடுத்தாளப்பெற்றுள்ளன. விபரம் வருமாறு:

♦ உணவு - 24, 33, 37, 87, 348, கள் - 61, ஆடை - 86, 111, 136, 236, 293, 387, தழையுடை - 07, 156, 226, 275, 390, யாழ் - 14, 115, 212, 279, 331, பேய் - 122, 233, துணங்கை - 184, திருமணமுறை - 86, 136, குறிஞ்சிப்பாடல் - 102.

5. தலைவன், தலைவி, தோழி, பரத்தை ஆகியோர்களின் குணநலன்களை விளக்கச் சில பாடல்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. விபரம் வருமாறு :

♦ தலைவி பண்பு - 126, 184, 196, 228, 236, 316.

♦ தலைவன் - 6, 36, 46, 111, 186, 196, 226, 266, 326, 346, 376, 386, 396.

♦ தோழி - 228, 316, 356, பரத்தை - 106.

6. சங்ககாலத் துறைமுக நகரங்களையும் பெயர்களையும் விளக்கச் சில பாடல்கள் எடுத்தாளப்பெற்றுள்ளன. விபரம் வருமாறு :

♦ பவத்திரிப்பட்டினம் - 30, 340, கோடிக்கரை - 70, காவிரிப்பூம்பட்டினம்- 181.

7. சங்க இலக்கியத்தில் காணப்படும் சொற்களின் சிறப்பியல்புகளை விளக்கச் சில பாடல்கள் எடுத்துக்காட்டப்பெற்றுள்ளன. விபரம் வருமாறு :

♦ 'உயர்நிலை உலகம்' என்ற சொல்லின் சிறப்பு - 66, 233

♦ ஒருபொருள் குறித்த பல சொல் - 33, 104, 392.

♦ பொதுச்சொல்லோடு சிறப்புச்சொல் சேர்ந்துவரல் - 53, 102, 140, 182, 201, 208.

8. சங்ககால வரலாற்றுச் செய்திகள் பற்றியும் சங்ககால ஊர்ப்பெயர்கள் பற்றியும் சங்கச் செய்யுள் நடைபற்றியும் சங்ககால மன்னர்கள் பற்றியும் சங்ககாலப் பழமை பற்றியும் கல்வெட்டுச் செய்திகள் பற்றியும் விளக்கச் சில பாடல்கள் எடுத்தாளப்பெற்றுள்ளன. விபரம் வருமாறு :

♦ வரலாற்றுச் செய்திகள் - 25, 281, மோரியர் - 69, 251, 265, 281

♦ சங்ககால ஊர்ப்பெயர்கள் - 15, 61, 295, 325

